முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே*.

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ; வாழ்த்தியலுமாம்.

† சேரமான்பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

இ - ள்.—அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென ஐவகைப்பட்ட பெரிய பூதத்தினது தன்மைபோலப் பகைவர் பிழைசெய்தால் அப்பிழையைப் பொறுத்தலும், அப்பிழை பொறுக்குமளவல்லவாயின் அவரை அழித்தற்கு உசாவும் உசாவினது அகலமும், அவரை அழித்தற்கேற்ற மனவலியும் சதுரங்கவலியும், அவ்வாற்றால் அவரை அழித்தலும், அவர் வழிப்பட்டால் அவர்க்குச் செய்யும் அருளுமுடையோய்! நினது கடற்கட்டோன்றிய ஞாயிறு பின்னும் நினது வெளிய தலைபொருந்திய திரையையுடைய மேலைகடற்கண்ணே மூழ்கும் புதுவருவாய் இடையறாத ஊர்களையுடைய நல்ல நாட்டிற்கு வேந்தே! வானவரம்ப! பெரும! நீ, அசைந்த தலையாட்டமணிந்த குதிரையையுடைய பாண்டவரைவருடனே சினந்து நிலத்தைத் தம்மிடத்தேகொண்ட பொற்பூந்தும்பையையுடைய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பொருது

---

உச. இமயம் பொற்கோட்டதென்பது : "பொன்படு நெடுங்கோட் டிமயம்" (புறநா. ௩௯ : கசு-ரு; நற். ௩௬௬); "பொன்னுடை நெடுங்கோட் டிமயம்" (புறநா. ௨௧௪ : உச); இவ்வியல்லாத பொருளடையடுத்த மொழிக்கு இவ்வடி மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௪00 ; நன். வி. சூ. ௪0௧; இ - வி. சூ. ௭௧௨ - உரை.

உ0 - உச. இமயம் போலத் துளக்கமின்றி நெடுங்காலம் நிற்பாயாக வென்றல் மரபு; "மின்னுமிழ் வைரக் கோட்டு விளங்கொளி யிமய மென்னும், பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமே னிலயி வைய, நின்னடி நிழலின் வைக நேமியஞ் செல்வ னாகி, மன்னவாய் திருவோ டென்று வாழ்த்திநெய் யேற்றி னாரே" சீவக. உ௪௧௭.

* இச்செய்யுள், 'பாலபு ரிபயினும் பகலிருளினும்......நடுக்கின்றி நிலியரோ' என்றதனாற் செவியறிவுறூஉவும், 'இமயம் போன்று...நடுக்கின்றி நிலியரோ' என்றதனால் வாழ்த்தியலுமாயிற்று; இது, "பகை நிலத்தரசர்க்குப் பயந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பாயென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின், ஓம்படைவாழ்த்தாயிற்று" என்பர்: தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

† இதன் கசு - ஆம் அடியால் பாட்டுடைத்தலைவன் பெயர்க்காரணம் புலப்பட்டவாறு அறிதற்பாலது! "நாடுகண் ணகற்றிய வுதியஞ்சேரற், பாடிச் சென்ற பரிசிலர் போல, வுவவினி வாழிய தோழி", "கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சி, னுதியஞ் சேரல் ஓட்டில போல, வொலி யெழுந்து", ~~"முதியர்ப் பேணிய வுதியஞ் சேரல், பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை"~~ (அகநா. சுரு, கசுஅ, ~~[illegible]~~) என்பவற்றால் இத்தலைவன் குணங்கள் விளங்கும்.

போர்க்களத்தின்கட் படுத்தலையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினோய்! பால் தன் இனிமையொழிந்து புளிப்பினும், ஞாயிறு தன் விளக்கமொழிந்து இருளினும், நான்கு வேதத்தினது ஒழுக்கம் வேறுபடினும், வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய * மந்திர சுற்றத்தோடு ஒழியாது நெடுங்காலம் விளங்கித் துளக்கமின்றி நிற்பாயாக; அரைமலையின்கட் சிறிய தலையையுடைய மறியையுடையவாகிய பெரிய கண்ணையுடைய மான்பிணைகள் அந்திக்காலத்தே அந்தணர் செய்தற்கரிய கடனாகிய ஆவுதியைப்பண்ணும் முத்தீயாகிய விளக்கின்கண்ணே துயிலும் பொற்சிகரங்களையுடைய இமயமலையும் பொதியின்மலையும்போன்று.—ஏ-று.

குளிக்குமென்ன இயையும்; குளிக்குமென இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்துமேல் ஏறிநின்றது. நீயோ: ஓ, அசைநிலை; அன்றி, இதனை வினாவாக்கி, ஞாயிறு குளிக்குமென்பதனை முற்றாக்கி, ஏனை உம்மைபெற்ற பதனை அவ்வினாவிற்குப் பொருளாக்கி உரைப்பாருமுளர்.

முத்தீயாவன: ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி.

ஆங்கும், அதனையும் அசைநிலை. [illegible]; ஐகாரம், முன்னிலை விளக்கிநின்றது.

நிலந்தலைக்கொண்டவென்பதற்கு நிலங்கோடற்காரணமாகத் தலைக்கட் சூடியவெனினுமமையும்.

பொறாப்பொறுத்தல் முதலிய குணங்களையுடையோய், பொருந, வரையாது கொடுத்தோய், வானவரம்ப, பெரும, நீ, புளிப்பினும் இருளினும் திரியினும் இமயமும் பொதியமும்போல நடுக்கின்றிச் சுற்றமொடு விளங்கி நிற்பாயாகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

போற்றார்ப்பொறுத்தல் முதலாகிய குணங்களை அரிய உடைமைக் கூறு இன்றாதலின், பூதங்களின் அடைவு கூறாராயினார்.

இதனாற்சொல்லியது, 1 தங்கடற்பிறந்த ஞாயிறு தங்கடற்குளிக்குநாடனாதலாற் செல்வமுடையையாகவென்று வாழ்த்தவேண்டுவதின்மையின், நீடுவாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று. (உ)

* கம்ப. அயோத்தி. மந்திர. எக.

(பி-ம்.)— 1 'வானவரம்பனாதலாற் செல்வமுடையையாகவென்று வாழ்த்தவேண்டுவதின்மையின், நீடுவாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று'

---

(௩.) உவவுமதி யுருவி னோங்கல வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற
வேம முரச மிழுமென முழங்க
நேமி யுய்த்த நேஎ நெஞ்சிற்
௫ றவிரா வீகைக் கவுரியர் மருக

௩. தொல். செய். சூ. கச, ருச - பேர். ந; சுஎ, சுஅ, கூட - மேற்.

செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ
1 பொன்னோடைப் புகரணி நுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாஅத்
தெயிறுபடை யாக வெயிற்கத விடாஅக்
௧௦ கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும் பிடர்த்தலை யிருந்து
மருந்தில் கூற்றத் தருந்தொழில் 2 சாயாக்
கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி
நிலம்பெயரினு நின்சொற்பெயரல்

---

சு. பெண்பாலாரை ஆண்பாலாரோடு சேர்த்து வாழ்த்துதலும் மர பாதலின், இங்ஙனம் கூறினர் ; "ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ", "ஆன்றோள் கணவ", "பாவையன்ன நல்லோள் கணவன்", "புரையோள் கணவ" (பதிற். ௧௪, ௫௫, ௬௧, ௭௦); "மங்கையர் கணவ" (முருகு. ௨௬௪); "மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்" (மலைபடு. ௫௮); "மக்களுட் பெண்பால பாடுதல் சிறப்பின்மையின், 'செயிர்தீர்...கணவ' என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப்பாடுப" தொல். புறத்திணை. ௫. ௨௬ - ந.

அ. "துன்னருங் கடாஅம் போல" (புறநா. ௯௪ : ௪); கடாம் மண முள்ளது: "பிடிநிறுக்குங் கமழ கடாஅத்து", "வரிநுதி நிறுக்கும் வாய்புகு கடாஅத்து" (புறநா. ௨௨, ௬௩) ; "கடுஞ்சினத்த கமழ்கடாஅத்து" மதுரை. ௪௪.

௭ - ௧௧. "பொன்னோடை... யானை என அடுக்கி வருவனவும் ஒட்டி ஒரு சொல்லாகாமையுமுணர்க" தொல். ௭௪௪. ந. ௧௬ - ந.

௧௨. "மருந்தில் கணிச்சி" (புறநா. ௪௨ : ௨௭.) ; "நின்ற கருமத்த தல்லாத கூற்று" (அறநெறி. ௧௧௧); "மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெரு மையும்" (தொல். புறத்திணை. . ௨ ) ; "மாற்றே னென்வந்த காலனை" (திருச்சிற். ௧௫௦) ; "மாற்றருங் கூற்றம்" மணி. ௨௫: ௪௬.

௯ - ௧௨. "எயிறுபடையாக...சாயா என மாட்டாய் ஒட்டி நின் றது, 'கயிறு பிணிக்கொண்ட' என்பதனோடும் ஒட்டினாற் போலநின்று ஒற் றடுத்தது, இன்னோசை பெறுதற்கு" (தொல். புணர். ௫. ௬ - ந); "பொன் னோடை...சாயாவென்றாற்போல வருவனவெல்லாம் அணுகிவந்த மாட் டென்னுமுறுப்பு." ௵. ௭௪௪. ந. ௧௩ - ந.

௧௦ - ௧௩. "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்னா" இன்னா. ௧௪.

௧௪. "நிலம்புடை பெயர்வ தாயினும்" (புறநா. ௩௪ : ௫) ; "நிலந் திறம் பெயருங் காலை யாயினுங், கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே" (பதிற். ௬௩ : ௬ - ௭); "காதலர், நிலம்புடை பெயர்வ தாயினுங் கூறிய, சொற்புடை பெயர்தலோ விலரே" (நற். ௨௮௯) ; "இம்மூ வுலகி

(பி - ம்.)— 1 'பொன்னி னோடை' 2 'சாவாக்'

# புறநானூறு மூலமும் உரையும்.

௨௫ முன்னம் முகத்தி னுணர்ந்தவ
ரின்மை தீர்த்தல் வன்மை யானே.

திணையும் * துறையும் அவை.

† பாண்டியன்கருங்கையொள்வாட்பெரும்பெயர்வழுதியை இரும்பிடர்த்தலையார் பாடியது.

இ - ள். — உவாநாளின் மதியினது வடிவுபோலும் வடிவினையுடைய உயர்ந்த வெண்கொற்றக்குடை நிலைபெற்ற கடலெல்லைக்கண் நிலத்தை நிழற்செய்ய, காவலாகிய வீரமுரசம் இழுமெனமுழங்கும் ஓசையையுடைத்தாய் முழங்க, சக்கரத்தைச்செலுத்திய ஈரமுடைய நெஞ்சினையும் ஒழியாத வண்மையையுமுடைய பாண்டியர் மரபினுள்ளாய்! குற்றமற்ற கற்பினையுடைய சேயிழைக்குத்தலைவ! பொன்னானியன்ற பட்டத்தையுடைய புகரணிந்த மத்தகத்தினையும், அணுகுதற்கரிய வலியையும், மணநாறும் மதத்தினையுமுடைய, கொம்பு படைக்கலமாகக் கொண்டு பகைவர் மதிலின்கட் கதவைக்குத்திக் கயிற்றாற்பிணித்தலைச்செய்த கவிழ்ந்த மணியையணிந்த பக்கத்தையும் பெருங்கையையுமுடைய யானையினது பெரிய கழுத்திடத்தே யிருந்து பரிகாரமில்லாத கூற்றத்தினது பொறுத்தற்கரிய கொலைத்தொழிலுக்கு இளையாத வலியகையின் கண்ணே ஒளிரிய வாளினையுடைய பெரும்பெயர்வழுதி! நிலம் பிறழினும் நினது ஆணையாகிய சொற் பிறழாதொழியலவேண்டும்; பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழல்புனைந்த காலினையும் பூசிப்புலர்ந்த சந்தனத்தையுடைத்தாகிய குறுக்ககன்ற பரந்த மார்பினையுமுடையோய்! ஊரில்லாதனவும், பொறுத்தற்கரிய உயங்குதலையுடையனவும், நீரில்லாதனவும், நீண்ட வழியனவுமாகிய, வம்பலரை நலியச் சேய்மைக்கண்ணே பார்த்திருக்குமிருப்பினையும், கையாற் கவிக்கப்பட்ட கண்ணாற் குறித்துப்பார்க்கும் பார்வையையும், செவ்விய தொடைபிழையாத தறுகண்மையையுமுடைய மறவர்தம் அம்பை விடுதலாற் பட்டோரது உடன்மூடிய புதிய கற்குவையின்மேலே இருந்திய சிறகினையும் வளைந்த வாயினையுமுடைய பருந்திருந்து வருந்தும் உன்னமரத்தினையுடையவாகிய அணுகுதற்கரிய கவர்த்த வழியின் கண்ணே நின்பால் நச்சியவிருப்புத்தால் இரப்போர் வருகுவர்; அங்ஙனம் வருவது, அவர் மனக்குறிப்பை அவர் முகத்தானறிந்து அவருடைய வறுமையைத் தீர்த்தலைவல்ல தன்மையான். — எ - று.

நுதலையும் திறலையும் கடாத்தையும் மருங்கையும் பெருங்கையையுமுடைய யானைப்பிடர்த்தலையிருந்து எயிறுபடையாக எயிற்கதவிடாக் கூற்

---

௨௫. "முன்னம், முகம் போல முன்னுணர்ப்பதில்" (நான்மணி. ௫0); "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்", "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்" குறள். எ0௬, எ0எ.

* 'நிலம் பெயரினு நின்சொற் பெயரல்' என்றதனால், இது செவியறிவுறூஉவாயிற்று.

† [illegible]-ஆம் அடியாற் புலவரது பெயர்க்காரணமும், [illegible]-ஆம் அடியாற் பாட்டுடைத் தலைவனது பெயர்க்காரணமும் விளங்கியவாறறிக.

நத்தருந்தொழில் சாயாப் பெரும்பெயர்வழுதியென மாறிக்கூட்டுக; 1 காலலடுதல் கையாலூக்குதலன்றி எறிபடையாக எயிற்கதவிடைக்கவிடாத பெருங்கையானையென இயைத்துரைப்பினுமமையும்; எயிற்கதவிடைக் கயிறுபிணிக்கொண்டவென இயைத்துரைப்பாருமுளர்.

ஊரில்ல உயவரிய நீரில்ல நீளிடையவாகிய உன்னமரத்த கவலையெனவும், பருந்திருந்துயவும் துன்னருங்கவலை யெனவும் இயையும்.

மருக, கணவ, வழுதி, மாற, இரவலர் வருவர், அஃது அவர் இன்மை தீர்த்தல்வன்மையான்; அதனால், நின்சொல் பொய்யாதொழியல் வேண்டு மெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

வாழ்த்தியலாதல் விளங்க, வேண்டுமென முற்சொல் தந்துரைக்கப் பட்டது. (௩)

(பி - ம்.)— 1 'காலிடுதல்.'

---

(௪.) வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன
௫ தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ இலக்கம்போன்றன
மாவே, யெறிபதத்தா னிடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன
௧௦ 1 களிறு, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்

---

௧ - ௨. நேரசை கூனாய் வந்ததற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. ௪௮ - பேர். [illegible]

௩. களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதல்: "வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு-வெ. ௬; ௧௭) என்பதனாலும், "மதமிகைத்த தாளினான் செங்களஞ் சிறந்ததே" என்பதற்கு 'இத்துணையும் இவன்வெற்றியாதலின் இவன் களமென்றார்' என்னும் குறிப்புரையாலும் விளங்கும்; (சீவக. ௨௭௬) "பறைதாள் விளவு" (பெரும்பாண். ௯௫); இவ்வடி பதினேழெழுத்திரு சீரடி வஞ்சிப்பாவிற்கு மேற்கோள்; யா - வி. ஒழிபியல்.

௫. துவையென்னும் உரிச்சொல் ஓசைப்பொருளில் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௪௫௭; நன் - வி. சூ. ௪௫௬. [illegible]

௬. "கம்பமொடுதுளங்கிய இலக்கம்" புறநா. ௨௬௦.

௧௦- ௧௧. "கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து, நுதிமுக"

(பி - ம்.)—1 'களிறே.'

னுயிருண் ணுங் கூற்றுப்போன்றன
நீயே, யலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் [1] பொலிவுதோன்றி
கரு மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
வனையை யாகன் மாறே
தாயி றூவாக் குழவி போல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி ; துறை - கொற்றவள்ளை.

* சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியைப் பரணர்பாடியது.

இ-ள்.—வாள், வெற்றியைத்தருதலாற் குருதிக்கறைப்பட்டன, செக்கர் வானத்தினது அழகையொத்தன ; காலுடைபெயர்ந்து போர்செய்து களத்தைத் தமதாக்கிக்கொள்ளுதலால், வீரக்கழல் அருப்புத்தொழில் பறைந்தவை,

---

[illegible] மண்ணுறு வெண் கோட்டுச், சிறுகண் யானை" அகநா. உச : கக-ங.

க0 - கஉ. "களிறு...போன்றன" நிரையசை ஞெசியடியிற் கூனாய் வந்ததற்கு மேற்கோள் ; தொல். செய். சூ. சஅ - பேர்.

கங. புறநா. உ : கப.

கங - கூ. வாழ்த்து வகையில தேரடுத்து வந்ததற்கு இது மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ஙக - ந.

கரு - கூ. "பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" முருகு. உ-ங ; தொல். கிளவி. சூ. கஅ - பேர், மேற்.

கஎ. மு. புறநா. உ0 : உ0 ; மாறு, மூன்றும்வேற்றுமைப்பொருட்கண் வருமென்பதற்கும் (தொல். இடை. சூ. உ-சே ; இ - வி. சூ. உருக - உரை) ; காரணப்பொருளுணர்த்தி நிற்குமென்பதற்கும் (தொல். இடை. சூ. உ-ந) ; ஆகலென்னும் வினைக்குறிப்புச்சொல சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்தி நிற்குமென்பதற்கும், முச்சீரடி இடைவந்ததற்கும் இது மேற்கோள் ; தொல். இடை. சூ. ஙஉ - ந ; ஷெ. செய். சூ. எக - பேர்.

கஅ-கூ. "என்றூணீத்த குழவிபோல", "தாயி, றூவாக் குழவி போல" (புறநா. உங0 : எ ; ஙஎகூ : கப-ரு) ; "குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து" (பதிற். கூ - ஆம்பத்துப்பதிகம்) ; "தாயிலாக் குழவிபோலச், சாதுயரெய்தி னின்றேன்" (சீவக. கருஅக) ; "தாயிறூவாக் குழவிததுயர்", "தாயொழி குழவி போலக் கூஉம்" (மணி. கங : கக ; உரு : ககக) ; "ஓங்குகுடை நீழ லுலகுதுயின் மடியக், குழவிகொள பவரி னிகழா தோம்பி" பெருங். ச. க0 : கஙங-ச.

கரு - கூ. வஞ்சிப்பா மண்டில ஆசிரியத்தான் இற்றதற்கு மேற்கோள் ; தொல். செய். சூ. எக - பேர்.

* இதன் கரு-ஆம் அடியாற் பாட்டுடைத்தலைவனது பெயர்க்காரணம் புலப்படுகின்றது.

(பி - ம்.)— 1 'பொலிவொடு தோன்றி.'

கோலலும் ஆனேற்றினது கோட்டையொத்தன; பரிசைகள் ஒலித்துத் தைத்த அம்புகளால் துளைதோன்றுவன, நிலையிற்றப்பாத இலக்கத்தையொத்தன; குதிரைகள், எதிரியை எறியும் காலமுடையான் இடவாய் வலவாகிய இடத்தைக்காட்ட முகக்கருவி பொரப்பட்ட செலவாலயையுடைமையான் மான்முதலாயினவற்றின் கழுத்தைக் கவ்வி உதிரம் *உவற்றியுண்ட புலியையொத்தன; களிறுகள், கதவைமுறித்து வெகுண்டு உலாவி நுனைதேய்ந்த வெளிய கோட்டையுடைமையான் உயிரையுண்ணும் கூற்றை யொத்தன; நீதான், அசைந்த தலையாட்டமணிந்த கழியையுடைய குதிரையாற் பூட்டப்பட்ட பொற்றேரின்மேலே பொலிவொடு தோன்றுதலாற் கரிய கடலின் கண்ணே ஓங்கியெழுகின்ற செய்ய ஞாயிற்றினது ஒளியையுடையை; அத்தன்மையையாதலால், தாயில்லாத உணுகுழவிபோல ஒழியாது கூப்பிடும் நின்னைச் சினப்பித்தவருடைய நாடு.—எ - று.

நாடென்றது, நாட்டுள்வாழ்வாரை. மாவென்பது, ஒருபொருள் படுவதோர் இடைச்சொல்.

கழல்பறிந்தனவென்றோதி, வீரக்கழனீங்கியவையென்று உரைப்பாருமுளர்.

வாளாகிய மறம்பட்டவையெனவும், கழலாகிய பகைதந்தவையெனவும் தோலாகிய துளைதோன்றுவவெனவும் கொள்க.

துவைத்துத் தோன்றுவவெனவும் இயையும்.

எறிபதத்தானென்பதற்கு † ஒத்தும் காலையுடையானென்று உரைப்பாருமுளர்.

செஞ்ஞாயிற்றுக் கவினையென்ற துணையும் மன்னவன்புகழும், ஈவாது கூறுவின் உடற்றியோர் நாடென ஒன்னார் நாடழிபிரங்கலுமோதலான், இது கொற்றவள்ளையாயிற்று. (ச)

* உவற்றி - ஊற்றி; "ஒண்செங் குருதி யுவற்றியுண் டருந்துபு, புலவுப் புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" அகநா.

† ஒத்துதல்-அழுத்தல; "ஒத்துந் தானத்தொகைக் கத்தித், தத்தும் பரி தன்றாளைத் தருவே" திருவால. உஅ: ரு.

---

(ரு.) எருமை யன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும

க. "மேதி யன்ன கல்" மலைபடு. ககக.

உ. "ஆபரந் தன்ன செலவிற்பல், யானை", "ஆபரந் தன்ன யானை யோன் குன்றே" பதிற். எஎ : கக - உ ; எஅ : க௦.

ரு. "வான வரம்பனை நீயோ பெரும" புறநா. உ : கஉ ; தொல். இடை. அ - பேர். மேற்.

க-ரு. "எருமை...பெருமவென்பது, நரிவெரூஉத்தலையார் தம்முடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டாகலின், இது தன்கட்டோன்றிய ஆக்கம்

நீயோ ராகலி னின்னொன்று மொழிவ
லருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
யளிதோ தானேயது பெறலருங் குரைத்தே

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ; பொருண் மொழிக்காஞ்சியுமாம்.

சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக்கண்ட ஞான்று நின் உடம்பு பெறுவாயாகெனை அவனைச் சென்று கண்டு தம்முடம்பு பெற்றுநின்ற நரிவெரூஉத்தலையார் பாடியது.

இ - ள்.—எருமைபோலும் வடிவையுடைய கரிய கற்பொருந்திய இடந்தோறும் பெற்றம்போலப் பரக்கும் யானையையுடையவாய் வலியையுடைய காட்டிற்குள்ளாகிய நாட்டினையுடையாய்! பெரும! நீ இங்ஙனம் பகைவரான் அணுகப்படாத இயல்பாகிய பெருஞ்செல்வத்தையுடையையாகுதலால், நினக்கு ஒருகாரியஞ் சொல்லுவேன்; அதனைக் கேட்பாயாக; அருளையும் அன்பையுநீக்கிப் பாவஞ்செய்தாரை நீங்காத நரகத்தைத் தமக்கிடமாகக் கொள்பவரோடு பொருந்தாது நீ காக்கப்படும் தேயத்தைக் குழவியை வளர்ப்பாரைப்போலப் பாதுகாப்பாயாக; அளிக்கத்தக்கதொன்று அக்காவல்; அது பெறுதற்கரிது.—எ - று.

காவலென்றது, ஆகுபெயர். நாடனை: ஐகாரம், முன்னிலைக்கண் வந்தது. ஓவும், ஓரும்: அசைநிலை.

† அருளாவது'—ஒன்றின் துயர்க்கண்டாற் காரணமின்றித் தோன்றுமிரக்கம்.

---

பற்றி வியப்புப் பிறந்ததாயிற்று" தொல். மெய். சூ. எ - பேர்; [illegible]

சூ-எ. புறநா. ச-ஆம் பாட்டின் கஅ-கூ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; மக்கட்கணின்ற இளமைப்பெயர்க்கு இது மேற்கோள்; தொல். மரபு. சூ. ரு - பேர்.

அ. "அளிதோ...குரைத்தே இஃது இசைநிறை" (தொல். இடை. சூ. உச; சே. பேர். ந); "என்றிசினோர், பெறலருங் குரைத்து என்பன போலச் செய்யுண் முடிபு பெற்று நின்றதென்றலே பொருத்த முடைத்து" (தொல். எச்ச. சூ. க - சே); குரையென்னும் அசைநிலையிடைச்சொல் வந்துள்ளதொடர்மொழிக்கு இது மேற்கோள்; (நன் - மயிலை. சூ. சசo; நன் - வி. சூ. சசக); "கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி, புண்ணியத்தின் பாலதே" (நீதிநெறி. உஅ) என்பது இங்கேஅறியற்பாலது.

* "எருமை...குரைத்தே: இதனுள் நிரயங்கொள்பவரொடொன்றாது காவலையோம்பென வேம்புங் கடுவும் போல வெய்தாகக் கூறி அவற்கு உறுதி பயத்தலின், வாயுறைவாழ்த்தாயிற்று" என்பர்; தொல். புறத்திணை. சூ. ருரு - ந.

† தொல். பொருளியல், சூ. ருரு - ந.

[1] அன்பாவது:—தன்னாற் புரக்கப்படுவோர்மேலுளதாகியகாதல்.

இனி, ஓகாரத்தைப்பிரித்து வினவாக்கிக் கோப்பெருஞ்சோழனும்பொத்தியாரைக்கண்டஞான்று நின்னுடம்புபெறுவாயெனத் தம்முடம்பு பெற்றமை தோன்ற, நீயோவென வினவினாராகவுரைப்பாருமுளர்.

காவல குழவிகொள்பவரினோம்பென்றமையாற் செவியறிவுறூஉவும், அருளும் அன்புநீக்கி நீங்கா நிரயங்கொள்பவரோடொன்றெனென்றமையாற் பொருண்மொழிக்காஞ்சியுமாயிற்று. (ரு)

* தொல். பொருளியல், சூ. ருக - ந.

---

(சா.) வடாஅது பனிபடு நெடுவரை வடக்குந்
தெனாஅது உருகெழு குமரியின் றெற்குங்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்குங்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்குங்
ரு கீழது முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டி
னீர்நிலை நிவப்பின் கீழு மேல
தானிலை யுலகத் தானு மானா
துருவும் புகழு மாகி விரிசீர்

க. கட்டளை ஒருஉ மோனைக்கு இது மேற்கோள்.

உ. "தெனாஅ துருகெழு குமரி யென்புழிக் குறிப்பு வினைச்சொல் குறிப்பினானன்றி வினையறியலாகாமையின், வினைக்குறிப்புமொழி" நன். மயிலை. சூ. உசஅ.

க - உ. "வடாஅது, தெனாஅதென்பனவும் ஏழாம்வேற்றுமைப் பொருண்மைக்கண் வந்த வினைக்குறிப்பு; பெயருமாம்", "வடாஅது, தெனாஅதென்பன ஏழனுருபின் பொருள்பட வந்தன" தொல். வினை. சூ. உக - சே. ந.

ந. சகராமலைதோண்டப்பட்டமையின், கீழ்க்கடலை தொடுகடலென்றார்.

ச. மேல்கடல் பழையதாதலின், தொன்றுமுதிர் பௌவமெனப்பட்டது.

க - ச. "தென்குமரி வடபெருங்கல், குணகுடகடலாவெல்லை" புறநா. கள : க - உ; மதுரை. எ0 - எக.

எ. ஆனிலையுலகம் - கோலோகம். இதனியல்பை, சிவதருமோத்தரத்துள்ள கோபுரவியலாலும், "விளங்குநம் முலகின் மேலாம் வைகுந்த மதன் மேற் கந்தன், வளங்கெழு முலகம் வெற்பின் மாதுல கதனின் மேலாங், களங்கனி யனைய கண்ட னுலகதன் மேலாம் பாங்க, ருளங்கவர் வனப்பின் மேவுங் கோவின துலக மாமே" (காசிகாண்டம், உ : உக) என்னுஞ் செய்யுளானு முணர்க.

அ. இவ்வடி, அகலக்கவியைக் கொண்டோர் பெறும் பயனுக்கு உதாரணமாகக் காட்டப்பட்டது; (இ - வி. சூ. கசச0-உரை); ஆகி, வியங்கோள்.

1 தெரிகோன் ஞமன்ன் போல வொருதிறம்
௧0 2 பற்ற லியரோ நிற்றிறஞ் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி யடர்ப்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதி 3 னேவிப்
பாசவற் படப்பை யாரெயில் பலதந்
கரு தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கிப்
4 பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
உ0 நான்மறை 5 முனிவ ரேந்து கையெதிரே.

---

௯. "வாணஞமற்கு" சீவக. உருக.

கஉ. "கடற்படை குளிப்பமண்டி" என்பது, பின்னின்றமொழி முன்னே மாற்றப்பட்டதற்கு மேற்கோள்; தொல். எச்ச. ரு. கூ. ந.

கக-உ. "விரிகடல வியன்றானையொடு, முருகுறழப் பகைத்தலைச் சென்று" மதுரை. க௨0-அக.

கசு. "வரிசை யறிதலோ வரிதே" (புறநா. கஉக. ௩); "வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்" சிறுபாண். உகஎ.

கரு-கசு. "ஆணபிறப் பெற்ற தார மீண்டிவர், கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்" (பதிற். சஅ : ரு-சு); "அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண், வெங்கடகு வீசும் விலையாகும் - செங்கட், செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி, வரிசசிலையாற் றந்த வளம்" (பு-வெ. க: கசு); "கலநதோ ருவப்ப வெயிற்பல கடைஇ, மறங்கலங்கத் தலைச்சென்று, வாளுழந்ததன் றாளவாழ்த்தி, நா ரீண்டிய நலலகவர்க்குத், தேரோடு மாசிதறி" (மதுரை. உஉ0-உஅ); "பலர்புரந் கண்டவ ருருங்கலந் தரீஇப், புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியும்" மலைபடு. எக-உ.

கக-கசு. "விறலவேன மன்னர் மன்னெயில் முருக்கி, நயவர் பாணர் புன்கண் டீர்த்தபின்" சிறுபாண். உசஎ-அ.

கஎ-அ. "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, யுலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந், திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு" சிலப். உசு : ருச-எ.

கஎ-உ0. இவ்வடிகள், செவியுறைவாழ்த்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. கககச - பேர்.

க௯-உ0. "பார்ப்பார்க் கலலது பணிபறி யலையே" (பதிற். சுந : க); "முனிவர்......வாழ்கெனப் பரவிப் பாணியை விரித்து நிற்ப" கந்தபுராணசிறுக்கை. க௯.

(பி-ம்.)— 1 'தெரிகோற்சமன்' 2 'பற்றிலியரோ' 3 'ஏவி' 4 'பணிஇயரத்தை' 5 'முதல்வர்'

நகர்வலஞ்செயற்குப் பணியியரோவெனவும், எந்தைகை யெதிர் இறைஞ்சுக வென அறமும், புகையெறித்தலான் வாடுகவெனப் பொருளும், முகத்தெதிர் தணிகவென இன்பமும் கூறியவாறாயிற்று.

இஃது, இவ்வாறு செய்கவென அரசியல்கூறலிற் * செவியறிவுறூஉவும், மதியமும் ஞாயிறும்போல மன்னுகவென்றமையான் வாழ்த்தியலுமாயிற்று. (சு)

* ஒருவுதலை ஒரூஉதலெனவும் ஒரூஉவெனவும் கூறுமாறுபோல உறுவும் உறாஉதலெனவும் உறாஉவெனவும் கூறப்படுமென்டர்; தொல். புறத்திணை. சூ. ஙரு - ந.

---

(எ.) களிறு கடைஇயதாட்
கழலுரீஇய திருந்தடிக்
[1] கணைபொருது கவிவண்கையாற்
கண்ணொளிர்வரூஉங் கவின்சாபத்து
ரு மாமறுத்த மலர்மார்பிற்
றோல்பெயரிய வெறுழ்முன்பி
னெல்லையு மிரவு [2] மெண்ணாய் பகைவ
ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலி னல்ல
க0 வில்லவா குபவா லியறோர் வளவ
தண்புனல் பரந்த பூசன் மண்மறுத்து
மீனிற் செறுக்கும் யாணர்ப்
பயன்றிகழ் வைப்பிற்பிற ரகன்றலை நாடே.*

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை; மழபுலவஞ்சியுமாம்.

சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

இ - ள்.—களிற்றைச் செலுத்திய தாளையும், வீரக்கழலுரிஞ்சிய இலக்கணத்தாற்றிருந்திய அடியினையும், அம்பொடு [3] பொருத இடக்கவிந்த

---

க. மு. பதிற். எ0 : க.

ரு. மாவென்பது இடத்தாலே திருவை விளக்கியதென்பதற்கு இது மேற்கோள்; நன்-மயிலை. சூ. கஅகூ; நன்-வி. சூ. ௩க0; இ-வி. சூ. ௩உ0-உரை.

கூ. எழும் முன்பு, ஒருபொருட் பன்மொழி.

கஉ. செறுக்கும் - அடைக்கும்; "செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டோர்" நாலடி. உஉஉ.

* இப்பாட்டினை வஞ்சித்திணைக்குரிய எரிபரந்தெடுத்தலென்னுந் துறைக்கு உதாரணமாகக் காட்டினர்; தொல். புறத்திணை. சூ. அ - ந.

(பி - ம்)— 1 'கணைக்கால் பொருத' 2 'என்றாய்' 3 'பொருத'.

வள்ளிய கையுடனே கண்ணிற்கு விளங்கும் அழகினையுடைய வில்லையும், திருமகள் பிறர்மார்பை மறத்தற்கு ஏதுவாகிய பரந்த மார்பினையும், யானையைப்பெயாத்த மிக்க வலியினையுமுடைய, பகலுமிரவுமென்னாது பகைவரது ஊரைச்சுடுகின்ற தீயினது ஒளியின்கண்ணே தம்சுற்றத்தை அழைத்தலுடனே அழுகின்ற கூவுதலையுடைய ஆரவாரத்தோடுகூடிய கொள்ளையை விரும்புதலுடையை; ஆதலான், நல்ல பொருள்கள் இல்லையாகுவனவால; இயற்றப்பட்ட தேரையுடையவளவ, குளிர்ந்த நீர் பரந்த ஓசையையுடைய உடைப்புக்களை மணமறுத்தலான மீனுலடைகும் புதுவருவாயினையுடைய பயன விளங்கும் ஊர்களையுடைய மாறுறாத அகன்ற இடத்தையுடைய நாடுகள்.—எ - று.

திருந்தடியென்பதற்குப் * பிறக்கிடாத அடியெனினும் அமையும்.

கணைபொரு தென்றது, அதனெடுமெருவுதலை.

தாளையும், அடியையும், கையுடனே சாபத்தையும், மார்பையும், முன்பையுமுடைய வளவ! நீ கொள்ளைமேவலையாதலின், யாணரையும் வைப்பினையுமுடைய பிறர்நாடு, நல்ல இல்லவாகுபவெனக்கூட்டுக. நாடு நல்ல இல்லவாகுபவென இடத்துநிகழ்பொருளின்றொழில், இடத்துமேலேறி நின்றது.

இனித் தாளாலும் அடியாலும் கையாலும் சாபத்தாலும் மார்பாலும் முன்பாலும் கொள்ளைமேவலையாகலினென ஆனுருபு விரித்துரைப்பினுமமையும்.

இது, பிறரகன்றலைநாடு நல்ல இல்லவாகுபவென்றமையிற் கொற்றவள்ளையும், ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலையென்றமையின் மழபுலவஞ்சியுமாயிற்று. (எ).

* பிறக்கு - பின்; "நசை பிறக்கொழிய" புறநா, கரு: கரு.

(அ.) வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
வொடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
ரு கடந்தடு தானைச் சேரலாதனை

க. "தொன்றுபட்டு வழிமொழிய" புறநா. கஎ: ச.

உ. "பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு" (கலி' கூச); "அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற்பொறுஅய்" (நெடுநல். அவதாரிகை); "கொடியு முரசுங் கொற்றவெண் குடையும், பிறர்கொளப் பொறாஅன் றனேகொண்டு" சிதம்பரமும்மணி. உரு.

ச. "ஓம்பா நீயு மாற்ற லெங்கோ" (புறநா. உஉ: ௬௩); "ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து" பதிற். சஉ: கந.

யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி      அ.
யகலிரு விசும்பி னானும்
க0 பகல் விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.*

---

கூ. யாங்கனம்: "நீங்குகென் றியான யாங்கன மொழிகோ" (அகநா. கூ0 : அ) ; "யாங்கனம் வந்தனை" (மணி. ரு : சக) ; ஒக்குமெனக் கூறாமல் ஒவ்வாதெனக்கூறலும் உவமையாமென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். உவம. ரு. நக - பேர்.

எ. "மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்ப" (அகநா. ச : ரு) ; "அழிகுநர் புறக்கொடை" பு - வெ. உஞசி. உ0 - கொளு.

க0. புறநா. நஎச : கஎ - அ.

* மு. "ஒரீஇக் கூறலும்" (தொல். உவம. ந. ஙரு - இளம்) என்பதற்கு மேற்கோள்; "வையங் காவலர்...பல்கதிர் விரித்தே யென்னும் பாட்டினுள், 'கடந்தடு தானைச் சேரலாதனை' என்னுந் துணை உவமத்திற்கு வந்த அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. என்னை? வெஞ்சுடர் வழியென்னுந் துணை உவமத்திற்குரிய அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. இனிப், 'பொழு தெனவரைதி' என்பது தொடங்கிப் பாட்டு முடிகாறும் பொருட்குரிய அடையினை உவமத்திற்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. என்னை? வெஞ்சுடர் வழித்தோன்றிய அரசனைத் தண்சுடரோடுவமிப்பான் 'பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும்' என்றதனாற்பொருளினை உவமையாகக்கூறாது உள்ளுறையுவமம் போலக் கொள்ளவைத்துப் பின்னர் உவமத்திற்கு அடையாயவற்றுள், 'வையங்காவலர் வழிமொழிந் தொழுக' என்றான். வழிமொழிதலென்பது வேற்றரசர்க்குத் தம் தன்மை யெனவேறின்றித் தன்வசப்படுத்தல்; ஆகலால் தத்தம்மொளியொடுபடுத்து ஒழிந்தகோளுஞ்செல்லத் தானுஞ் செல்லும் மதியமென்று எதிர்மறுத்துக் குற்றங்கூறும் குறிப்புப்படவைத்தானென்பது. 'போகம் வேண்டிப் பொதுச்சொற்பொறாஅது' எனவே இன்பநுகர்வு முற்றுயச் சிறப்பில்லாக் கட்டுரை யெய்தானெனவும் அவனோடு உவமிக்கின்ற மதியமாயின் இருபத் தெழுவர்மகளிரொடு போகந்துய்த்துச் சிறப்பில்லாத கட்டுரைபுனையுமென்று எதிர்மறுத்துக் கொள்ள வைத்தான். சிறப்பின்மையென்பது, எல்லார்க்கும் ஒத்தவாற்றான் அறஞ்செய்யாது உரோகிணிமேற் கழிபெருங்காதலனெனப் படுதல் போல்வன. 'இடஞ் சிறிதென்னு மூக்கந்துரப்ப' எனவே, எஞ் ஞான்றுந் தன்னெல்லைக்கண்ணே வரும் மதிமண்டிலமென்று எதிர் மறுத் துக்கொள்ளப்படும். 'ஒடுங்காவுள்ளம்' எனவே, மதியம் தேய்ந்தொடுங்கு மென்பது கொள்ளப்படும்: 'ஓம்பாவீகை' எனவே, நாடோறும் ஓரோவோர் கலையாகப் பல்லுயிர்க்கும் இன்பம் பயக்குமாற்றால் தருவதல்லது தானுடைய தெல்லாம் ஒருகாலே கொடாது மதியமெனப்படும். 'கடந்தடுதானை' எனவே, மதிக்குத்தானையாகிய தாரகையெல்லாம் பகைக்கதிராகிய பருதிமண்டிலத்துக்குத் தோற்குமென்றானும். இவ்வாற்றான் உவமான அடையெல்லாம்

**திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி; பூவைநிலையுமாம். சேரமான்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது.**

இ - ள்.—உலகத்தைக்காக்குமரசர் வழிபாடு சொல்லிடக்க நுகரும் இன்பத்தைவிரும்பிப் பூமி பிறவேந்தருக்கும் பொதுவென்னும் வார்த்தைக்குப்பொறாது தன்னோடு இடஞ்சிறிதென்னும் * மேற்கோள்செலுத்த மடியாத உள்ளத்தையும் பொருளைப் பாதுகாவாது வழங்கும்வண்மையையும் வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் படையையுமுடைய சேரலாதனை எவ்வாறொப்பை? மிக்க செலவையுடைய மண்டிலமே, நீ பகற்பொழுதை நினக்கெனக் கூறுபடுப்பை; திங்கள் மண்டிலத்திற்கு முதுகிட்டுப் போதி; தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறி வருவை; மலையின் கண்ணே வெளிப்படாது கரப்பை; அகன்ற பெரிய ஆகாயத்தின் கண்ணும் பகற்பொழுது விளங்குவை, பல கிரணங்களையும் பரப்பி.—எ-று.

மாறிவருதியென்பதற்கு இராசிதோறும் மாறிவருதியெனினுமமையும்.

வீங்குசெலன்மண்டிலமே, வரைதி; இறத்தி; வருதி; ஒளித்தி; நீ விசும்பினும் பகலவிளங்குதி; இக்குறைபாடெல்லாமுடைய நீ சேரலாதனை யாங்கன மொத்தியோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒழுகவென்னுமெச்சம், நுகருமென ஒருசொல்வருவித்து அதனோடு கூட்டி முடிக்கப்பட்டது; ஒழுகவும் போகநுகரவும்வேண்டி யெனினுமமையும். வேண்டி, பொறாது, துரப்ப எனநின்ற வினையெச்சங்கள் ஒடுங்காவென்னும் பெயரெச்சமறையோடு முடிந்தன.

இனி, 'பகலவிளங்கலை' என்னும் பாடத்திற்குத் † திங்கண்மண்டிலமாக்கி, 'மாறிவருதி' என்பதற்குத் தேய்ந்தும் வளர்ந்தும் வருதியெனவும் பிறவும் அதற்கேற்பவுரைப்ப. (அ)

---

ரதிர்மறுத்துக்கொள்ளப்பட்டன. இனிப், பொருட்குரிய அடையும் அவ்வாறே எதிர்மறுத்துக்கொள்ளப்படுமென்றவாறு 'விலங்குசெலன்மண்டிலம்' எனவே, கடையாயினார் கதியிற்செலலு மதியமென்று பாட்டுடைத் தலைவன் தலையாயினார் கதியிற்செலலுமென்றான். 'பொழுதென வரைதி' எனவே, நாடோறும் நாழிகை வேறுபட்டு எறித்தியென்றதனான் இவன் பொழுது செய்யானெனவும், 'புறக்கொடுத்திறத்தி' எனவே, தோற்றோர்போன்று ஒளி மழுங்கிச் செலகின்றாயெ[னவும், 'விளங்கித் தோன்ற' எ]ன்பதனால் [தொடர்கின்ற] சுடர்போல விளங்கிப் பிறர் தோற்றோடக்காயும் இவனெனவும், 'மாறி வருதி' எனவே, திங்கடோறுமாறிப் பிறத்தியென்பதனான் இவன் நிலைபெற்றானெனவும், 'மலைமறைந்தொளித்தி' எனவே மலைசார்ந்தவழித் தோன்றாயென்பதனான் இவன் தன்னாட்டு மலைமீக்கூறுமெனவும், 'அகலிருவிசும்பினும்' எனவே, இவன் இவ்வுலகத்து நிலைபேறுடையனெனவும், 'பகல்விளங்காய்' எனவே, இவன் இருபொழுதும் விளங்குமெனவுங் கொள்ளப்படும். முற்பகுதியும் பிற்பகுதியும் வேறுபட வருதலின் இது வேறுபட வந்ததாயிற்று" தொல். உவம. சூ. ௩௨ - பேர்.

மேற்கோள்-பிரதிஞ்ஞை

புறநா. ௨எ : ௧௧ - ௪; "மாய்தலும் பிறத்தலும் வளர்தலும் வீய்தலுந், தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்" (சீவக. ௨௧௩௨);

"உலகினர் செல்வகந்த லுரைப்பொரு ளிரண்டுங் கோட, விலகு வெண் மதியங் காட்ட வென்று மோர் தகைத் தாய்ச்சேறல, விலகுதஞ் செல்வ மெங்கள் விழுப்பொரு ளாயவண்ண, லலகிலசெஞ் சோதிப் பின்ன லணி மதி யுணர்த்த வாழ்வார்" (கூவப். சைமிசா. கச); "அகன்மதி வளர்ந்து தேய்ந்தர் றச்சக போகத்தன்மை, நகலுறக்காட்ட" தியாக. சைமிச. கசு.

---

(கூ.) ஆவு மாணியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரு
ரு மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறததிற்

---

க. சிறிதும் தீங்குசெய்யத்தகாத சாதியாகலின், டசுமுற்கூறப்பட்டது; "ஆவுமாவுங் கொணடுகழி கென்றே" மணி. : உரு.

க - உ. தொல். விளி. ரு. அ - பேர்- மேற , "ஆவு மாணியற்...... பிணியுடையீரும்" என்றாற் போலும் அணைமைவிளியும் இதனாற்கொள்க" ஷெ. ஷெ. ஷெ. கஉ - ந.

ச. "பொனபோற் புதலவனொ டெடீத தோகை" ஐங்குறு. உசுரு : ச.

ரு. "எம்மம்பு...சேர்மி னெ பத வினைவு" நன்-மயிலை. கூ. சஙசு; நன் - வி. கூ. சருஎ.

க - ரு. "மண்டமர் மேலகொடு வநதபை மிபனே, தணடக நாட்டுறை தாபதர் சோயோர், பெண்டிரு நும்மர ணைகுதிர் பெட்டென், றெண்டிசை யார்ப்பவிசைப்பறைசாற்றி" (காஞ்சிப். நாடு. உக); "ஆவும்...சேர்மினெனத் திணைவிராய்வநது முன்னிலை வினைகோடல எற்றாற் பெறதுமெனின், — அத் திகரன செய்யுணமுடிபெனபபடும், அவற்றை அதிகாரப்புறனடையாற் கொள்க" (தொல். கிளவி. கூ. சரு - சே); "ஆவுமாணியற்பார்ப்பனமாக் களுமென எண்ணி 'நும்மரண சேர்மின' என முன்னிலைவினைகோடல் செய் யுண்முடிபென்பது அதிகாரப்புறனடையாற்கொளக" (ஷெ. ஷெ. ஷெ. சரு - ந); "ஆவுமாணியற பார்ப்பனமாக்களும்...சேர்மின் என ஏகாரவீற்று உயர் திணைப்பெயர் அணமைக்கண இயலபாயிறறு" இ - வி. ரு. உ0எ - உரை.

சு. "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்" (புறநா. கூஉ: எ); "சொல்லுதல யார்க்கு மெளிய வரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்"

கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்று
மெங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
௧௦ முந்நீர் விழவி னெடியோ

---

(குறள். ௬௬௬௪), என்பதும், 'சிறப்புடை அரசியலாவன: மடிந்த உள்ளத்தோ னையும் மகப்பெறாதோனையும் மயிர்குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனை யும்பெண்பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்தபடையெடாதோனை யும் பிறவும் இத்தன்மையுடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொருதலும் முதலியனவாம்'' (தொல். புறத்திணை. சூ. ௬௦ - ந.) என்ப தும் இங்கே அறியற்பாலன.

௧ - ௬. "இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால ஒருவர்,ஒருவர் நாட்டுவாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்கு செய்யத்தகாத சாதி களை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருகவெனப்புகறலும், அங் ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டுவந்து பாதுகாத்தலும் தீதெனப்படாது அறமேயாமென்றற்கு 'ஆதந்தோம்பல்' என்றான்; அஃது,'ஆவும்...மறத்தின' எனச்சான்றோர் கூறியவாற்றானுணர்க; மன்னுயிர்காக்கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையினும் அறமே நிகழு மென்றற்கு, 'மேவற்றாகும்' என்றான்'' (தொல். புறத்திணை. ந. உ - ந; இ - வி. சூ. ௬௦௨ - உரை) எனபனவும், "நல்பால பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா, ரென்பாரை யோம்பே னெனி யானவ னாக வென்றான்'' (சீவக. ௪௪௬) என்பதும் இங்கே அறியத்தக்கவை.

எ. மீமிசை : "ஓங்குயர் சமந்தத் துச்சி மீமிசை'' (மணி. ௧௧ : ௨௨); யானை மேற் கொடி : "மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி, வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்க'' பதிற். ௬௯ : ௧ - ௨.

௯. செந்நீர்ப் பசும் பொன்—நால்வகைப் பொன்னுட் கிளிச்சிறை யென்பது ; "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை'' மதுரை. ௪௧௦.

௧௦. முன்னொருகாலத்தில் மதுரையை அழித்தற்கு வந்த கடலைஉக்கிர குமார பாண்டியனென்பவன், ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் அருளிய வேலை யெறிந்து வற்றச்செய்து, அக்கடல் தன்னுடைய காலின் வடிம்பை யலம்பும் படி உயர்ந்து நின்றமையால், அவனுக்குக் கடல் வடிம்பலம்பநின்ற பாண் டியனென்பது பெயராயிற்று; இதனைத் திருவாலவாயுடையார் திருவிளையா டற்புராணத்தில் ௨௧ - ஆவதிலுள்ள ௬ - ஆம் விருத்தமுதலியவற்றா லுணர்க; "அடியிற்றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவேலெறிந்த வான்பகை பொறாது, பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக், குமரிக்கோடுங் கொடுங்கடல்கொள்ள'' (சிலப். ௧௧: ௧௭ - ௨௦), "ஆழிவடிம்பலம்பநின் றானும்'' (நள. சுயம். ௧௩௭), "கடல்வடிம்பலம்ப நின்ற கைதவன்'' (வில்லி. பாரதம், ௧௫ - ஆம் போர். ௧௪) எனவும் வருபவை இதனை வலியுறுத்தும். நெடியோன் : "பொலந்தார் மார்பி னெடியோ னும்பல்'' (மதுரை. ௬௧) ; "உரைசால் சிறப்பி னெடியோ னன்ன, வரைசபூதம்'' சிலப். ௨௨: ௬௦-௬௧.

னன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

இ - ள்:—ஆவும், ஆனினியல்புடைய அந்தணரும், மகளிரும், நோயுடையீரும், பாதுகாத்துத் தென்றிசைக்கண்வாழ்வோராகிய நுங்குடியிலிறந்தோர்க்குச் செய்தற்குரிய பிண்டோதகக்கிரியையைப்பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதீரும், எம்முடைய அம்பை விரையச் செலுத்தக்கடவேம்; நீர் நுமக்கரணாகிய இடத்தை அடையுமென்று அறநெறியைச்சொல்லும் மேற்கோளினையும் அதற்கேற்ற மறத்தினையுமுடைய, கொல்யானைமேலே எடுக்கப்பட்ட கொடிகள் ஆகாயத்தை நிழற்செய்யும் எம்முடைய வேந்தனாகியகுடுமி வாழ்வானாக; தம்முடைய கோவாகிய சிவந்தநீர்மையையுடைய போக்கற்ற பசியபொன்னைக் கூத்தர்க்கு வழங்கிய முந்நீர்க்கடற்றெய்வத்திற்கெடுத்தவிழாவினையுடைய [1]நெடியோனாலுளதாக்கப்பட்ட நல்ல நீரையுடைய பஃறுளியென்னுமாற்றின்மணலினும் பல காலம்.—எ - று.

எங்கோவாகிய குடுமி, பஃறுளியாற்றின்மணலினும் பலகாலம் வாழிய வென்க்கூட்டுக.

கொடி விசும்பு நிழற்றுமென்பது, சினைவினைப்பாற்பட்டு எங்கோவென்னும் முதலொடுமுடிந்தது; கொடியால் விசும்பு நிழற்றுமென்றுரைப்பினுமமையும்; மீமிசைக்கொடி விசும்புநிழற்றும் களிறென்றினையுமொழிமாறிக்கூட்டுவாருமுளர். தங்கோச் செந்நீர்ப் பசும்பொனென்பதற்குத் தமதரசாட்சியினது செவ்விய நீர்மையாற்செய்த பசும்பொனென்டாருமுளர்.

முந்நீர்க்கண் வடிம்பலம்பநின்றானென்ற வியப்பால, நெடியோனென்றானென்ப. யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையால, கடற்கு †முந்நீ

கக. பஃறுளியாறு: சிலப். கக: கக.

அ - கக. ஓரரசனை வாழ்த்துங்கையில அவனை அவர்க்குரிய ஆற்றுமணலினும் வாழ்கவென்றல மரபாகலின், இங்ஙனம் கூறினார்; (புறநா. சந: உக - ங) ; "மண்ணாள் வேந்தே நின்வாணாட்கள், தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப். உஅ: கஉ0 - சு.

* இச்செய்யுள், பொருளினறுய்த்த பேராண்பக்கத்திற்கும், இயன்மொழிவாழ்த்திற்கும் (தொல். புறத்திணை. ..எ, உகூ - இளம்) உதாரணமாக முறையே காட்டப்பட்டுள்ளது.

† "முந்நீர் - கடல; ஆகுபெயர்; ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவையென்பார்க்கு அறறன்று; ஆற்றுநீர மேனீராதலானும் இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும் இன்றுமாதலானும் இவற்றை முந்நீரென்றல பொருந்தியதன்று; முதியநீரெனின், 'நெடுங்கடலுந்தன்னீர்மை குன்றும்' என்பதனால் அதுவும் மேனீரின்றி அமையாமையின ஆகாது; ஆனல முந்நீர்க்குப்பொருள் யாதோவெனின் முசசெய்கையையுடையநீர் முந்நீரென்பது; முச்செய்கை

(பி - ம்.)— 1 'உயர்ந்தோனுல'

றென்றுபெயராயிற்று ; அன்றி, முந்நீரென்றோதி, *நிலத்திற்குமுன்னாகிய நீரென்றுமுரைப்ப.

பிணியுடையீரும் புதல்வர்ப்பெறாதீருமென்னும் முன்னிலைப்பெயரோடு ஆவும் பார்ப்பனமாக்களும்பெண்டிருமென்னும் படர்க்கைப்பெயர்கள் விராய் வந்து, நும்மரண்சேர்மினென்னும் முன்னிலைவினையான்முடிதல், "†செய் யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்" என்னும் அதிகாரப்புறனடையாற் கொள்ளப்படும். (௯)

யாவளை மண்ணைப்படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக்காத்தலு மாம்" சிலப். கஎ: "முந்நீரின்"-அடியார்; பெரும்பாண். ௪௪௧; சீவக. ௫-ந.

* இங்ஙனங் கூறியது பூதங்களின் தோற்ற முறைபற்றி.

† தொல். எச்ச. ௫௬௭.

---

(௧௦.) வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணி
னொப்ப நாடி யத்தக வொறுத்தி
௫ வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற்
றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே
யமிழ்தட் டானாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை
மகளிர் மலைத்த லல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப
செய்திரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்

---

௪ - . 'தண்டமாவது, அவ்வொழுக்க நெறியினும் வழக்குநெறியி னும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக வொறுத்தல்' குறள், பரிமேல். உரைப்பாயிரம்.

௫ - ௬. "அஞ்சினார்க்களித்தலும்" சிறுபாண். ௨௩௦.

௮. வாழ்க்கை: ஐங்குறுநூற்றின் முதற்பத்தால் விளங்கும்.

௯ - ௧௦. "சிலைத்தார் அகல மலைக்குந ருளரெனிற், றாமறி குவர்தமக் குறுதி யாயவை, மொழிவுடை திணிதோள வழுவின்று மலைந்தோர், வாழக் கண்டன்று மிலமே" (புறநா. ௬௧: ௧௪ - ௭); "வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் அகலம், மகளிர்க் கல்லது மலைப்பறி யலையே" (பதிற். ௬௩: ௪ - ௫) ; "இளையோர்க்கு மலர்ந்த மார்பினை" (சிறுபாண். ௨௩௨ - ந) என் பதற்கும், "சோலைமயிலார்கடுணை வெம்முலைகடுஞ்சுங், கோலவரைமார்ப்" (சீவக: ௨௮ - ந) என்பதற்கும் இவ்வடிகள் மேற்கோள் ; "மள்ளர்... மார்ப : இது தாரடுத்தது" தொல். புறத்திணை. ௫. ௧௧ - ந.

௧௧. செய்திரங்காவினை: "செய்து பின் னிரங்காவினையொடு" (அகநா. ௨௬௮ : ௧௩) ; "எற்றென்றிரங்குவ செய்யற்க" (குறள். ௬௫௫) ;

நெய்தலங் கான னெடியோ
யெய்தவந் தனம்யா மேத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் 1 நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

இ - ள்.—நின்னை வழிபட்டொழுகுவோரை யறிதியலை; பிறருடைய குற்றஞ்சொல்லுவாரது வார்த்தையைத் தேறாய்; நீ மெய்யாக மனத்தானாராய்ந்து அறுதியிடப்பட்ட கொடுமையை யொருவன் பாற் காண்பாயாயின், அதனை நீதிநூற்குத் தக்க ஆராய்ந்து அத்தீமைக்குத் தக்க தண்டஞ்செய்தலை; வந்து நின் பாதத்தையடைந்து முன்னே நிற்பாராயின், அவர் பிழைசெய்வதற்கு முன் நீ செய்யுமருளினும் அருள்பெரிதாக அவரைச் செய்யுந் தண்டமும் தணிதலை; அமிழ்தத்தைத் தன்சுவையால் வென்று உண்ணவுணவை அமையாத மணங்கமழும் தாளிப்பையுடைய அடிசிலை விருந்தினர்க்கு மிகுதிகுறைபடாமல் வழங்கும் பழிதீர்ந்த மனைவாழ்க்கையையுடைய பெண்டிர் முயக்கத்தால் மாறுபடுத்தலல்லது வீரர்போரான் மாறுபடுத்தலொழிந்த இந்திர விற்போலும் மாலையையுடைய மார்ப, ஒரு தொழிலைச் செய்து பின் பிழைக்கச்செய்தேமென்று கருதாத செய்கையையும் செம்மைக்கண்ணே விளங்கும் புகழினையுமுடைய நெய்தலங்கானலென்னும் ஊரையுடைய நெடியோய், அணுகவந்தேம்யாம்; நின் பலகுணங்களையும் புகழ்வேமாக.—எ - று.

வழிபடுவோரை வல்லறிதியென்றது,* அறிந்து அவர்கட்கு அருள் செய்வையென்பதாம்.

பெரிதென்பது வினையெச்சக்குறிப்பாகலின், ஆகவென ஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது. பண்டையிற் பெரிது தணிதியென்பதற்கு நீ பண்டு செய்த கோபத்திலும் பெரிதாகத் தணிதியென்றுரைப்பினுமமையும், அட்டமையாத அமிழ்துபோலும் அடிசிலென்றுரைப்பினுமமையும்.

நெடியோய், பல ஏத்துவேமாக எய்தவந்தனமெனக் கூட்டுக. (௧௦)

---

"கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி. ௧௦); "செய்திரங்காவினை யென இரங்கல இசையேயன்றிப் பொருளது கழிவாகிய குறிப்புமுணர்த்திற்று" (தொல், உரி. சூ. - சே); "இரங்கல, இசையேயன்றி ஒருபொருளது கழிவாற் பிறந்த வருத்தமாகிய குறிப்பும் உணர்த்தும்; 'செய்திரங்கா...புகழ்,' எனவரும்" (ஷை ஷை ஷை சூ. ௧ - ந); "செய்து......புகழென இரங்கலென்னுமுரிச்சொல......ஒருபொருளதுகழிவாற்பிறந்த வருத்தமாகிய குறிப்புப் பொருளுணர்த்தலும் பொருந்தும்" (இ - வி. சூ. ௨௮௬ - உரை). சேண்விளங் கும்புகழ்: "விண்பொரு புகழ்" (புறநா. ௧௧: ௬); "கெடாது நிலைஇயர் நின் சேணவிளங்கு நல்லிசை" மதுரை. ௨௦௬.

* 'அறிதி' என்றதற்கு இங்கே எழுதிய உரைநயம், "ஒருவாரணமழைப்ப நீயோவந் தேனென்றாய்" (கம்ப. விராத. ௪௬); "என்னென்றானெங்கட் கிறை" (நள. காப்பு) என்பவற்றிலுள்ள 'ஏனென்றாய்', 'என்னென்றான்' என்பவற்றிற்கு இன்னவாறு பொருள் செய்யவேண்டுமென்பதை நன்கு புலப்படுத்துகின்றது.

(பி - ம்.)— 1 'நெய்தலங்காலை'

(கக.) அரிமயிர்த் திரண்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணற் புனைபாவைக்குக்
குலவுச்சினைப் பூக்கொய்து
ரு தண்பொருநைப் புனல்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடைய வரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே
கo புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே
யேருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய விழைபெற்றிசினே
யிழைபெற்ற பாடினிக்குக்
கரு குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே, எனவாங்
கொள்ளழல் புரிந்த தாமரை

---

க. அரியென்பது ஐம்மைப்பொருளில வருமெனபதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். உரி. சூ. சo - சே; ந. ருஅ - டீ; இ - வி. சூ. உகூo-உரை.

ரு. பொருநை - சேரநாட்டிலுள்ளதொருநதி. இது, பண்டைக்காலத்தில் வஞ்சிநகரத்தின் புறமதிலை அலைத்தொழுகியது; "தண்ணான் பொருநை" (சிலப். உஅ: கஉகூ) என்பதன் அடிககுறிப்பைப்பார்க்க.

உ - ரு. "மணற், செய்வுறு பாவைக்குக கொய்பூத் தைஇத், தண்கய மாடுமகளிர்" புறநா. உசந: க - ந.

கூ. பொருவென்பது, பயவுவமைபற்றி வருமென்பதறகு இவவடிமேற்கோள்; தொல். உவம. சூ. கச - பேர்; இ - வி. ந. கூசஉ - உரை.

எ-கூ. சின்னென்பது பால்காட்டுமெழுத்தோடடுத்து வருமென்பதற்கு மேற்கோள் ; தொல். இடை. ப. உகூ - பேர்.

கக - கூ. தொல். எசச. சூ. ருக - பேர். மேற்.

கசு. "அழலபுரிந்த வடர்தாமரை" புறநா. உகூ: க,

கக - எ. பாடினி இழைபெறுதல பாணன் பொற்றாமரை பெறுதல: (புறநா. கஉ: க; உகூ: க - ரு; சுஅ: ச - உக; கஉசு: க - ங; நகக: கூ-கரு; நஅச: க - ந); "எரியகைந் தன்ன வேடி றாமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி, நூலின் வலவா நுணங்கரின் மாலை, வாலொளி முத்தமொடு பாடினி யணிய" (பொருந. கருகூ-சுஉ); "தலைவன் றாமரை மலைய விறலியர், சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய" மலைபடு. ருசுகூ - எo.

கச - எ. "இழைபெற்ற...பெற்றிசினே: இஃது, ஈற்றயலடி மூச்சீர்த் தாகிவந்து சென்றாக்கியற்றாகி இற்றவஞ்சிப்பா" தொல். செய். சூ. எக-பேர்.

வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே *

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

சேரமான் பாலைபாடியபெருங்கடுங்கோவைப் 1 பேயமகள் இளவெயினி பாடியது.

இ - ள்.—ஐய மயிரையுடைய திண்ணிய முன்கையினையும் தூய ஆபரணத்தையுமுடைய பேதைமகளிர் வண்டலிழைத்த சிற்றிற்கட்செய்த பாவைக்கு வளைந்த கோட்டுப்பூவைப் பறித்துக் குளிர்ந்த பொருநைத் துறைக்கட் பாய்ந்து விளையாடும் வானைமுட்டிய புகழினையும் வென்றியையு முடைய கருவூரின்கட் பாடுதற்கமைந்த வெற்றியையுடைய அரசனும், பகை தெறும் வெம்மையையுடைய அரணை அழித்து வலியோடு எதிர்ந்தவருடைய புறக்கொடையைப் பெற்றான் , அப்புறக்கொடையைப் பெற்ற வலிய அரசனது வீரத்தைப்பாடிய பாடினியும், தோற்றப் பொலிவுடைய சிறந்த பல கழஞ்சாற் செய்யப்பட்ட கனமையையுடைய அணிகலத்தைப்பெற்றாள் ; அவ்வணிகலத்தைப்பெற்ற விறலிக்கு முதற்றாமாகிய குரலின்மேல் வந்து பொருந்தும் அளவையுடைய பாட்டைவல்ல பாணனும், விளங்கிய தழலின் கண்ணே ஆக்கப்பட்ட பொற்றாமரையாகிய வெள்ளிநாராற்றொடுத்த பூவைப் பெற்றான்.—எ - று.

பாடினி இழைபெற்றாள் ; பாணன் பூப்பெற்றான் , யான் அதுபெறு கின்றிலேனென்று பரிசில்கடாநிலையாயிற்று ; இனி, இவர் பேயாயிருக்கக் கட்புலனாயதோர் வடிவுகொண்டு பாடினியொருத்தியாயும், 'இக்களத்து நின்றோராயாவரும் பரிசில் பெற்றார்கள் ; ஈண்டு நின்றேனும் எதிர்த்துப் பட்டோ ரில்லாமையான், எனக்கு உணவாகிய தசை பெற்றிலேன்' என்று தான் பேய மகளானமை தோன்றப் பரிசில்கடாயினாளெனவுங் கூறுவாருமுளர்.

'பாடினிக்கு...பாணமகன்' என்பது, அதுவெனுருபுகெடக் குகரம்வந் தது'; உயர்திணையாகலின். †பாடினிபாடலுக்கேற்பக் கொளைவல்ல பாணமக னெனினுமமையும். எனவும், ஆங்கும்: அசைநிலை. பெற்றிசின் மூன்றும், படர்க்கைக்கண் வந்தன. (கக)

---

கரு-எ. எனவும் ஆங்கும் அசைநிலையாயின வென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. ரு. சஎ - போ.

* மு. "மகிழ்செய்தற்கட் காமம் நிரம்பிற்றும்சிறந்ததேயெனினும் இவள் குறிப்பு ஆராய்ந்தறியாமையின் யானது பெற்றிலேனாகக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க; 'அரிமயிர்த்திரண்முன்கை' என்னும் புறப்பாட்டிற்குறிப் புப்போல" குறள். க0கூ0 - பரிமேல.

† "பாடினி, பாடல் பாணிக்கேற்ப" பொருந. சஎ - அ.

(பி - ம்.)— 1 'பேயமகள் இளவினி'

(௧௨.) பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவு
மறனோ மற்றிது விறன்மாண் குடுமி
யின்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே *.

திணை - அது ; துறை - இயன்மொழி.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமை யார் பாடியது.

இ - ள்.—பாணர் பொற்றாமரைப்பூவைச் சூடவும், புலவர் பட்டம் பொலிந்த மத்தகத்தையுடைய யானையுடனே அலங்கரிக்கப்பட்ட தேரினை ஏறுதற்கேற்ப அமைக்கவும், அறனோ இவ்வாறுசெய்தல்? வென்றிமாட்சிமைப்பட்ட குடுமி, வேற்றரசருடைய நிலத்தை அவர்க்கின்னாவாகக்கொண்டு நின்னுடைய பரிசிலரிடத்து இனியவற்றைச்செய்வை.—எ - று.

குடுமி, பிறர்மண் இன்னாவாகக்கொண்டு, மலையவும் பண்ணவும் நின் ஆர்வலர் முகத்து இனியசெய்வை; இது நினக்கு அறனோ? சொல்லுவா யாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

மற்று, அசைநிலை.

இது, பழித்ததுபோலப் புகழ்ந்ததாகக்கொள்க. (௧௨)

---

௧. இந்நூல் ௧௧ - ஆம் பாட்டின் ௧௧-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

௩ - ௫. "அறனோ...முகத்தே...இவை சொல்லுவான் குறிப்பினாற் பொருளறிய வந்தன" நன் - மயிலை. சூ. ௨௬௭; நன் - வி. சூ. ௨௭௬.

* இச்செய்யுள், கொடுத்தலெய்திய கொடைமைக்கு மேற்கோளாகக் காட்டப்பட்டது; தொல். புறத்திணை. சூ. ௭ - இளம்.

---

(௧௩.) இவனியா ரென்குவை யாயி னிவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
வெய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே

---

௧. "இவன்யார்...இவனேயென்னும் புறப்பாட்டினுட் சேரனை முன்னிலையாக்கி முடமோசியார் கூறுகின்ற காலத்து இவனென்பது முன்னிலைப் படர்க்கையாய் நின்றது" (தொல். எச்ச. சூ. ௬௭-சே, ந); "இவன்யார்... இவனே யென்னும் புறப்பாட்டினுள் இவனென்பது முன்னிலைப் படர்க்கை யாய் நிற்றலும் இன்னோரன்னபிறவும் இப்புறனடையானே அமைத்துக் கொள்க" இ - வி. சூ. ௩௭௨ - உரை.

௨. "புலிப்பொறிப்போர்வை நீக்கி" சீவக. ௨௬௬.

௩. எழில்-எழுச்சி; "நுண்மா ணுழைபுல மில்லா னெழில்" குறள். ௪0௭.

௫ களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீ னாப்பட் டிங்கள் போலவுஞ்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே
நோயில னாகிப் பெயர்கதி லம்ம
௧௦ பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்குங்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

சோழன்முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி கருவூரிடஞ்செல்வானைக் கண்டு சேரமானந்துவஞ்சேரலிரும்பொறையோடு வேண்மாடத்துமேலிருந்து உறையூர் ஏணிச்சேரிமுடமோசியார் பாடியது.

இ - ள்.— இவன் யாரென்று வினவுவாயாயின், இவன்றான், புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகுகருவிபொலிந்த பொறிசிதைய எய்த அம்புகள்போழப்பட்ட பரந்துயர்ந்த மார்பினையுடைய கூற்றம் போன்ற களிற்றின்மேலோன்; இக்களிறுதான், கடலின்கண்ணே இயங்கும் மரக்கலத்தையொப்பவும் பலமீனினது நடுவேசெல்லும் மதியத்தை யொப்பவும் சுறவினத்தையொத்த வாண்மறவர் சூழத் தன்னைமருவிய பாகரையறியாது மதம்பட்டது; இவனை நோயின்றிப் பெயர்வானாக; வயலிடத்து மயிலுதிர்த்த பீலியை ஆண்டுள்ள உழவர் நெற்சூட்டுடனே திரட்டும் கொழுவிய மீனையும் விளைந்த கள்ளையுமுடைய மிக்கநீராகிய வேலியையுடைய நாட்டையுடையோன்.—எ - று.

களிற்றுமிசையோனாகிய இவன், யாரென்குவையாயின், நாடுகிழவோன்; இவன்களிறு மதம்பட்டது; அதனால், இவன் நோயின்றிப்பெயர்கவெனக் கூட்டி வினை முடிவுசெய்க.

---

௫. களிற்றிற்கு நாவாயுவமை: "நளிகட லிருங்குட்டத்து, வளிபுடைத்த கலம்போலக், களிறுசென்று களனகற்றவும்" (புறநா. ௨௬ : ௧-௩); "வீங்கு தோள்கயிறு...கடாஅயானையும்" (மதுரை. ௩௭௬ - ௮௩); "நீயா னடுங்க...காலவேகங் களிமயக்குற்றென" மணி. ௪ : ௨௯ - ௪௪.

௬. புறநா. ௩௯௯ : ௨௫ - ௭; பதிற். ௯௦ : ௧௭ - ௮.

௭. "எறிசுறவினையவர்", "கோட்டுமீன குழாத்திடை மன்னாண்டினர்" (சீவக. ௧௪௪௭, ௨௩௨௫); பலபொருளோடு பலபொருள்கள் உவமையாய் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; இ - வி. ௬௩௯ - உரை.

௧௧. சூடு - நெல்லரி; "சூடு கோடாகப் பிறக்கி" பொருந. ௨௪௩.

௧௦ - ௧௧. "கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற், பழன மஞ்ஞை மழைசெத் தாலும்" பதிற். ௯௦ : ௪௧ - ௨.

களிற்றுக்கு நாவாயோடு உவமை எதிர்ப்படையைக் கிழித்தோடலும், திங்களோடு உவமை வாளோர்நடுவண் தன் தலைமைதோன்றச் செல்லுதலுமாகக்கொள்க.

தில் - விழைவின்கண் நின்றது.

பெருநற்கிள்ளி களிறுகையிகந்து பகையகத்துப் புகுந்தமையான் அவற்குத் தீங்குறுமென்று அஞ்சி வாழ்த்தினமையால், இது வாழ்த்தியலாயிற்று; இவற்குத் தீங்குறின் நமக்குத்தீங்குறுமென்னுங்கருத்தால் நோயிலனாகிப் பெயர்கவென்றுராயின், வாழ்த்தியலாகாது; துறையுடையானது பாட்டெனவுணர்க. (௧௩)

---

(௧௪.) கடுங்கண்ண கொல்களிற்றாற்
காப்புடைய வெழுமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமந்தாங்கவும்
௫ பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்புக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவு
மாவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
௧௦ பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் றாடோய் தடக்கை
புலவுநாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது

---

௧. "கடுஞ்சினத்த கொலகளிறும்" (புறநா. ௫௫ : ௭); "கடுஞ்சினத்த களிறு" மதுரை. ௧௭௯.

௩. "விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை" (புறநா. ௧௫ : ௧௨); "மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மொன்றாகப், பொன்னென் பெயர் படைத்தாற் போலுமே" பெரும்பொருள்விளக்கம்.

௮ - ௯. இது, படையடுத்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௫. ௬௧ - ௩.

௧௦ - ௧௧. இவ்வடிகள், ஆக்கக்கிளவி காரணம் பெற்று வந்தமைக்கு மேற்கோள்; தொல். கிளவி. ௫. ௨௨ - சே.

௧௩ - ௪. "மற்று, ஊன்றுவை கறிசோறுண்டு வருந்துமென வந்ததாலெனின், அதுபாடமறிந்து திருத்திக்கொள்க" (தொல். கிளவி. ௫. ௪௪ - இளம்); "அஃதேல, 'ஊன்றுவை...அல்லது' என்புழி உண்டென்பது ஒன்

கரு பிறிதுதொழி லறியா வாகலி னன்று
மெல்லிய பெரும தாமே நல்லவர்க்
காரணங் காகிய மார்பிற் பொருநர்க்
கிருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நின் பாடுநர் கையே. *

திணை - அது ; துறை - இயன்மொழி.

சேரமான்செல்வக்கடுங்கோவாழியாதன் கபிலர்கைப்பற்றி 'மெல்லியவாமால்நுங்கை' எனக் கபிலர் பாடியது.

இ - ள்.—வன்கண்மையையுடையகொலையானையாலே காவலையுடைய †கணையமரத்தை முறித்து இரும்பாற்செய்யப்பட்ட அழகுசெய்த அங்குசத்தால் முன்னர்க்கடாவி அதுசெய்யும் வினையைப் பின்வேண்டுமளவிலேபிடிக்கவும், வலிய நிலத்தைக் குந்தாலியால் இடித்துச்செய்த குழிந்த இடங்களின்கண் நீர்ப்பரப்பினது ஆழமாகிய உயர்ச்சியைக் கருதி அதனைக்கடச்செல்லாமல் மிகைத்த செலவினையுடைய குதிரையைக் குசைதாங்கி வேண்டுமளவிலே பிடிக்கவும், அம்பறாத்தூணிபொருந்திய முதுகையுடையையாய்த் தேர்மேலே நின்று வில்லினது வலியநாணாற் பிறந்த வடுப்பொருந்தும்படி அம்பைச்செலுத்தவும், பரிசிலர்க்குப் பெறுதற்கரிய அணிகலங்களை அளிக்கவும், தலைவ! வலியவாகும் நின் முழந்தாளைப் பொருந்திய பெரியகைகள்; புலால்நாற்றத்தையுடையவாகிய செவ்வித்தடியைப் பூநாற்றத்தவாகிய புகையைக் கொளுத்தி அமைத்த ஊனையும் துவையையும் கறியையும் சோற்றையும் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறுசெயலறியாவாகலான், அவைதாம் பெரிதும் மெல்லியவாயின; பெரும! பெண்டிர்க்கு ஆற்றுதற்கரிய வருத்தமாகிய மார்பினையும் பொருவார்க்குத் துளக்கப்படாமையிற் பெரியநிலம்போன்ற வலியினையு

---

தற்கே உரியவினையாகலின் வழுவாமையறிக; உண்டல் பது உண்பன தின்பனவெனப் பிரித்துக்கூறும்வழிச் சிறப்புவினையாம்; பசிப்பிணிதீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலிற் பொதுவினையுமாம்; அதனை அது வழுவன்றென்பது" (ஷை சொல். சஎ-சே; இ - வி. சூ. ௬கசு - உரை); "ஊனறுவை...அல்லதெனப்புழி நுகரப்படும் பொருளெல்லாவற்றிற்கும் உண்டற்றொழில் வந்தவாறுகாண்க" (தொல். கிளவி. சூ. சஎ - ந); உண்டல் பொதுவினையென்பதற்கு மேற்கோள்; சொல். சொல். சஉ. பேர்); பலபொருள் விரவின, சிறப்பினால் ஒன்றற்கேற்றவினை கொண்டதென்பதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௩எஎ.

கக. "செருமிகு சேஎயொ டுற்ற சூளே" அகநா. உசுசு : டக.

* "கடுங்கண்ண கொல்களிற்றால் என்றூம் புறப்பாட்டுப் படைக்கலங் கூறியவதனாற் காதல்கூறியவாறு காண்க" தொல். புறத்திணை. சூ. உ௦ - ந; ஷை ஷை சூ. கசு - இளம்.

† கணையமரம் - கதவின் உட்புறத்தே குறுக்காகப்போடப்படும்மரம்; "முழுவிறற் கணையம்" சிலப். கரு : உகரு.

முடைய போரின்கண்ணே மிக்க சேயையொப்பாய்! நின்னைப்பாடுவோருடைய கைகள்.—எ - று.

கொளீஇயென்னுமெச்சம், அமைத்தவென்னும் ஒருசொல்வருவித்து முடிக்கப்பட்டது; கொளுத்தவெனத்திரித்து, அவ்வூனை ஒருசுட்டு வருவித்து அதனொடுமுடிப்பினும் அமையும்.

உண்டென்பது, பொதுவினையாயினேனும் கறியொழிந்தவற்றிற்கெல்லாம் சேறலின், பன்மைபற்றி அமைத்துக்கொள்ளப்படும்; ஊனைத் துவை கறியொடுகூடிய சோற்றை உண்டென உரைப்பினும் அமையும்; இதனைப் பொதுவினையென்றுரைப்பாருமுளர்.

குரிசில், பெரும, சேஎய், வலியவாகும் நின்கை; நிற்பாடுநர்கைதாம் மெல்லியவாகுமெனக்கூட்டுக.

இனி, மாதாங்கவுமென்பதற்கு அகழியைக் கடக்கப்பாய்தற்குக் குதிரைக் குசையைத்தாங்கி எடுத்துவிடவுமென்றுரைப்பாருமுளர்.

பாடுநரெனத் தம்மைப்படர்க்கையாகக்கூறினர்.

தம்கையின் மென்மையது இயல்பு கூறுவார், அரசன்கையின் வலிய இயல்புங்கூறினமையான், இஃது இயன்மொழியாயிற்று. (௧௪)

---

(௧௫.) கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
1 வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்
புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்
௫ வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்

௧. ஞ. அகநா. ௩௨௯ : ௪; கடியென்னுமுரிச்சொல் விரைவுப் பொருளையுணர்த்துமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௮௫ - ந; இ - வி. சூ. ௨௮௨ - உரை.

௧ - ௩. பகைவர் மதிலையழித்துக் கழுதையேரால் உழுது வெள்ளைவரகும் கொள்ளும் வித்துதல் மரபு; “வெள்வாய்க் கழுதை......... வைகலுழவ” (புறநா. ௩௯௨ : ௯ - ௧௧); “எழுந்தழி மாடத் திடனொலாறிக, கழுதையேர் கையொளிர்வேல் கோலா - வுழுததற்பின், வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற, காயினவர் தாராளர் கதம்” (பு - வெ. ௯ : ௨௯); “வடதிசை மன்னர் மன்னெயில் முருக்கிக், கவடி வித்திய கழுதையே ருழவன்” (சிலப். ௨௭. ௨௨௫ - ௬); “இடித்துவெளி செய்துநெருங்கணு நுழைந்தாங், கடுத்தமட வார்வயிற் றலைத்தன ரிரங்கக், கொடுத்திடு வளங்கள் பல கொள்ளைகொடு மண்ணி, னெடுத்துவரு வெள்வரகு கொண்டுட னிறைத்து” (காஞ்சிப். நாடு. ௨௮); இவ்வடிகளை மக்கட்பாடாண்டிணைக்குரிய துறையாகிய மண்ணுமங்கலத்திற்கு உதாரணமாகக் காட்டுவர்; தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

௩ - ௫. புறநா. ௧௯ : ௧ - ௪.

(பி - ம்.)—1 ‘பேழ்வாய்’

தேர்வழங் கினைநின் றெவ்வர் தேஎத்துத்
துளங்கியலாற் பணையெருத்திற்
பாவடியாற் செறனோக்கி
னொளிறுமருப்பிற் களிறவர
௧௦ காப்புடைய கயம்படியினை
யன்ன சீற்றத் தனையை யாகலின்
விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகையொடு
நிழல்படு நெடுவே லேந்தி யொன்னா
ரொண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்
௧௫ நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையி
னற்பனுவ னால்வேதத்
தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
௨௦ வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும வாருற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவிற்
பாடினி பாடும் வஞ்சிக்கு

---

௮ - ௧௦. புறநா. ௧௭ : ௩௭ ; ௨௨ : ௧ - ௨.

௧௨. புறநா. ௧௪ : ௬.

௧௪. கொண்மார் : மதுரைக். ௧௭௬.

௧௫. 'பிறக்கு' என்பது அசைநிலையாக வருமென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. ௩௦ - பேர்; ௪௬ - ந; இ - வி. சூ. ௨௭௭ - உரை.

௧௮. கண்ணுறை : புறநா. ௬௧ : ௫ ; ௧௫௦ : ௪.

௧ - ௨௧. "கடுந்தேர் .....எயில என எயிலழித்தவாறு கூறி, 'வீயாச் சிறப்பின் .... நாட்டி' என்பவொருவாற்றான் மண்ணியவாறுங் கூறியவாறு காண்க" தொல். புறத்திணை. சூ. ௯௫ - ந.

௨௨. "காழிலா வற்பத்துநான் கெறுங்கல்லா மம, வாழிவென் றுவென் றலைகடலவரைப்பெலாம் நாட்டுவ, கேழிவெண்கைய மதலையுங் கோமறை முறையான், வேழவியாற்றிய யூபமும் விறந்தன வனேகம" காஞ்சிப். நகரேற்றுப். ௧௮௯.

௧௫ - ௨௨. சிறப்பினோர் அஃறிணைமுடிபேற்றதற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ௩௭௭ ; நன்-வி. சூ. ௩௭௮ ; இ - வி. சூ. ௨௧௮-உரை.

௨௪. புறநா. ௯௯ : ௧௦.

உறு பாடல் சான்ற மைந்திநோய் நினக்கே.

திணையுந் துறையும் அவை.

* பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைநெட்டிமை யார் பாடியது.

இ - ள்.—விரைந்த தேர் குழித்த தெருவின்கண்ணே வெளிய வாயை யுடைய கழுதையாகிய புல்லிய நிரையைப் பூட்டி உழுது பாழ்படுத்தினை யவருடைய அகலிய இடத்தையுடைய நல்ல அரண்களை; புள்ளினங்க ளொலிக்கும் புகழமைந்த விளைகழனிக்கண்ணே வெளிய தலையாட்டமணிந்த னெஞ்செருக்கிய குதிரையினுடைய கவிந்த குளம்புகள் தாவத் தேரைச் செலுத்தினை நின்னுடைய பகைவர் தேயத்துக்கண; அசைந்ததன்மை யோடு பெரியகழுத்தினையும் பரந்த அடியோடு வெகுட்சிபொருந்திய பார்வை யினையும் விளங்கிய கோட்டினையுமுடைய களிற்றை அப்பகைவருடையன வாகிய காவலையுடைய வாவிக்கட் படிவித்தனை; அப்பெற்றிப்பட்ட சின த்துடனே அதற்கேற்ற செய்கையையுடையை; ஆதலான் விளங்கிய இரும்பாற் செய்யப்பட்ட ஆணியும்பட்டமும் அறைந்த அழகுமிக்க பலகையுடனே கிழுண்டாகிய நெடிய வேலை எடுத்துப் பகைவர் ஒள்ளிய படைக்கலங்களை யுடைய நினது விரைந்த தூசிப்படையின்வலியைக் கெடுத்தல்வேண்டித் தம் ஆசைகொடுவர வந்தோர் அவ்வாசை பின் ஒழிய வசையுண்டாக உயிர் வாழ்ந்தோர் பலரோ? குற்றமில்லாத நல்ல தருமநூலினும் நாலவகைப்பட்ட வேதத்தினுஞ் சொல்லப்பட்ட எய்தற்கரிய மிக்கபுகழையுடைய சமிதையும் பொரியும் முதலாகிய பெரிய கண்ணுமுறையோடு நெய்மிக்க புகை மேன் மேற்கிளரப் பலமாட்சிமைப்பட்ட கெடாத தலைமையையுடைய யாகங்களை முடித்துத் தூணநடப்பட்ட அகன்ற வேள்விசசாலைகள் பலவோ? இவற்றுள், யாவையோ பல? பெரும! வாரபொருந்தி வலித்துக்கட்டுதலைப் பொருந்திய மார்ச்சனை செறிந்த தண்ணுமையையுடைய விறலிபாடும் மேற்செலவிற்கு ஏற்ப, ஆராய்தலமைந்த வலியையுடையோய்! நினக்கு.—எ - று.

பூட்டி என்னும் வினையெச்சத்திற்கு உழுதென்னுஞ்சொல தந்துரைக் கப்பட்டது. நற்பனுவலாகிய நாலவேதமென்பாருமுளர். நற்பனுவல நால வேதத்து வேள்வியென இயையும்.

பெரும, மைந்திநோய், பாழசெய்தனை; தேர்வழங்கினை; கயம்படி யினை; ஆகலின், நினக்கு ஒன்றாகிய வசைபடவாழ்ந்தோர் பலர்கொல்? யூபம்நட்ட வியன்களம் பலகொல்? இவற்றுள், யா பலகொலலோவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

விளங்குபொன்னெறிந்தவென்பதற்குக் கண்ணாடிதைத்த வெனினும் அமையும். தார் முன்பு தலைக்கொணமாரென்பதற்குத் தாரை வலியால தலைப்படவெனினும் அமையும்.

புரையுநற்பனுவலென்பதூஉம்பாடம்.

யாபலவென இவ்விரணடின்பெருமையும் கூறியவாறு.

இவை எப்பொழுதுஞ்செய்தல இயலபெனக்கூறினமையின், இஃது இயன்மொழியாயிற்று. (கரு)

---

* இப்பாட்டின் உ0 - உக ஆம் அடிகளால தலைவனுடைய பெயர்க் காரணம் புலப்படுகின்றது.

(கசு.) வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
ரு மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
யெல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கஞ்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானைத்
க0 துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்
முருகற் சீற்றத் துருகெழு குருசின்
மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரு கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
வேம நன்னா டொள்ளெரி யூட்டினை

உ. கேடகத்திற்கு மேகம் உவமை: (புறநா. கஎ: [illegible]); "மன்னர், எயிலூர் பஃறோல் போலச், சென்மழை" (நற். க[illegible]: க0 - கஉ); "மழை யென மருளு மாயிரும் பஃறோல்" (பதிற். [illegible]: [illegible]); "மழைமருள் பஃறோல்" மலைபடு. எள.

ச. புறநா. ருஎ: ஈ.

சு. புறநா. கரு: அ - க0.

க0. "கூடடொரு வரையும் வேண்டாக் கொற்றவ" கம்ப. வாலி வதை. அக.

கூ - க0. "மன்னன், ருவப்ப வழிபட் டொழுகி வருஞ் செல்வம், தொகற் பால போழ்தே தொகும்" (பழ. க20); "ஊக்க முரணமிகுதி யொன் றிய நற்சூழ்ச்சி, யாக்க மவன்க ணகலாவா — வீக்க, நக படா வென்றி நலமிகு தாராற், ககபபடா விலலை யரண" பு - வெ. : .

கஉ. மு. பொருந. கருக. "முருகி னன்ன சீற்றத்து" அகநா. கருஅ.

கச. பகன்றை - சிவதை; குறிஞ்சி. அ[illegible]; ஐங்குறு. சருசு; கலி. எரு.

கரு - சு. 'கரும்பலாற் காடொன் றில்லாக கழனி" சீவக. உகூ0உ.

கசு - எ. புறநா. சு : உக - உ; எ: [illegible] - அ; "இழிபறியாப் பெருந் தண்பணை, குரூஉக்கொடிய வெரிமேய, நாடெனும்பேர் காடாக...பாழாயின நின் பகைவர் தேஎம்" மதுரை. கருச - எசு.

நாம நல்லமர் செய்ய
வோராங்கு மலைந்தன பெருமநின் களிறே.*

திணை - வஞ்சி ; துறை - மழபுலவஞ்சி.

சோழன் இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளியைப் பாண்டரங்கண்ணனூர் பாடியது.

இ - ள்.—போரிற்கு நன்மையையுடையவாகிய விரைந்த குதிரையுடனே முகிலபோலுநிறத்தையுடைய பரிசையைப் பரப்பி, முனையிடங்கலங்க மேற்சென்று, அவரது நெலவிளைகழனியைக் கொள்ளையூட்டி, மனையிடத்து மரமே விறகாகக் காவற்பொய்கைகளின் நீரிலே களிற்றைப் படிவித்து, விளக்கமுண்டாக இடப்பட்ட நாடுசுடுநெருப்பினது ஒளிதான் விடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது செக்கர்நிறம்போலத் தோன்ற இடமில்லையாகச் சென்றுவிடும் எல்லையில்லாத படையினையும், துணைப்படைவேண்டாதபோர் வெற்றியினையும், புலாலுறும் வாளினையும், பூசிப்புலர்ந்த சாந்தினையும், முருகனது வெகுட்சிபோலும் வெகுட்சியினையுமுடைய உட்குப்பொருந்திய தலைவ! ஒன்றொடொன்று கலந்த வள்ளையையும் மலர்ந்த ஆம்பலையும் குளிர்ச்சியையுடைய பகன்றையையும் பழத்தையுடைய பாகலையுமுடைத்தாகிய கரும்பல்லது பிறிதுகாடறியாத பெரிய மருதம் பாழாகக் காவலையுடைய நல்ல நாட்டை ஒள்ளிய தீயை ஊட்டி அஞ்சத்தக்க நல்ல போரைச் செய்ய நின்கருத்திற்கேற்ப ஒரு பெற்றிப்பட்டுப் பொருதன, பெரும! நின்னுடைய களிறுகள்.—எ - று.

தோல்பரப்பியென்பது முதலாகிய வினையெச்சங்களை இறுக்குமென்னும் பெயரெச்சவினையொடு முடித்து, அதனைத் தானையென்னும் பெயரோடு முடிக்க. பாகற்றண்பணையென இயையும். எல்லுப்படஇட்ட சுடுதீயென்றதனைத் தானைக்கு அடையாக்குக.

கவர்பூட்டியென்பதற்கு விரும்பிக் கொள்ளையூட்டியெனவும், புலங்கெடவென்பதற்கு நாடழியவெனவும், புலவுவாளென்பதற்குப் புலாலுடைய வாளெனவும் உரைப்பினும் அமையும்.

குருசில, பெரும, நீ அமர்செய்ய, நின்களிறு ஓராங்குமலைந்தனவென வினைமுடிவுசெய்க.

பாகல - பலாவென்று உரைப்பாருமுளர்.

ஏமநன்றொடொள்ளெரியூட்டியென்றதனால், இது மழபுலவஞ்சியாயிற்று. (கசு)

---

* இப்பாட்டினை, எரிபரந்தெடுத்தலென்னும் துறைக்கு உதாரணமாகக் காட்டுவார் தொல். புறத்திணை. சூ. எ - இளம்; ஷெ ஷெ சூ. அ - ந.

(௧௭.) தென்குமரி வடபெருங்கற்
குணகுடகட லாவெல்லை
குன்றுமலை காடுநா
டொன்றுபட்டு வழிமொழியக்
௫ கொடிதுகடிந்து கோறிருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
யினிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல
குலையிறைஞ்சிய [1] கோட்டாழை
௧௦ யகல்வயன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானற்
றெண்கழிமிசைச் சுடர்ப்பூவிற்
றண்டொண்டியோ ரடுபொருந
மாப்பயம்பின் பொறைபோற்றாது
௧௫ நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய வெறுழ்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடியாங்கு
௨௦ நீபட்ட வருமுன்பிற்

---

௧. செய்யுளில் இனமில்லாத இடம்பெயர் அடைபடுத்து வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௪௦௦.

௧ - ௪. "தென்குமரி வடபெருங்கல், குணகுடகட லாவெல்லைத், தொன்றுமொழிந்து தொழில் கேட்ப" மதுரை. ௭௦ - ௭௨.

௧௧. "நிலவெக்கர்" (பொருந. ௨௧௩); "நிலாவி னிலங்கு மணன்மலி மறுகு" (அகநா. ௨௦௦.) நிலவுமணல் வியன்கானலென்பது வஞ்சியடிக்கு மேற்கோள்; தொல். செய். ரு. ௧௪ - பேர்; ந.

௧௦ - ௧௧. இயற்சீர் தூங்கிவந்ததென்பதற்கு மேற்கோள்; தொல். செய். ரு. ௨௬ - பேர்; ந.

௧௩. தொண்டி - இங்கே சேரநாட்டிற் கடற்கரைக்கண்ணதொரு பட்டினம்.

௧௪ - ௧௯. "அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு" பட்டின. ௨௨௩ - ௪.

(பி - ம்.) — 1 'காய்த்தாழை'

பெருந்தளர்ச்சி பலருவப்பப்
பிறிதுசென்று மலர்தாயத்துப்
பலர்நாப்பண் மீக்கூறலி
னுண்டாகிய வுயர்மண்ணுஞ்
௨௫ சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடு மிவனெஞ் சுறப்பெறி னெனவு
மேந்துகொடி யிறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்ப
மிழந்துவைகுது மினிநாமிவ
௩௦ னுடன்றுநோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்குநின்
னாற்றலொடு புகழேத்திக்
காண்கு வந்திசிற பெரும வீண்டிய
மழையென மருளும் பஃறோன் மலையெனத்
௩௫ தேனிறை கொள்ளு மிரும்பல் யானை
யுடலுந ருட்க வீங்கிக் கடலென
வானீர்க் கூக்குந் தானை யானாது
கடுவொடுங் கெயிற்ற வரவுத்தலை பனிப்ப
விடியென முழங்கு முரசின்
௪௦ வரையா வீகைக் குடவர் கோவே.

திணை - வாகை ; துறை - அரசவாகை ; இயன்மொழியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை வலிதிற் போய்க்கட்டிலெய்தினானைக் 1 குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—தென்றிசைக்கட் குமரியும் வடதிசைக்கண் இமயமும் கீழ்த்திசைக் கண்ணும் மேற்றிசைக்கண்ணுங் கடலும் எல்லையாக நடுவுபட்ட

---

௩௩. செய்ம்மகாரவீறுவினைமுற்று வினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள்; தொல். வினை. ௩. எ - ந.

௩௪. புறநா. ௧௬ : ௨ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; 'தோல' என்பது பரிசை என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள் ; சிலப். ௫ : ௮௧ - அடியார்.

௩௬ - எ. "படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" முல்லை. ௨௮.

௩௮ - ௯. பாம்பு இடிக்கு அஞ்சுதல்: புறநா. ௨௧௧: ௧-௪. "விரிநிறநாகம் விடருள தேனு, முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" நாலடி. ௧௬௪.

௪௦. "ஓம்பாவீகையின்" பதிற். ௪௨.

(பி - ம்.)—1 'குறுங்கொளியூர்'

நிலத்துக் குன்றும் மலையும் காடும் நாடும் என இவற்றையுடையோர் ஒரு பெற்றிப்பட்டு வழிபாடு கூறத் தீத்தொழிலைப்போக்கிக் கோலைச் செவ்வி தாக்கி ஆறிலொன்றாகிய இறையை உண்டு நடுவுநிலைமையைச் செய்து தடையின்றாக உருண்ட ஒளியையுடைய சக்கரத்தால் நிலமுழுதையும் ஆண்ட தோராது மரபைக் காத்தவனே! குலைதாழ்ந்த கோட்புக்க தெங்கினையும் அகன்ற கழனியையும் மலையாகிய வேலியையும் நிலாப்போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரையையும் தெளிந்த கழியிடத்துத் தீப்போலும் பூவினையுமுடைய குளிர்ந்த தொண்டியிலுள்ளோருடைய அடுபொருந! யானை படுக்குங்குழிமேற்பாவின பாவைத் தன்மையைச் செருக்காற் பாதுகாவாது ஆழத்தால் நெடியகுழியின் கண்ணே அகப்பட்ட பெருமையையுடைத்தாகிய மிக்கவலியையுடைய கொம்புமுதிர்ந்த கொலைலுங்களிறு அதன் நிலைசரியக் குழியைத்தூர்த்துத் தன்னினமவிரும்பத் தன்னினத்திலே சென்று பொருந்தினாற்போலப் பொறுத்தற்கரிய வலியாற் றகையைமதியாது நீயுற்ற பெரியதளர்ச்சி நீங்கப் பிறிதொரு சூழ்ச்சியாற் போயப் பலருமகிழப் பரந்த உரிமையையுடைய இடத்தின் நின்சுற்றத்தார் பலர்க்குநடுவே உயர்த்துச் சொல்லப்படுதலால், நீ செழியனாற் பிணிப்புண்பதற்கு முன்பு நின்னாலழிக்கப்பட்டுப் பின்பு தம்மரசுவௌவாது நின்வரவுபார்த்திருந்த அரசர் நமதாய் இவனாற்கொள்ளப்பட்டு உண்டு அடிப்பட்டுப்போந்த மேம்பட்ட நிலமும் இவனாற் பெறப்பெற்ற சீரிய அணிகலமும் கிடைத்தலுண்டாம், இவனது நெஞ்சு நமக்கு உரித்தாகப்பெறினென நினைந்தும், நின் வரவுபார்த்திராது தம்மரசுவௌவிய பகைவர் எடுத்தகொடியையுடைய உயர்ந்த மதிலையும் மிக்க காடும் அகழும் முதலாய காவலையுடைய அகலிய அரணினையும் நாம் இனி இழந்து தங்குவேம், இவன் நம்மை வெகுண்டுபார்த்தானெனக் மிகவெனநினைந்தும் பகைவேந்தர் ஏவல் செய்யத்தொடங்குதற்குக் காரணமாகிய நினது வலியுடனே புகழை வாழ்த்திக் காணவேண்டி வந்தேனே; பெரும! திரண்ட முகிலெனக் கருதி மயங்கும் பலவரிசைப் படையினையும், மலையென்றுகருதித் தேனினந்தங்கும் பெரிய பல யானையினையும், மாறுபடுவோர் அஞ்சும்படி பெருத்தலாற் கடலென்றுகருதி மேகம் நீர்முகக்க ஏறுகொள்ளும் படையினையும் அமையாது நடுங்கச்செய்யும் பலியினையுடையவாகிய பாம்பினது தலை நடுங்கும்பரிசு இடியென்றுகருதும் முழங்கும் முரசினையும், எல்லார்க்கும் எப்பொருளும் வரையாதுகொடுக்கும் வண்மையையுமுடைய குடநாட்டார்வேந்தே!—எ - று.

காவல! பொருந! பெரும! கோவே! ஏத்திக் காணகு வந்தேனெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

குன்றென்றது, சிறுமலைகளை; அன்றி, மணற்குன்றென்று நெய்தனிலமாக்கி ஏனை மூன்றோடுங் கூட்டி, நானிலத்தோருமென்று உரைப்பாருமுளர்.

அடுபொருநவென்றது, வேந்தற்கு வெளிப்படையாய்நின்றது.

தளர்ச்சியென்பதனை பின நீங்கவென ஒருசொல் தந்தது.

'அருமுன்பிற்.. ...பிறிது சென்று' என்பதற்கு முன்போலே தளர்ச்சி பிறிதாகப் பலருவப்பச் சென்றெனினும் அமையும்; அன்றி முன்பின் தளர்ச்சி பிறிதாகச் சென்றென்று உரைப்பாருமுளர்.

ஆனாது முழங்கும் முரசென்க. (கஎ)

---

கஅ.) முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்து பட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
யொருதா மாகிய வுரவோ ரும்ப
ரு லொன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னாயு டானே
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉ மினவாளை
நுண்ணாற் பருவராற்
கo [1] குரூஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண்மதின்
மல்லன்மூதூர் வயவேந்தே
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினு
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
கரு யொருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
றகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே

---

க. 'முழங்கு' என்பது ஒலித்தலென்னும் பண்பையுணர்த்துதற்கு மேற்றன்; நன் - மயிலை. ந. சருஅ; நன் - வி. ரு. சருக.

ரு. "பலவெள்ள மீகக்கூற,வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக" (மதுரை. உ - ச); "அடையடுப் பறியா வருவி யாம்ப, லாயிர வெள்ள வூழி, வாழி த வாழிய பலவே" பதிற். சங: கக - உக.

கo. கெடிறு: "இனகெடிறு சொரிந்த, வகன்பெரு வட்டி", "காகக்கை, நங்கழி யினக்கெடி ருருந் துறைவ" ஐங்குறு. சஎ, கசுஎ.

கக. வடி - திருத்தம்; "வடித்தேர்த்தானை" மணி. கரு: சுஉ.

கச - ரு. "வார்சான்ற கூந்தல வம்புயர வைகலு, நீர்சான் றுயரவே ல்லுயருஞ் - சீர்சான்ற, தாவாத குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரு, ரவா துரைக்கு முலகு" சிறுபஞ்ச. சசு.

கசு. புறநா. ருo: கச - ரு.

கஅ. "நீரின் றமையா துலகு" குறள். உo.

கஅ - கூ. "மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லா, முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே" மணி. கக: கரு - சு.

(பி - ம்.)—1 'குரூஉக்கெடிற்றுக்குண்டகழி'

18-23. கல்லாடம், 12 - மேற். ப. 92

நிலத்தையும் ஒருவழிக்கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரையும் படைத்தவராவர்; நெல்முதலாயவற்றை வித்தி மழையைப்பார்த்திருக்கும் புல்லிய நிலம் இடமகன்ற நிலத்தையுடைத்தாயினும் அது பொருந்தியாளும் அரசனது முயற்சிக்குப் பயன்படாது; ஆதலால், கொல்லும்போரையுடைய செழிய! இதனைக் கடைப்பிடித்து விரைந்து நிலங்குழிந்தவிடத்தே நீர்நிலைமிகும்படி தளைத்தோர், தாஞ்செல்லுமுலகத்துச் செல்வமுதலாகிய மூன்றினையும் இவ்வுலகத்துத் தம்பேரோடு தளைத்தோராவர்; அந்நீரைத் தளையாதவர், இவ்வுலகத்துத் தம்பெயரைத் தளையாதோர்.—எ - று.

இதனால், நீயும் நீர்நிலைபெருகத் தட்கவேண்டுமென்பது கருத்தாகக் கொள்க.

மற்றும், அம்மவும் : அசைநிலை.

உணவின்பிண்டம் உண்டிமுதற்றாதலான், உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரென மாறிக்கூட்டுக.

தள்ளாதோர் இவண்டள்ளாதோராதலால், செழிய! இதனை இகழாது வல்லேசெய்யென ஒருசொல் வருவித்துரைப்பாருமுளர். தட்டோரென்பதற்குத் தம்பெயரைத் தளைத்தோரெனினும் அமையும்.

நீரும் நிலனும் புணரியோர் உடம்பும் உயிரும் படைத்தோரெனவே செல்லுமுலகத்துச் செல்வமும், வித்திவானோக்கும் புன்புலம் இறைவன்றாட்கு உதவாதெனவே நீர்நிலைபெருகத் தட்டால் வானோக்கவேண்டாத நன்புலம் இறைவன்றாட்கு உதவ ஞாலங்காவலர் தோள்வலிமுருக்குதலும், நிலனெளிமருங்கின் நீர்நிலைபெருகத் தட்டோர் இவண்டட்டோரெனவே நல்லிசைசிறத்தலும் கூறப்பட்டன.

நீர்நிலைபெருகத்தட்கவே * அறமுதல் மூன்றும் பயக்குமென்பதுகூறினமையான், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (கஅ)

* புறநா. [illegible].

---

(ககூ.) இமிழ்கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து
மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய

க. ‘இமிழ்’ என்பது முதனிலைத்தொழிற்பெயராய் வந்ததற்கு மேற்கோள்; நன்- மயிலை. ௩. ௪௫௮; நன் - வி. ௩. ௪௫௧.

க - உ. “இமிழ்கடல்......தலையாலங்கானத்து என்றவழித் தலையாலம் என ஆசிரியவடியுள் இன்சீர் இயைய வெண்சீர் வந்தது” தொல். செய். ௩. ௯௦ - பேர்; ந.

௪. பெயரெச்சத்திற்கு முடிபாகிய பெயரை இடைவருஞ்சொற்கள் விச்சேதித்து நின்றதற்கு மேற்கோள்; தொல். எச்ச. ௬. ௫௧ - ந.

௩ - ௪. “எருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை, யொருபக லெல்லை யுண்ணு மென்ப, தாரியவரச ரமர்க்களத் தழிய, நூழி லாட்டிய

௫ இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய
பெருங்க லடாரும் போன்மென விரும்பி
முயங்கினே னல்லனோ யானே மயங்கிக்
குன்றத் திறுத்த குரீஇயினம் போல
அம்புசென் றிறுத்த வரும்புண் யானைத்
௧௦ தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து
நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள
எறிந்துகளம் படுத்த வேந்துவாள் வலத்த
ரெந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வ
ரின்ன விறலு முளகொ லமக்கென
௧௫ மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்

---

கழல வேந்த [illegible]", "[illegible]" சிலப். ௨௨ : ௨௧௫ - அ; ௨௭. ௦.

௫ - ௬. "இலையுள்ள கேழ [illegible] புலி [illegible], [illegible] பொறி மாட்டிய பெருங்கல் அடார், [illegible] உ [illegible]" (நற். ௧௧௯); "புழைதொறு மாட்டிய இருங்கல் அடார்" (மலைபடு. ௧௯௪); "கோல புலிபடுக்கும் பெருங்கல் [illegible]" (சூளா. சுயம்வர. ௨௯); "[illegible] பனைத் பனைத்தது [illegible], [illegible] தக [illegible] வா ஞானை மடங்கற சிதாந்து வீழ, [illegible] கல்லதரின் வீழ்த்திவிண்டு, தண் [illegible] தகை சால குன்றம்" இலிங்க. [illegible].

௮ - ௯. யானையின் மேல் தைத்த அம்புக்கு [illegible] குருவி களை உவமை; "யானை மே [illegible], [illegible] கடுங்கணை மெய்ம்மலர [illegible] குன்றுறை குரீஇயினம் போன் றனவே" (களவழி. ௮); "[illegible] குருகு சேர் வரை போன்ற குஞ்சரம்" (சீவக. ௨௨[illegible]); "கா [illegible] குருவி சேர் குன்றமொத்த" மேருமந்த. [illegible].

௧௧. "உரலூறு கயமுகட்டாத தொங்கிய [illegible], [illegible] நாஞ் சில்போன் மருப்பு [illegible]" (கலி. ௮), "[illegible] மடிவாய நாஞ்சில்" பெரும்பாண் ௧௯௯.

௯ - ௧௨. "[illegible] பொருந்த [illegible] யானை, நீ டிரட்டடக்கை நிலமிசைப் புரளக், [illegible]" நெடுநல். ௧௬௮-௭௧.

௧௪. 'இன்ன' என்பது உவமவுருபாக [illegible] வந்ததற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ௩௬௬.

௧௫. மூதிற் பெண்டிர் - மறக்குடிமகளிர்; "மூதிற்பெண்டி ரோதை யிற பெயர" (சிலப். ௫ : ௭௫); "கற்றொற்றி [illegible] மண்டோன்றாக் காலத்தே வாளோடு முற்றோன்றி மூத்த குடி" பு - வெ. ௨ : ௧௪.

கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை
யெழுவர் நல்வலங் கடந்தோய்நின்
கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒலிக்குங் கடலாற் சூழப்பட்ட அணுச்செறிந்த அகன்ற உலகத்துக்கண் தமிழ்ப்படை கைகலந்த தலையாலங்கானத்துக்கண் நிலைபெற்ற உயிரது பன்மையையும் அவ்வுயிரைக்கொள்ளுங் கூற்றினது ஒருமையையும் நின்னுடனே சீர்தூக்கிக்காட்டிய வென்றிவேலையுடைய செழிய! பெரும்புலியைப்படுக்கும் வேட்டுவன் எந்திரமறிந்து கொளுத்திய பெரிய கல்லையுடைய அடாரையும்போலுமென்று விரும்பிப் புல்லினேனல்லனோ யான? கலங்கி மலைக்கண்ணே தங்கிய குருவியினம் போல அம்புசென்று தைக்கப் பொருத

கரு - சு. புறநா. உ௭அ; மறக்குடிமகளிர், தம்முடைய தந்தை முதலியவர்கள் போர்க்களத்திலே இறந்ததுகண்டு இரங்குதல், "கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்- பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, யெய்போற் கிடந்தானென் னேறு" (பு - வெ. அ: உஉ) என்பதனாலுமறியப்படும்.

கச - சு. "இன்னவிறலும்......பறந்தலை என்புழி மூதிற்பெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற் கூற்றுக்கண்ணோடாதாகலின் அவர் உவந்தனரென்பது பெற்றாம்; அதனானே அஃது உவகைக்கலுழ்ச்சியாமென்பது" தொல். மெய். ௫. டு - பேர்.

கஎ. புறநா. எசு : கஉ-ங; "கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய, ஆலங் கானத் தகன்றலை சிவப்பச், சேரல் செம்பியன் சினங்கெழு திதியன், போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி, நாரி நறவி னெருமை யூரன், தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி, னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென், றெழுவர் நல்வல மடங்க வொருபகன், முரைசொடு வெண்குடை யகப்படுத் துரைசெல்லக், கொன்று", "காய்சின நோக் கைவண் செழிய, ஆலங் கானத் தமர்கடந் துயர்த்த, வேலினும் பல்லூழ மின்னி", "தென்னவர் கோமா, னெழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழிய, னேரா வெழுவ ரடிப்படக் கடந்த, வாலங் கானத் தார்ப்பினும் பெரிது" (அகநா. ஙசு, கஎரு, உ0க); "இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப், பொருதவரைச் செருவென்று", "ஆலங்கானத் தஞ்சுவரவிறுத்த, தார்சுபட வமருழக்கி, முரசுகொண்டு களம்வேட்ட, அடுதிறலுயர் புகழ்வேந்தே" மதுரை. ருரு - சு; கஉஎ - ங0.

கஎ - அ. "பொன்மா மௌலி புனைந்து பொய்யிலான் றன்மா னக் கழ றொழும்வேலையி, னன்மாற பிறழ்வுற்ற நாயகன், சொன்னான்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். உசு.

எ - கஅ. செய்யுட்கண் 'கழூஉவிளங்காரங்கவைஇயமார்பே' என இறுதிக்கண் இரண்டாவது தொக்கது 'முயங்கினேனல்லனோ' எனவரும் முடிக்குஞ் சொல்லோடு ஒட்டி ஒருசொல்லாகாதென்பதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. கசு - ந.

தற்கரிய புண்ணையுடைய யானையினது துளையையுடைய பெருங்கை வாயுடனே துணிந்துவீழ்ந்தது கலப்பையையொப்ப நிலத்தின்மேலே புரள வெட்டிப்போர்க்களத்தின்கண்ணே வீழ்த்த ஏந்திய வாள்வெற்றியையுடையோராய் எந்தலைவரொடுகிடந்தார், எம்முடைய புல்லியதலையையுடையமைந்தர்; இப்பெற்றிப்பட்டவென்றியும் உளவோ நமக்கென்றுசொல்லி முதிய மறக்குடியிற்பிறந்த பெண்டிர் இன்புற்று உவகையால் அழ, அதுகண்டு நாணிக் கூற்றம் இரங்கிய அஞ்சத்தக்க போர்க்களத்தின்கண்ணே இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிருமாகிய எழுவரது நல்லவலியை வென்றோய்! நினது கழுவிவிளங்கின முத்தாரம் அகத்திட்ட மார்பை.—எ - று.

தமிழ்தலைமயங்கியவென்புழி, தலை, அசைநிலை; இடமுமாம்.

செழிய! கடந்தோய்! நின்மார்பை யான் விரும்பி முயங்கினேனல்லனோவெனக்கூட்டுக.

பெருங்கல்லடாருமென்ற உம்மை, எமக்கு விருப்பஞ்செய்தலேயன்றி நின்பகைவர்க்குவருத்தஞ்செய்தலான், நின்மார்பு கல்லடாரும்போலுமென எச்சவும்மையாயிற்று; சிறப்பும்மையுமாம்.

மூதிற்பெண்டிர் கசிந்தலால் நாணியெனவும் அழுதலாற் கண்ணோடிய வெனவும் நிரனிறையாகக்கொள்க.

போர்முடிதலாற் போயினகூற்றை நாணியும் கண்ணோடியும் போயிற்றுப்போலக் கூறியது, * ஓரணி கருதிநின்றது.

இனி, அம்புதைத்தயானையை வெட்டிப்படுத்தலை மறத்திற்கிழி பென்று பெண்டிர் இரங்கியழுதலின், கூற்றங்கண்டு நாணிக்கண்ணோடிய தென்று உரைப்பாருமுளர். (கக)

* ஓரணியென்றது தற்குறிப்பேற்றத்தை.

---

(உ௦.) இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்
(ரு) கவையளந் தறியினு மளத்தற் கரியை
யறிவு மீரமும் பெருங்க ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே

---

க. புறநா. உசு: க: "கடற்குட்டம் போழ்வர் கலவர்" நான்மணி. கஅ.

க - ரு. புறநா. ௩௦: க - சு; "நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி, னளப்பரி யையே" பதிற். கச.

க0 திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
கரு பகைவ ருண்ணா வருமண் ணினையே
யம்புதுஞ்சுங் கடியரணா
லறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
[1] விதுப்புற வறியா வேமக் காப்பினை
உ0 யனையை யாகன் மாறே

க0. திருவில் - இந்திரவில்; "தோன்றல் செழுங்கொடித் திருவிற் கோலி, யார்கலி யெழிலி சோர்தொடங் கின்றே" (ஐங்குறு. சஉஅ); "திருவில் வீழ்ந்த தொருகுளாய் நீர்மிசை மின்னின் மின்னுவ" (சீவக. கசுO); "திருவில் லிட்டுத் திகழ்தரு மேனியன்" (சிலப். கரு : சஙசு; மணி. ௪ : க0) "நாமவேந்தர பதி யுலகங் காத்தநாட, காமவேள் கட்டாகனை கலந்த தலைத்து, தாமவேல வயவர்தந் தழலுங் கொலைப்படை, நாமநீர் வலைப்பட்ட நலிவ திலையே" சூளா. நகர. கஅ.

கஉ. "பொருநவார், மலைமுந்த துணைறு மணலை யானை, வண டோர்த் தொண்டையார்" குறுந். உசு0.

கச. வயவு - வயா; கருப்பமுற்ற மகளிர்க்கு உண்டாகும் பொருள் மேற்செல்லும் வேட்கை; அதனால் அவர்கள் புழுக்கயுண்ட மண்ணையுண்பர்; "மனைபுகை யுண்ட கருமண் ணிட்டது, பசுங்காயிற் சுவை காணாது" (கல்லாடம், எ); "வயாநோய் பொதிமண்ணினை நுகர்தல்தேர்ந்தோர், முருகவிழ் துளவத் தண்டார் முகுந்த மலைமேலோங்கு, திருமகள் சேருமண்ணுஞ் சேர்ந்திட வேண்டுமென்னல், விருந்தின மங்கை முன்போ லெய்துதல் போன்ற தன்றே" (கூர்ம. கண்ணன்தோற்றம். ௧); "பொருந்தட மேதோன் மகன்பழகப் புகையுண்ட கருமண்ணும் உவந்தருந்தும் வயாநிறைந்த" (திருவானைக்கா. கோச்செங்கணா. கள) 'வயா' என்னுஞ்சொல் 'வயவு' எனத் திரிந்து நின்று வேட்கைப் பெருக்கமாகிய குறிப்புடையுரிச்சொல்லாதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. எரு - சே; தெய்வச். ந. எச. ந.

கஅ. "புதுப்புள் வருதலும் பழம்புள் போதலும் பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின்கட்டோன்றிய நிமித்தம்" தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

கக. 'விதிர்ப்பு' நடுக்கமாகிய குறிப்புணர்த்துமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. உ0 - சே; தெய்வச். ந. கஅ - ந; இ - வி. சூ. உஅக - உரை.

உ0. புறநா. ௪ : கஎ.

(பி - ம்.) — [1] 'விதிர்ப்பு'

மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.

*திணையும் துறையும் அவை.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—பெரிய கடலினது ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்றியங்குந் திசையும், வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும் என்றுசொல்லப் படுமவற்றை வரையறுத்தறியினும் வரையறுத்தற்கரியை, அறிவும் அன்பும் மிக்க கண்ணோட்டமும்; ஆகலான், சோற்றை ஆக்கும் நெருப்புடனே செஞ் ஞாயிற்றினது வெம்மையல்லது வேறுவெம்மையறியார், நின்குடைநிழற் கண்வாழ்வோர்; இந்திரவில்லல்லது பகைவரது கொலைவில்லையறியார்; கலப்பையல்லது வேறு படைக்கலமுமறியார்; போர்செய்யும் கூறுபாட்டை யறியும் வீரருடனே பகைவர் மாய அம்மாற்றாருடைய † மண்ணைக் கொண் டுண்ணுந் தலைவ! நின்னுடைய நாட்டின்கண் வேட்கைநோயுற்ற பெண்டிர் விரும்பி உண்ணின்லலது பகைவருண்ணப் படாத பெறுதற்கரிய மண்ணை யுடையை; அம்புதங்குங் காவலையுடைய அரணுடனே அறந்தங்கும் செவ் விய கோலையுடையை; புதுப்புள் வரினும் பழையபுள் அவ்விடத்தைவிட்டுப் போகினும் அவற்றால் நடுக்கமுறுதலறியாத சேமமாகிய காவலையுடையை; அத்தன்மையையுடையையாதலான், உலகத்து நிலைபெற்ற உயிரெல்லாம், தத்தங்காதலான் நினக்கு ஏதம்வருங்கொல் என்று அஞ்சும்.—எ - று.

அறிவும் ஈரமுங் கண்ணோட்டமுமென்பன வினையினோடு பாடுபட்டு அளத் தற் கரியையென்னும் முதனிலை கொண்டன. (உ0)

உக. ஏவக. கூருஎ. ந - மேற.

கஅ - உக. படைபற்றி வந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩0 - இளம்.

* ம. "குடியோம்புதல் வருமாறு:—'இருமுந்நீர்......அஞ்சும்மே' எனவரும்" (தொல். புறத்திணை. சூ. கூ - இளம்); புற நிமித்தத்தால் பாடாண்டுலவற்குத் தோன்றிய நின்குகண்டு அஞ்சி யோம்படைகூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

† இப்பொருள்பற்றியே வடமொழியிலும் 'பூபுக' என்று அரசனைக் கூறுவர்.

(உக.) புலவரை யிறந்த புகழ்சா றோன்ற
நிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்

க. புலவரை - அறிவின் எல்லை; "புலவரை யிறந்தோய் போகுதல் பொறேஎன்" (சிலப். உஅ: களச); "புலவரை யிறந்த புகாரெனும் பூங் கொடி" மணி. ரு: ௧0௧.

உ. "மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்" மதுரை. ௬௫௧.

மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
௫ கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
யருங்குறும் புடுத்த கானப்பே ரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
விரும்பு ணீரினு மீட்டற் கரிதென
வேங்கை மார்ப னிரங்க வைகலு
௧௦ மாடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே
யிகழுந ரிசையொடு மாயப்
புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே.

திணையும் துறையும் அவை.

* கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதியை ஐயூர்மூலங்கிழார் பாடியது.

இ-ள்.—நின்னைப்பாடுவோரது அறிவினெல்லையைக் கடந்த புகழமைந்த தலைவ! நிலவெல்லையைக் கடந்து பாதலத்தேயுற ஆழ்ந்த இடத்தையுடைய அகழியினையும் உயர்ச்சியான் வானைப்பொருந்துவதுபோன்ற மதிலையும் அவ்வானிடத்து மீன்பூத்தாற்போன்ற வடிவையுடைய நாட்டினையும் வெயிற் கதிர்நுழையாத மரஞ்செறிந்த காவற்காட்டினையுமுடைத்தாய் அணுதற்கரிய சிற்றரண்களாற் சூழப்பட்ட கானப்பேரென்னும் அரண், வலிய கையையுடைய கொல்லனாற் செந்தீயின்கண்ணே மாட்டப்பட்ட இரும்புண்ட நீரினும் மீட்டற்கரிதெனக் கருதி வேங்கைமார்பன் வருந்த நாடோறும் வென்றிகொள்ளத் தழைத்த தும்பையையுடைய, புலவர் பாடப்படுந் துறைகளைமுடித்த வெற்றியினையுடைய வேந்தே! நின்னைமதியாத பகைவர் தம்

௪. ஞாயில் - நாட்டு; என்பது மதிலின்மீதுள்ள ஒரு சிற்றுறுப்பு; ஏப்புழைக்கு நடுவாய் எய்துமறையும் கூடமென்பர்; சீவக. ௧௦௫ - ந.

௫. "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" பெரும்பாண். ௩௭௪; மணி. ௪: ௫.

௨ - ௬. மதுரை. ௬௪ - ௭; பதிற். ௨௦: ௧௭ - ௯.

௭. புறநா. ௩௬: ௬; "கருங்கைக்கொல்லர்" (சிலப். ௫. ௨௯) என்பதையும் அதனுரைகளையும் பார்க்க.

௭ - ௮. "கனலிரும் புண்ட நீரின விடாது" (பெருங். ௩. ௨௫ : ௭௧); "இரும்புண்டநீர் மீளினு மென்னுழையிற், கரும்புண்ட சொன்மீளகிலள் காணுதியால்" கம்ப. சடாயு. ௧௦௪.

௧௩. பிறந்திறந்து போயப் பெறுவது மிழப்பதும் புகழேல" கம்ப. மந்தரை. ௬௬.

* இப்பாட்டின் ௫ - ௬ ஆம் அடிகளில் கானப்பேரென்னும் பெயர்க் காரணம் வந்திருத்தல் காண்க.

முடைய புகழுடனேபொன்ற வெற்றிப்புகழுடனே விளங்கிப் பொலிவதாக நின்வேல்.—எ - று.

கானப்பேரெயில் மீட்டற்கரிதென வேங்கைமார்பனிரங்கப் பாடுதுறை முற்றிய கொற்றவேந்தே! நின்வேல பூக்கவென்க்கூட்டி வினைமுடிவுசெய்க.

குழைத்தவென்பது, குழைந்தவென மெலிந்துநின்றது. (உக)

---

(உஉ.) தூங்குகையா னோங்குநடைய
வுறழ்மணியா னுயர்மருப்பின
பிறைநுதலாற் செறனோக்கின
பாவடியாற் பணையெருத்தின
ரு தேன்சிதைந்த வரைபோல
மிஞிறார்க்குங் கமழ்கடாத
தயறுசோரு மிருஞ்சென்னிய
மைந்துமலிந்த மழகளிறு
கந்துசேர்பு நிலைஇவழங்கப்
கo பாஅனின்று கதிர்சோரும்
வானுறையும் மதிபோலு
மாலைவெண் குடைநிழலான்

---

க. மூன்றாம் வேற்றுமைவிரியக்கூறும் சூத்திரத்தில 'அன்னபிறவும்' என்பதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. ரு. கரு - சே.

உ. ஆன் ஒடுவாதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. ரு. கஙு - ந.

க - உ. "தூங்கு...மருப்பின என்பனபோலவனவெல்லாம் ஆன் ஒடு வாயின" (இ - வி. ரு. உ00 - உரை); "தூங்குகையா னோங்குநடைய, வுறழ்மணியா னுயர்மருப்பின...இவை உடனிகழ்ச்சி; ஆனுருபோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க" நன்-மயிலை. ,, உகூ; நன் - வி. ரு. உகள.

சு. யானைமதம் மணமுடையதென்பதையும் அதில வண்டுமொய்க்கு மென்பதையும், "வரிவண் டார்கரும் வாயபுகு கடாஅம்" ([illegible]); "பூ நாறு கடாஞ் செருக்கி" (மணி. கக: உஉ); "புணர்மருப் பியானையின் புயல் கொண் மும்மத, மணமகள் கதுபபென நாறும்" (சீவக. கசுஉக); "பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறக, காத்த வங்குச நிமிர்ந்திடக் காலபிடித் தோடிப, பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக, காத தி ரங்களாற் றலத்தொடு தேய்த்ததோர் களிறு" (கம்ப. வரை. சு); "விழிமலர்ப்பூ சனை யுஞற்றித் திருநெடுமால் பெறமாழி மீளவாங்கி, வழியொழுகாச் சலந்தரன் மெய்க் குருதிபடி முடைநாற்ற மாறு மாற்றாற், பொழிமதநீர் விளையேற்றி" (காஞ்சிப். கடவுள். ரு) என்பவற்றாலறிக.

சு-கூ. "கமழ்கடாஅத், தளறுபட்ட நறுஞ்சென்னிய, வரைமருளு முயர்தோனறல". மதுரை. சச - எ

வாண்மருங்கிலோர் காப்புறங்க
வலங்குசெந்நெற் கதிர்வேய்ந்த
கரு வாய்கரும்பின் கொடிக்கூரை
சாறுகொண்ட களம்போல
வேறுவேறு பொலிவுதோன்றக்
குற்றானு வுலக்கையாற்
கலிச்சும்மை வியலாங்கட்
உ௦ பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
யோத நீரிற் பெயர்பு பொங்க
வாய்கா வாது பரந்து பட்ட
உரு வியன்பாசறைக் காப்பாள
வேந்துதந்த பணிதிறையாற்
சேர்ந்தவர் [1] கடும்பார்த்து
மோங்குகொல்லியோ ரடுபொருந
வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்
௩௦ வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே

கரு. "கொடி - ஒழுங்கு; 'கொடிக்கூரை' என்றார்" சீவக. கஉஎசு.

கசு. "சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி" மநூ. உஅ.

உ௦. புறநா. சுஎ: கரு; "செய்பொன்வாகை" மணி. உசு: சு௦.

உ௦ - உக. அரசர் தமக்குரிய அடையாளப்பூவொடு புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம் முடிக்கொளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும்மரபு :—புறநா. எஎ : உ - ௩; க௦௦ : ௩ - சு; "குடைநிலை வஞ்சியும்.........வட்கார் போகிய வாளமைவாகைத் தோட்டொடு, புடைகைச் சேனை பொலியச் சூட்டி" (சிலப்.உரு: கசுக - எ); "இளவரிக வைப்படியாலையாரொரா டேர்பெறத், துளவிய தும்பையுஞ் சுழியச முடிஞன்" கம்ப. முதற்போர். ககரு.

உஅ. "கொல்லிப் பொருந" (பதிற்.எ௩); "மூவனூர் மன்னன் கழறொடிக் காரி,செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்,லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ௦௯); "கொல்லி யாண்ட குடவர் கோவே" (சிலப். உச) என்பவற்றாற் கொல்லிமலை சேர பரம்பரையினர்க்குரித்தாதல காண்க.

௩௦. படைப்பு - செல்வம் ; புறநா. கஅஅ.

(பி - ம்.)— [1] 'கடும்பருத்தும்'

மெல்லிய கரும்பாற்கட்டப்பட்ட ஒழுங்குபட்ட கூரை, விழாவெடுத்துக் கொள்ளப்பட்ட இடம்போல வேறுவேறாகப் பொலிவுதோன்றக் குற்று அமையாத உலக்கையொலியுடனே மிக்க ஆரவாரத்தையுடைய அகன்ற விடத்துப் பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடனே மிசையே அசைந்த தலையினையுடைய பனந்தோட்டைச் செருகிச் சினத்தையுடைய வீரர் வெறியாடும் குரவைக் கூத்தொலி ஓதத்தையுடைய கடலொலி போலக் கிளர்ந்து பொங்கப் * படைப்பெருமையாற் பகைவருட்கும் மதிப்புடைமையின் இடங்காவாது பரந்துகிடக்கின்ற அகன்ற பாசறையிடத்துக் காவலாள! மாற்றரசர் பணிந்துதந்த திறையால் தம்மை அடைந்தவருடைய சுற்றத்தை நிறைக்கும் உயர்ந்த கொல்லிமலையோருடைய அடுபொருந! யானையினது நோக்குப்போலும் நோக்கினையுடைய வெற்றியை விரும்பும் சேயே! வாழ்க, பெருமானே! நினது எல்லையில்லாத செல்வம்; நின்னைப் பாடிய விளங்கிய செவ்விய நாப் பின்னைப் பிறருடைய புகழைச் சொல்லாமற் பாதுகாவாது கொடுக்கும் வலியையுடைய எங்கோவே! மாந்தரஞ்சேரலிரும்பொறை பாதுகாத்த நாடு தேவருலகத்தையொக்குமென்று பிறர் சொல்லக் கேட்டுவந்து கட்கினிதாகக் கண்டேன்; பெருமானே! முயற்சி வெறுப்பில்லையாய் வேற்றுநாட்டின்கட் சென்று விடும் படையுடனே சோறுண்டாக நடப்பை; நீ மடியாயாதலான்.—எ - று.

கதிர்சோருமதியெனவியையும்; கதிர்சோருமென்னும் சினைவினை மதியென்னும்முதலொடுமுடிந்தது; கதிர்சோருமாலையென இயைப்பினுமமையும்.

பாய்கின்றென்று பாடமோதுவாருமுளர்.

கூரைபொலிவுதோன்றவென இடத்துநிகழ்பொருளின்றொழில இடத்து மேல ஏறிநின்றது.

செரீஇயென்னும் வினையெச்சத்தை ஆடுமென ஒருசொலவருவித்து அதனொடுமுடிக்க.

நிலைஇ முழங்கக் காப்புறங்கப் பொலிவுதோன்றப் பெயர்புபொங்க வென்னும் செயவெனெச்சங்களும், வாய்காவாதென்னும் எதிர்மறைவினையெச்சமும் பரந்துபட்டவென்னும் பெயரெச்சவினையொடு முடிந்தன.

காப்பாள! பொருந! சேஎய்! பெரும! எங்கோ! பெரும! நீ துஞ்சாயாதலாற் சோறுபடநடத்தி; அதனால இரும்பொறை ஓம்பியநாடு புத்தேளுலகத்தற்றெனக் கேட்டுவந்து இனிதுகண்டிசின்; நின்படைப்பு வாழியவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க; அன்றி, எங்கோவே! நீ துஞ்சாதபடியாலே, இரும்பொறையோம்பியநாடு புத்தேளுலகத்தற்றென்ப பிறர்சொலலக் கேட்டு நிற்பாடிய அலங்குசெந்நா பிறரிசை நுவலாதபடி வந்து இனிது கண்டேன்; நினது படைபபொடு வாழ்வாயாகவென இயைப்பினுமமையும்.

இசின், தன்மைக்கண்வந்தது.

சோறுபடநடத்தியென்பதனை வினையெச்சமாகவுரைப்பினுமமையும்.

உயர்மருப்பினென்பதூஉம், செறனோக்கினென்பதூஉம், பணையெருத்தினென்பதூஉம் பாடம். (௨௨)

* "தானை, படைத்தகையாற் பாடு பெறும்" குறள். ௭௬௮.

(உ௩.) வெளிறி லோன்காழ்ப் பணைநிலை முனைஇக்
களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையுங்
கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியற்
சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்
ரு கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்
கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்
கொள்பதம் ஒழிய வீசிய புலனும்
வடிநவில் நவியம் பாய்தலி னூர்தொறுங்
கடிமரந் துளங்கிய காவு நெடுநகர்
க0 வினைபுனை நல்லில் வெவ்வெரி நைப்பக்
கனையெரி யுரறிய மருங்கு நோக்கி
நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்
றின்னு மின்னபல செய்குவன் யாவருந்
துன்னல் போகிய துணிவி னோனென
கரு ஞால நெளிய வீண்டிய வியன்படை

---

க. வெளிறு-வயிரமின்மை. "இருமபனை வெளிறின புனசா யன்ன" குறுந். ௩கஉ.

க - உ. புறநா. கரு : கூ ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க.

௩. புறநா. ௩௩ : கஉ-௩ ; "மறுவில கற்பின் வாணுதல் கணவன்... மாராஅத், துருளபூந தாணடார் புரளு மார்பினன்", "செங்கான் மாராஅத்த வாலிணர் ரிடையிடுபு சுரும்புண்ணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை" (குறுந். கூ - கக ; உ0உ - ௩); "காரலர் கடம்பன" (மணி. ச : சகூ); "கார்க்கடப்ப நதாரெங்கடவுள" சிலப். உச. "கேரிமழ"

ரு. கூளியர் - ஏவல் செய்வோரென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; (குறுந். உஅஉ - ௩) ; "கொடுவிற கூளியர் கூவை காணின" மலைபடு. சஉஉ.

அ-கூ. பகைவருடைய காவன்மரத்தை அரசர் வெட்டுவிப்பர்; (புறநா. ௩௬ : கூ - கூ ; ருஎ : க0); "கடிகாவி னிலைதொலைச்சி" (மதுரை. கரு௩); "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முரரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். ரு-ஆம் பத்து, பதி); "பழையன் காக்குங் குழைபயி னெடுங் கோட்டு,வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப,போந்தைக் கண்ணிப் பொறைய" சிலப். உஎ : கஉச - கூ.

10- கக. "கனையெரி பொத்தி" மணி. உ : சஉ.

கரு. "கார்விளை மேக மன்ன கவுளழி கடாத்த வேழம், போர்விளை யிவுளித் திண்டேர்புனைமயிர்ப் புரவி காலாள,வார்விளை முரசம் விம்ம வானுலாப் போந்ததேபோ, னீர்விளை சுரிசங் கார்ப்ப நிலநெளி பரந்த தன்றே" சீவக. ச௩௩.

யாலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்ப நிற் கண்டனென் வருவ
லறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
௨௦ பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கு
மாளி லத்த மாகிய காடே.

திணையும் துறையும் அவை; துறை-நல்லிசைவஞ்சியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார் பாடியது.

இ-ள்.—வெண்மையில்லாத வலிய வயிரக்கம்பத்தையுடைய கூடத்தில் நிற்றலை வெறுத்துச்சென்று யானைபடிந்து நீருண்டதாகக் கலக்கமுற்ற துறையையும் கார்காலத்து நறிய கடம்பினது பசிய இலையோடுவிரவிய மாலையையுடைய சூரபன்மாவைக்கொன்ற முருகனது கூளிச்சுற்றத்தை யொக்கும் நின்னுடைய கூரிய நல்ல அம்பினையும் வளைந்தவில்லினையுமுடைய மறவர் தம்மாற் கொள்ளலாவதனை முகந்துகொண்டு கொள்ளாத ஒழி பொருளை மாற்றார் முகந்துகொள்ளப்படும் உணவாக்காமற் சிதறிய நிலங்களையும் வடித்தலைபயின்ற கோடாலி வெட்டுதலான் ஊர்தோறும் காவல்மரங்கள் நிலைகலங்கிய காவையும் நெடிய நகரிடத்தன தொழில் புனைந்த நல்ல * மனைகளிடத்து விரும்புமடுநிலையைக்கெடுக்க மிக்க தீமுழங்கிய பக்கத்தையும் பார்த்துப் பகைவர் நாண நாடோறும் அவரிடத்துச் சென்று இன்னமும் இத்தன்மையன செய்குவம், யாவரும் தன்னை அணுகவொண்ணாத சூழ்ச்சித் தெளிவினையுடையோமெனக்கருதி உலகம் பொறையாற்றாது நெளியத் திரண்ட பரந்த படையினையுடைய தலையாலங்கானத்தின்கட் போரை எதிர்நின்றுகொன்ற காலனைப்போலும் வலியையுடையோய்! நின்னைக் கண்டேனாய்வந்தேன்; அற்ற கோட்டையுடைய பெரிய கலை புலியின் கண்ணே அகப்பட்டதாகச் சிறிய மறியை யணைத்துக்கொண்ட துள்ளிய நடையையுடைய மெல்லியமானின்பிணை பூளையோங்கிய அஞ்சத்தக்க பாழிடத்து வேளையினது வெளிய பூவைத்தின்னும் ஆற்ற அருஞ்சுரமாகிய காட்டுவழியே.—எ-று.

காலமுன்ப! துறையும் புலனும் காவும் மருங்கும் நோக்கி இன்னும் இன்னபலசெய்குவம் துணிவினோனென உட்கொண்டு காட்டின்கண்ணே நின்னைக் கண்டு அக்காட்டுவழியே வந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

வருவலென்பது, ஈண்டு இறந்தகாலப்பொருட்டாய்நின்றது.

---

௧௭. புறநா. ௧௯: ௩; "மீளி மொய்ம்பின மிகுவலி செருக்கி" (பொருந. ௧௪௦); "ஆற்றல், காலனோ டொக்கும்" (பெருங். ௧. ௩௬: ௧௦௦ - ௧௦௧); "எண்மரின் வலியனாய யமனை" கம்ப. மிதிலை. ௧௦௭.

* "நலமிற் சிதைத்ததீ நாடொறு நாடித்தம், மில்லத்தி லாக்குத லால்" நாலடி. ௨௨௫.

இவனைக்காணு முன்னே கண்டுவந்தேனென்றான், இவன்செய்தவென்றியெல்லாம் கண்டமையின்.

பாசிலைத்தெரியன் முருகனென இயையும்.

கவியம்பாய்தலென்பது, கருவி கருத்தாவாய் நின்றது.

கலை புலிப்பாற்பட்டெனச் சிறுமறிதழீஇய மடப்பிணை பறந்தலை வேளை வெண்பூக்கறிக்குமென்பது, அவன் பகைவரைக்கொன்றவழி அவர் பெண்டிர் தம் இளம்புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்துபடாது அடகுதின்று உயிர்வாழ்கின்றாரென்பதோர் பொருள்தோன்ற நின்றது.

இனித் துணிவினோனென்று பிறர்சொல்லவெனவும், கண்டனென்வருவலென்பதனைக் காலமயக்கமாக்கிக் கலங்கியதுறைமுதலாயினவற்றை நோக்கி இன்னும் இவ்வாறு பகைவர்நாட்டின்கண் மேற்செலவினை நினைந்து காட்டிடத்தே நின்னைக்காணியவந்தேனெனவும் உரைப்பாருமுளர். (உ௩)

---

(உ௪.) நெல்லரியு மிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர்
௫ வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
[1] தூவற் கலித்த தேம்பாய் புன்னை

---

௧. புறநா. உ௦௯: உ; தொழுவர் - தொழில்செய்பவர்; மதுரை. அ௯.

௩. உம்மீறு உந்தாய்த்திரிந்ததென்பதற்கு, 'பாயுந்து' என்பது மேற்கோள்; இ - வி. சூ. உசச - உரை.

௧ - ௩. "நெல்லரியும்......பாயுந்து; இதிற் 'பாயும்' என்றபாலது 'பாயுந்து' என வந்தது" ; (தொல். இடை. சூ. எ - பேர்) ; உம் உந்தாயிற்றென்பதற்கு மேற்கோள் ; நன் - வி. சூ. ௩௪௧.

௧-௪. உம்மீறு உந்தென்றாயதற்கு மேற்கோள்; நன்-மயிலை.சூ. ௩௪௦.

௫. புறநா. உ௯: க௫.

௩ - ௬. 'பாயுந்து', 'தூங்குந்து' என வருவன பெயரெச்சவினைத் திரிசொல் என்பர் ; தொல். எச்ச. சூ. ௪ க - ௩.

எ. "புன்னை, யுடை திரைத் திவலை யரும்புந் தீநீர்" (குறுந். ௫:உ-௩); 'கலித்தல்' தழைப்பென்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௬௩-பேர்.

(பி - ம்.)—1 'திவலையிற்கலித்த'

மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்த
ரெல்வளை மகளிர் தலைக்கை [1] தரூஉந்து
௧0 வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானன்
முண்டகக் கோதை யொண்டொடி மகளி
ரிரும்பனையின் குரும்பைநீரும்
பூங்கரும்பின் றீஞ்சாறு
மோங்குமணற் குவவுத்தாழைத்
௧௫ தீநீரோ டுடன்விராஅய்
முந்நீ ருண்டு முந்நீர்ப் [2] பாயுந்
தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய
வோம்பா வீகை மாவே ளெவ்வி
புனலம் புதவின் மிழலையொடு கழனிக்
௨0 கயலார் நாரை [3] போர்விற் சேக்கும்
பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்

---

௬. "எல்லென்பது உரிச்சொனீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச் சொல்லாக ஓதினமையான் இடைச்சொல்லென்று கோடும்; 'எல்வளை' என எல்லென்பது இலங்குதற்கண்வந்தவாறு" தொல். இடை. சூ. ௨௧ - சே.

அ - ௯. "மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன், முழவுறழ் தடக் கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து" புறநா. ௨௪௪ - ௬.

௧௧. "மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற், பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப" மதுரை. ௯௬ - எ.

௧ - ௧எ. "நெல்லரியும்......கெழீஇய என்றவழி உம் உந்தாயிற்று" (தொல். இடை. சூ. ௪௩ - பேர்); பெயரெச்சவினையடுக்கிவந்து ஒரு பெயர் கொண்டதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௩௫௪.

௧ - ௧௯. "நெல்லரியுமிருந்தொழுவர் என்னும் புறத்தொகைப் பாட்டினுள் 'தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து' எனவும், 'தண் குரவைச் சீர்தூங்குந்து' எனவும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' எனவும், 'முந்நீர்ப்பாயும்' எனவும் செய்யுமென்னும் பெயரெச்சமடுக்கி, 'ஓம்பா வீகை மாவே ளெவ்வி, புனலம் புதவின் மிழலை' என்னும் ஒருபொருள்கொண்டு முடிந்தவாறு கண்டுகொள்க; ஆங்குத் 'தாங்கா வினையு ணல்லூர் கெழீஇய' என்னும் பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது" தொல். வினை. சூ. ௩௯ - சே; ந; இ - வி. சூ. ௩௨அ - உரை.

௨0. மு. ஐங்குறு. ௬: ௪.

௨௧. தொன்முதிர்வேளிர் - அகத்தியமுனிவராற் கொண்டுவரப்பட்ட பழமை முதிர்ந்தவேளிர்; இது, "துவராபதிப்போந்து நிலங்கடந்தநெடுமுடி

(பி - ம்.)—1 'தழூஉந்து' 2 'பாயுந்து' 3 'போரிற்'

குப்பை நெல்லின் முத்தூறு தந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய
நின்று நிலைஇயர்நின் னாண்மீ னில்லாது
உரு| படாஅச் செலியர்நின் பகைவர் மீனே
நின்னொடு, தொன்று மூத்த வுயிரினு முயிரொடு
நின்று மூத்த யாக்கை யன்னநின்
னுடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த
ங0' இரவன் மாக்க ளீகை நுவல
வொண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய
தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி பெரும வாங்கது
வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப தொல்லிசை
ஙரு மலர்தலை யுலகத்துத் தோன்றிப்
பலர்செலச் செல்லாது நின்றுவிளிந் தோரே.

---

யண்ணல்வழிக்கண் அரசாபதினெணமரையும், பதினெணகுடி வேளிருள் ளிட்டாரையும்.........கொண்டுபோந்து", "மலயமாதவன் நிலங்கடந்த நெடி முடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக்குடிப்பிறந்த வேளிர்" (தொல். பாயிரம், ந; ஷை அகத். சூ. ஙஉ - ந) எனப்போந்துள்ள வாக்கியங்களால் விளங்குகின்றது.

உஉ. 'தரல்' படர்க்கைக்கண்வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ஙஅ0.

உச - ரு. புறநா. உ௦கூ : க0 - கஉ.

உகூ. "அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையு, மாணணி புகுத லழிபடை தாங்கலும், வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" (சிறுபாண். உக0 - கஉ); "ஒன்னா ரோட்டிய செருப்புகன் மறவர், வாள்வலம் புணர்ந்த நின்றாள்வலம் வாழ்த்த" மதுரை. எஉசு - எ.

ங0. 'வரையாது கொடுத்தலும், பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த" சிறுபாண். உகஎ - அ.

ஙக - ங. புறநா. ருசு : கஅ - உ0; ஙசுஎ: சு - எ; 'மகிழ்..... ... மகளிர், போக்கில பொலங்கல நிறையப் பல்கால், வாக்குபு தரத்தர" (பொருந. அச-எ); "இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரை. எஎக- அக); "பூங்குழை மகளிர் பொலங்கலத்தேந்திய, தேங்கமழ் தேறலொடு தெளிமது மடுப்பினும்" பெருங். உ. சச : சு0 - சுக.

ஙச - சு. "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா, தேத்திய கைகொடுத்தவ ரெந்தாய், வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு, மீந்தவ ரல்ல திருந்தவர் யாரோ" கம்ப. வேள்வி. ங0. -புறநா. 165: 8-2

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

அவனை மாங்குடிகிழார் பாடியது.

(இ - ள்.) நெல்லையரியும் பெரிய உழவர் செஞ்ஞாயிற்றினது வெயிலை வெறுப்பின் தெளிந்த கடற்றிரையின்மேலேபாயும் திண்ணிய திமிலையுடைய வலிய நுளையர் வெம்மையையுடைய மதுவையுண்டு மெலலிய குரவைக்கூத்திற்கேற்ற தாளத்தைபாடும் கடற்றுவலையாலே தழைத்த தேன்பரந்த புன்னையினது மெலலிய பூங்கொத்தாற்செய்யப்பட்ட மாலையைச்சூடிய ஆடவர் விளங்கிய வளையையுடைய மகளிர்க்கு முதற்கைகொடுக்கும் வண்டுமொய்ப்ப மலர்ந்த குளிர்ந்த நறிய காவலிடத்துக் கடன்முள்ளிப்பூவாற்செய்யப்பட்ட மாலையையுடைய விளங்கிய வளையையணிந்தமகளிர் பெரிய பனையினது நுங்கின் நீரும் பொலிவினையுடைய கரும்பினது இனியசாறும் உயர்ந்தமணலிடத்துத் திரண்ட தெங்கினது இனிய இளநீருடனே கூடக்கலந்து இம்மூன்றுநீரையுமுண்டு மூன்றுநீரையுடைய கடற்கண்ணேபாயும் பரிக்கவொண்ணாத பலமக்களும் வாழ்தலையுடைய நலலவூர்கள்பொருந்திய பொருளைப்பாதுகாவாத வண்மையையுடைய பெரிய வேளாகிய எவ்வியது நீர்வழங்கும் வாய்த்தலைகளையுடைய மிழலைக்கூற்றத்துடனே வயலிடத்துக் கயலைமேயும் நாரை போரின்கண்ணேயுறங்கும்பொன்னணிந்த யானையையுடையபழையமுதிர்ந்த வேளிரது திரண்ட நெல்லினையுடைய முத்தூற்றுக் கூற்றத்தைக் கொண்ட வெற்றிபொருந்திய உயர்ந்த குடையினையும் கொடியாற்பொலிந்த தேரினையுமுடைய செழிய! நின் றுநிலைப்பதாக நினது நாளாகிய மீன்; நிலலாது பட்டுப் போவதாக நின்பகைவருடைய நாளாகியமீன்; நின்னொடு பழைதாய்முதிர்ந்த உயிரினும் உயிருடனே நின்றுமுதிர்ந்த உடம்புபோன்ற நினது வெற்றிக்குடியோடு மூத்த சீரிய குடியின்கட் சிறந்த வாட் போராலே வாழ்வார் நினது முயற்சிவலியை வாழ்த்த இரக்கும்பரிசிலர் நின்வண்மையைச்சொல்ல ஒள்ளிய வளையையுடைய மகளிர் பொற்கலத்தின்கண் ஏந்திய குளிர்ந்த நறுநாற்றத்தையுடைய மதுவைமடுப்ப அதனையுண்டு மகிழ்ச்சிமிக்கு அப்படி இனிதாக நடப்பாயாக; பெரும! அவ்வொழுக்கம்வல்லவரை வாழ்ந்தோரென்றுசொலலுவர் அறிவுடையோர்; பழைய புகழ்தான், பரந்த இடத்தையுடைய உலகத்தின்கண்ணே பிறந்து பரக்க ஒழுகாது நின்றுமாய்ந்தோர் பலர்; அவர் வாழ்ந்தோரெனப்படாராதலான்.—எ - று.

மேல் எண்ணப்பட்ட பெயரெச்சமூன்றும் மிழலையென்னும் பெயர் கொண்டன; அவை உம் உந்தாய்நின்றன.

மூந்நீர்ப்பாயும் நல்லூரென்க.

உயிரினும் சிறந்த, ஆக்கையன்ன வாளின்வாழ்நரெனக்கூட்டி உயிர்க்கு யாக்கைபோலவும் யாக்கைக்கு உயிர்போலவும் இன்றியமையாது இரண்டுமாயிருக்கின்ற வாளின் வாழ்நரென்க.

நின்குடியொடுமூத்த நின்யாக்கையன்ன விழுத்திணைக்கண் உளராய் நின்னுயிரினுஞ்சிறந்த வாளின்வாழ்நரெனக்கூட்டினுமமையும்.

செழிய! நின் நாண்மீன் நின்றுநிலைஇயர்; நின்பகைவர்மீன் படாஅச் செலீஇயர்; உலகத்துத் தோன்றி இசைசெலச்செல்லாது விளிந்தோர்பலர்;

அவர் வாழ்ந்தோரெனப்படார்; ஆதலால், பெரும! வாழ்த்த நுவல மடுப்ப மகிழ்சிறந்து இனிது ஒழுகு; அதுவல்லுநரை வாழ்ந்தோரென்பவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

தாங்காவிளையுளென்பதூஉம் பாடம்.

ஆங்கது, ஒருசொல; ஆங்கு, அசைநிலையுமாம்.

இனி, தொல்லிசையை யுடைய உலகத்துத்தோன்றி மேற்சொல்லப் பட்ட நன்மைகள் தமக்குப் பரக்கவொழுகாது நின்றுவிளிந்தோர் பலரென உரைப்பாருமுளர்.

இது, நிலையாமைகூறி இனிது ஒழுகென்றமையாற் **பொருண்மொழிக் காஞ்சி.** (௨௪)

---

(௨௫.) மீன்றிகழ் விசும்பிற் பாயிரு ளகல
ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ
துரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்
௫ குடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
யணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்

---

௩-௪. சேர சோழர்க்கு ஞாயிறும் மதியமும் உவமை; **புறநா.** ௬௰: ௪-௬; ௩௬௭: ௧௩-௪.

௫. வஞ்சினம்: **புறநா.** ௭௧, ௭௨, ௭௩; "தன்பான் மனையா ளயலானைத் தலைக்கண்டு பின்னு, மின்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலாந், நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா, ரென்பாரை யோம்பே னெனின்யானவ னாக வென்றான்" (**சீவக.** ௪௪௩); "நின்னையறி வன்பெரிது நின்முறையு ளாய,கன்னியையோர் காளைபிற னெய்துவது கண்டு,மன்னுமண விலனுள்வயி றாவயில னின்றுயக், கின்னுமுளவோ புதிய வென்றுமிக நக்கான்" (**சூளா.** அரசியல். ௧௫௬); "வினையிலென் மகன்றனுயிர் வேறுசெய் வித்தோனைக், குனிசிலையி னுனையுயிர் கோறல்புரியேனேல், மனைவிய யலான் மருவல் கண்டுமவள் கையாற், றினையளவு மோர்பொழுது தின்றவனு மாவேன்" **வில்லி- பாரதம்,** பதின்மூன்றாம்போர். ௧௮௪.

௫-௭. வென்ற அரசர் பகைவருடைய முரசைக் கவர்ந்து விடுதல்மரபு; **புறநா.** ௨௬ : ௬-௭; ௭௨ : ௮-௯; ௧௭௯: ௪; "அரசுபட வமருழக்கி, முரசுகொண்டு களம்வேட்ட.........வேந்தே", "வேந்து, நின்னிசை முரச மிடைப்புலத் தொழிய.. ...புறம் பெற்று" (**மதுரை.** ௧௨௮-௩௰; ௩௪௮-௫௰); "எழுவர் நல்வலம் அடங்க வொருபகல், முரசொடு வெண்குடை யகப் படுத்து" **அகநா.** ௩௬.

௮. மடை - மூட்டுவாய்; **புறநா.** ௧௫௰.

சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
௧௦ முலைபொலி யாக முருப்ப நூறி
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூச
லொண்ணுதன் மகளிர் கைம்மை கூர
வவிரறல் கடுக்கு மம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனைக் கல்லாடனார் பாடியது.

இ - ள்.—மீன்விளங்கும் வானத்தின்கண் பரந்த இருணீங்க ஓங்கிச் செல்லுதன்முறைமையையுடைய தனதுதன்மையிற் பிழையாது வலிய வெம்மை *முறுகிய உட்குப்பொருந்திய ஞாயிறு நிலாவிளங்கும் திங்களுடனே நிலத்தைப்பொருந்தினாற்போலப் பகைத்தற்கரிய வலியையுடைய வஞ்சினங்கூறிய இருவேந்தரை வருத்துதற்கரிய போர்க்களத்தின்கண்ணே மாயப்பொருது அவருடைய வாராற் பிணிப்புற்ற முரசத்தைக்கொண்டகாலத்து நின்றநிலையிலேநின்று நின்னைச்சூழ்ந்துகொண்டவீரரைப் புரிந்தெறிதலால் திண்ணிய கொளுத்துக்கலங்கிக் கெடுதல் பிழைத்தது, நினதுவேல்; செழிய! முலைபொலிந்தமார்பம் அழல அறைந்துகொண்டு அறிவுமயங்கியுற்ற அளவற்ற அழுகைப்பாரவாரத்தையுடைய ஒண்ணுதன்மகளிர் கைம்மைநோன்பிலேமிக விளங்கும் அறலையொக்கும் அழகிய மெல்லிய குவிந்த கரிய மயிரினைக்கொய்தபரிசைக்கண்டு.—எ - று.

செழிய! மகளிர் கூந்தல்கொய்தல்கண்டு நின்வேல் சிதைதலுய்ந்ததெனக் கூட்டுக.

ஈண்டுச்செல்லாமரபெனவும், ஐம்பாற்குவையிருங்கூந்தலெனவும் பாடமோதுவாருமுளர்.

உய்ந்தன்றோ: ஓ, அசைநிலை. (௨௫)

---

அ - கூ. தலைவனது வேலினைப் புகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௧௭ - இளம்.

௧௦. உருப்ப: புறநா. ௨௩௭ : ௧௦.

௧௧. மெய் - அறிவு; "விதமுறு வடிவங் கண்டே மெய்யொருப் பட்டதிலலை' (திருவால. ௩௦: ௩௧); பூசல் - அழுகையாரவாரம்; "கரையாதேனிடு பூசல்கண்டு மொன், றுரையாய" கம்ப. கிட்கிந்தா. அரசியல். அ.

* முறுகிய - மிகுந்த; சீவக. ௧௫௦௩; காஞ்சிப். திருநகா. ௧.

(உ௬.) களிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவுங்
களனகற்றிய வியலாங்க
௫ ணொளிறிலைய வெஃகேந்தி
யரைசுபட வமருழக்கி
யுரைசெல முரசுவெளவி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யுலைக்கொளீஇத்
௰ தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியி
னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
வான்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
௰௫ வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே

---

௧. புறநா. ௨௰; ௧.

௧ - ௩. புறநா. ௧௩: ௫ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௫. ஒளிறுதல - விளங்குதல ; (புறநா. ௧௭௭: ௧) ; "ஒளிறுவாள் விழுப்புண்" (நெடுநல். ௧௭௨) ; "ஒளிறுவாண் மறவரும்" மணி. ௧: ௬௪.

௬. மு. மதுரை. ௧௨௮.

௭. புறநா. ௨௫: ௫ - ௭ - ஆம்அடியின் குறிப்பைப் பார்க்க.

௮-௰. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத்தீயிற் பெயர்பு பொங்க......தொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன் சோறு" (மதுரை. ௨௬-௩௫); "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு" சிலப். ௨௬: ௨௪௨-௩.

௧௧. களம் வேட்டலென்பது, பலிகொடுத்தலென்றும் களவேள்வி செய்தலென்றும் வழங்கும் ; (புறநா. ௩௭ : ௧௨) ; "கறவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே" (நற்றி. ௪௰௰) ; "அரசுகெட......களம் வேட்ட,வடுதிறலுயர் புகழவேந்தே" (மதுரை. ௧௨௮ - ௩௰) ; "பாண்டியன் சோழர்காய்ந்து, பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டு"(திருவால. ௪௪ : ௫௪) ; "பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக், கொடித்தானை மன்னன் கொடுத்தான்-முடித்தலைத், தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக, மூளைஞ் சோற்றை முகந்து" (பு - வெ. ௮ : ௯) ; அரசனை வேட்டதற்கு மேற்கோள் ; தொல். மரபு. ௩. ௭௨ - பேர்.

௧௨. கொள்கை-விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" முருகு. ௮௯.

*௧௩. புறநா. ௧௭ : ௧ - ௪ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௧௨-௫. "ஆன்றகேள்வி...வாள்வேந்தே எனவரும் அடிகளில், பார்ப்பார் வேட்பித்தவாறும் அரசன் வேட்டவாறும் கண்டுகொள்க" (தொல்.

வேந்தே, நீ வேண்டியது விளைக்கும் ஆற்றலையாகலின், விண்ணுல கத்து நுகர்ச்சி ஈண்டுங்கூடலின், ஒன்னார் தேயத்திருந்தும், பரிசிலர், நின் னூடு நின்னையுடைத்தென்று நினைநுடையுளருவர்; ஆதலான், நின்னிழற் பிறந்து நின்னிழல வளர்ந்த எம்மளவு எவனோவென மாறிக்கூட்டுக. (கூஅ

---

(௬௬.) புறவி னல்லல் சொல்லிய கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோணிறை துலாஅம் புக்கோன் மருக
வீதனின் புகழு மன்றே சார்த
௫ லொன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற்
றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பி
னடுதனின் புகழு மன்றே கெடுவின்று
மறங்கெழு சோழ ருறந்தை யவையத்
தறநின்று நிலையிற் றாகலி னதனா
௧0 முறைமைநின் புகழு மன்றே மறமிக்
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோட்
கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ

---

௧. சொல்லிய - களைய; புறநா. ௬0: எ; "துணைவனுக குறற துனபஞ சொல்லிய தொடங்கி னோ" சீவக. ௧௧௪௬.

௧ - ௩. புறநா. ௩எ: ௫ - ௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௫ - ௬. செம்பியன் பகைவருடைய தூங்கெயிலெறிந்தமை பின்வரு வனவற்றாலும் விளங்கும்:—"ஒன்னா, ரோங்கெயிற கதவ முருமுச்சுவ சொறியுந, தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை ந, ரோச செம்பியன" (சிறுபாண். எ௯-அஉ); "வீங்குதோட செம்பியன சீ றம் விறலவிசும்பிற், றூங்கு மெயிலும் தொலைத்தலால" (பழ.௪௯); "வெயி விளங்கு மணிப்பூண விண்ணவர் வியப்ப, வெயிலமூன் றெறிந்த விகலவே கொற்றமும்","தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை" (சிலப். உஎ: ௧௬௪ - ௫; உ௯: "வீங்குநீர"); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட செம்பியன" (மணி. ௧: ௪); "திறலவிளங் கவுணா றூங்கெயி லெறிந்த,விற மிகு முரசின் வெலபோர்ச சோழன" (தொல். களவு. சூ. ௧௧ - ந. "கன ணே"); "தேங்குதூங்கெயி லெறிந்தவனும்" (கலிங்க, இராச. ௧எ) "வாங்குரு திருக்கொற்ற வாளொன்றின் வாய்வாயப்பத, தூங்கும் புரிசை துணித்தகோன" (இராசராசசோழனுலா, ௧௩); "கூடார்தம, தூங் மெயி லெறிந்த சோழனும்" விக்கிரமசோழனுலா, அ - ௯.

அ - ௯. புறநா. ௫அ: ௯; "மறங்கெழு சோழ ருறந்தை யவையத் தறங்கெட வறியா தாங்கு" (நற். ௪00);"ஆரங்கண்ணி யடுபோர்ச சோழ ரறங்கெழு நல்லவை யுறந்தை" அகநா. ௬௩.

௧உ. "கணணார் கணணிக கரிகால வளவன" பொருந. ௧௪அ.

யாங்கன மொழிகோ யானே யோங்கிய
வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்
௧௫ டிமயஞ் சூட்டிய வேம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் றொலைய
வாடா வஞ்சி வாட்டுநின்
பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே.

திணையும் துறையும் அவை.

அவனை மாறோக்கத்துநப்பசலையார் பாடியது.

இ - ள்.— புறவினது வருத்தத்தைக் களையவேண்டிக் கறைபொருந்திய அடியினையுடைய யானையினது வெளிய கோட்டாற் கடைந்து செறிக்கப்பட்ட வெளிய கடையினையுடைய கோலாகிய நிறுக்கப்படும் துலாத்தின் கண்ணே துலைபுக்க செம்பியனது மரபினுள்ளாயாதலான், இரந்தோர்க்குக் கொடுத்தல் நினக்கு இயல்பாவதல்லது புகழுமல்லவே ; அசுரர்க்குப் பகைவராகிய தேவர்கள் கிட்டுதற்கு வெருவும் அணுகுதற்கரிய மிக்க வலியையுடைய ஆகாயத்துத் தூங்கெயிலை அழித்த நின்னுடைய முன்னுளோரை நினைப்பின், ஈண்டுள்ள பகைவரைக் கொல்லுதல் நினது புகழுமல்லவே; கேடின்றி, மறம்பொருந்திய சோழரது உறையூர்க்கண் அவைக்களத்து அறம் நின்று நிலைபெற்றதாதலால், முறைமை செய்தல் நினக்குப் புகழுமல்லவே ; அதனால், மறம் மிக்கெழுந்திருந்த போரைவென்ற கணையமரத்தோடு மாறுபடும் தசைசெறிந்த தோளினையும்,கண்ணிற்கு ஆர்ந்த கண்ணியையும்,மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய வளவ,எவ்வாறு கூறுவேனோயான்? உயர்ந்த எல்லை அளந்தறியப்படாத பொன்படுகின்ற நெடிய சிகரங்களையுடைய இமயமலையின்கட் சூட்டப்பட்ட காவலாகிய விற்பொறியையும், மாட்சிமைப்பட்ட தொழில் பொருந்திய நெடிய தேரையுமுடைய சேரனழிய அவனது அழிவில்லாத கருவூரை அழிக்கும் நினது பெருமைபொருந்திய வலியதாளைப் பாடுங்காலத்து.—எ - று.

நின்னைப்பாடுங்காலென்பார், அவனது சிறப்புததோன்றத் தாள்பாடுங் காலென்றார்; தாளை முயற்சி யெனினுமமையும்.

நிறைதுலாம்புக்கோன்மருக, நீ அவன்மருகனாதலால், ஈதல் நின்புகழுமன்று; தூங்கெயிலெறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின், அடுதல் நின்புகழுமன்று; உறந்தை அவையத்து அறம் நின்றுநிலையிற்றாதலின், முறைமை நின் புகழுமன்று; அதனால், கலிமான்வளவ, நின் தாள்பாடுங்கால், யான் யாங்கன மொழிகோவெனக் கூட்டுக.

அதனால, யாங்கனமொழிகோவென இயையும்.

மருகவென்புழி, ஆதலானென்பது, ஆற்றலாற்போந்த பொருளெனக் கொள்க.

கறையடியென்பதற்கு உரல்போலும் அடியென்பாருமுளர். (௩௯)

---

௧௫. "விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" (சிலப். ௨௩: ௮௨; மணி. ௨௮: ௧0௪) ; "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" சிலப். ௨௯. ௧௩௬.

௧௪ - ௫. புறநா. ௨: ௨௪ - ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

(௪௦.) நீயே, பிற [1] ரோம்புறு மறமன்னெயி
லோம்பாது கடந்தட்டவர்
முடிபுனைந்த பசும்பொன்னி
னடிபொலியக் கழறைஇய
௫ வல்லாளனை வயவேந்தே
யாமேநின், னிகழ்பாடுவோ [2] ரெருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற
வின்று கண்டாங்குக் காண்குவ மென்று
மின்சொலெண் பதத்தை யாகுமதி பெரும
௧௦ வொருபிடி படியுஞ் சீறிட
மெழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - செவியறிவுறூஉ.

அவனை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.— நீ, பகைவரது பாதுகாத்த மறம் நிலைபெற்ற அரண்களைப் பாதுகாவாது எதிர்நின்று அழித்து அவரைக்கொன்று அவர் மகுடமாகச் செய்யப்பட்ட பசும்பொன்னால் நினது அடிபொலிய வீரக்கழலைச்செய்து புனைந்த வலிய ஆண்மையையுடையை; வயவேந்தே, யாங்கள், நின்னை இழித்துரைப்போர்கழுத்திறைஞ்சப் புகழ்ந்துரைப்போர் பொலிவுதோன்ற இன்று கண்டாற்போலக் காண்போம்; எந்நாளும் இனியமொழியோடு எளிய செவ்வியை யாகுக; பெரும, ஒருபிடிகிடக்கும் சிறியவிடம் ஏழுகளிற்றுயானையைப் பாதுகாக்கும் நாட்டையுடையோய்.— எ - று.

நாடுகிழவோய், இன்சொல் எண்பதத்தை ஆகுமதி; அதனால், நின் இகழ்பாடுவோர் எருத்தமடங்கப் புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற யாம் இன்றுகண்டாங்குக் காண்குவமெனக் கூட்டுக.

வல்லாளனையென்பதனுள், ஐகாரம், முன்னிலைவிளக்கிநின்றது; அசைநிலையுமாம். மதி, முன்னிலையசைச்சொல்.

'கழறைஇய வல்லாளன்' என்றதனாற் பகையின்மையும், 'ஒருபிடி படியுஞ் சீறிட மெழுகளிறுபுரக்கும் நாடுகிழவோய்' என்றதனாற் பொருட்குறைவின்மையுங் கூறியவாறாயிற்று. (௪௦)

---

௧ - ௩. "புலவர் பூண்கடனாற்றிப் பகைவர், கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும், வென்றி" பெரும்பாண். ௪௫௦ - ௫௨.

௯. "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள். ௩௮௬.

அ - ௯. செவியறிவுறுத்தற்கு மேற்கோள்; தொல். செய். சூ. ௧௧௪-ந

(பி - ம்.)— 1 'ஓம்புற்றமனை' 2 'எருத்தமடங்க'

(௪௧.) காலனுங் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே
1 திசையிரு நான்கு முற்க முற்கவும்
௫ பெருமரத் திலையி னெடுங்கோடு வறறல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவு
மஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவு
மெயிறுநிலத்து வீழவு மெண்ணெ யாடவுங்
களிறுமேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
௧௦ வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவுங்
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி
மையல் கொண்ட வேமமி லிருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
௧௫ கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோ
டெரிநிகழ்ந் தன்ன செலவிற

---

௧ - ௩. "உண்ணுந துணைக்காக்குங் கூற்று" (பழ. ௮௧); "செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி, யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்" (கலி. ௪௦௫); "ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் காப்பட், காலம் பார்க்குங் காலன் போல" (பெருங். ௧. ௩௭ : ௨0௭ - ௮); "சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணென்ப தன்றி யியலிப்போ, ஞற்றங் கேட்டலுந தின்ன மெய்ப்பதோர், கூற்றுணடோ" (கம்ப. தாடகைவதை. ௬௪); 'அடலவேண்டினுறுபவர்கண' என்பதற்கு வேற்றுவேநதரைக்கோறல் வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவலல வேந்தர்மாட்டு' எனப் பொருள்கூறி இப்பகுதியை மேற்கோள்காட்டினர்; குறள். ௮௬௩-பரிமேல்.

௬ - ௧௦. கனிநெறாறது பற்றியை யுணர்த்திவருதற்கு இப்பகுதி மேற்கோள்; (சிலப். ௧௫: ௬௫ - ௧0௬-அடியார்); "மிக்க வெயிற்றின கொம்பின பனிறி விறற்குரங்கு, தொககன தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச், சககர வர்த்திக ளாற்பய மூண்டெனுந தம்முயிர்க, ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே" கனநூல், ௧௫.

௧௪-௫. மனைவியர்க்குத் தமது வருத்தந தோன்றாமல் கணவர் மறைத்தலை, "கருங்கய னெடுங்கட் காதலி தன்னை....வருபனி கரந்த கண்ணனாகி" (சிலப். ௧௬: ௬௪ - ௭) என்பதனாலுமறிக.

௬ - ௧௬. "பிறவும்....தானே": தோற்றோர் தேய்விற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௭ - இளம்.

(பி - ம்.)—1 'திசையிருநான்குமுற்கவும்'

செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே.*

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.

குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக்கோவூர்கிழார்பாடியது.

இ - ள்.—கூற்றும் தன்னுலை உயிர்கொள்ளலாங்காலம் வருந்துணையும் பார்க்கும்; அவ்வாறு காலம்பாராது வேல்நெருங்கிய படையினையுடைய பெரியோர் மாளும்பரிசு நீ வேண்டியவிடத்தே கொல்லும் வெல்லும்போரை யுடைய வேந்தே, எட்டுத்திசையும் எரிகொள்ளி எரிந்துவீழவும், பெரியமரத் தின்கண்ணே இலையில்லாத நெடியகோடாகிய வற்றல பற்றவும், வெய்ய சுடரையுடையஞாயிறு பலவிடத்தும் செறிந்துதோன்றவும், மற்றும் அஞ்சத் தகுவனவாகிய புட்கள் குரலிசைப்படவும், பல்லு நிலத்தின்கண்ணே வீழவும், எண்ணெயை மயிரின்கண்ணே வார்க்கவும், பன்றியேற்றை ஏறவும், ஆடை யைக்களையவும், வெளிதாகிய வலிய படைக்கலம் தானிருந்த கட்டிலுடனே மறியவும், இங்ஙனம் கனவினும், மெய்ம்மையினும் பொறுத்தற்கரியவற்றைக் கண்டு போர்செய்யும் வலியையுடையோய், நின் மேற்செலவின் கூறுபாட் டைக்கருதி, மயக்கம்பொருந்திய காவலில்லாத இருத்தலையுடையராய்த் தம்பிள்ளைகளுடைய பூப்போலுங்கண்ணை முத்தங்கொண்டு தம்மனைவியர்க் குத் தமது வருத்தந்தோன்றாமல் மறைக்கும் துன்பத்தையுடைய ஆடவ ரோடு மிக்க கலக்கமுற்றது; காற்றுடன் எரிநிகழ்ந்தாற்போன்ற செலவை யுடைய போரின்கண்ணே மிக்கவளவ, நின்னைச் சினப்பித்தோருடைய நாடு.—எ - று.

உற்கவென்றது, வீழ்தலை, உற்கமுதலியனவாகும் உற்பாதமாய் நனவிற் காணப்பட்டன; எயிறுநிலத்து வீழ்தல முதலாயின கனவிற் காணப்பட்டன.

வருதிறன் - ஈண்டுச் செலுந்திறனென இடவழுவமைதியாய் நின்றது.

'மனையோட்கெட் வங் கரக்கும்' என்பது, "ஏவ விளையர் தாய்வயிறு கறிப்ப" என்றாற்போலப் பன்மைக்கேற்பநின்றது.

தான், ஈண்டு அசைநிலை.

பெருமரத்துப பற்றவுமென இயையும்.

இலையிலெனடுங்கோடு வற்றலபற்றவு மென்பதற்கு நெடுங்கோட்டின் கண்ணே இலையில வற்றறன்மைபற்றவுமென உரைப்பினுமமையும்.

வேந்தே, முன்ப, வளவ, நீ இத்தன்மையையாதலால், நிற்சினைஇ யோர்நாடு, பைதன்மாக்களொடு பெருங்கலக்குற்றதெனக் கூட்டுக.

காற்றோடெரி நிகழ்ந்தன்ன செலவிற் செருமிகு வளவவென மன்னவன் புகழும், நிறசினைஇயோர்நாடு பைதன்மாக்களொடு பெருங்கலக்குற்றன் றென ஒன்னார்நாடழிபிரங்கியதும் கூறுதலால, இது கொற்றவள்ளை யாயிற்று. (௪௧)

* மு. நிமித்தம்பற்றிவந்ததற்கும் (தொல். புறத்திணை. சூ. ௬௦ - இளம்), பாடாண்கொற்றவள்ளைக்கும் (ஷை ஷை சூ. ௬௪ - ந), ஓம்படை வாழ்த்திற்கும் (ஷை ஷை சூ. ௬௬ - ந) மேற்கோள்.

சஉ.) ஆனா வீகை யடுபோ ரண்ணனின்
யானையு மலையிற் றோன்றும் பெருமநின்
றானையும் [1] கடலென முழங்குங் கூர்நுனை
வேலு [2] மின்னின் விளங்கு முலகத்
ரு தரைசுதலை பனிக்கு மாற்றலை யாதலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே
தண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ வென்றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
க0 புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ னீபுறங் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரு கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு [3] வருவிருந் தயரு
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
மலையி னிழிந்து மாக்கட னோக்கி
உ0 நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே

---

உ. புறநா. ருஅ: க.

க0. "குட்டியைத் தின்ன லாமோ கோட்புலி புறத்த தாக" (சீவக கககருச); "புலிதானே புறங்காக்கக் குட்டிகோட் படாதென்ன, வொலியாழி யுலகுரைக்கு முரைபொய்யோ", "புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாறு, வன்பறழ வாயிற் கவ்வி வலலிய மிரிநத" கம்ப. சூர்ப்பநகை. க0உ; கடறாவு. எ.

கஎ - அ. "வன்புல......பொருந: என்றக்கால் பகைவேந்தரை வென்றி கொள்ளுங்கால அவர்தாமே தத்தம்பொருள் பிறர்க்களிப்பாரென்னும் பொருள் தோன்றினும் தோன்றுமென்பதலலது ஒருதலைபாக உள்ளுறை யுவமங்கோடல் வேண்டுவதன்று; என்னை? 'தாய்சாப்பிறக்கும்...அவரூர்' என்றாற்போலக்கூறாது அந்நாட்டுக்கருங்களமர்முதலாயினர் வருந்தாமற் பெறும்பொருள் பிறநாட்டார்க்கு விருந்து செய்யத்தகும் என்று அந்நாட்டி னது வளமை கூறினமையினென்பது" தொல். உவம. சூ. ருக - பேர்.

ககூ - உக. "கல்வீழருவி கடற்படர்ந் தாங்குப், பல்வேறு வகையிற்

(பி - ம்.) 1 'கடலினொலிக்கும்வைந்நுதி' 2 'மின்போலவிர்வரு ஞாலத்து' 3 'வருவிருந்தமரும்'

நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை

~~பாண்டியன் இலவந்திகைத்துஞ்சிய நன்மாறனை~~ இடைக்காடனூர் பாடியது.

இ - ள்.—அமையாத வண்மையையும், பகையைக்கொல்லும் பூசலையுமுடைய தலைவ, நினது யானையும் மலைபோலத்தோன்றும் ; பெரும, நின் படையும் கடல்போல முழங்கும்; கூரிய நுனையையுடைய வேலும் மின் போலவிட்டு விளங்கும் ; இங்ஙனம் உலகத்தின்கண் வேந்து தலைநடுங்குதற்கு ஏதுவாகிய வலியையுடையையாதலால, குற்றம் தீர்நதது; அது நினக்குப் பழையதாய்வருகின்றது ; குளிர்ந்த நீராலுள்ளதாகிய பூசலலலது வருந்தி 'எமது துயரத்தைத் தீர்ப்பாயாக வாழி வளவ' என்று சொலலி, நினது முந்துற்றுசசெலலும் படையுண்டாக்கும்பூசலைக் கனவின்கண்ணும் அறியாது, புலி பாதுகாக்கும் குட்டிபோலக் குறைவிலலாத செவ்விய கோலால் நீ பாதுகாப்பப் பெரியவிசேடத்தையுடைய புதுவருவாயையுடைத்தாய் நெல்லறுப்பார் கடைமடைக்கட் பிடித்துககொள்ளப்பட்ட வாளையும், உழுவார் படைவாளால மறிக்கப்பட்ட ஆமையும், கரும்பறுப்பார் கரும்பினின்றும் வாங்கப்பட்டதேனும், பெரிய துறைக்கண நீரை முகநதுகொள்ளும் பெண்டிர் பறித்த செங்கழுநீருமென இவறறை வன்புலததினின்றும் வநத சுற்றத்தார்க்கு விருநதாக விரும்பிககொடுக்கும் மெனபுலத்தூர்களையுடைய நல்ல நாட்டுக்கு வேநதே; மலையினின்றிழிநது பெரிய கடலைநோக்கி நிலவெலலையினின்றிழியும் பல யாறுகளையொப்பப் புலவர்யாவரும் நின்னைநோக்கினர்;

---

பணிந்த மனனர்" (பெரும்பாண். சஉஎ - அ); "தாமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின், மீமிசை நலயாறு கடற்படர்ந தாஅங்கு, யாமவணின்றும் வருதும்" (மலைபடு. ருக - ந); "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு - வெ. க: கக); "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம் போய், மொய்கொள வேலைவாய் முடுகு மாறுபோல" கம்ப. கையடை. கரு.

உஉ. புறநா. ந: கஉ - ஆம் அடி குறிப்பைப் பார்க்க; "கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே" பதிற். கச: கo.

உந - ச. "கூற்று.....நோக்கினையே : என்பது வெகுளியுவமம்" தொல். உவம. சூ. கக - பேர்.

உக - ச. புறநா. உoந ; "நெருநலென்பது சென்றது நின்ற, வின்றுஞ் செல்லாநின்றது முன்சென்று,வருநாள் கண்டா ரியாரே யதனு, லொருநா ளகப்படுத் துடையோ ரின்மையி, னலலது நாடுமி னுள்ளது கொடுமின், வழாஅ வின்பமும் புணர்மி னதாஅன்று,கீழது நீரகம் புகினு மேலது,விசும்பின் பிடர்த்தலை யேறினும் புடையது, நேமி மாலவரைக் கப்புறம் புகினுங், கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து,மீளிக் கொடுநா விலக்குதற் கரிதே" ஆசிரியமாலை.

* மூ. கொள்ளார்தேஎங்குறித்தகொற்றமென்னுந்துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கo - இளம்; ஷை. ஷை. சூ. கஉ - ந.

ான் அவர்க்குப் பரிசில் கொடுத்தற்பொருட்டுப் பரிகாரமில்லாத கணிச்சி
ன்னும் படைக்கலத்தை உயிர்வருந்தச் சுழற்றிக் கூற்றம் சினந்தாற் போ
் வலியுடனே நினக்கு மறுதலையாகிய இருவேந்தருடைய நிலத்தைக்
ாள்ள நோக்கினாய்.—எ - று.

அறியாதென்பதனை அறியாமலெனத் திரிப்பினுமமையும்.

வன்புலம்:—குறிஞ்சியும், முல்லையும். மென்புலம்: — மருதமும்,
ய்தலும்.

கணிச்சியைக் குந்தாலியென்றும், மழுவென்றும் சொல்லுவர்.

யாணர்த்தாகி விருந்தயரும் நன்னுடெனக.

பொருந, புலவரெல்லாம் நின்னோக்கினார்; நீ அரசுதலைபணிக்கும் ஆற்
லையாதலின், இருவேந்தர் மண்ணோக்கினை ; அதனால், இச்செய்தி புரை
ந்தது, நினக்குப் புதுவதன்றாகலினெனக் கூட்டுக.

புரைதீர்ந்தன்றென்பதற்கு உயர்ச்சிதீர்ந்ததெனப்பொருளாக்கி, பொருந,'
ஆற்றலையாதலின், இருவேநதர் மண்ணோக்கினை ; புலவரெல்லாம் பரிசில்
பறுதற்பொருட்டு நின்னோக்கினார்; இச்செய்தி நினக்குப் புதிதன்று ; ஆக
ன் உயர்ச்சி தீர்ந்ததென்றுரைப்பினுமமையும். (சஉ)

---

சாங.) நிலமிசை வாழ்ந ரலமர றீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கு
மவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக்
(ரு) கூருகிர்ப் [1] பருந்தி னேறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
[2] றபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா வீகை யுரவோன் மருக

---

உ - ச. "விண்செலலன் மரபி னையர்" (முருகு. க0எ) என்பதற்கு
ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தலாற்றாவென்றுகருதித்
தமதருளினாற் சுடரொடுதிரிந்து அவ்வெம்மையைப பொறுகினற முனிவர்'
ான்று நச்சினார்க்கினியர் விசேடவுரையெழுதி இவ்வடிகளை மேற்கோள்
ாட்டியிருத்தலும், "சுடரொடு திரிதரு முனிவரும்" (சிலப். கஉ) என்
பதும், 'ஆதித்தன் வெப்பந்தணிதல காரணமாக அவனுடனே கூடித்
திரியுமுனிவரும்', 'கதிரவனுடைய வெம்மை உயிர்களைவருத்தாமல் அத
னைத்தாங்கி அவனுடனேசுழன்று திரிதலைச்செய்யுந தெய்வவிருடிகளும்'
என்னும் அதன் உரைகளும் இங்கே அறிதற்பாலன.

சு-எ. "என்புழுரியராதல,'தன்னகம்புக்க.........சீரைபுக்கோன்' முத
லாயினார்கட்காண்க" குறள். எஉ - பரிமேல்.

ச-அ. புறநா. ந௭ : ரு - சு ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

சு - அ. இவ்வடிகளாற் கூறிய அவ்வரசன் பெருமை கொடையாலுண்
டாகிய வீரச்சுவைக்குதாரணம்; தொல். மெய்ப்பாடு. சு. க - பேர்.

(பி - ம்.)—1 'பருந்தினெறி' 2 'தபுதிகண்டஞ்சி'

நேரார்க் கடந்த முரண்மிகு திருவிற்
௧0 றேர்வண் கிள்ளி தம்பி வார்கோற்
[1] கொடுமர மறவர் பெரும கடுமான்
கைவண் டோன்ற லைய முடையே
னார்புனை தெரியனின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன [2] செய்யலர் மற்றிது
௧௫ நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவா யென்னினு
நீபிழைத் தாய்போ னனிநா ணினையே
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்ம
லிக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமெனக்
௨0 காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின்
யானே பிழைத்தனென் சிறக்கநின் னாயுண்
மிக்கு [3] வரு மின்னீர்க் காவிரி
யெக்க ரிட்ட மணலினும் பலவே.*

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளிதம்பி மாவளத்தானும் தாமப்பல்கண்ணனும் வட்டுப்பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக்கொண்டெறிந்தானைச் சோழன்மகனல்லையென நாணியிருந்தானைத் தாமப்பல்கண்ணனூர் பாடியது.

இ - ள்.—நிலத்தின்மேல் உயிர்வாழ்வார்க்கு வெம்மையான் உளதாகிய சுழற்சி நீங்கச் சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தைத் தாம் பொறுத்துக் காற்றை உணவாகக்கொண்டு அச்சுடருடனே சூழவரும் விளங்கிய சடையையுடைய அருந்தவரும் வியப்பான்மயங்க, வளைந்த சிறகினையும் கூரியஉகிரினையுமுடைய பருந்தினது எறிதலைக்கருதி அதனைத்தப்பித் தன்னிடத்தையடைந்த குறிய நடையையுடைய புறவினது அழிவிற்கு அஞ்சித் தன்னழிவிற்கு அஞ்சாது துலாத்தலையுட்புக்க வரையாத வண்மையையுடைய வலியோனது மரபினுள்ளாய், பகைவரைவென்ற மாறுபாட்டான் மிக்க செல்வத்தையுடைய தேர்வண்கிள்ளிக்குத் தம்பி, நீண்ட அம்பினையும் வளைந்தவில்லினையுமுடைய மறவர்க்குத் தலைவ, விரைந்த குதிரையையுடைய கைவள்ளியதோன்றால், நினது பிறப்பின்கண் ஐயப்பாடுடையேன்; ஆத்தியாற்செய்யப்பட்ட தாரையுடைய நினக்கு முன்னுள்ளார்யாவரும் பார்ப்பார் வெறுக்கத்

---

* மு. "நிலமிசைவாழ்நரென்னும் புறப்பாட்டுப் புலவன் அரசனைநாடி நன்குரைத்தல்; அஃது இயற்கைவகையானன்றிச் செய்கைவகையாற் பரவலும் புகழ்ச்சியுந் தொடர்ந்தமுன்னோர் கூறியகுறிப்பு" தொல். புறத்திணை. சூ. ௨௭ - ந.

(பி - ம்.)—1 'தொடுவின்மறவர்' 2 'செய்யார்' 3 'வருநீர்க்'

தக்குவன செய்யார்; மற்று இவ்வெறுக்கத்தக்க செய்கை நினக்கு நாமையை யுடைத்தோவென்று நீ வெறுக்கச்சொல்லி நினக்கு யான்செய்த தவற்றிற்கு வெருவென்னினும், நீ தவறுசெய்தாய்போல மிக நாணினாய்; இவ்வாறு தம் மைத் தப்பியவரைப் பொறுக்குந்தலைமை இக்குலத்தின்கட்பிறந்தோர்க்கு எளிமையுடைத்துக்காணுமெனக் காணத்தக்க வலியையுடையோய், நீ அறி வித்தாய்; ஆகலின், யானே தவறுசெய்தேன்; பெருகிவரும் இனிய நீரை யுடைய காவிரி கொழித்திடப்பட்ட மணலினும் பலவாக நின்வாழ்நாள் சிறப்பதாக.—எ - று.

முனிவரென்றது, வேளாவியோரை; அன்றி, சடாதிரிந்தவழித்திரிந்து தவஞ்செய்யுமுனிவரென்றும் உரைப்ப.

சீரை - துலாக்கோற்றட்டு.

'மற்றிது, நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி' என்றது, சூதுபொருவழிக் கையாற கவறுபுதைபப வெகுண்டு வடடுக்கொணடெறிந்தானை 'இவ் வாறுசெய்தல நின்பெருமைக்குப் பொருந்துமோ? அதனால நினைபிறப்பிலே ஐயமுடையேன' என்றசொலலை.

இது, பொறுததற்கரியபிழையைப பொறுத்த குணவெனறியான் அரச வாகையாயிற்று. (சங)

---

(சச.) இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு [1] நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் [2] வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்
(ரு) தலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்
வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவு
மின்னா தம்ம [3] வீங்கினி திருத்த

---

உ. "நெய்ம்மிதி கவளம்" (பெரும்பாண். ௩௬௪); "நெய்ம்மலி கவளங் கொள்ளாது" (சீவக. ௧0௭௬); "நெய்ம்மிதி கவளந் தெவிட்டிநின் றடர்க்கு நிழலசுளி தறுகண்மால யானை", "கைம்முகந் தெடுத்த நெய்ம் மிதி கவளங் களித்தெறி மும்மதக் களிறு" கூர்ம. சூரியன்மரபு. அ, உஉ.

ச. பலவின்பாற்படர்க்கைவினைக்குறிப்புமுற்று வினையெச்சக்குறிப்ப னதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௩௫0; நன் - வி. சூ. ௩௫௧ இ - வி. சூ. உ௫0.

௬. புறநா. ௩௬: ௧௧.

(பி - ம்.)—[1] 'நெய்மிகுதி' [2] 'வருந்தவெற்றி' [3] 'ஈண்டினிதிருத்தல்'

கO றுன்னருந் துப்பின் வயமான் றோன்ற
லறவை [1] யாயி னினதெனத் திறத்தன்
மறவை யாயிற் போரொடு திறத்த
லறவையு மறவையு மல்லை [2] யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவி
கரு னீண்மதி லொருசிறை யொடுங்குத
ஞணுத்தக [3] வுடைத்திது காணுங் காலே.*

திணையும் துறையும் அவை.

அவன் ஆவூர்முற்றியிருந்தகாலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—கரிய பிடியினது நடையத்தோடு பெரிய கயத்தின்கட்பிடியாவாய் நெலலையுடைய கவளத்துடனே நெய்யால மிதித்துத் திரட்டப்பட்ட கவளமும் பெறுவாய்த் திருந்திய மருங்கையுடைய வலிய கம்பம்வருந்தச் சாய்த்து நிலத்தின் மேலேபுரளும் கையையுடையவாய வெய்தாகவுயிர்த்துச் சுழலும்யானை உருமேறுபோல முழங்கவும், பாலிலலாதகுழவி அழவும், மகளிர் பூவிலலாத வறிய தலையை முடிப்பவும், நீரிலலாத தொழிலபுனைநத நல்ல மனையிடத்துள்ளார் வருநதிக்கூப்பிடும் கூப்பீடடைகேடகவும், இவற்றிற்குநாணுது இவ்விடத்து நீ இனிதாக இருத்தல இன்னுது; நணணுதற்கு அரிய வலியையுடைய வலிய குதிரையையுடைய தோன்றல, அறத்தை உடையையாயின், இது நினதென்றேவென்று சொலலித் திறததல செய்வாயாக; மறத்தையுடையையாயின், போரால திறத்தலசெய்வாயாக; அவ்வாறன்றி, அறத்தையும் மறததையுமுடையையலலையாகத் திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய நிலையையுடைததாகிய கதவினையுடைய நீண்டமதிலுள் ஒருபக்கத்தே ஒதுங்குதல நாணுநதன்மையையுடைத்து இஃது ஆராயுங் காலத்து.—எ - று.

செய்யென ஒருசொலவருவித்து உரைககப்பட்டது.

திறத்தலென்பதனை இதுதிறக்கவென வியங்கோளாககவுரைபபினுமமையும்.

---

கO. வயவென்னும் உரிசசொல 'வலி' என்னும் பொருளிலவநததற்கு மேற்கோள்; இ - வி. ந. உகூO - உரை.

கக - உ- புறநா. நசO : க . உ; "மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருணமாலை" சிலப். எ : சஉ.

கசு. புறநா. நசு : கந.

கக - சு. "அறவை....காணுங்காலே: என இது செம்பொருட்செவியுறை ; தோல். செய். சூ. கஉஅ - பேர்.

* மு. அகத்தரசற்கழிநது கூறியதற்கு மேற்கோள் ; தோல். புறத்திணை. சூ. கO - இளம்.

(பி - ம்.)—1 'ஆயினிற்றெனத்திறவைதன்மறவை' 2 'யாகித்' 3 'உடைத்தது'

அம்ம, கேட்பித்தற்கண் வந்தது.

'அறவியு மறவியு மலலை யாயின்' என்று பாடமோதுவாருமுளர்.

படியா பெறு என்பன எதிர்மறைவினையெச்சமுற்று.

கையவென்பது, வினையெச்சவினைக்குறிப்புமுற்று. (சச)

---

(சரு.) இரும்பனை வெண்டோடு [1] மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்ல
னின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ரு யொருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
யிருவீர் வேற லியற்கையு மன்றே, அதனாற
குடிப்பொரு ளன்றுநுஞ் [2] செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி உறையூர்முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—பெரியபனையினது வெளியதோட்டைச சூடினானலலன்; கரிய கோட்டினையுடைய வேம்பினது தாரையுடையோனலலன்; நின்னுடைய கண்ணியும் ஆத்தியாற் செறியக கட்டப்பட்டது; நின்னுடன பொருவானுடைய கண்ணியும் ஆத்தியாற செறியக் கட்டப்பட்டது; ஆதலான், நும்முள், ஒருவீர்தோற்பினும் தோற்பது நுங்குடியன்றே? இருவீரும் வெலலுதல இயல்புமன்று; ஆதலால, நுங்குடிககுத் தக்கதொன்றன்று, நுமது செய்கை; கொடியாறபொலிந்த தேரையுடைய நும்மைப்போலும் வேந்தர்க்கு உடம்பு பூரிக்கும் உவகையைச்செய்யும், இம்மாறுபாடு; ஆதலான், இது தவிர்தலே நுமக்குத் தக்கது.—எ - று.

நினகண்ணியுமென்பது, நின்னகண்ணியுமெனவிகாரமாயிற்று.

அதனாலென்பதனை ஒழித்தும் பாடமோதுப.

இது, சந்துசெய்தலால துணைவஞ்சியாயிற்று. (சரு)

---

க. 'தோடு' என்பது புல்லுறுப்பையுணர்த்துதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. அசு - பேர்.

ரு - சு. முன்னிலைகூடியபடர்க்கையும் முன்னிலைமுடிபெற்றதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ருருரு.

(பி - ம்.)—1 'மிலைந்தோனுமலலன்' 2 'செய்கை'

(௪௬.) நீயே, புறவி னல்ல லன்றியும் [1] பிறவு
மிடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
யிவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
௫ களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் [2] மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.*

திணையும் [3] துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான்மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார்பாடி உய்யக்கொண்டது.

இ-ள்.—நீதான், புறவின் அல்லலன்றியும் பிறவும் உற்ற துன்பம்பல வற்றையும் தீர்த்த சோழனுடைய மரபிலுள்ளாய்; இவர்தாம், அறிவான் உழுதுண்ணுங் கற்றோரது வறுமையை யஞ்சித் தமமுடையபொருளைப் பகுத் துண்ணும் குளிர்ந்த நிழலையுடையராய் வாழ்வாரது மரபினுள்ளார்; இவர், இப்பொழுது களிற்றைக்கண்டு தம் இளமையால் தாம் முன்பு வெருவியழு கின்ற அழுகையைமறந்த புல்லிய தலையையுடைய சிறுபிள்ளைகள்; மன்றை வெருவிப் பார்த்து முன்பு அறியாத புதியதோர்வருத்தத்தையுடையர்; இதுகேட்டாயாயின், நீவிரும்பியதைச் செய்வாயாக.—எ-று.

தண்ணிழல்வாழ்நர் சிறாஅரென இயைபினுமமையும்.

அழாஅல் களிறுகண்டு மறந்தவெனக்கூட்டுக.

நீ புறாமுதலாயினவற்றின் துயர்தீர்த்தற்கு உயிர்க்கொடைபூண்டோன் மருகனாதலானும், இவர் கற்றோர்வறுமையஞ்சிப் பகுத்துண்ணும் தண் ணிழல்வாழ்நர் மரபினுள்ளாராதலானும், இவர், நின்னாற் அருளத்தகுநல் லது முனியத்தகாரென்பதாம்.

இதுவும், இவரைக்கொல்லாமற் சந்துசெய்வித்தலின் துணைவஞ்சியா யிற்று. (௪௬)

---

௧-௨. புறநா. ௩௭: ௫-௬-ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

* மு. துணைவஞ்சியென்னுந்துறைக்கு மேற்கோள்; (தொல். புறத் திணை. சூ. ௭ - இளம்); இப்பாட்டு மேற்செலவின்கண் நிகழாமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணையென்றும் கூறுவர்; [illegible] அ - ந.

(பி-ம்.)-1 'பிறவும் பலவும்' 2 'மன்றமருண்டு' 3 'துறைஇயன்மொழி'

(சஎ.) வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
௫ யோம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் [1] தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண வண்ணார்ந் தேகி
யாங்கினி தொழுகி னல்ல [2] தோங்குபுகழ்
௧௦ மண்ணாள் செல்வ [3] மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே.*

திணையும் துறையும் அவை.

---

க. புறநா. ளஎ: ரு; "பழுமர முள்ளிய பறவையின்...புக்கு" (பொருந. சுசு - எ); "பழுமரந் தேரும் பறவை போல......பாண" (பெரும்பாண். உ௦ - உஉ); "பழந்தேர் வாழ்க்கைப் பறவைபோல......துவன்றி" (மதுரை. ருஎசு - அ௦); "கனிபொழி கானங் கிளையொடுணீஇய, துனைபறை நிவக்கும் புள்ளின மான...நன்னாற் படர்ந்த கொள்கையொடு" (மலைபடு. ருச - சுச); 'படர்' என்பது உள்ளுதலாகிய குறிப்புணர்த்துதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். உரி. சூ. சச - சே; பேர்; இ - வி. சூ. உஅஉ - உரை.

ரு. "வல்லாங்குச்செய்து" மணி. உரு: சச.

அ. குவ்வுருபு பொருட்டுப்பொருண்மைக்கண்வந்ததற்கு 'வரிசைக்கு வருந்தும்' என்பது மேற்கோள்; சிலப். பதி. ரு - அடியார்; நன் - மயிலை. சூ. உசுஎ.

* மு. துணைவஞ்சியென்னுந்துறைக்குமேற்கோள் (தொல். புறத்திணை. சூ. எ - இளம்); இப்பாட்டு மேற்செலவின்கணடங்காமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணையென்றும் கூறுவர் (ஷை ஷை ஷை அ - ந); "வள்ளியோர்ப்படர்ந்து......செம்மலுமுடைத்தே: இது சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புக்க இளந்தத்தனென்னும்புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழி அவ்வரசற்கு வருகின்ற துகளினைக் கோவூர்கிழார் புலப்படாமற் செய்யுள் செய்து,தமது சொல்லலே யரசன் கேட்டஞ்சினனென்னும் பொருளை நிறுத்துதலிற் பழிகாப்புச்செவியுறையங்கதமாயிற்று; இவ்வாறே புறத்தினுட் செவியுறைச்செய்யுட்கள்பலவும் வருவனவுள; அவ்வேறுபாடுணர்ந்து கொள்க" ஷை. செய். சூ. கஉஅ - ந.

(பி - ம்.)—1 'தீங்கறிந் தன்றோ' 2 'ஓங்கிய' 3 'எய்தின'

சோழன்நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புகுந்த [1] இளந்தத்தனென்னும்புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழிக் கோவூர்கிழார்பாடி உய்யக்கொண்டது.

இ - ள்.—வண்மையையுடையோரை நினைத்து பழுமரந்தேரும் பறவைபோலப்போகி நெடியவென்றுகருதாது அரியவழி பலவற்றையுங்கடந்து திருந்தாத நாவால் தாம்வல்லபடிபாடி ஆண்டுப்பெற்ற பரிசிலான்மகிழ்ந்து தம் சுற்றத்தையூட்டித் தாமும் பொருளைப்பாதுகாவாது உண்டு உள்ளமலர்ந்து வழங்கித் தம்மைப்புரப்போரால் பெறும் சிறப்பு ஏதுவாகவருந்தும் இப் பரிசிலான்வாழும் வாழ்க்கை, பிறர்க்குச்செய்யும் கொடுமையறிந்ததோவென்னின் இல்லை; கூறுபடக் கல்வியுகத்தால் தம்மொடு மலைந்தோர்நாணத் தங் கல்வியான்வென்று தலையெடுத்து நடந்து அவ்விடத்து இனிதாக ஒழுகுமல்லது, உயர்ந்த புகழையுடைய நிலமாளும் திருப்பொருந்திய நும்மைப்போலும் தலைமையுமுடைத்து.—எ - று.

ஓங்கியவென்பதூஉம், செல்வமுமுடைத்தென்பதூஉம் பாடம்.

சுரம்பலகடந்து புள்ளிற்போகியென மாறிக்கூட்டுக.

பரிசிலவாழ்க்கை, நும்மோரன்ன செம்மலுமுடைத்து ; ஆதலாற் கண்ணார்நாண [3] இனிதொழுகிற்பதல்லது, பிறர்க்குத்தீதறிந்தன்றோ ? என்றனக்கூட்டுக.

இக்கோவூர்கிழார் தாமும்பரிசிலவாழ்நருள் ஒருவராதலான், 'வடிய நாவின் வல்லாங்குபாடி' எனப் பணிந்துகூறினாரெனக. (

(பி - ம்.)— 1 'இளந்தத்தனைக' 2 'கொலைபுகுவழிக்' 3 'இனிதொழுகின்றலல்லது'

---

(சுஎ.) கோதை மார்பிற் கோதை யானுங்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானு
மாக்கழி மலர்ந்த நெய்த லானுங்
கண்ணா றும்மே கானலந் தொண்டி
ரு யஃதெம் மூரே யவனெம் மிறைவ
னன்றோ படர்தி யாயி னீயு
[1] மெம்மு முள்ளுமோ முதுவா யிரவல
வமர்மேம் படூஉங் காலைநின்

---

க - உ. மோனைத்தொடைக்கும் (தொல். செய். சூ. கூஉ - பேர்.) இறவடிதொடுத்த கட்டளையடிமோனைக்கும் (ஷை. ஷை. ஷை. கூஉ) மேற்கோள்.

ச. தொண்டி: புறநா. கஎ: கரு; ஐங்குறு. கஎஅ.

எ. முதுவாயிரவல: புறநா. கஅo: கூ; பதிற். சுசு; சிறுபாண். 6

(பி - ம்.)— 1 'எம்மையுமுள்ளுமோ'

புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - புலவராற்றுப்படை.

* சேரமான்கோக்கோதைமார்பனைப் பொய்கையார் பாடியது.

இ - ள்.—கோதையுடையமார்பிற்கு அணிந்த கோதையானும், அக் கோதையைப்புணர்ந்த மகளிர்சூடியகோதையானும், கரியகழியின்கண் மலர்ந்த நெய்தற்பூவானும் தேன்நாறுகிற்கும் கானலையுடைய தொண்டி ; அஃது எம்முடையவூர் ; அவன் எம்முடையதலைவன் ; அத்தன்மையோ னிடத்தேபோகின்றாயாயின், நீயும் எம்மையும் நினைப்பாயாக, முதியவாய் மையையுடைய இரவல, நீ, அவனிடத்து மேம்படுங்காலத்து நினக்கு உள தாகிய புகழை மேம்படுத்துமவனைக் கண்டேம்யாமெனச்சொல்லி,—எ-று.

இரவல, நீயும் அன்னோற்படர்குவையாயின், நின்புகழமேம்படுநனைக் கண்டனமென எம்மையும் உள்ளுவாய்க்கூட்டுக.

கண்டனமென எம்முமுள்ளென்றேனும், உள்ளிக்கண்டனமெனச் சொலலென்பது கருத்தாகக்கொள்க.

மோ, முன்னிலை அசைச்சொல். நீயுமென்பதூஉம், எம்முமென்பதூஉம் எச்சவும்மை.

தலைவனதியல்பையும் ஊரையுங்கூறி, முதுவாயிரவல, எம்முமுள்ளெ னத் தன் தலைமைதோன்றக் கூறினமையால், இது புலவராற்றுப்படையா யிற்று. (சஅ)

* இப்பாட்டின்முதலடியில் தலைவனபெயர் அமைந்துள்ளது.

---

(சகூ.) நாட னென்கோ வூர னென்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ
யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையைப்
புனவர் தட்டை புடைப்பி[1] னயல
௫ திறங்குகதி ரலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே.

---

௨. "பாடிமிழருவி" மணி. கஎ : ருo.

௪. தட்டை: "வெதிர்புனை தட்டையேன்" (நற். கசஎ); "தழலுந் தட்டையு முறியுந் தந்து" (குறுந். உ௨௩); "தழலை வாங்கியுந் தட்டை யோப் பியும்" (அகநா. க௨அ); "ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்" (மலைபடு. ௩௨அ); "தட்டையாவது:—மூங்கிலைக்கண்ணுக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப்பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதொருகருவி" குறிஞ்சி. ௪௩ - ந.

௪ - ௬. திணைமயக்கத்திற்கு மேற்கோள்; திருச்சிற். ௬௩ - பேர்.

(பி - ம்.)—[1] 'அயலிணிரங்கு'

திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—குறிஞ்சிநிலமுடைமையால், நாடனென்றுசொல்லுவேனோ? மருதநிலமுடைமையால், ஊரனென்றுசொல்லுவேனோ? நெய்தனிலமுடைமையால், ஒலிமுழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பனென்று சொல்லுவேனோ? எவ்வாறுசொல்லுவேன் மேம்பட்ட வாளையுடையகோதையை? புனங்காப்போர் கிளிகடிகருவியைப்புடைப்பின், அப்புனத்திற்கு அயலாகிய வளைந்த நெற்கதிர்சூழலும் வயலின் கண்ணும், மிக்கநீரையுடைய கடற்கரையின்கணணும் உளவாகியபுட்கள் சேரவெழுமாதலான்.—எ - று.

'புனவர்தட்டைபுடைப்பின்' எனக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்பக் கூறினமையான்' நாடனென்பதூஉம், அவ்விரண்டு நிலத்துக்கும் கொள்ளப்படும்; எனவேமுல்லைநிலமுமுடையனென்றவாறும்.

புனவர்தட்டைபுடைப்பின், கழனியிலும் சேர்ப்பினும் புள்ளெழுமாதலால், கோதையை யாங்கனமொழிகோவெனக்கூட்டுக.

இது, நானிலமுமுடையனாதலிற் பெருஞ்செல்வமுடையன்; நீ அவன்பாற் செல்லெனவாற்றுப்படுத்தவாறு; அவனது இயல்பைப்புகழ்ந்தமையான், இயன்மொழியுமாயிற்று. (சகூ)

---

(ரு௦.) மாசற விசித்த வார்புறு [1] வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
ரு குருதி வேட்கை யுருகெழு முரச
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
யறியா தேறிய வென்னைத் தெறுவர
விருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
க௦ யதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறித

---

௩. புறநா. உ௭௪ : உ.

ரு. "குருதி வேட்ட மயிர்புதை மாக்கண் கடியகழற" (பதிற். உகூ); "கூற்றுக்கண விளிக்குங் குருதிவேட்கை, முரசு" மணி. க: ௩௦ - ௩க.

க - ரு. "விரவிய சநதமென் சேறு மட்டித்துப்,பிரவியந தழையொடு பிணையல் வேய்ந்தன, பரவிய பலிபெறு முரசம் பன்மையி, லரவியங் கதிர் கொள வதிர்ந் தறைந்ததே" சூளா. சுயம். உக௦; பெருங். உ. உ: உகூ-௩௦.

௭. ௮. அகநா. கூ௩ : க௩.

(பி - ம்.)—1 'வளப்பின்', 'வள்ளின்'

லதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
விவணிசை யுடையோர்க் கல்ல தவணது
கரு துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே.

திணை - அது; துறை-இயன்மொழி.

சேரமான் தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறை முரசுகட்டி லறியாதேறிய [1] மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன் துயிலெழுந்துணை யும் கவரிகொண்டு வீசியானை மோசிகீரனார் பாடியது.

இ-ள்.—குற்றந்தீரவலித்துப்பிணித்த வாரப்பட்ட வாரையுடைய கரு மரத்தாற் செய்யகலான இருபுடைசிபொருந்திய பக்கம் பொலிவுபெற மயிலி னது தழைத்த நெடியபீலியால் தொடுக்கப்பட்ட ஒள்ளிய பொறியையுடைத் தாகிய நீலமணிபோலும் நிறத்தையுடைய தாரைப் பொற்றளிரையுடைய உழிஞையுடனே பொலியசூட்டப்பட்டுக் குருதிப்பலிகொள்ளும் விருப்பத் தையுடைய உடகுப்பொருந்திய வீரமுரசம் நீராடிவருவதன்முன்னே எண் ணெயினது நுரையை முகந்தாற்போன்ற மெல்லிய பூவையுடைய கட்டிற் கண்ணே இதனை முரசுகட்டிலென்பதறியாது ஏறிக்கிடந்த என்னை வெகுட்சி தோன்ற இருகூறாக்கும் நின்னுடைய வாளை வாயைமாற்றியதாகிய அதுவும் அமையும், நல்ல தமிழ்முழுதும் அறிந்தமைக்கு; அவ்வெகுட்சியொழிந்து அதனளவும் அமையாதே குறுகவந்து நினது வலியையுடைய முழவுபோலும் தோளையெடுத்துச் சாமரத்தாற் குளிரவீசினாய்; இவ்வகன்ற உலகத்தின் கண்ணே பரக்கும்பரிசு இவ்வுலகத்துப்புகழுடையோர்க்கல்லது, அவ்விடத்த தாகிய உயர்ந்த நிலைமையையுடைய உலகத்தின்கண் உறைதலில்லாமையைத் தெரியக்கேட்ட பரிசாலேயோ? வெற்றிபொருந்தப்பட்ட தலைவா, நீ இவ் விடத்து இச்சாமரையைவீசுதல், அதற்குக்காரணம்சொல்லுவாயாக.—எ-று.

கூட்டியென்பதனைச் கூட்டவென்று திரிப்பினுமமையும்.

உழிஞை - கொற்றான்; அது குடநாட்டார் வழக்கு.

---

கச - ரு. புறநா. உஎ: எ - கூ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; "புகழ் வெய் யோர்க்குப் புத்தேணுடெளிது" முதுமொழிக். எக.

கச - கூ. "ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத்தந்து பூமி யுள்ளளவும் நிற்பது புகழென்னுமாம்; 'ஒன்றுவுலகத்...தொன்றில்' எ - ம், 'இவணிசையுடையோர்க்......மாறுகொல' எனவும் கூறினாராகலின்" சிலப். கக; ககஉ - எ அடியார்.

* மு. முரசுநாட்கோடலுக்கும் (சிலப். ரு : அகூ - கூச - அடியார்), இயன்மொழிக்கும் (தோல். புறத்திணை. சூ. ௩ரு - ந) மேற்கோள்.

(பி - ம்)—1 'மோசுகீரனார்'

முழவுத்தோளோச்சியெனவும், தண்ணெனவீசியோயெனவ வாற்றால், சாமரையென்பது பெற்றும்.

கமழ்தல் - ஈண்டுப் பரத்தற்பொருட்டாய் நின்றது.

தமிழென்பதற்குத் தமிழ்நாடெனினுமமையும்.

குருசில், நீ இதுசெய்தல, இசையுடையோர்க்கல்லது உறை கேட்டமாறுகொலெனக்கூட்டுக.

எண்ணென்பது, கருதெனவுமாம்.

எண்ணியென்று பாடமாயின், கருதியென்க.

---

(/க.) நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்
கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
ரு [1] தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
பளியரோ வளியரவ னளிபிழந் தோரே
நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
க0 செம்புற் றீயல் போல
வொருபகல் வாழ்க்கைக் [2] குலமரு வோரே.

---

க - உ. "ஒலித்துடை, னீர்மிகி னிலலை சிறை" (பழ. கக0); "முண்டோ செழும்புனல் மிக்குழீஇ" (மணி. ரு: கக); "சிறையெனட செவ்வே செம்புனல் பெருகு மாயின்" சூளா. கல்யாண. கருரு.

ரு. ஒளியாவது:—அரசர்பாலுள்ள தெய்வத்தன்மை; அதனை, "நினமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகட் படும்" (கூகூஅ); "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை கண் காக்குமால்" (சீவக. உசஅ) என்பவற்றாலறிக.

ரு. புறநா. அ: உ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

சு. கொண்டி - கொள்ளப்படுவது; ஆவது திறை; "கட்கொ குடிப்பாக்கத்து" மதுரை. கஎ.

க0. புறநா. கககூ.

கூ - க0. "சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த, நெடுஞ்செட றத்து" (அகநா. கசகூ); "மண்ணுள்வாழ் சிதலைச்சாதி மற்றவை நாள்க, ளெண்ணியாங் கிகந்தபின்னை யிறகுபெய் தெழும்" சூளா யல். ருகசு.

**திணை - வாகை; துறை - அரசவாகை.**

**பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதியை 1 ஐயூர்முடவனார் பாடியது.**

இ - ள்.—நீர்மிகுமாயின், அதனைத்தாங்கும் அரணுமில்லை; நெருப்பு மிகுமாயின், உலகத்து நிலைபெற்ற உயிர்களை நிழல்செய்யும் நிழலுமில்லை; காற்றுமிகுமாயின், அதனைப்பொறுக்கும் வலியுமில்லை; விளக்கமிக்கு அவற்றையொத்த சினம்பொருந்திய போரையுடையவழுதி குளிர்ந்ததமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொதுவென்றுகூறப் பொறானாய்ப் போரையேற்றுத் திறையை வேண்டுவனாயின், கொள்கவென்றுசொல்லி முன்னேகொடுத்த மன்னர் நடுக்கந்தீர்ந்தார்; கொடாமையின், யாவராலும் மிக இரங்கத்தக்கார், அவனது அருளையிழந்த அரசர்; நுண்ணிய பல கறையானால் அரிதாக ழந்தெடுக்கப்பட்ட செம்புற்றினின்றும் புறப்பட்ட ஈயலைப் போல ஒரு பகற்பொழுதின்கண் வாழும் உயிர்வாழ்க்கையின்பொருட்டுச் சுழல்வோர்.— எ - று.

வழுதி, தமிழ்பொதுவெனப்பொறானாய்க் கொண்டிவேண்டுவனாயின், கொடுத்தமன்னர், நடுக்கற்றனர்; கொடாமையின் அவன் அளியிழந்தோர், ஒருபகல் வாழ்க்கைக்கு அலமருவோர்; ஆதலான், அவர் அளியரோ வளியரெனக்கூட்டி வினைமுடிவுசெய்க; அவன் அளியிழந்தோராகிய அலமருவோர் அளியரெனக் கூட்டியுரைப்பினுமமையும்.

அளியரோ அளியரென இரங்கற்குறிப்புத்தோன்ற அடுக்கிநின்றது. (௫௧)

(பி - ம்.)—1 'ஐயூர்கிழார்'

---

(௫௨.) அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்த
1 லூனசை யுள்ளந் துரப்ப விசைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
௫ வடபுல மன்னர் வாட வடல்குறித்
தின்னா வெம்போ ரியறேர் வழுதி
யிதுநீ கண்ணிய தாயி னிருநிலத்
தியார்கொ லளியர் தாமே யூர்தொறு

---

௨. முணங்குநிமிர்தல் - துயிலெழுந்தவுடன் இரண்டு கைகளையும் நிமிர்த்துச் சோம்பைப் போக்குதல்; "பொய்த்ததோர் முணங்கியா னிமிர்ந்து போக்குவாள்" கம்ப. உண்டாட்டு. ௩௫.

க - ௪. புறநா. ௭௮: க - ௪.

௭. "இதுநீ கருதினை யாயி னேற்பவர், முதுநீ ருலகின் முழுவது மில்லை" சிலப். ௨௫: ௧௬௬ - ௭.

(பி - ம்.)—1 'ஊன்மிசையுள்ளந்'

மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
க0 வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெருநல் யாணரி ஞரீஇ யினியே
[1] கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியி
னரைமூ தாளர் நாயிடக் குழிந்த
கரு வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்
கான வாரண மீனுங்
காடாகி விளியு நாடுடை யோரே.

திணையும் துறையும் அவை.

அவனை [2] மருதனிளநாகனார் பாடியது.

இ-ள்.—தெய்வங்களையுடைத்தாகிய நெடிய சிகரங்களையுடைய ப
யின்கண்ணே முழையின்கண் துயிலைவெறுத்து மூரிநிமிர்ந்த புலியாகிய ந
பிய வலியையுடைய ஏற்றை ஊனைவிரும்பிய உள்ளஞ்செலுத்துதலான் .
விரையைக்கருதித் தான்வேண்டியவிடத்தே விரும்பிச்சென்றாற்போல
நாட்டுவேந்தர்வாட அவரைக் கொல்லுதலைக்கருதி இன்னாத வெய்ய
ரைச்செய்யும் இயற்றப்பட்ட தேரினையுடைய வழுதி, நீகருதியது இப்
ராயின், பெரிய உலகத்தின்கண் யாரோ அளிக்கத்தக்கார்தாம்? ஊர்தோ
மீன்சுடுகின்றபுகையினது புலால்நாறும் நெடிய மூங்கு வயலிடத்து ம
னது வளைந்தகோட்டைச் சூழும் பெரிய நல்ல புதுவருவாயினீங்கி இப்
மூது முழவுமுதலாகிய ஒலிபொருந்திய தெய்வங்கள் தூணத்தைக்கைவி

கூ. "கொழுமீன் சுடுபுகை மறுகினுண் மயங்கி" (நற். கக); "தா
கொடியும்" மணி. கூ : கூச.

கஉ. "மரஞ்சேர் மாடத், தெழுதணி கடவுள் போகலிற் புல்லெ
ன்றொழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை", "கடவுள்போகிய கருந்த
கந்தம்" (அகநா. கருஎ, கூ0எ); "கந்துடைப் பொதியில" (பட்டி
உசசு); "அருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமும்", "இலகொளிக க
மும்" (மணி. கூ : கூ0; உச : ககஉ); 'கலி' என்பது ஒலித்தற்றொழிற்ப
யில் வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. கூ. சருஅ.

கச. நாய் -கூதாடுகருவியுளொன்று; "பளிகுநாய் சிவப்பத்தொட்
கம்ப. மிதிலைக்காட்சி. கஎ.

கஙு - கூ. "நரைமூ தாள ரதிர்தலை யிறக்கிக், கவைமனத் திருத்து
வல்லுவனப் பழிய......பொதியில" அகநா. எஎ.

கச - கூ. "உமண ருயங்குவயி றொழித்த, பண்ணழி பழம்பார் வெ
குரு கீனும் தண்ணந் துறைவன்" நற். கஙு அ.

கரு - எ. "கானங் கோழிக் கவர்குரற் சேவல், லொண்பொறி யெருத்தி
றண்சித ருறைப்ப" (குறுந். உசஉ); கோழியை வாரணமென்றல் மரபெ
தற்கு மேற்கோள்; தொல். மரபு. கூ. கூஅ - பேர்.

(பி ...)—1 'கலிகெழு முதூர்க்கந்து' 2 'மருதினிளநாகனார்'

பரிசு பலி இட்டத்தின்மாறிய பாழ்பட்ட அம்பலத்தின்கண் முற்காலத்து நரையையுடைய முதியோர் சூதாடுங்கருவியை இடுதலாற்குழிந்த அச்சூது கருவியினது நல்லமனையாகிய இடம்நிறையப் பலபொறியையுடைய காட்டுக் கோழி முட்டையிடும் காடாய்க்கெடும் நாடுடையோர்.—எ - று.

கலி - புகழும் அரவமுமாம்.

வழுதி, அடல்குறித்து நீகருதியது இதுவாயின், விளியுநாடுடையோர் தாம் யார்கொல அளியரெனக்கூட்டுக. (௫௨)

---

(௫௩.) முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்
விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற
௫ களங்கொள் யானைக் கடுமான் பொறைய
விரிப்பி னகலுந் தொகுப்பி னெஞ்சு
மம்மா நெஞ்சத் [1] தெம்மனோர்க் கொருதலை
கைம்முற் றலநின் புகழே யென்று
மொளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து
௧௦ வாழே மென்றலு மரிதே தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபில
னின்றுள னாயி னன்றுமன் னென்றநின்
னாடுகொள் வரிசைக் [2] கொப்பப்
௧௫ பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே.

---

௧. "விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்" மதுரை. க௱௫.

௪. விளங்கில் - ஒருநகரம்; "மாவண் கடலன் விளங்கி லன்னவெம், மையெழி லுண்கண்" அகநா. ஆக.

௫. 'களங்கொள்பொறைய' என்றது போர்க்களம் வென்ற வேந்தர்க் குரித்தாதலான்; புறநா. ௬௨ : ௧௨; "பொருதுவாட டானை யிரிய வுறைகழித்துப், போர்துவாண் மினும் பொருசமத்து - வேந்த, ரிருங்களிறு யானை யினமிரிந் தோடக, கருங்கழலான் கொண்டான் களம்" (பு - வெ. அ: ௨௬); "தேன் மிடைந்த தாரினான் செங்களஞ் சிறந்ததே" சீவக. ௨௭௩ - உரை.

௧௨. வெறுப்பென்னும் உரிச்சொல் செறிவென்னும்பொருளில் வந்ததற்கும் (தொல். உரி. சூ. ௫௧ - சே ; ஷை ஷை சூ. ௪௬ - ந; இ - வி. சூ. ௨அக - உரை), 'வெறுப்பு' புறப்பொருட்கணவந்ததற்கும் (தொல். பொருளியல், சூ. ௫௩ - ந) மேற்கோள்.

கக - ௨. "மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவி, னுவலை கூராக் கவலையி னெஞ்சி, னனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" பதிற். அ௫: ௧௦-௧௩.

௧௩ - ௫. பழிகரப்பங்கதத்திற்கு மேற்கோள் ; தொல். செய். சூ. ௧௨௬ - பேர்.

(பி - ம்.)—1 'எமக்கோவொருதிலை' 2 'ஏற்பப்'

**திணையும் துறையும் அவை.**

**சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறையைப் பொருந்திலிளங்கீரனர் பாடியது.**

இ - ள்.—முற்றிநீண்டசிப்பிக்கண் முத்துப்போலும் வெளிய ஒழுங்குபட்ட மணற்கண்ணே ஒளிவிடுகின்ற மணிகளாற் கண்ணைப்பொருகின்ற மாடத்திடத்து விளங்கிய வளையையுடையமகளிர் வேதிகைக்கண்ணே விளையாடும் விளங்கிய சீர்மையையுடைய விளங்கிற்குப் பகைவரான் வந்த இடும்பையைத்தீர்த்த, போர்க்களத்தைத் தனதாக்கிக்கொண்ட, யானையையும் விரைந்த குதிரையையுமுடைய பொறைய, விரித்துச்சொல்லிற் பரக்கும்; தொகுத்துச்சொல்லிற் பொருளொழிவுபடும்; ஆதலான், மயக்கம்பொருந்திய நெஞ்சையுடைய எங்களுக்கு ஒருதலையாகமுடியா, நினதுபுகழ், எந்நாளும்; கல்வியால்விளக்கமுடையோர்பிறந்த இப்பெரிய இடத்தையுடைய உலகத்தின்கண்ணே வாழேமென்றிருத்தலும் கூடாது; விரைய, பல பொருளையும் அடக்கிய செய்யுளைச்செய்யும் செவ்விய நாவினையும் மிக்ககேள்வியையும் விளங்கியபுகழையுமுடைய கபிலன் இன்று உளனாகப்பெறின், நன்று; அது பெற்றிலேனென்றுசொல்லிய நினது வென்றிகொண்ட சிறப்பிற்குப் பொருந்தப் பாடுவேன், நீ பகைவரைவென்றவெற்றியை.—எ - று.

மாடத்துமகளிர் மணலிடத்துத் தெற்றிக்கண் ஆடும் விளங்கிலென்க.

தெற்றியென்பதனைக் கைகோத்தாடும் குரவையென்பாருமுளர்.

பொறைய, கபிலன் இன்றுளனாயின், நன்றுமன்னென்ற நின் ஆடுகொள் வரிசைக்கொப்பப் பகைவரைக்கடப்பை யான் தாழாதுபாடுவேன்; நின் புகழ் விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்; ஆதலான், எமக்குக் கைம்முற்றல; ஒளியோர்பிறந்த இம்மலர்தலையுலகத்து வாழேமென்றலும் அரிதென மாறிக்கூட்டுக.

தாழாதுசெய்யுட்செய் செந்நாவென இயைப்பினுமமையும்.

'ஒளியோர்' என்றது, கபிலன்முதலாயினோரை.

வாழேமென்றலும் அரிதென்றகருத்து, பாடாதிருத்தலும் அரிதென்றதாக்கி, யாமும் வல்லபடி பாடிப்போதுவேமென்றதாகக் கொள்க.

நன்றுமன்னென்பது, கழிவின்கண் வந்தது.

பாடுவன்மன்னாலென்றவழி, மன்னும் ஆலும் அசைநிலை.

பாடுவன்மன்னென்பதனை அல்லீற்றுத்தனித்தன்மைவினையாக்கி, நின்வரிசைக்கொப்ப, நின்பகைவரைக்கடப்பைப் பாடுவேன்; அதனால், விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்; மம்மர்நெஞ்சத்து எமக்கு நின்புகழ் கைம்முற்றலவென அவன்புகழைமேம்படுத்துக்கூறியவாறாகவுரைப்பினுமமையும். இப்பொருட்குப் பாடுவன்மன்னென்றதனை ஒழியிசையாகக்கொள்க.

'சிறந்தசெய்யுள்' என்றும் 'செய்யுட்செய்தசெந்நா' என்றும்பாடம். (௫௩)

(௫௪.) எங்கோ னிருந்த கம்பலை மூதூ
ருடையோர் போல விடையின்று குறுகிச்
செம்ம ளுளைவ யஞ்ஞர்து [1] புகுத
லெம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
௫ யிரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வான நாண வரையாது சென்றோர்க்
கானு தீயுங் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
க௦ பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி
[2] மாசு ணுடுக்கை மடிவா யிடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.*

திணையும் துறையும் அவை.

சேரமான் குட்டுவன் கோதையைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரன் பாடியது.

இ - ள்.—எம்முடைய இறைவனிருந்த ஒசையையுடைய பழைய ஊரிடத்து அதனையுடையவர்களைப்போலக் காலம்பாராதே அணுகித் தலைமையை

---

க. "கம்பலை என்னும் உரிச்சொல் அரவமாகிய இசைப்பொருண்மை யுணர்த்தும்" தொல். உரி. ௫. ௫௩ - சே.

உ. இடை - சமயம் ; "தனரிடை யறியுந் தன்மையள்" (மணி. ௪ : ௬௮); "நம்பன் சிறிதே யிடைதந்திது கேட்க" சீவக. கக௭௫.

க - உ. "நசையுநர்த் தடையா நன்பெரு வாயி, லிசையேன புக்கு" (பொருந. ௬௬ - எ); "பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்தணர்க் காயினுங், கடவுண் மாலவரை கண்விடுத் தன்ன, வடையா வாயிலவ னருங்கடை குறுகி" (சிறுபாண். உ0௩ - ௬); "நும்மில் போல நில்லாது புக்கு", "அருங்கடி வாயி லயிராது புகுமின்" (மலைபடு. க௬௫, ௪௬க); "நசையுநர்க் கடையா நன்பெரு வாயில்" (கூர்ம. சூரியன்மரபு. க௩) ; "தடைஇய வாயி றடையாது நுழைந்து" தணிகையாறு. உ௩க.

௩. புறநா. உ௪ : ௫.

எ. கவிகை - கொடுத்தற்குக் கவிந்த கை ; "கலம்பெயக் கவிந்த கழறொடித் தடக்கை" அகநா. உ௩௩.

௯. நெடுமொழி : புறநா. உ௫ : ௫ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கக. "இடையன் மடிவிடு வீளை" அகநா. உ௪௪.

* மு. கருத்து : புறநா. ௩௬0 : ௪ - ௫.

(பி - ம்.—) 1 'புகுதற்கெம்மன' 2 'மாசுணுடுக்கை'

புடைய காளோலக்கத்தின்கண்ணே தலையெடுத்துச் செம்மாந்து சென்று புகுதல் எம்மைப் போலும் வாழ்க்கையையுடைய இரப்போருக்கு எளிது; இங்ஙனம் இரப்போர்க்கு எளிதாவதல்லது, பாதுகாத்தலை ஏற்றுக்கொண்டு மழைநாணும்படி எப்பொருளையும் வரையாது தன்பாற்சென்றவர்கட்கு இடக்கவிந்த கையால் அமையாதுகொடுக்கும் வண்மையையுடைய கடுமான்கோதையது வலியோடுமாறுபட்டெழுந்திருந்த வஞ்சினங்கூறியவேந்தர் கருதுங்காலத்து, பசிய இலையால் தொடுக்கப்பட்ட தழைக்கண்ணியையும் மாசுண்ட உடையையும் மடித்தவாயையுமுடைய இடையர் சிறிய தலையையுடைய ஆட்டினத்தினோடுகூட அணுகல்செல்லாத புலிதங்கும் அகன்ற நிலத்தையொக்கும், வலிதங்கிய பெரியகையையுடையவனுடைய நாடு.—எ - று.

எங்கோனிருந்தமூதூர்ப்புகுதல், இரவலர்க்கெளிது; அவனுடைய நாடு, மன்னர்நினைக்குங்காலை, இடையன சிறுதலையாயமொடு குறுகல்செல்லாப் புலிதுஞ்சுவியன்புலத்தற்றெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மன்னர்க்கு இடையனும், அவர்படைக்குச் சிறுதலையாயமும், கோதை நாட்டிற்குப் புலிதுஞ்சுவியன்புலமும் உவமையாகக்கொள்க.

உவலைக்கண்ணியென்றதனைப் பெயராகக்கொள்க.

புலியுடைவியன்புலமென்பதூஉம் பாடம். (௫௪)

---

(௫௫.) ஓங்குமலைப் பெருவிற் பாம்பு [1] ஞாண் கொளீஇ
யொருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
௫ பிறைநுதல் விளங்கு மொருகண் போல

---

௧. நேர்புநிரை ஆசிரியத்துள் வந்ததற்கும் (தொல். செய். சூ. ௧௪ - பேர்; ந), தனிநிலைவகையான் வந்து கட்டளையாய இன்னோசைபெற்றதற்கும் (ஷை ஷை சூ. ௫௰ - ந) மேற்கோள்.

௩. தருசொல் படர்க்கைக்கண்வந்ததற்கு மேற்கோள்; தொல். எச்சவி. சூ. ௨௯ - சே; ந; இ - வி. சூ. ௩௦௧ - உரை.

௧ - ௪. "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக, வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின், மடங்கல் போற் சினைஇ மாயஞ்செயவுணரைக், கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு, முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலின்" (கலி. ௨); "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப" சிலப். ௬: ௪௦ - ௪௧.

௪ - ௫. புறநா. ௧: ௯ - ஆம் அடிக்குறிப்பையும், ௯௧: ௫ - ௬ - ஆம் அடிகளையும், "பிறைநுதல் விளங்கும்", "தேயபொடி வெள்ளை பூசி யதன்மேலோர் திங்க டிலகம் பதித்த நுதலர்" (தே) என்பவற்றையும் நோக்குக.

(பி - ம்.)—1 'நாண்'

வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவு
நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மறவரு,[1]மென
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
௧0 வறநெறி முதற்றே யரசின் கொற்ற
மதனால், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
கரு வானத் தன்ன வண்மையு மூன்று
[2] முடைமை யாகி யில்லோர் கையற
[3] நீநீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்

---

எ. புறநா. கச: முதலாம்அடிக்குறிப்பைப்பார்க்க; பதினெட்டெழுத தான் வந்த ஆசிரிய அடிக்குமேற்கோள்; தொல். செய். சூ. சகூ - இளம்.

அ. பத்தொன்பதெழுத்தான் வந்த ஆசிரியஅடிக்குமேற்கோள்; தொல். செய். சூ. சகூ - இளம்.

எ - கூ. திணைவிராயெண்ணப்பட்ட பெயர் செய்யுளாகத்து அஃறிணைச் சொற்கொண்டு முடியுமென்பதற்கு மேற்கோள்; தொல். சொல். சூ. ருக - சே; ந; இ - வி. சூ. உகூஅ - உரை.

கூ - க0. "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடைய தரசு", "வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூஉங் கோடா தெனின்" (கூஅச, ருசகூ) என்னுந் திருக்குறள்களின் விசேடவுரையில், 'மாண்ட, அறிநெறி முதற்றே யரசின் கொற்றம்' எனனும் இப்பகுதியை மேற்கோளாக எடுத்துக் காட்டினர் பரிமேலழகர்; "உருளு நேமியு மொண் கவ ரெஃகமு, மருளில வாணியும் வல்லவர் மூவர்க்கும், தெருளு நல்லற மும் மனச் செம்மையு, மருளுநீத்தபி னுவதுண் டாகுமோ" (கம்ப. மந்தரை. கக); "அறத்தினு லன்றி யமரர்க்கு மருஞ்சமங் கடத்தல், மறத்தி னுலரி தென்பது மனத்திடை வலித்தி" பெடி முதற்போர். உஉரு.

கஉ - ரு. "நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள, நின், றண்மையுஞ் சாயலுந் திங்களுள, நின், சுரத்தலும் வண்மையு மாரியுள" பரி. ச: உரு-எ.

கஉ - கூ. புறநா. ருகூ: ங - எ; "ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள் சீக்குஞ் சுடரேபோல, வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையு, நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக், காண்டகு மதியென னக் கதிர்விடு தண்மையு, மாண்டநின் னொழுக்கத்தால" கலி. க00.

(பி-ம்.)—1 'எனும்' 2 உடையாயாதலினில்லோர்' 3 'நீடுவையொழிய'

வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்
௨௦ கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிளநாகனார் பாடியது.

இ - ள்.—உயர்ந்தமலையாகிய பெரியவில்லைப் பாம்பாகிய நாணைக் கொளுத்தி ஒப்பில்லாததோரம்பைவாங்கி மூன்றுமதிலையுமெய்து பெரிய வலியையுடைய தேவர்கட்கு வெற்றியைக்கொடுத்த கரியநிறஞ்சேர்ந்ததிருமிடற்றையுடைய இறைவனது அழகிய திருமுடிப்பக்கத்து அணிந்த பிறை சேர்ந்த திருநெற்றிக்கண்ணே விளங்கும் ஒரு திருநயனம்போல மூவேந்தருள்ளும் மேம்பட்ட பூந்தாரையுடையமாற, கடிய சினத்தையுடையவாகிய கொலைகளிறும் விரைந்த செலவையுடையவாகிய மனஞ்செருக்கிய குதிரையும் நெடிய கொடியையுடையவாகிய உயர்ந்ததேரும் நெஞ்சுவலியையுடைய போரைவிரும்பும் மறவருமென நான்குபடையுங் கூட மாட்சிமைப்பட்டதாயினும் மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாகவுடைத்து, வேந்தரது வெற்றி ; அதனால், இவர் நம்முடையரென அவர்செய்தகொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல்வளையாது, இவர் நமக்கு அயலாரென்று அவர்நற்குணங்களைக்கெடாது, ஞாயிற்றைப்போன்ற வெய்யதிறலையுடைய வீரமும், திங்களைப்போன்ற குளிர்ந்த பெரியமென்மையும், மழையைப்போன்றவண்மையுமென்ற மூன்றையுமுடையையாகி இல்லாதோர் இல்லையாக நீ நெடுங்காலம் வாழ்வாயாக, நெடுந்தகாய், தாழ்ந்த நீரையுடைய கடலினது வெளிய தலையையுடைய திரையலைக்கும் செந்திலிடத்து நெடிய முருகவேள் நிலைபெற்ற அழகிய அகன்ற துறைக்கண் பெருங்காற்றுத் திரட்டுதலால் குவிந்த வடுவழுந்திய எக்கர்மணலினும் பலகாலம்.—எ - று.

'குணங்கொல்லாது' என்பதற்கு முறைமையழிய நீ வேண்டியவாறு செய்யாதெனினுமாம்.

பூந்தார்மாற, நெடுந்தகாய், நான்குடன்மாண்டதாயினும், அரசின் கொற்றம்அறநெறிமுதற்று ; அதனால், கோல்கோடாது, குணங்கொல்லாது, ஆண்மையும் சாயலும் வண்மையும் உடையையாகி இல்லோர்கையற நீ மணலினும் பலகாலம் நீடுவாழியவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க. (௫௫)

---

௧௮ - ௯. "திருமணி விளக்கி னலைவாய்ச், செருமிகு சேஎய்" (அகநா. ௨௬௬); "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே" (முருகு: ௧௨௫); "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும், ஏரகமு நீங்கா இறைவன்" (சிலப்: ௨௪); "கஞ்செந்தின்மேய வள்ளிமணாளற்குத் தாதைகண்டாய்" (தே); "முருகன் றீம்புன லலைவாய" தொல். களவு. சூ. ௨௩ - ந; "...பையுண்மாலை."

௨௧. மு. மலைபடு. ௫௫௬.

௧௮ - ௨௧. புறநா. ௯ : ௮ - ௧௧ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

(௫௬.) ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்
௫ [1] மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்
மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென
ஞாலங் காக்குங் கால முன்பிற்
௧௦ றோலா நல்லிசை நால்வ ருள்ளுங்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்

---

௧. பதினெழுத்தான் வந்த ஆசிரியவடிக்கு மேற்கோள்; தொல். செய். [illegible]. ௪௬ - இளம்.

௨. "சீறருங் கணிச்சியோன்" (கலி. ௨); "மழுவா ணெடியோன் றலைவனாக" மதுரை. ௪௫௫.

௧ - ௨. "வெள்ளேறு, வலவயி னுயரிய...மூவெயின் முருக்கிய முரண் மிகு செல்வனும்" முருகு. ௧௫௧ - ௪.

௪. 'கொடி' என்னுஞ்சொல் 'பனை' என்னுஞ் சொல்லுக்கு முன் வரின் ஐகாரம் கெடாது நிற்றற்குப் 'பனைக்கொடி' என்பது மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. சூ. ௮௬ - இளம்; ந.

௫. மு. சிலப். ௨௨ : ௬௭.

௭. "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, வொடியா விழவி னெடியோன்" (அகநா. ௧௪௯ : ௧௫-௬); "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ" முருகு. ௧௨௨. தக்க. 2ந - உரை

௭ - ௮. "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப், பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ" பரி. ௧௭ : ௪௮ - ௯.

௧ - ௧௦. "முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா, பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழுகின்னா, சக்கரத் தானை மறப்பின்னா தாங்கின்னா, சத்தியான் றாடொழா தார்க்கு" (இன்னா. ௧); "கண்மூன் றுடையான்றாள் சேர்தல் கடிதினிதே, தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழ லினிதே" (இனியது. ௧); "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு, மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும், வால்வளை மேனி வாலியோன் கோயிலு, நீலமேனி நெடியோன் கோயிலும்", "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலு, முவணச் சேவ லுயர்த்தோ னியமமு, மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப். ௫ : ௧௬௯ - ௭௨; ௧௪ : ௭ - ௧௦); "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலா" மணி. ௧ : ௫௪.

௧௧. புறநா. ௩ : ௧௨; ௪௨ : ௨௨; "மாற்றருஞ் சீற்றத்துக் கூற்று வனே" கனநூல். ௧௫.

(பி - ம்.) — 1 'மண்ணிய'

வலியொத் தீயே வாலி யோனைப்
புகழொத் தீயே யிகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலி
கரு னாங்காங் கவரவ ரொத்தலின் யாங்கு
மரியவு முளவோ நினக்கே யதனா
லிரவலர்க் கருங்கல மருகா தீயா
யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளு
உ௦ மொண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி யோங்குவாண் மாற
வங்கண் விசும்பி னாரிரு ளகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவுங் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவு
உரு நின்று நிலைஇய ருலகமோ டுடனே.*

திணை - அது; துறை - பூவைநிலை.

அவனை [1]மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது.

இ - ள்.—ஆனேற்றை வெற்றியாகவுயர்த்த அழலபோலும் விளங்கிய சடையினையும் விலக்குதற்கரிய மழுப்படையையுமுடைய நீலமணிபோலும் திருமிடற்றையுடையோனும், கடற்கண்ணே வளரும் புரிந்த சங்கையொக்கும் திருநிறத்தையுடைய கொலையைவிரும்பும் கலப்பையையும் பனைக்கொடியையுமுடையோனும், கழுவப்பட்ட அழகிய நீலமணிபோலும் திருமேனியையும் வானுறவோங்கிய கருடக்கொடியையுமுடைய வென்றியை விரும்புவோனும், நீலமணிபோலும் நிறத்தையுடைய மயிற்கொடியையெடுத்த மாறாத வெற்றியையுடைய † அம்மயிலாகிய ஊர்தியையுடைய ஒள்ளியசெய்யோனுமென்று சொல்லப்பட்ட உலகங்காக்கும் முடிவுகாலத்தைச் செய்யும் வலியி

கஉ. 'வாலவளை மேனி வாலியோன்' என்பதற்கு மேற்கோள்; சிலப். ரு: கஎக - அடியார்.

கரு. புறநா. ருஎ: உ - "உரைசால சிறப்பி னெடியோன்" சிலப். உஉ: சு௦.

கஅ - உக. புறநா. உச : ரு க-ரு ஆம் அடிகளின்குறிப்பைப் பார்க்க.

* மு. பூவைநிலையாவது ஒன்றனையொன்றுபோற்கூறுந்துறை; அஃது ஓரரசனுககுத்திருமாலையும் ஏனைத்தேவர்களையும் உவமைகூறுதலென்றுரைத்து இச்செய்யுளைமேற்கோள்காட்டினர்; தொல். புறத்திணை. ரு. ரு; இ - வி. ரு. சுகஎ - உரை.

† "பிணிமுக மேற்கொண் டவுணர் பீடழியும் வண்ண, மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே" (சிலப். உச); "பிணிமுக மஞ்ஞை செருமுகத், தேர்ந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" கல்லா. எ.

(பி - ம்.)—1 'அவர் பாடியது'

கo வென்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
வோங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
கரு வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
விரப்போர்க் கீயா வின்மையா னுறவே.*

திணையும் துறையும் அவை.

பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன் பாட்டு.

இ - ள்.—நம்மாற் சிரிக்கத் தக்கார் இவன் ஆளுநாட்டை மிகுத்துச் சொல்லுவரெனவும் இவன்றான் இளையனெனவும் யானை வெறுப்பச்சொல்லி ஒலிக்குமணி இருமருங்கு ஒன்றோடொன்று மாறியிசைக்கும் பரந்த அடியினையும் பெரிய காலினையுமுடைய உயர்ந்த நல்லயானையினையும் தேரையும் குதிரையையும் படைக்கலத்தொழிலமைந்த வீரரையும் உடையேம் யா

கஉ. "வன்பழி தூற்றுங் குடியதே மாமதுரை", "குடிபழி தூற்றுங் கோலனு மல்லன்" சிலப். ககூ: உஅ; உ௩: ௩ச.

கக - உ. 'பெயர்' என்பதற்கு 'வஞ்சினம்' எனப்பொருள் கூறி, 'கொடியனெம்.........கோலேனாகுக' என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, 'கூறும் வஞ்சினத்தால் தனக்கு ஒருபெயர் பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்' என விசேடவுரையும் எழுதினர்; பட்டின. உஅகூ - ந.

கஅ. "சாதலி னின்னாத தில்லை யினிததூஉ, மீத லியையாக் கடை" (குறள், உ௩o) என்பதும் இவ்வடியின் பொருளை வலியுறுத்துகின்றது.

கஎ - அ. "கலிமா னோயே கலிமா னோயே, நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக், காய்சின யானைக் கலிமா னோயே, வெள்ளத் தானைமுன்...... ......முன், னுள் ளழித்துப் புகேஎ னாயி னுள்ள, திரப்போ ரின்மை யுண்டுக, கரப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர்யாத்திரை.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், இன்னாது பிழைப்பின் இதுவாகிய ரெனத்துன்னருஞ்சிறப்பின் வஞ்சினங்கூறியதற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. ககூ - இளம்; ஷ ஷ ஷ உச - ந); "மன்னர் நுங்கள்புறக்கொடை கண்டு.........கலப்ப லன்றே, னெரி சுடர் வழங்கும் வையத் தென்பெயர் கெடுகவென்றான்" (சீவக. எ௩) என்பதன் விசேடவுரையில, "இது சீவகன் வஞ்சினம். இது, முன் இளமை முதலியவற்றை அவ்வரசர்கொன்று கூறுதலின் அககொலை பொருளாகப்பிறந்த வெகுளியென்னும் மெய்ப்பாடு. இது, 'நகுதக்கனரே' என்னும் புறப்பாட்டினுட் கண்டு கொள்க" என்று எழுதியிருக்கின்றனர் நச்சினார்க்கினியர்.

மென்று எனது மிக்க வலிக்கு அஞ்சாதே மாறுபடுஞ் சினம் பெருகிப் புல்லிய வார்த்தைகளைக் கூறிய சினம்பொருந்திய அரசரைப் பொறுத்தற்கரிய போரின்கண்ணே சிதறப்பொருது முரசத்தோடுகூட அவரைக் கைக்கொண்டிலேனாயின், பொருந்திய எனது குடைநிழற்கண் வாழ்வார், தாங்கள் சென்றடையுநிழற்காணாதே கொடியன் எம்முடைய வேந்தனென்று கருதிக் கண்ணீரைப் பரப்பிக் குடிமக்கள் பழிதூற்றும் கொடுங்கோலையுடையேனாகுக; உயர்ந்த தலைமையுடனே மேம்பட்ட கேள்வியையுடைய மாங்குடிமருதன் முதல்வனாக உலகத்தோடு நிலைபெற்ற பலரும்புகழும் தலைமையையுடைய புலவர் பாடாது நீங்குக, எனது நிலவெல்லையை; என்னாற் புரக்கப்படுங் கேளிர்துயரம்மிக இரக்குமவர்கட்குக் கொடாதவறுமையை யானுற.—எ - று.

என்னிழல வாழ்நராகிய குடியென்க.

உளையக்கூறியதனைத் தம்மிடத்திருந்து கூறியதாகவும், சிறுசொற்சொல்லியதனைப் போர்க்களத்து எதிர்ப்பட்டுக் கூறியதாகவுங் கொள்க.

இவனென்றூர், தம் கருத்துககண அணுமையான்.

அகப்படேனாயினென்றது, ஈண்டுப்பிறவினைமேல் நின்றது.

வேந்தரைத் தாகஙி அகப்படேனாயின், கோலேனாகுக; இன்மை யானுற; என் நிலவரை புலவர்பாடாது வரைகவென மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்' என்பதனை, நாட்டாரால மீக்கூறப்பட்ட மந்திரிச்சுற்றமுதலாயினர் நகுதக்கனரெனப் பிரித்துரைப்பினுமமையும்.

'நிலவரைப் புரப்போர்' எனவும் பாடம். (எ௨)

---

(எ௩.) மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் [1] தரசோ தஞ்ச
மின்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்

---

௩. புறநா. ௭௫: ௪௨; "முரசுகெழு தாயத தரசோ தஞ்சமெனத் தஞ்சக்கிளவி அரசுகொடுத்தலெளிதென்ற எண்மைப்பொருளுணர்த்தியவாறு கண்டுகொள்க" தொல். இடை. சூ. ௧அ - பேர்; சே; ந; இ - வி. சூ. உ௭௧ - உரை.

௧ - ௪. இவ்வடியிலுள்ள மொழிகளால், சோழன் நலங்கிள்ளியது மேம்பாடும் வீரமும் வண்மையும் விளங்குகின்றன; புறநா. ௭௦: ௫ - ௯ ஆம் அடிக்குறிப்பும், "தனதுமேம் பாடுரைத்தனெடுமொழி", "தன்னுடையாற்ற லுணரா ரிடையினும, தன்னை மறுதலை பழித்த காலையும, தன்னைப் புகழ்தலுந் தகும்", "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே", "கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே" என்பவைகளும் இங்கே அறியற்பாலன.

(பி - ம்.)—1 'அரசே'

௫ தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
வுய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
௧௦ வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
[1] வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளி
ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே *

திணையும் துறையும் அவை.

சோழன் [2] நலங்கிள்ளிபாட்டு.

இ - ள்.—மெல்லவந்து எனது நல்ல அடியையடைந்து எமக்கு ஈய வேண்டுமென்று தாழ்ந்திரப்பாராயின், அவர்க்குச் சீர்மையையுடைய முரசு பொருந்திய பழையதாய்வருகின்ற உரிமையையுடைய எனது அரசாட்சி கொடுத்தலோ எளியது; இனிய உயிரேயாயினும் கொடுப்பேன், இந்நிலத்தின்கண்; அமைச்சர் படைத்தலைவர்முதலாகிய வலியையுடையோரது வலியைப் பாதுகாவாது என்னுள்ளத்தையிகழ்ந்த அறிவில்லாதோன் யாவர்க்கும் விளங்கத் துயில்கின்ற புலியை இடறின குருடன்போலப் பிழைத்துப்போதலோ அரிது; மூங்கிலைத்தின்னும் வலியையுடைய யானையினது காலின்கணகப்பட்ட வலிய திணியமூங்கிலது நீண்ட முளையையொப்ப மேற்சென்று அவ்விடத்து வருந்தும்படி பொருதிலேனாயின், கூடிய தீதில்லாத நெஞ்சத்தாற் காதல்கொள்ளாத பலவகைப்பட்ட கரியகூந்தலையுடைய பொதுப் பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடை என்மாலை துவள்வதாக.—எ - று.

---

௭. இந்த அடியும், "எழுப்புபவோ, துஞ்சு புலியைத் துயில்" (பழ. ௯௩) என்பதும் ஒருபொருளன.

௯ - ௧௧. புறநா. ௮௦: ௭; "வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத், தன், கான்முளைமூங்கிற் கவர்கிளைபோல, வுய்தல் யாவதுநின் னுடற்றி யோரே" பதிற். ௮௪: ௧௧ - ௩.

௧௨ - ௪. "அன்பின் விழையார் பொருள் விழையு மாய்தொடியார், இன்சொ லிழுக்குத் தரும்" (குறள். ௯௧௧); ஒல்லாமுயக்கு: "வேளாமுயக்கம்" (கலி. ௯௮); குழைகதார்: "செழுந்தார் குழையச் சேர்ந்தார்" (சீவக. ௨௦௩௪); காமம்பற்றியும் பெருமிதம் பிறக்குமெனபதற்கு, "பல்லிருங்கூந்தல......தாரே" என்பது மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. ௯ - பேர்.

* மு. காஞ்சித்திணையுள் இன்னதுபிழைப்பினிதுவாகியரெனத் துன்னருஞ் சிறப்பின்வஞ்சினங்கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௨௪ - ந.

(பி - ம்.)—1 'வருந்த வொற்றேனாயிற்' 2 'நல்லுருத்திரன்'

'இரக்குவிராயின்' என்று பாடமோதுவாருமுளர்.

நீதில்காதல்கொள்ளாவென இயைப்பினுமமையும்.

உள்ளமென்றது, உள்ளத்தாற் சூழும் சூழ்ச்சியை.

தன்மேம்பாடு கூறுகின்ற இடமாதலின், நல்லடியென்பது தற்புகழ்ச்சியென்னுங் குற்றமாகாது. (௭௩)

---

(௭௪.) குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
[1] மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
௫ மதுகை யின்றி [2] வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
[3] யீன்ம ரோவில் வுலகத் தானே.*

---

௧-௨. அரசர்களில், போர்க்களத்து வீழ்ந்தோரே துறக்கம் பெறுவர்; அங்ஙனமின்றி நோயால் இறந்தோருடம்பைத் தருப்பையிற்கிடத்தி வாளாற் போழ்ந்து, 'போரில்மாண்டோரடையும் கதியை இவர் அடைக' எனக்கூறுவேண்டி அவ்வுடம்பை அடக்குதல் விதியென்பது ஆண்டறியற்பாலது; இதனை, "திணிபிணிமுரசம்" (புறநா. ௯௩); "தருப்பையிற் கிடத்தி...... வாளுத்தகவுடைத்து" (மணி. ௨௩ : ௧௩ - ௯); "மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தோரே துறக்கம்பெறுவர்" (தொல். அகத்திணை, சூ. ௪௪ - ந) என்பவற்றாலுமறிக.

௬-௭. "மான வருங்கால் நீக்கி யிடவென்று, மீனவிளிவினால் வாழ வேண்டினதா, லூடிய கண்ணு முறுதிசேரா திவ்வுடம்பு, நீட்டித்து நிற்கு மெனின்" (நாலடி. ௪௦); "மறனிழுக்கா மானமுடைய தரசு", "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து," "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்", "இளிவரின் வாழாத மான முடையார், ஒளிதொழு தேத்து முலகு", (குறள், ௩௮௪, ௯௬௮, ௯௬௯, ௯௭௦); "மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியவை. ௧௪) என்பவை இச்செய்யுளின் பொருளை விளக்குகின்றன; "தொடர்ப்படு.... உலகத்தானே: இது தன்மாட்டு வருத்தத்தான் இழிப்புப்பிறந்தது" தொல்.மெய்ப்பாடு. சூ. ௯ - இளம்.

* மு. காஞ்சித்திணையுள், தாமேயேங்கிய தாங்கரும்பையுள் என்னுந் துறைக்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்) ; "தாமேயேங்கிய வென்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித்திருந்த தென்றுகூறி 'குழவி...உலகத்தானே' என்னும் புறப்பாட்டைக் காட்டுவாருமுளர்" ஷை ஷை ௨௪-ந.

(பி - ம்.)—1 'மானவினையின்றெனவாளில' 2 'வயிற்றலந்தித்' 3 'உண்பரோ'

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி.

சேரமான்கணைக்காலிரும்பொறை சோழன்செங்கணானோடு [1]திருப் போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர் தாவென்று பெறாது பெயர்த்துப்பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சியபாட்டு.

இ - ள்.—பிள்ளை இறந்துபிறப்பினும் தசைத்தடியாகிய மகவு பிறப் பினும் அவற்றையும் ஆளல்லவென்று கருதாது வாளோக்குத்தில் [2]தவறார் அர சராயிருக்க, பகைவர்வாளாற்படாது, சங்கிலியாற்பிணிக்கப்பட்டநாய்போலப் பிணித்துத் துன்பத்தைச்செய்து இருத்திய கேளல்லாதகேளிருடைய உபகா ரத்தான் வந்த தண்ணீரை இரந்துண்ணக்கடவேமல்லேமென்னும் மனவலி யின்றி வயிற்றின்கட் டீயை யாற்றவேண்டித் தாமேயிரந்துண்ணும் அளவினை யுடையாரை அவ்வரசர்பெறுவார்களோ இவ்வுலகத்தின்கண்.—எ - று.

அளவையுடையாரை அளவையென்றார்.

இதன்கருத்து: சாக்குழவியும் ஊன்பிண்டமுமென இவற்றின்மாத் திரையும் பெற்றிலேமெனப் பிறர்மேல வைத்துக்கூறியவாறு.

கேளலகேளிரென்றது, சிறைக்கோட்டங்காவலரை.

அன்றி, இவனாண்மையுடையனல்லனென்று வாளாற்கொல்லாராய்த் தொடர்ப்படுஞமலிபோல இடர்ப்படுத்திருத்திய கேளலகேளிர் வேளாண் சிறுபதத்தை மதுகையின்றி வயிற்றுத்தீத்தணிக்கவேண்டித் தாம் இரந் துண்ணுமளவாகக் குழவிசெத்துப் பிறப்பினும் ஊன்தடிபிறப்பினும் இவ் வுலகத்து மகப்பெறுவாருளரோவென உரைப்பினுமமையும்.

அரசர்க்கு மானத்தின்மிக்க அறனும் பொருளும் இன்பமுமில்லை யென்றுகூறினமையின், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (எச)

(பி - ம்.)—[1] 'செங்கணானோடு போர்ப்' [2] 'தவிரார்'

---

(எரு.) [1] மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறற் றாய
மெய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
ரு சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே
மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகுவ [2] னாயி னாழ்நீ

---

க. "எனக்குத்தந்தை யாகியா னென்னையிக் கிட்டுத, தனக்குத்தாய் நாடி யே சென்றாள்" நாலடி. கரு.

உ - ரு. "உருகெழு தாய மூழி னெய்தி" பட்டின. உஉஎ.

ச - ரு. "வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங், கோலொடு நின்றா னிரவு" குறள். ருருஉ.

(பி - ம்.)—[1] 'மூத்தோர்க்கூற்றமுய்த்தெனவுய்த்தென' [2] 'ஆயிற்கழுநீர்'

ரறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
யென்றூழ் வாடுவறல் போல நன்று
௧௦ நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே.

திணை - அது; துறை - [1] பொருண்மொழிக்காஞ்சி.

சோழன் நலங்கிள்ளி பாட்டு.

இ - ள்.—தங்குடியின் முதியோரை முதியோரைக் கூறம் கொண்டு போயிற்றாக, விதிதரப்பட்டுத் தம்பால்வந்த பழையவெற்றியாலுண்டாகிய அரசுரிமையைப் பெற்றேமாதலால் இத்தலைமையைப்பெற்றேமெனக்கொண்டு தங்குடிமக்களை இறைவேண்டியிரக்கும் மிகுதியில்லாத ஆண்மையையுடைய உள்ளஞ்சிறியோன் பெறின், அத்தாயம் அவனுக்குப் பரிக்கவொண்ணுதாம்படி கனத்தது, மிகவும்; அடுத்துப்பொரும் போரைப்பொறுக்கும் மனவெழுச்சியையுடைத்தாகிய வலிய முயற்சியையுடைய சீரியோன்பெறுவனாயின், தாழ்ந்தநீரையுடைய வற்றிய கயத்திடத்துச் சிறிய தண்டாகிய வெளிய கிடேச்சினது கோடைக்கணுலர்ந்த சுள்ளியைப்போலப் பெரிதும் நொய்து, குற்றமற்று விண்ணின்கண்ணே பொருந்தவுயர்ந்த வெண்குடையினையும் முரசினையுமுடைய அரசாது அரசாட்சியைப்பொருந்திய செல்வம்.—எ - று.

குடிபுரவிரக்குமென்பது, குடிமக்களைக் கொள்ளுங்கடமையன்றி மிகத் தரவேண்டுமென்று இரத்தலை.

தாயம் சிறியோன்பெறின், அது மிகவும்சிறந்தன்று; வேந்தர் அரசுகெழுதிரு விழுமியோன் பெறுகுவனாயின், நன்றுநொய்தாலெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மன், ஆக்கத்தின்கண் வந்தது. அம்ம, அசைநிலை. (௭௫)

(பி - ம்.)—[1] 'பொதுமொழிக்காஞ்சி'

---

(௭௬.) ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
யின்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
௫ நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து

---

௨. "பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும், புதுவதன்றே" (கலி. ௨௨ : ௩ - ௪); 'புதுவ தன்றே தொன்றியல வாழ்க்கை" சிலப். ௩௦ : ௧௪௦.

௪. புறநா. ௭௯ : ௨. மாச்சினை : பொருந. ௧௪௩ - ௪.

௪ - ௫. புறநா. ௨௨ : ௨௦ - ௨௧ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க; "போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த கடவுள் வாகை" பதிற். ௬௬.

செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
யொலியன் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
கo பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
வொருதா னாகிப் பொருதுகளத் தடலே.*

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற † நெடுஞ்செழி யனை இடைக்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—ஒருவனை ஒருவன் கொல்லுதலும் ஒருவற்கு ஒருவன் தோற் றலும் புதிதன்று, இந்தவுலகத்தின்கண் முன்னேதொட்டு இயல்பு; இன் றை நாமுன்கேட்டறியேம்; திரண்ட தாளையுடைய மனைநத்திடத்து வேம்பி னது பெரியகொம்பின்கண் உண்டாகிய ஒள்ளியதளிரை நீண்டகொடியாகிய உழிஞைக்கொடியுடனே விரவிச் செறியத்தொடுக்கப்பட்ட தேன்மிக்கமாலை யைய வலையமாலையுடனே சிறப்பச்சூடி ஓசையினிய தெளிந்த போர்ப்பறை யொலிப்பக் காட்சிதக நாடுபொருந்திய செல்வத்தினையுடைய பசும்பொன் னாற்செய்த பூணையணிந்த நெடுஞ்செழியனது பெருமையையும் உயர்ந்ததலை மையையும் அறியாராய்த் தம்மிற்கூடிப் பொருவேமென்று தன்னிடத்து வந்த புனைந்த வீரக்கழலினையுடைய இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிரு மாகிய ஏழரசருடைய நல்ல வென்றியடங்கத் தானொருவனாய் நின்று பொருது களத்தின்கட் கொல்லுதல்.—எ - று.

ஒருவனையொருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று, இவ்வுலகத் தியற்கை; செழியன் பொருதுமென்றுவந்த எழுவர்நல்வலமடங்க ஒருவனா கித் தெரியலை மாலையொடு காண்டகச்சூடிக் கிணைகறங்கப் பொருது களத்து அடல் இன்றின் ஊங்கோ கேளலமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க. (எசு)

சு - கரு. புறநா. கக : கஎ-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

* பு. நூழிலென்னுந்துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. க - இளம்.

† கூ ஆம் அடியில் தலைவன்பெயரின் ஒரு பகுதிவந்துள்ளது.

---

(எஎ.) கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பி னொண்டளிர்

க. கழறொட்டு : புறநா. அ : க.

உ. குடுமிகளைதல : "ஏந்து, நெடுமதில கொண்டு நிலமிசையோ ரேத் தக, குடுமி களைந்தானெங் கோ" பு - வெ. கூ : உக.

*நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
ரு நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயி
னுடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
கo வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை
யழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே.*

---

உ - ங. புறநா. உஉ: உo - உக-ஆம அடிகளின குறிப்பைப் பார்கக.

க - ச. புறநா. எஉ : உ-ஆம் அடிககுறிபபைபபார்கக.

ரு. நெடுந்தேர்க கொடிஞசி: மதுரை. எருஉ ; மணி. ச : சஅ.

எ. தாலி - ஐம்படைததாலி ; இதனைப பஞசாயுதமெனறும், பிறந்த ஐந்தாநாளில பிளளைகளுககு இதனைததாரணஞசெய்தல மரபென்றுங் கூறுவர்; "பொன்னுடைத தாலி யென்மகன" (அகநா.ருச); "மழலை, சிறுபுசினனீ ரைம்படை நனைப்ப", "ஐம்படைததாலி......புதலவர்" (மணி. ந : நஙஎ - அ; எ: ருசு - எ); "எழிலார திருமார்பிற கேற்கு மிவையென், றழகிய வைம்படையு மாரமுங கொணடு" (பெரியாழ்வார் திருமொழி. க. ச : ரு); "பணடுவசு தேவனமக ளுகிநில மாதின் படாகலையு மாயனிவ னென்று தெளிவெய்தத், தணடுதனு வாளபணில நேமியெனு நாமத, தனபடைக ளானதிரு வைம்படை தரிததே" (கலிங்க. அவதாரம், கூ); "தாலி யைம்படை தழுவு மார்பிடை" (கம்ப. நாடு. ருஅ); "ஐம்படை மார்பிற காணை" திருவிளை. ஙக: உரு.

கூ. வம்பமளளர்: புறநா. எஅ: எ; எகூ: ரு.

எ - கo. "இநத நகரஉகரம் 'தாலிகளைநதன்றுமிலனே' எ - ம், 'வியநதன்றுமிழநதனறுமிலனே' எ-ம் உயாதிணைககண்ணும் வநததாலெனின், அவை 'களைந்தான்' 'வியநதான' 'இழிநதான' எனபனவறறிறகு மறையாய்க் 'களைநிலன்' 'வியநதிலன' 'இழிநதிலன்' எனநிறகின்றவை 'களைநதனறுமிலன', 'வியநதன்றுமிலன', 'இழிநதனறுமிலன' என முறறுவினைத்திரிசொலலாயநின்றன" தொல். வினை. சூ. உo - ந.

கo - கக. பெரும்பாண். சகக ; மலைபடு. ஙஅசு.

கங. அகத்தடக்கல: புறநா. சு : உரு.

* மு. உழிஞைத்திணைத்துறைகளுள ஒன்றாகிய 'திறப்படவொருதான் மண்டிய குறுமையும்' என்பதற்கு மேற்கோள ; (தொல். புறத்திணை. சூ. கo - இளம்); "மதிமை சாலா மருட்கையானே......ஒண்ணிணி களைந்தகாலொண்கழ றொட்டென்னும் பாடடுச நிகியோர் பெருந்தொழிலைச் செய்தது" தொல். மெய்ப்பாடு. சூ. எ - பேர்.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—சதங்கை வாங்கப்பட்ட காலிலே ஒள்ளிய வீரக்கழலினைச் செறித்துக் குடுமியொழிக்கப்பட்ட சென்னிக்கண்ணே வேம்பினது ஒள்ளிய தளிரை நெடியகொடியாகிய உழிஞைக்கொடியோடுசூடிக் குறியவளைகளை யொழிக்கப்பட்ட கையின்கண்ணே வில்லைப்பிடித்து நெடிய தேரினது மொட்டுப் பொலிவுபெறநின்றவன் யாரோதான்? யாரேயாயினும், அவன்கண்ணி வாழ்வதாக; தாரையணிந்து ஐம்படைத்தாலி கழித்ததுமிலன்; பாலையொழித்த உணவும் இன்றுண்டான்; முறைமுறையாகவெகுண்டு மேல்வந்த புதியவீரரை மதித்ததும் அவமதித்ததுமிலன்; அவரை இறுகப்பிடித்துப் பரந்த ஆகாயத்தின்கண்ணே ஒலியெழக் கவிழ்ந்து உடலம் நிலத்தின்கண்ணே பொருந்தக் கொன்றதற்கு மகிழ்ந்ததுவும் இவ்வாறுசெய்தேமென்று தன்னை மிகுத்ததுவும் அதனினுமிலன்.—எ - று.

யார்கொலென்றது, வியப்பின்கட்குறிப்பு.

இழித்தன்றெனபது, இழிந்தன்றென மெலிந்துநின்றது. (எஎ)

---

(எஅ) வணங்குதொடைப் பொலிந்த [1] வலிகெழு நோன்றா
ளணங்கருங் கடுந்திற லென்னை முணங்குநிமிர்ந்
தளைச்செறி யுழுவை யிரைக்குவந் தன்ன
மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்து
௫ விழுமியம் பெரியம் யாமே நம்மிற்
பொருநனு மிளையன் கொண்டியும் பெரிதென
வெள்ளி வந்த வம்ப மன்னர்
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர
வீண்டவ ரடுதலு மொல்லா னாண்டவர்
க0 மாணிழை மகளிர் நாணினர் கழியத்

உ. என்னை - எனதுதலைவன்; (புறநா. அச : க; அரு : க; அக : கூ; உசுஉ : ரு); "என்னைமுன் னில்லன்மின்" (குறள், எஎக); முணங்குநிமிர்தல்: புறநா. ருஉ : உ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

ச. புறநா. க0 : கூ - க0 - ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

க - ச. புறநா. ருஉ : க - ச.

சு. இளையன் : புறநா. எஉ : உ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

எ. வம்பமன்னர் : புறநா. எஎ : கூ; எகூ : ரு.

(பி - ம்.)—1 'மதனுடை நோன்றாள்'

தந்தை தம்மூ ராங்கட்
டெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—வளைந்த சந்துகளாற்பொலிந்த வலிபொருந்திய போரின்கண் நிலைதளராத பொறையினையுடைய தாளினையும் வருத்துதற்கரிய மிக்க வலியையுமுடைய என்னிறைவன் மூரிநிமிர்ந்து முழையின்கட்கிடந்த புலி தான் விரும்பியதோர் இரையை நோக்கிவந்தாற்போன்ற மாறுபடுதற்கரிய மார்பத்தை மதியாராய் ஆர்த்து எழுந்திருந்து, 'சிறப்புடையேம் படையாற் பெரியேம்யாங்கள் நம்மிற் பொருவானும் இளையன் கொள்ளையும்பெரிது' என இகழ்ந்துவந்த நிலையிலலாத வீரர், புறக்கொடை கண்ணராய்நின் றவிடத்து நில்லாது புறத்தேபோக அவரை இப்போர்க்களத்தின்கண்ணே கொன்றிடுதலும் உடம்படானாய் அவ்விடத்து அவர் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தை யுடைய மகளிர் நாணினராய் இறந்துபடத் தந்தையருடையவாகிய தங்களூரிடத்துத் தெளிந்த போர்ப்பறை யொலிப்பச்சென்று அவ்விடத்தே கொன்றான்.—எ - று.

தந்தைதம்மூரென்றதனை, "ஏவ விளையர் தாய்வயிறு கறிப்ப" என்றாற் போலக் கொள்க. தந்தைதம்மூரென்றது, தாம் தோற்றிச்செய்த நகரியன்றி உறையூரும் கருவூருமுதலாகிய ஊர்களை. (எஅ)

கஉ. கிணைகறங்கச் செலலல: புறநா. எகூ: ங.

கூ - கூ. "சிறுபடையான் செலவிடஞ் சேரி னுறுபடையா னூக்க மழிந்து விடும்", "சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறைநிலத்தோ டொட்ட லரிது" (குறள். ருகஅ, ருகக.) உழிஞையைச் சூடிய வீரன் பகைவருடைய மதிலைச்சூழ்ந்து போர்செய்ய வேண்டுமென்பது விதியாதலாலும் இசெழியன் உழிஞை சூடியவனாதலாலும் இங்ஙனம் போர்செய்வானாயினனென்பது மொன்று; புறநா. எகூ, எஎ-ஆம் பாடலகளைப் பார்க்க.

---

(எகூ.) மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி

---

க. "என்னுமெலலையி னொன்னெதிர வவுணாகோ னெழுந்து,தனனதாகிய வுறையுள்போய்த் தடம்புன லாடி" கந்த. சூரபன்மன்வதை. கசு.

உ. புறநா. எகூ: ச; இவ்வடி ஏழாம்வேற்றுமைத்தொகைக்கு மேற் கோள்; தொல். எச்ச. ரு. கஎ - ந.

ங. புறநா. எஅ: கசு - எ; சிறந்த ஆடவர் நடைக்குக்களிற்றின் நடை உவமையாதல, "மங்கல மழகளி றனைய செலவனையன்" (சூளா. குமார கால. கூ); "பொன், னகமு நாகமு நாண நடந்தான்" (கம்ப. கார்முக. நஉ) என்பவற்றாலும் அறியலாகும்.

வெம்போர்ச் செழியனும் வந்தன னெதிர்ந்த
௫ வம்ப மள்ளரோ பலரே
யெஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தனது பழையநகரிவாயிற்கட் குளிர்ந்த பொய்கையின்கண் நீராடி மூழ்கி மன்றத்திடத்து வேம்பினது ஒள்ளிய தளிரைச் சூடித் தெளிந்த ஓசையையுடைய பறைமுன்னாகக் களிறுபோலப் பெருமிதத்தோடு நடந்து வெய்ய போரையுடைய நெடுஞ்செழியனும்வந்தான்; அவனோடுபகைத்த நிலையில்லாதமறவர் பலரே; பகற்பொழுது மிகச் சிறிதாதலால், அவருட் சிலர் படாதொழியவுங்கூடும்.—எ - று.

போர்மடந்தையைப் புணரவருகின்ற *1 கன்னிப்போராதலாற் பனிக் கயமண்ணியென்றார்.

இனைமுன்னர்வருதல, யானைக்கும், இவனுக்கும் ஒக்கும். (எகூ)

* "கடிக்கண்ணி வேந்தரை யாற்றுக் குடிக்கன்னி வாகைகொண்டே, முடிக்கண்ணி மேல்வைத்த மும்மதில வேந்தன்" (இறை. மேற். க - ரை. உஉ); "காண்டுமிக காளைதன் கன்னிப் போரென" (சூளா. அரசியல். எகூ); "காகுத்தன் கன்னிப் போரில" (கம்ப. தாடகை. எஎ); "கன்னி வேட்டை மகனை போக" பெரிய. கண்ணப்பர். சுஎ.

(பி - ம்.)—1 'கன்னிப்போர்'

---

(அ0.) இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
யொருகான் மார்பொதுங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
௫ நல்கினு நல்கா னாயினும் வெல்போர்ப்
1 போரருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல

க. "இன்கடுங் கள்ளி னுறந்தை யாங்கண்" அகநா. கஙஎ.

உ. மதவலி: முருகு. உசஉ.

ரு. நல்கல்-உவத்தல்; "நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்" மணி. க : ரு[illegible].

சு. தித்தன்- உறையூரிலிருந்த ஒரு சோழன்; (புறநா. ௩ருஉ : கூ-க0); "நொச்சி வேலித் தித்த னுறந்தை" அகநா. கஉஉ.

எ. புறநா. எரு : கூ - கக-ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

(பி - ம்)—1 'பொரலருந்தித்தன்'

விருதலை யொசிய வெற்றிக்
களம்புகு [1] மல்லற் கடந்தடு நிலையே

திணை - தும்பை; துறை † எருமைமறம்.

சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர்மல்லனைப்பொருது அட்டுநின்றானைச் சாத்தந்தையார் பாடியது.

இ - ள்.—இனிய அழாற கள்ளினையுடைய ஆமூரிடத்து வலியையுடைய மல்லனது மிக்க வலியைக்கெடுத்து ஒருகால் மண்டியாக மார்பிலே மடித்துவைத்து ஒருகால் அவன்செய்கின்ற உபாயத்தைவிலக்கி முதுகின்கண் வளைத்தட பசித்து மூங்கிலைத் தின்றற்குமுயலும் யானையையொப்பத் தலையுங் காலுமாகிய இரண்டிடமும் முறியமோதி அக்களத்தின்கட்புக்க அம்மல்லனை எதிர்ந்துநின்று கொன்றநிலையை, கண்டால் உவப்பினும் உவவாறொழியினும், இவன்றந்தையாகிய வெல்லும் போரினையுடைய பொருதற்கரிய தித்தன்காண்பானாக.—எ - று.

என்றது, தந்தையுடன் வெறுத்துப்போந்தான் அமருட்புகுந்து இப்போர்செய்தானை அவன் விரும்பின் உவக்கின்றான், விரும்பாவிடின் அஞ்சுகின்றானென்பதாம்.

'பணைமுயலும் யானைபோல வொருதலை யொசிய வொற்றி' என்று பாடமோதி, அம்மல்லன் முற்கூறுயினும் பிற்கூறுயினும் ஒருதலைமுறியமோதியென்று உரைப்பாருமுளர்.

இது, விறலின்கண் வந்தது. (அ0)

* மு. மல்வென்றிக்குமேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கரு - இளம்; வெ. வெ. சூ. உ0 - ந.

† புறநா. உஎச; சீவக. உஉ௫கூ - ந.

(பி - ம்.)—1 'மன்னார்க்கடந்தடு'

---

(அக.) ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழங்க லானாவே
யார்கொ லளியர் தாமே யார்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
௫ கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

க - உ. யானைமுழக்கிற்கு இடிமுழக்கு உவமையாதலை, "யானைமுழக்கங்கேட்ட, கதியிற்றே காரின்குரல்" (பரி. அ : கஎ - அ); "விசும்பி, னேறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்கும், கடாஅ யானை" (அகநா. கசச); "கார்ப்பெய லுருமிற் பிளிறி......மையல வேழ மடங்கலின்" (குறிஞ்சி. கருஉ - ரு); "களிறுங் களித்ததிருங் கார்" (பு - வே. ௬ : உ) என்பவற்றாலுமறிக.

௩-௪. ஆர்க்கண்ணி: புறநா. அஉ : ௬.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—படையினது ஆரவாரம், எழுகடலுங் கூடி ஒலிக்கும் ஒலியி னும் பெரிது ; அவனுடையகளிறு, கார்காலத்துமழையின்கண் இடியினும் முழங்குதலை அமையா ; நாராற் பயிலத்தொடுக்கப்பட்ட ஆத்திக்கண்ணியை யும் இடக்கவிந்த கையினையுமுடைய வீரனது கையின்கட் பட்டோராகிய இரங்கத்தக்கார் தாம் யார்கொல்?—எ - று. (அக)

---

(அஉ.) சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
1 கட்டி னிணக்கு மிழிசினன் கையது
2 போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
ரு வூர்கொள வந்த பொருநனொ
டார்புனை தெரிய னெடுந்தகை போரே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

உ. ஞான்றஞாயிறு - அத்தமித்த சூரியன்; "ஞான்றுதோன் றவிர் டர்" (அகநா. ௱௬); தொல். தொகைமரபு. சூ. உசு - இளம். மேற்.

ந. நிணக்கும் - பிணிக்கும்; "நிணந்தெ டொஞ்ச நிறைகொண்ட கள் ளே" (சீவக. கஈகக); இழிசினன் - இழிவையுடையான் (புறநா. உஅஎ: உ; உஅசு: கக); "இழிசினர்க்கே யாறும் பசித்தார்க ணீதல், கழிசினங் காத்தல் கடன்" சிறுபஞ்ச. எஎ.

ச. 'விரைவு' என்னும்மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய். . கஉ - இளம்.

* ம. "சாற....போரேயென்பது இழிந்ததன்மேல் வந்ததாலெனின் ...ஊசியினது விரைவு மற்றுள்ளவிரைவின் உயர்ந்ததாதலின் அதுவும் உயர்ந் ததாம்" (தொல். உவம. சூ. ந - இளம்); "சாறுதலைக் கொண்டென. .... என்னும் பாட்டினுள் உவமப்பொருளாகிய போழ்தூண்டூசிக்குப் பல அடை கூறி அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினையாதுமோரடையின்றி யொளாது கூறினுனாயினும் உவமப்பொருளான போர்த்தொழிற்குற்றதும் உணரக் கூறினும்; என்னை? உணடாட்டும் கொடையும் உரனொடுநோக்கி மறுத்தலுமுதலாகிய உள்ளக்கருத்தினன் ஒருகணத்துள்ளே பலவேந்தரை யுருக்கு வென்றதற்கு விரைகின்றது போர்த்தொழிலென்பது தெளியப்பட்ட மையின்". (டு டு டு. உ0-பேர்); "சாறுதலைக் கொண்டென...... நெடுந்தகை போரே: இதனுள் ஆர்புனை தெரியல நெடுந்தகை போர்த்தொழி லுவமையாகிய போழ்தூண்டூசித்தொழிற்குப் பலஅடைபுணர்ப்பினும் அவை யனைத்தும் போர்த்தொழில விரைவையே சிறப்பித்து வந்தமையால் வழுவா காது இலக்கணமாம்" இ - வி. சூ. சுசுக - உரை.

(பி - ம்.)—1 'கட்டினிணர்க்குமிழிசனன்' 2 'போழ்துன்னூசி'

இ - ள்.—ஊரின்கண் விழாத் தொடங்கிற்றாக அவ்விழாவிற்கு உதவப் போகவும் தன்மனைவி பிள்ளைப்பெறுதலைப்பொருந்தினாளாக அவள் மெய்நோவிற்கு உதவப்போகவும் வேண்டிப் பெய்கின்றமழையையுடைய ஞாயிறு வீழ்ந்தபொழுதின்கட் கட்டிலைப்பிணிக்கும் புலைமகன்கையதாகிய வாரைச் செலுத்தும் ஊசியினும் விரைந்தது, ஊரைக்கொள்ளவந்த வீரனொடு ஆத்தியாற்றொடுக்கப்பட்ட கண்ணியையுடைய பெருந்தகையது போர்.—எ - று.

நெடுந்தகைபோர், பட்டமாரி ஞான்றஞாயிற்றின்கட் சாறுதலைக்கொண்டெனப் பெண்ணீற்றுற்றென இழிசினன்கையதாகிய ஊசியின் விரைந்தன்றெனக்கூட்டுக.

சாறுதலைக்கொண்டென அதற்கு உதவப்போகவும், பெண்ணீற்றுற்றென அதற்கு உதவப்போகவுமென வேறுவேறுகொள்க ; ஒன்றாகவுரைப்பாருமுளர். (௮௨)

---

(௮௩.) அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
றொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
[1] யடுதோண் முயங்க லவைநா ணுவலே
[2] யென்போற் பெருவிதுப் புறுக வென்று
௫ மொருபாற் படாஅ தாகி
யிருபாற் பட்டவிம் மைய லூரே.*

திணை - கைக்கிளை ; துறை - பழிச்சுதல்.
அவனைப் பெருங்கோழிநாய்கன் மகள்நக்கண்ணையார் பாடியது.

இ - ள்.—அடியின்கட்புனைந்த செறிந்த வீரக்கழலினையும் மைபோன்ற † தாடியினையுமுடைய இளையோன்பொருட்டு எனது வளை என்னைக் கைவிடுதலான், யான் யாயை அஞ்சுவேன் ; அவன்பகையைக்கொல்லுந்தோளைத் தழுவுதற்கு அவையின்கணுள்ளாரைநாணுவேன் ; என்னைப்போல மிக்க நடுக்கமுறுவதாக, எக்காலும், யாயேயாதல அவையேயாதல் ஒருகூற்றிற் படாதாகி யாயும் அவையுமாகி இருகூற்றிற்பட்ட இம்மயக்கத்தையுடைய ஊர்.—எ - று.

---

௧. தொடுகழல் - செறித்தகழல் (புறநா. ௭௭ : ௧); மையணற்காளை: "செய்வினைப்பொலிந்த செறிகழ னோன்றாண்,மையணற் காளையொடு" (ஐங்குறு. ௩௮௯); "மையணற் காளை மகிழ்தூடி" பு - வெ. ௧ : ௧௨.

௨. மு. புறநா. ௨௫௫ : ௩ ; ௨௯௧ : ௫ ; "என்போற் பெருவிதுப் புறுக வென்புழி, போலென்பது போல வென்னுஞ்செயவெனெச்சக்குறிப்பாகிய உவமவுருபு" தொல். எச்ச. சூ. ௧௮ - ந.

* மு. "அடிபுனை தொடுகழன்...மைய லூரே : இது பெருங்கோழி நாய்கன்மகளொருத்தி, ஒத்த அன்பினாற் காமமுறாதவழியும் துணைச்சிறப்பின்றித் தானே காமமுற்றுக் கூறியது இதனிலடக்குக" தொல். புறத். திணை. சூ. ௨௮ - ந.

† தாடி-மீசை; "இரலைமருப்பிற் றிரிந்து மறிந்துவீழ்தாடி" (கலி. ௧௫); "கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடுந்தாடி" திருவிளை: ௨௬ : ௨௨.

(பி - ம்.)—1 'அடுதொறுமுயங்கல்' 2 'எம்போற்பெருவிதிர்ப்பு'

(அரு.) என்னைக் கூரிஃ தன்மை யானு
மென்னைக்கு நாடிஃ தன்மை யானு
மாடா டென்ப வொருசா ரோரே
யாடன் றென்ப வொருசா ரோரே
ரு நல்ல பல்லோ ரிருநன் மொழியே
யஞ்சிலம் பொலிப்ப வோடி யெம்மின்
முழாவரைப், போந்தை பொருந்தி நின்று
யான்கண் டனனவ னாடா குதலே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—என்னுடையதலைவனுக்கு ஊர் இஃதல்லாமையானும் என்னுடைய தலைவனுக்கு நாடு இஃதல்லாமையானும் அவனுக்கு இயல்பாயவெற்றியை அவனதுவெற்றியென்று சிறப்பாகச்சொல்லுவர் ஒருபக்கத்தார்; அவனது வென்றியன்றென்றுசொல்லுவர் ஒருபக்கத்தார்; பலரும் ஒத்து ஒவ்வாமற்கூறும் இவ்விருவகைப்பட்ட நல்லவார்த்தையும் நல்லவாயிருந்தன; அவ்வாறுகூறினராயினும், அழகிய சிலம்பார்ப்ப ஓடிச்சென்று, எம்முடையமனையின்கண் முழாப்போலும் பக்கத்தையுடைய பனையைப்பொருந்திநின்று, எனதுவனையும் கலையுமுதலானவை தோற்கும் ஆண்மையுடைமையின், அவனதுவென்றியாதல் யான்கண்டேன்.—எ - று.

பின்னும் ஒருகால் என்னையென்றதனால், இவரது ஆதரவுதோற்றி நின்றது.

நல்லவென்றது, இகழ்ச்சிக்குறிப்பு.

ஆடென்றதூஉம் ஆடன்றென்றதூஉம் அவனைச் சுட்டியேகூறினமையின், இருநன்மொழியும் நல்லவென்றாரெனினுமமையும். (அரு)

---

க - உ. புறத்திணைப் பகுதியில், தலைவி தலைவனை 'என்னை' என்பதற்கு மேற்கோள்; தொல். பொருளியல், சூ. ருஉ - ந.

எ. "முழாவரைப் போந்தை யரவாய் மாமடல்" (புறநா. ஙஎரு: ச); ஏதாவதொன்றனைச் சார்ந்துநின்று ஒருவரைப்பார்த்தலும் அங்ஙனம் நின்று ஒன்றைக்கேட்டலும் நாணமுடைய குலமகளிர்க்கு இயல்பு; புறநா. அசு: க - உ.

---

(அசு.) சிற்றி னற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியே னோரும்

---

ஙு. புறநா. உஅஉ: ஙு.

புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

திணை - வாகை ; துறை - ஏறாண்முல்லை.

*1 காவற்பெண்டின் பாட்டு.

இ - ள்.—சிறிய இல்லின்கண் நல்லதூணைப்பற்றிநின்று நின்மகன் எவ்விடத்துளனோவென்று கேட்பை ; என்னுடையமகன் எவ்விடத்துளனாயினும் அறியேன் ; புலிகிடந்துபோன கன்முழைபோல அவனைப்பெற்றவயிறோ இஃது ; அவன் செருக்களத்தின்கண்ணே தோன்றுவன் ; அவனைக்காண வேண்டின் ஆண்டுச்சென்றுகாண்.—எ - று.

'ஈன்றவயிறோவிது' என்றகருத்து : புலிசேர்ந்துபோகிய அளைபோல அவனுக்கு என்னிடத்து உறவும் அத்தன்மைத்தென்பதாம்.

ஓருமென்பதூஉம் மாதோவென்பதூஉம், அசைச்சொல். (அசு)

---

ச - ரு. "வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற, வாடன் முதியாள் வயிற்றிடம் - கூடார், பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா, விரும்புலி சேர்ந்த விடம்" பு - வெ. ரு : கசு.

* காவற்பெண்டு - செவிலித்தாய் ; சிலப். உசு. அரும்பத.

(பி - ம்.)—1 'காதற்பெண்டு'

---

(அஎ.) களம்புகல் லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
லெண்டேர் செய்யுந் தச்சன்
றிங்கள் வலித்த காலன் னோனே. x

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

1 அதியமான்நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—போர்க்களத்தின்கட்புகுதலைப் போற்றுமின், பகைவிர், போரிற்கண்ணாறுபட்டு. எங்களுள்ளவைத்தும் ஒருவீரனுளன் ; ஒருநாள் எட்டுத்தேரைச் செய்யுந்தச்சன் ஒருமாதங்கூடிக் கருதிச்செய்யப்பட்டதொரு தேர்க்காலையொப்பன்.—எ - று.

போரெதிர்ந்து களம்புகலோம்புமின், எம்முளுமுளனெனக்கூட்டுக.

எம்முளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

தேர்க்காலோடு உவமை, விரைவும் திண்மையுமாகக்கொள்க. (அஎ)

---

க. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" குறள், எஎக.

* பூ. வாகைத்திணையின் துறைகளு ளொன்றாகிய, 'அரும்பகை தாங்கு மாற்றலானும்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கஎ. இளம் ; ஷை ஷை ஷை உக - ந.

(பி - ம்.)—1 'அதிகமானெடுமான்வஞ்சி'

(௯௯.) யாவி ராயினுங் கூழை தார்கொண்
டியாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிற
லொளிறிலங்கு நெடுவேன் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்
௫ விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—எப்பெற்றிப்பட்டோராயினும், அணியையும் தூசியையுங் கொண்டு யாம் அவனோடு பொருவோமென்றுசொலலுதலைப் பாதுகாமின், உயர்ந்த வலியையுடைய பாடஞ்செய்யும் விளங்கிய நெடியவேலையுடைய இளையோர்க்குத் தலைவனாகிய சுடர்விடுகின்ற நுண்ணிய தொழிலையுடைய பூணணிந்தஅழகிய வலிய மார்பினையும் களவேள்விமுதலாகிய விழாச்சிறந்த நல்லபோரைச்செய்யும் முழாப்போலுந்தோளினையுமுடைய என்னிறைவனைக் காண்பதற்குமுன்; கண்டால அதுசெய்தல அரிதாகலான்.—எ - று.

என்னையைக் காணாவூங்கு யாவிராயினும் பொருதுமென்றல ஓம்புமினெனக்கூட்டுக. (அ௮)

---

௩. மழவர் - ஒருவகை வீரர் (புறநா. ௬0: ௧௧); "உருவக்குதிரை மழவர்" (அகநா. ௧: ௨); 'கழற்கான் மழவர்", "பெருந்தோண் மழவர்" மதுரை. ௩௯௫, ௬௮௭.

௫. புறநா. ௮௪: ௪.

௬. ஊங்கு - இங்கே காலமுன்; புறநா. ௭௯: ௩; ௧௪௧: ௭.

---

(௯௰.) இழையணிப் பொலிந்த வேந்துகோட் டல்குன்
மடவர லுண்கண் வாணுதல் விறலி
பொருநரு முளரோநும் மகன்றலை நாட்டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
௫ யெறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று

---

௨. "மடவரல வள்ளி" (குறுந். ௧0௨); "மடவரன் மகளிர்" பெரும்பாண். ௩௮௭.

௪. "வினவ லானாப் புனையிழை" அகநா. ௨௬: ௧௪.

௫-௬. "அரவியற் றறுகண் வன்று ளாள", "மூரி வெஞ்சிலை யிராவண னராவென முனிந்தான்" (கம்ப. முதற்போர். ௧௫௧, ௨௩௬); "கதையிற் றாக்கப்படு மரவென்னப் பொங்கி" காஞ்சிப். பரசிராம. ௩௧.

பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பி
னதுபோ ரென்னு மென்னையு முளனே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—மணிக்கோவையாகிய அணியாற்பொலிந்த ஏந்திய பக்கத்தையுடைய அல்குலினையும் மடப்பத்தினையும் மையுண்டகண்ணினையும் ஒளிதங்கிய நுதலினையுமுடைய விறலி, என்னோடு பொருவாருமுளரோ நம்முடைய பெரிய இடத்தினையுடைய நாட்டின்கண்ணென என்னைக் கட்டமையாத செருச்செய்யுந்தானையையுடைய வேந்தே, நீ போர்செய்யக் கருதுவையாயின், எம்முடைய நாட்டின்கண்ணே அடிக்குங்கோலுக்கு அஞ்சாது எதிர்மண்டும் பாம்புபோன்ற இளைய வலியவீரருமுளர்; அதுவேயன்றி, மன்றின்கண் தூங்கும் பிணிப்புற்ற முழவினது காற்றெறிந்த தெளிந்த ஓசையையுடைய கண்ணின்கண் ஒலியைக்கேட்பின், அது போர்ப்பறையென்று மகிழும் என்னுடைய தலைவனுமுளன்.—எ - று.

'தெண்கண்' என்றது, அதன்கண் ஓசையை.
போரென்றது, போர்ப்பறையை. (அக)

---

எ - அ. புறநா. கஉஅ: உ - ரு.
கூ. புறநா. ருக: கூ ; உஎகூ : எ.

---

(கூ0.) உடைவளை கடுப்ப மலர்ந்த காந்த **திணை**.
ளடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரன்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
ரு விருளு முண்டோ ஞாயிறு சினவி
னச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய

---

க. "இவட்கே, யலங்கிதழ்க் கோடல வீயுகு பவைபோ, லிலங்குகே ரெல வொளி யிறையூரு ரும்மே", "ஊழுறு கோடலபோ லெல்வளை யுகுபவால்" (கலி. எ, [illegible] கசஅ) ; "வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்" மலை படு. ருகக.

ரு. "ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்ததென், ஞயிழை மேனிப் பசப்பு", "ஞாயிற்று முன்னா இருள்போல மாய்ந்ததென், ஞயிழை யுற்ற துயர்", "ஆயிழை மடவர லவலமகலப், பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோல" கலி. சஉ, கசரு, கசஅ.

எ. சொல்லிய : புறநா. ருக: க.
கூ - கூ. புறநா. கூ0: எ - கூ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

[1] வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
கo எழுமரங் கடுக்குந் தாடோய் தடக்கை
வழூஉமில் [2] வன்கை மழவர் பெரும
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முரிந்த வளையையொப்ப மலர்ந்த வெண்காந்தட்பூ இலை தழைத்த *குளவியுடனேநாறும் மலைச்சாரற்கண் மறத்தையுடைய புலிசீறின் எதிர்நிற்க வல்ல மானினமுமுளவோ? மயங்கிய ஆகாயத்திடத்தும் திசையின்கண்ணும் செறிந்த இருளுமுண்டோ ஞாயிறு கொதித்தெழுமாயின்? பாரத்துமிகுதியாற் பார் அச்சுமரத்தோடு வந்து தாக்கி உற இருத்தலின் நிலத்தின்கட்குளித்த பண்டத்தையுடைய சகடத்தினது ஆழ்ச்சியைப்போக் குதற்குப் புனலகொழிக்கப்பட்ட மணற்பரக்கவும் கற்பிளக்கவும் நடக்க வல்ல மிக்க மனச்செருக்கினையுடைய கடாவிற்குப் போதற்கரிய துறையு முண்டோ? இல்லையன்றே; அவைபோல, கணையமரத்தையொக்கும் முழந்தாளிலேபொருந்திய பெரியகையாகிய தப்பாத வன்மையைச் செய்யும் கையினையுடைய வீரர்க்குத்தலைவ, பெரிய நிலத்தின்கண் நினது மண்ணைக்கொண்டு ஆர்க்கும் வீரரும் உளரோ? இல்லையன்றே, நீ போர்க்களத் திற் புகின்.—எ - று.

மழவர்பெரும, நீ களம்புகின், பொருநருமுளரோ? இல்லையன்றே யெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

தடக்கையையுடைய பெருமவெனக்கூட்டி, வன்கையை மழவரொடு கூட்டியுரைப்பினுமமையும்.

இருநிலமாகிய மண்ணென்பாருமுளர்.

'மதப்பகடு' என்பதூஉம் பாடம். (கo)

---

அ - க. "வரிமணல் ... உண்டோவென்றாற்போலும் உவமப்பொருள்களும் இக்காலத்திற்கு ஆகாவாயின" தொல். செய். சூ. அo - ந.

கo. எழுமரம் - கோட்டைக்கதவின் உட்புறத்தே குறுக்காகட் போடப்படும் வலியமரம் (புறநா. சுஎ: அ); கணையமரமெனவும் வழங்கும்; "முழுவிறற் கணையம்" (சிலப். கரு: உகரு) என்பதன் உரையைப்பார்க்க. தாடோய் தடக்கை: புறநா. ருக: உ.

கக. வழூஉவில் வன்கை: "கருனையாற் குழைக்குங் கைகள், வாளமர் நீந்தும் போழ்தின் வழூஉத் தொழிலு மெனாரூன்" சீவக. உருஎ.

* குளவி - மலைமல்லிகை; புறநா. கசுஅ : கஉ - உரை.

(பி - ம்.)—1 'வரிமணன்ஞமல' 2 'வண்கை'

இ - ள்.—வெற்றியுண்டான தப்பாத வாளையெடுத்துப் பகைவர் களத்தின்கட்பட வென்ற கழலவிடப்பட்ட வீரவளையொருங்கிய பெரிய கையினையுடைய மிக்க ஆரவாரத் தசசெய்யும் மதுவினையுடைய அதியர்கோமான்; மாற்றாரைப் போரின்கட்கொல்லும் வீரச்செல்வத்தினையும் பொன்னாற்செய்யப்பட்ட மாலையையுமுடைய அஞ்சி, நீ பால்போலும் பிறை நுதலபோல் பொலிந்த திருமுடியினையும் நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையுமுடைய ஒருவனைப்போல நின்று பெறுவாயாக; பெரும, நீ, பழைய நிலைமையையுடைய பெரியமலையிடத்து விடரின்கண் அரிய உச்சிக்கட்கொள்ளப்பட்ட சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய பழத்தைப் பெறுதற்கரிதென்று கருதாது அதனாற்பெறும் பெரும்பேற்றினை எமக்குக்கூறாது நின்னுள்ளே அடக்கிச் சாதலொழிய எமக்கு அளித்தாயாதலால்.—எ - று.

'நீல மணிமிடற் றொருவன் போல' என்றகருத்து, * சாதற்குக்காரணமாகிய நஞ்சுணடும் நிலைபெற்றிருந்தாற்போல நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்.

அதியர்கோமான், அஞ்சி, நெல்லித்தீங்கனி எமக்கு ஈந்தாயாதலால், பெரும, நீ நீலமணிமிடற்றொருவன்போல மன்னுகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

† 'பிறைநுதற் பொலிந்த சென்னி' என்பதற்குப் பிறைதான் நுதலிடத்தே பொலிந்தசென்னியெனினுமமையும். (க

* "விண்ணோரமுதுண்டுஞ் சாவ வொருவரு முண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்" சிலப். க௨: "துண்ணென் றுடிமொடு".

† புறநா. க : -ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

---

(சுஉ.) யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
யென்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
(ரு) கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாழோசைபோல இசையால் இன்பஞ்செய்யா; காலத்தோடும் கூடியிரா; பொருளும் அறியவாரா; ஆயினும், தந்தையர்க்கு அருளுதல்வந்தன பிள்ளைகளுடைய இளஞ்சொல்; என்னுடைய வாயின்கட்சொல்லும் அத்தன்மையன, பகைவரது காவலையுடைத்தாகிய மதிலையுடைய அரண் பலவற்றையும் வென்ற நெடுமானஞ்சி, நீ அருளுதலால்.—எ - று.

ந. மழலை - எழுத்து வடிவுபெறாது தோற்றும் இளஞ்சொல்; "மெய்பெறா வெழுத்துயிர்க்கு மழலை" (சீவக. கஉக)| "அவர்மழலை கேட்டலதனினிதோ" இனியது. கரு.

புதல்வர்மழலை தந்தையர்க்கு அருள்வந்தன; அஃசி, நீ அருளுதலால், வாய்ச்சொல்லும் அன்னவென்க கூட்டுக.

யாழென்றது, யாழிற்பிறந்த ஓசையை.

பொருளுமென்னும் உம்மை, விகாரத்தால் தொக்கது. (கூஉ)

---

(கூங.) திண்பிணி முரசம் இழுமென முழங்கச்

சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்

தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்

டோடன் மரீஇய பீடின் மன்னர்

ரு நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்

காதன் மறந்தவர் தீதுமருங் கறுமா

ரறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்

திறம்புரி பசும்புற பரப்பினர் கிடப்பி

மறங்கந் தாக [1] நல்லமர் வீழ்ந்த

க0 நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென

வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ

வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்

தண்ணல் யானை யடுகளத் தொழிய

வருஞ்சமந் ததைய நூறிநீ

கரு பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே.*

---

க. "திண்மரச மிழுமென முழங்க" புறநா. ...

சு. நன் - மயிலை. ரு. ருக - மேற்.

க0. செல்வுழிச்செல்க : நன் - வி. ரு. கஅ ; ஓ - வி. ரு. கூஅ - ரை, மேற்.

க0 - கக. நன் - மயிலை. ரு. உஉஅ; இ - வி. ரு. கரு - உரை.

அ - கக. புறநா. எசு: க - உ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

கஉ. புறநா. உஉ: சு.

கஉ - . "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிறு" (அகநா. எஅ: ... - சு); "வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த, வண்ணல யானை" தொல். களவியல், ரு. கக - ந. "எண்ணியது" என்னுமேற்கோளிலுள்ளது.

கரு. விழுப்புண் - முகத்திலும் மார்பிலும்பட்ட புண்; குறள், எஎசு - பரிமேல்.

* மு. வஞ்சித்திணைத்துறைகளுள், 'அடுத்தூர்ந்தட்ட கொற்றம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. எ - இளம்.

(பி - ம்.)—1 'வாளமர்'

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவன் பொருது புண்பட்டு நின்றானை அவர் பாடியது.

இ - ள்.—திண்ணிய பிணிப்பையுடைய முரசம் இழுமென்னும் ஓசையையுடைத்தாய் ஒலிப்ப மேற்சென்று போரைவெல்லுதல் இனி எங்கேயுள்ளது? நின்னோடு எதிர்ந்துவந்தோர், நினது தூசிப்படையைப்பொறுத்தற்கும் மாட்டாராய்ச் சிதறிக்கெட்டுப்போகலின்மேன்மருவிய பெருமையில்லாத அரசரது நோயின்பக்கத்தால் இறந்த உடம்பையணைத்துத் தமது ஆசைத்தன்மையை மறந்து அவர் வாளாற்படாதகுற்றம் அவரிடத்தினின்றும் நீங்க வேண்டி அறத்தைவிரும்பிய கோட்பாட்டையுடைய நான்குவேதத்தையுமுடைய அந்தணர் நல்லசூற்றிலேபொருந்திய பசிய தருப்பைப்புல்லைப் பரப்பினராய்க் கிடத்தித் தமது ஆண்மையையே பற்றுக்கோடாக நல்ல பூசலிலேபட்ட மேம்பட்ட வீரக்கழலினையுடைய வேந்தர்செல்லும் உலகத்திலே செல்கவென்று வாளோக்கியடக்கும் இழிதகவும் பிழைத்தார்கள், வரியையுடைய தேனீ ஒலிக்கும் வாயின்கண்வந்துபுகுகின்ற மதத்தினையுடைய தறுகண்மைபொருந்திய யானை போர்க்களத்தின்கண்ணே பட்ட பொறுத்தற்கரிய பூசற்கண்ணே சிதறவெட்டி, பெரிய தகைமையையுடையாய், நீ சீரிய புண்பட்டபடியால்.—எ - று.

பெருந்தகாய், நீ அருஞ்சமம் ததையத்தாக்கி விழுப்புண்பட்டவாற்றால் நின்னோடெதிர்த்துவந்தோர்தாம் பீடில் மன்னர்விளிந்த யாக்கைதழீஇ நீள்கழன்மன்னர் செலவுழிச்செல்கென வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தனராதலின், இனி நின்னோடெதிர்ப்பாரின்மையின், முரசமுழங்கச்சென்று அமர்கடத்தல் யாவதெனக்கூட்டுக.

சென்றமர்கடத்தல் யாவதென்றதனால் வாள்போழ்ந்தடக்கலுமுய்ந்தனரென்றதனாலும் வந்தோர்பட்டமை விளங்கும்.

* இன்னும் இதற்கு நின் வாளாற் பட்டுத் துறக்கம்பெற்றதேயன்றி வாள்போழ்ந்து அடக்கலுமுய்ந்தனராகலின், அவர்க்குப் பிறர்மேற்சென்று அமர்கடத்தல் என்னபயனுடைத்தென்றுரைப்பினுமமையும்.

இனி, வந்தோராகிய மன்னர் நீ விழுப்புண்பட்டபடியாலேவாள் போழ்ந்தடக்கலும் உய்ந்தார்; இனி நின்னோடெதிர்ப்பாரின்மையின் மேற்சென்று அமர்கடத்தல் யாவதெனக்கூட்டி அதற்கேற்ப உரைப்பாருமுளர்.

தார்தாங்கலுமென்ற உம்மை, இழிவுசிறப்பு.

வாள்போழ்ந்தடக்கலுமென்பது, நினக்குத்தொலைந்தாரென்னும் இழிதகவேயன்றித் தமர்வாள்போழ்ந்தடக்குமிழிவையும் உய்ந்தனரென எச்சவும்மையாய்நின்றது. (கூ)

---

* இப்பொருள், "தோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு, மாற்றாரென்னும் பெயர்பெற், றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே" (புறநா உசு: கசு - அ) என்பதை நினைப்பிக்கின்றது.

(கூச.) ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலி
1 னீர்த்துறை படியும் பெருங்களிறு போல
வினியை பெரும வெமக்கே மற்றதன்
றுன்னருங் கடாஅம் போல
ரு வின்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே.*

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஊரிலுள்ள சிறுபிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட் படியும் பெரியகளிறு அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாம்? அதுபோல எங்களுக்குப் பெரும, இனியை; மற்றதனுடைய அணுகுதற்கரிய மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாதாம்? அதுபோலப் பெரும, நின் பகைவர்க்கு இன்னாய்.—எ - று.

கழாஅலின் என்பதற்குக் கழுவப்படுதலானென்றுரைப்பாருமுளர். (கூச)

க. ஊர்க்குறுமாக்கள்: (புறநா. க0ப : உ); "புலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களும்" மணி. கரு : ருக.

ச. புறநா. ங : ச.

* மு. பாடாண்டிணைத் துறைகளுள், 'இயன்மொழி' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. உக - இளம்); "ஊர்க்குறுமாக்களென்னும் பாட்டினுள் உவமையாகிய பொருளினை யானையும் கடாமுமென்று இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடு கழாலின் நீர்த்துறை படியுமென்னும் அடைகூறி ஊர்க்குறுமாக்கட்போலவாரைத் துன்னருங் கடாத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபடவந்த உவமத்தோற்றமெனப்பட்டது" தொல். உவம. சூ. ஙஉ - பேர்.

(பி - ம்.)—1 'நீர்த்துறைப் படி'

---

(கூரு.) இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
ரு கொற்றுறைக் குற்றில மாதோ வென்று

ச. வேலுக்குப் பீலியணிதல்: "தொடையமை பீலிப் பொலிந்த கடிகை, மடையமை திண்சுரை மாக்காழ் வேல" அகநா. ககச : கஉ - ரு.

ரு. புறநா. உஎஉ : ச; "கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்" நெடுநல். சகூ.

ரு. "அழல்வாய்க் கிடந்த வைவேல்" (சீவக. கபாரு) என்பதற்கு, 'கொல்லலுலையை விரும்பினவேல்' என்று பொருள்கூறி, "கொற்றுறைக்குற்றில" என்பதனை மேற்கோள்காட்டினர் நச்சினார்க்கினியர்.

உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணு
மில்லோ ரொக்கற் றலைவ
னண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே

திணை - பாடாண்டிணை ; துறை - வாண்மங்கலம்.

அதியமான் றூதுவிடத் தொண்டைமானுழைச்சென்ற ஔவைக்கு அவன் படைக்கலக்கொட்டில்காட்ட † அவர் பாடியது.

இ - ள்.—இவைதாம், பீலி அணியப்பட்டு மாலையைச் சூட்டப்பட்டு உடலிடந்திரண்ட வலியகாம்பை அழகுபடச்செய்யப்பட்டு நெய்யிடப்பட்டுக் காவலையுடைய அகன்ற கோயிலிடத்தன ; அவைதாம், பகைவரைக்குத்துதலாற் கங்கும் நுனியுமுறிந்து கொல்லனது ‡பணிக்களரியாகிய குறிய கொட்டிலிடத்தனவாயின எந்நாளும் ; செல்வமுண்டாயின் உணவுகொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரொடுகூடவுண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையையுடைய எம் வேந்தனுடைய கூரிய நுனியையுடையவேல.—எ - று.

பீலியணிந்தென்பதுமுதலாகிய வினையெச்சம் நான்கும் வியன்நகரவென்னும் குறிப்புவினையோடு முடிந்தன ; இவற்றைச் செயவெனெச்சமாகத் திரிப்பினுமமையும்.

'இவைதாம்........குற்றில' என்பது, பழித்ததுபோலப் புகழ்ந்து கூறப்பட்டது.

இவை வியன்நகர ; வைந்நுதிவேலாகிய அவை கொற்றுறைக்குற்றிலத்தனவெனக்கூட்டுக.

வினைக்குறிப்பாகலின், ஆக்கம் கொடுக்கப்பட்டது.

இது, கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (௯௫)

அ. "கற்றவர் கற்றறி பாண ரொக்கல்" திருச்சிற். ௪௦௦.

' மு. வாகைத்திணைத்துறைகளுள், 'பெரும்பகை தாங்கும் வேல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. ௧௭ - இளம்; ஷை ௸ ௸ உக - ந.

† "இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற், குறுதி பயப்பதாந் தூது" என்னும் (௬௯௦) குறளின்படி தம்முடைய அரசனது மேம்பாட்டை வேற்று வேந்தனிடத்து ஔவையார் இசைசெய்யுமாவாயிலாக எடுத்துக்கூறியவன்மை மிகவும் பாராட்டற்பாலது.

‡ பணிக்களரி - வேலைசெய்யுங்கொட்டில்.

---

(௯௬.) அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்

க. அம்பகட்டு மார்பு: புறநா. ௮௮ : ௪.

கிரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோ ணுணுகி
ரு நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றே
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்
கைமான் கொள்ளு மோவென
வுறையுண் முனியுமவன் செல்லு மூரே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவன்மகன்பொகுட்டெழினியை அவர் பாடியது.

இ-ள்.—மலர்ந்த பூவையுடைய தும்பைக்கண்ணியையணிந்த அழகிய வலியமார்பினையும் திரண்டு நீண்ட பெரிய கையினையுமுடைய எம்முடைய இறைவன்மகன் இளையோனுக்குப் பகை இரண்டு தோன்றின; அவற்றுள், பூப்போலும் வடிவினையுடைய மையுண்ட கண்கள் பசப்பத் தோளமெலியத் தன்னைப் பார்த்தமகளிரை நெஞ்சுபிணித்ததனால் அவர் துனிகூருதலின் உள்ளதாயது ஒருபகை; அவன் எடுத்துவிட்டுச்சென்றிருக்கும் ஊர், விழாவில்லையாயினும், உண்டாக்கப்படும் உணவு யாவர்க்கும் தப்பாமற் செம்மறியாட்டுத் தசையைத்தின்ற சுற்றத்துடனே யாறுங்குளமுமுதலாகியவற்றின் துறைநீரை அவன்யானை முகந்துண்ணுமெனக்கருதி அவ்விடத்துறைதலைவெறுக்கும், அவ்வெறுத்ததனாலுளதாயது ஒருபகை, ஆகப் பகைஇரண்டு.—எ-று,

பசந்து நுணுகி என்பனவும் செய்தெனெச்சங்களைச் செயவெனெச்சமாக்கி, அவற்றைப் பிணித்தன்றென்றும் வினையோடுமுடிக்க.

ஓகாரம் அசைநிலை.

இதனால், அவன் இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்புங் கூறியவாறு. (கூசு)

எ. மொசித்தல் - உண்டல்; "மொய்கொண் மாக்கண் மொசிக்க வூண் சுரந்தனள்" (மணி. சகூ: க [illegible]); "மொசிவாயுழுவை" பெருங். உ. க[illegible]: [illegible].

அ. "முனிதல் - வெறுத்தல்; அஃது அருளும் சினமுமின்றி இடைநிகழாததாதல்; 'வாழ்க்கை முனிந்தான்' எ-ம், 'உறையுண் முனியுமவன் செல்லுமூரே' எ-ம் சொல்லுபவாதலின்" தொல். மெய்ப்பாடு. ரு. க -பேர்.

ரு - கூ. புறநா. சரு: கூ - க0.

---

(கூஎ.) போர்க்குறைஇப் புகன்றுகழித்தவா
ளுடன்றவர்காப்புடை மதிலழித்தலி
னூனுற மூழ்கி யுருவிழந் தனவே

வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
௫ நறுங்கள்ளி னூடுனைத்தலிற்
சுரைதழீஇய விருங்காமொடு
மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
[1] குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
௧௦ பருஉப்பிணிய தொடிகழிந்தனவே
மாவே, பரந்தொருங்கு மலைந்தமறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
௧௫ பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மன் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்
௨௦ கிறுக்கல் வேண்டுந் திறையே மறுப்பி
னொல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விட
௨௫ விறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—போரைச்செய்தற்குப் புடைபெயர்ந்து உலாவி விரும்பி உறைகழித்தவாள்கடாம், பகைத்தவாது காவலையுடைய அரணையழித்தலால

---

௪ - ௭. "மடையமை திண்சுரை மாக்காழ்வேல", "மாக்காழ் நெடுவேல" (அகநா. ௧௧௯, ௩ ); "காழ்மண் டெஃகம்" மதுரை. ௭௩௬; மலைபடு. ௧௨௯.

௮ - ௯. புறநா. ௮: ௧௦ - ௧௧; முகரஉகரவீற்றுச்சொற்கள் நீண்டு உகரம் பெறுதற்கு மேற்கோள்; தொல். உயிர். சூ. ௫௬ - ந; இ - வி. ௫. ௬௫ - உரை.

௧௧ - ௩. புறநா. ௬௮: ௫ - ௭.

௧௪. "நிலந்திரைத்தானை" சிலப். ௨௫: ௧௮௭.

௧௫. புறத்திணைமாலை பொன்னாற் செய்யப்படல்: புறநா. ௨௨: ௨௦.

அவர்தசையின்கண்ணே உறக்குளித்துக்*கதுவாய்போய்வடிவிழந்தன; அவன் வேல்கள்தாம், குறும்பர்சேர்ந்த அரண்களைவென்று அப்பகைவரது நறிய மதுவையுடைய நாட்டையழித்தலாற் சுரையோடுபொருந்திய கரியகாம் புடனே ஆணிகலங்கி நிலைகெட்டன; அவன்களிறுதாம், கணையமரத்தால் தடுக்கப்பட்ட கதவைப்பொருது அப்பகைவரது திரண்ட களிற்றையுடைய அரணையழித்தலாற் பரிய பிணித்தலையுடையவாகிய கிம்புரிகள கழன்றன; அவன்குதிரைதாம், பரந்துவந்து ஒக்கப்பொருதவீரரது பொன்னாற்செய்யப் பட்ட பசிய மாலையையுடைய மார்பு உருவழிய ஓடுதலாற் போர்க்களத்தின் கட்பொருதவருந்திய குருதியான் மறைப்பட்ட குளம்பையுடையவாயின; அவன்றானும், நிலவுகலத்தைத் தன்னுள்ளேயடக்கும் கடலபோன்ற படையுடனே பொன்னாணியன்ற தும்பைக்கண்ணியையுடைய, கழல்வடிவாகவும் கண்ணிவடிவாகவும்செய்து செறிக்கப்பட்டு அம்புபடுதலால் துளைபட்ட பரிசையையுடையன்; அவ்விடத்து அவனை வெகுளப்பட்டோர் பிழைத்தல் எங்கேயுளது? பெரியதாளினையும் ஒன்றோடொன்று தெற்றிக்கிடக்கின்ற கதிரினையுமுடைத்தாகிய நெல்லினையுடைய தலைமைபொருந்திய பழையவூர் நுங்கட்கு உரித்தாக வேண்டுவிராயிற் போய் அவனுக்குத் திறைகொடுத்தல் வேண்டும்; கொள்ளீராயின், அதற்கு உடம்படுவானல்லன் வெல்லும்பூசலை யுடையானென்று யான்சொல்லவும் தெளியீராயின், நுமக்கு மெல்லிய தன்மையையும் கழன்மணியினது கனியால் கூறுபடுத்துச் சுருட்டப்பட்ட இனமாகிய சிலவாகிய பனிச்சையையும் குறிய வளையையுமுடைய உரிமைமகளிரதுதோளைப் பிரிந்துறைதல் இயல்பன்று; அதனையறிந்து போர்செய்மின்.—எ - று.

அறிந்தாடுமினென்றகருத்து, அறியிற் போர்செய்தல அரிதென்பதாம்.

குறும்பு - சிற்றரண்.

கடற்றானையினையும்,பொலந்தும்பையினையுமுடைய அவன்றானுமென்க.()

* கதுவாய்போய் - வடுமிக்கு (பெருங். ௧. ௫௫: ௧௭௪ - குறிப்புரை); "அரக்கன் கதுவாய்த் தலைகளபத் தலறியிடக் கண்டான்", "கதுவாய்த் பிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரோ" தேவாரம்.

---

(௯௮.) முனைத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பி
னினக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழுச்செல்லவும்
௫ பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவசைஇய மறுக்குளம்பி
னினநன்மாச் செலக்கண்டவர்

௫ - எ. புறநா. ௯௭: ௧௧ - ௨; "எறிபிண மிடறிய செம்மறுக் குளம்பிற், பரியுடை நன்மா" பதிற். ௯௫: ௧ - ௨.

கவைமுள்ளிற் புழையடைப்பவும்
மார்புறச் சேர்ந்தொல்காத்
க0 தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
கரு நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கா தொய்யென
வுறுமுறை மரபிற் புறநின் றுய்க்குங்
கூற்றத் தனையை யாகலிற் போற்றா
ரிரங்க விளிவதுகொல்லோ வரம்பணைந்
திறங்குகதி ரலம்வரு கழனிப்
உ0 பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

திணை - வாகை. துறை - அரசவாகை; திணை-வஞ்சியும், துறை கொற்றவள்ளையுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—போர்முனைக்கட் பகைவரது மாறுபாடு அடங்கப் பொருதலால் தேய்ந்து குறைந்த நுனையுடைத்தாகிய கோட்டையுடைய நினது இளமாகிய யானை போகக்கண்ட பகைவர் தமது மதில்வாயிற்கதவங்களும் கணையமரங்களும் புதியனவாக இடுதற்குப் பழையன போகவும், பட்டோரது பிணம் உருவழியப் போர்க்களத்தை உழக்கிச்செலுதலால் வருந்திய குருதிக்கறைபொருந்திய குளம்பையுடைய நினது இளமாகிய நல்ல குதிரை போகக்கண்ட அப்பகைவர்தாம் கவைத்தவேலமுள்ளாற் காட்டுவாயில்களை அடைப்பவும், நின்பகைவரது மார்பின்கண் எறிந்தவழி ஆண்டுத்தைத்து நிலலாது உருவிப்போன உறையின்கட் செறித்தலில்லாத நினவேலைக்கண்ட பகைவர் தமது இடுகைக் காம்புடனே கைநீட்டுச் செறிக்கவும், வாள் வாய்க்கத் தைத்த வடுப்பரந்த நின்னுடைய மறத்தையுடையவீரரது வலியைக் கண்ட அப்பகைவர் புண்பட்ட குருதியையுடைய அம்பைத் தூணியகத் தடக்கிக் கொள்ளவும், நீதான் வெண்சிறுகடுகைக் காவலாகப் புகைப்பவும் தரியாது விரைய வந்து பொருந்துதன் முறைமையையுடைய இயல்பிற் புறத்தேநின்று உயிரைக் கொடுபோதும் கூற்றத்தையொப்பை; ஆதலாற் பகைவரிரங்கக் கெடுவது கொல்லோ! வரம்பைச்சேர்ந்து வளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்பக்கத்தையுடைய அவரது அகன்ற இடத்தையுடைய நாடு.—எ - று.

செல்லவுமென்பது முதலாய செயவெனெச்சங்கள் கூற்றத்தனையை யென்னும் வினைகுறிப்பொடு முடிந்தன.

---

கரு. புறநா. உகூ௭: உ.

கக. புறநா. ௭௯: ௫; "இறங்குகதிர்க் கழனியும்" சிலப். கச: உ.

நீ கூற்றத்தனையையாகலிற் போற்றார்நாடு அவரிரங்க விளிவதுகொல் லெனக்கூட்டுக.

கொலலும்; ஓவும் அசைநிலை. (கூஅ)

---

(கூகூ.) அமரர்ப் [1] பேணியு மாவுதி யருத்தியு
மரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்து
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ரு வீகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலா னெடுவே
லெழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்திய மமையாய் செருவேட்
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
கo சென் றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய
வன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
னரணடு திகிரி யேந்திய தோளே.

திணையும் துறையும் அவை.

அவன் கோவலூரெறிந்தானை அவர் பாடியது.

இ - ள்.—தேவர்களைப் போற்றி வழிபடும் அவர்களுக்கு வேள்விக்கண் ஆவுதியை அருந்துவித்தும் பெறுதற்கரிய முறைமையையுடைய கரும்

---

க. மு. பட்டின. உ00; நாலுமிர்தம் கள; பேணென்னும் உரிச்சொல பெட்பின்பொருளில வருதற்கு மேற்கோள்; தொல். உரி. ரு. சூஉ. பேர்; சே; செ-செ-செ சo - ந; இ - வி. ரு. அக - உரை.

உ. இவன் முன்னோர் விண்ணுலகத்திலிருந்து இவ்வுலகத்திற்குக் கரும்பைக்கொண்டு வந்தனரென்பது, புறநா. கூஉ: கக - உக ஆம் அடிகளாலுமறியப்படும்.

ரு. "மாயிரும் புடையலம் மாக்கழல புனைந்து", "இரும்பனம் புடைய லீகை வான்கழல", "இரும்பனம் புடையலொடு வான்கழல சிவப்ப", "புடையலங் கழற்கால" (பதிற். கஎ: அ; சஉ: க; ருஎ: உ; அo: எ); "புடையலங் கழற்கால" அகநா. உகரு: க .

எ. எழுபொறி - ஏழிலாஞ்சனை; இவை ஏழரசர்க்குரியன; இது, "கேழல் மேழிகலை யாளி வீணைசிலை கெண்டை யென்றினைய பல்கொடி" (கலிங்க. கடவுள். கஅ) என்பதனாலும் ஒருவாறு விளங்குகின்றது.

(பி - ம்.)—1 'பேணியாகுதி'

பை விண்ணுலகத்தினின்று இவ்வுலகத்தின்கட் கொடுவந்து தந்தும் கடலுக குட்பட்ட நிலத்திற்கண்ணே சக்கரத்தைநடாத்திய பழையநிலைமைபொருந் திய முறைமையையுடைய நின்குடியிற் பழையோரையொப்பப் பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழல பணைந்தகாலினையும், பெரிய பனந்தோடாகிய தாரினையும் பூநிறைந்த காவினையும் நாடோறும் புதிய ஈரம்புலராத புலாலை யுடைய நெடிய வேலினையுமுடைய எழினாஞ்சலையும் நாடுதலையுடைய ஒரு நாளும் நீங்காத அரசவுரிமையைத் தடையின்றாகப்பெற்றும் அமையாயாய்ப் போரைவிரும்பி ஒலிக்கும் ஓசைபொருந்திய முரசினையுடைய ஏழரசரோடு பகைத்து மேற்சென்று போரின்கண்வென்று நின் வலியைததோற்றுவித்த அற்றைநாளும் பாடுவோர்க்குப் பாட அரியை; இற்றைநாளும் பரணன்பாடி னன், நீ மாறுபாடுமிக்க கோவலூரை அழித்ததுவென்று பிறவும் அரண்களை அழிக்கின்ற ஆழியைத்தாங்கிய நின தோளை.—எ - று.

இன்றும் பரணன்பாடினனென்றது, அவனும் தன்பெருமையாற் பாடி னன்; பிறரால் பாடப்படுதலரிதென்றதாம்.

நின் ஆற்றலேற்றிய அன்றும் பாடுநர்க்கு அரியை; திகிரியேந்திய தோளை இன்றும் பரணன்பாடினனெனக்கூட்டுக.

கழற்காலையும் புடையலையும் காவையும் வேலையுமுடைய நின்முன் னோர் போலத் தாயமெய்தியும் அமையாயென மாறிக்கூட்டுக.

நாடுதல் - ஆய்தல.

'மூவரொடு முரணி' என்றும், 'முரணடுதிகிரி' என்றும் பாடம்.

கொல, பயம். மன், அசைநிலை.

பூவார் கா - வானோர் இவன் முன்னோர்க்கு வரங்கொடுத்தற்கு வந் திருந்ததொரு கா.

இவனுக்குப் பனந்தார்கூறியது, [1] சேரமாற்கு உறவாதலின்.

எழுபொறிநாட்டமென்பதற்கு ஏழரசர்நாடுங்கூடி ஒருநாடாய் அவ் வேழரசர் பொறியும் கூடிய பொறியோடு கூடிநின்று நன்மையும் தீமையுமா ராய்தலெனினுமமையும். (கூ௯)

(பி - ம்.)—1 'உதியவேந்தாதலின்'

---

(க00.) கையது வேலே காலன புனைகழன்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்

---

க. கழல: "ஆடவர் கொடை வீரத்தா லணிவதுகழலென் றுமே" சூடா மணி. எ: உகூ.

உ. மிக்க கோபமுற்றோர்க்கு உடம்பிலவேர்வை தோன்றுதல் இயல்பு: "வெயர் பொடிப்பச் சினங்கடைஇ" (பு - வே. எ: கா) உடம்பு முழுதும் புண்படப் போர்செய்தல வீரர்க்கு இயல்பாதலின், இவனுக்கு மிடற்றுப் புண் கூறப்பட்டது; (புறநா. கஅ௦: ரு-கூ); "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" (குறள், எஎகூ),

வட்கர் போகிய வளரிளம் போந்தை
யுச்சிக் கொண்ட வூசி வெண்டோட்டு
ரு வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
வின்னு மாறாது சினனே யன்னோ
வுய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே
க0 செறுவர் நோக்கிய கண்டன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னவ்வே.

1 திணையும் துறையும் அவை.

அதியமான்தவமகன்பிறந்தவனைக்கண்டானை அவர் பாடியது.

இ - ள்.— கையின்கண்ணது வேலே; காலின்கண்ணன அழிந்த வீரக்கழல்; உடம்பின்கண்ணது வேர்ப்பு; மிடற்றின்கண்ணது ஈரம்புலராத பசியபுண்; பகைவரைத் தொலைத்தற்கு ஏதுவாகிய வாரும் இளைய பனையினது உச்சிக்கண்ணே வாங்கிக் கொள்ளப்பட்ட ஊசித்தன்மையைப் பொருந்திய வெளிய தோட்டையும் வெட்சியினது பெரிய மலரையும் வேங்கைப்பூவுட

"சீறுஞ் செருவிற் றிருமார்பிற் றெண்ணுறையுறு, மாறும் படுதழும்பின் முகத்தோன்" (குலோத்துங்கசோழனுலா) என்பவற்றிலும் இங்ஙனங் கூறப்பட்டிருத்தல் காண்க.

௩ - ௪. "வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன், புட்கைச் சேனை பொலியச் சூட்டி...வஞ்சி சூடுதும்" சிலப். ௨௫: ௧௪௫ - ௬.

௬. மு. பொருந. ௧௦.

௫ - ௭. புறநா. ௨௫: ௨ - ௪.

௭ - ௮. "வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை, கப்முனைச் சிலம்பிற் குழூஉம்" (நற். ௨௦௫); "புலியொடு பொருது சினஞ் சிறந்து வலியோ, டுரவுக்களி றொதுங்கிய மருங்கு", "குயவரி யிரும்போத்துப் பொருத புண்கூர்ந், துயங்குபிடி தழீஇய மதனழி யானை" (அகநா. ௨௭௧, ௩௦௮); "குருஉப்புலி பொருத புண்கூர் யானை" (மலைபடு. ௫௧௦); "வரி வயம் பொருத......சினனே: என்பதனுள், அலைபற்றிச் சினம்பிறந்தது; என்னை? புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போந்தும் அவ்வலைப் புண்டலை நினைந்து சினங்கொள்ளாநின்றதென்றமையின்" தொல். மெய்ப்பாடு. ௫. ௧௦ - பேர்.

௧௦. புதல்வனைப் பிறந்தவுடன் அவன் முகத்தைத் தந்தை பார்த்து மகிழ வேண்டுமென்பது தருமநூல் விதி; இதனை, "மாமுனி தன்னொடு மன்னர் மன்னவ, னேமுறப் புனைப்பட இ வித்தொ டின்பொரு, டாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக்,கோமகார் திருமுகங் குறுகி நோக்கினான்" (கம்ப. திருவவதார. ௧௧௨) என்பதனாலுமறிக.

(பி - ம்.)—1 திணை - வாகை; துறை - அரசவாகை.

னே விரவிச் சுருண்ட கரியமயிர் பொலிவுபெறச் சூடிப் புலியொடுபொருத வலிய யானையையொப்ப இன்னமும் நீங்காது, சினம்; ஆதலால், ஐயோ! பிழைத்தாரல்லர், இவனைச் சினப்பித்தவர்கள்; பகைவரை வெகுண்டு பார்த்த கண் தன்னுடைய புதல்வனைப்பார்த்தும் சிவப்பமையாவாயின.—எ - று.

காலைப் புனைகழலென்பது, வீரத்திற்கும் வெற்றிக்கும் கட்டின; போர் தோறும் வென்று கட்டினவெனவுமாம்.

உம்மை, சிறப்பு.

தோட்டையும் மலரையும் வேங்கையொடுவிரைஇச் சூடிச் செறுவர் நோக்கிய கண் சிறுவனை நோக்கியும் சிவப்பாறா; ஆதலால், அன்னோ! இவனுடற்றியோர் உய்ந்துபோதலரெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

வட்காரென்பது, வட்கவெனக்குறுகி நின்றது; வட்கர் - குற்றமெனினு மமையும். (௧௦௦)

---

(௧௦௧.) ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினுந்
[1] தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
வணிபூ ணணிந்த யானை யியறே
௫ ரதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினு நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
யருந்தே மாந்த நெஞ்சம்
௧௦ வருந்த வேண்டா [2] வாழ்கவன் றாளே.

---

௧-௨. "பன்னா ளிறப்பினுஞ் சோறுதவிர செலினும்" மலைபடு. ௫௬௨.

௧-௩. புறநா. ௫௪: ௨௭-ஆம் அடிக்குறிப்பும், "தலைநா ளன்ன பேணலன்" (நற். ௫௨), "பெருவரை யடுக்கத்துக் கிழவ னென்று மன்றை யன்ன நட்பினன்" (குறுந். ௩௮௫), "தண்டாக் காதலும் தலைநாட் போன்மே" (அகநா. ௩௩௨), "அன்றை யன்ன விருப்பொடு" (குறிஞ்சி. ௨௩௪), "தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து, பலநாள் நிற்பினும்" (மலைபடு. ௫௬௫-௬), "பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை, யென்னாணும் வேண்டுப வென்றிகழ்ப-வென்னானும், வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர், காண்டொறுஞ் செய்வர் சிறப்பு" (நாலடி. ௧௫௯), "தலைநாளை விழைவொடு" (வில்லி - பாரதம், குருகுல. ௭௬) என்பனவும் ஈண்டு அறியற்பாலன.

௯. ஏமாந்த - ஆசைப்பட்ட; (புறநா. ௧௯௮: ௮; பொருந. ௯௪); "இரப்போர்க் காணு தேமாந் திருப்ப" மணி. ௧௪: ௫௦.

௧௦. தாள்வாழ்கவென்றல் மரபு; புறநா. ௭௦: ௧௯; ௪௦௩: ௧௨; ௧௭௧: ௧௫.

(பி - ம்).—1 'தலைநாள் விருப்பினானைப் பேணலன்' 2 'வாழ்கவவன்றாளே'

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாம் ஒருநாட்செல்லேம் இரண்டுநாட்செல்லேம் பலநாளும் பயின்று பலரோடுகூடச்செல்லினும் முதற்சென்றநாட்போன்ற விருப்பத்தையுடையன், அணிகலமணிந்தயானையையும் இயன்றதேரையுமுடைய அதியமான்; பரிசில்பெறுங்காலை நீட்டிப்பினும் நீட்டியாதொழியினும், யானை தனதுகொம்பினிடையே வைக்கப்பட்ட கவளம்போல நமது கையகத்தது, அப்பரிசில்; அது தப்பாது; உண்ணஆசைப்பட்டநெஞ்சே, நீ பரிசிற்கு வருந்தவேண்டா; அவன்றாள் வாழ்வதாக.—எ - று.

அதியமான்விருப்பினனென்ன முன்னேகூட்டுக.

கோட்டிடைவைத்தகவளம்போலவென்றதற்கு யானை வாயிற்கொண்டு நுகருமளவும் கோட்டிடைவைத்தகவளம்போலப் பரிசில் கையகத்தது வெனக; அன்றிக் களிறுகோட்டிடைவைத்தகவளத்தைச் சிறிதுதாழ்த்ததாயினும் அஃது அதற்குத்தப்பாதவாறுபோலப் பரிசில் சிறிது தாழ்ப்பினும் நமக்குத் தருதல் தப்பாதென்பதாக்கி உரைப்பினுமமையும்.

தாளே முயற்சியென்பாருமுளர்.

அருந்தவென்பது, அருந்தெனக்கடைக்குறைக்கப்பட்டது; அருந் தென முன்னிலையேவலாக்கியுரைப்பினுமமையும். (௧௦௧)

---

(௧௦௨.) எருதே யிளைய நுகமுண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
யவலிழியினு மிசையேறினு
மவண தறியுநர் யாரென வுமணர்
௫ கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
விசைவிளங்கு கவிகை நெடியோய் திங்க
ணாணிறை மதியத் தனையையிருள்
யாவண தோநின் னிழல்வாழ் வோர்க்கே.

---

௫. "கீழ்மரத் தியாத்த சேமவச் சன்னவென்றாற்போலும் உவமப் பொருள் இக்காலத்திற்கு ஆகாதாயிற்று" தொல். செய். சூ. ௮௦ - ந.

௬. கவிகை: புறநா. ௫௪ : ௭ - ஆம் அடிக்குறிப்பையும், "தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை" (மலைபடு. ௩௯௯) என்பதன் பொருளையும் பார்க்க.

௬ - ௭. "பன்மீ னாப்பட் டிங்கள்போலப், பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். ௯௦); "பன்மீ னடுவண் பான்மதி போல, வின்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். ௨௧௯ - ௨௦); "பன்மீனடுவட் டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்து" (மதுரை. ௭௬௯ - ௭௦); "பூண்மின்னு மார்பன் பொலிந்தாங் கிருந்தான் விசும்பிற், கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்றமொத்தே" சீவக. ௮௮௨.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவன்மகன் பொகுட்டெழினியை அவர் பாடியது.

இ - ள்.—எருதுகள் இளையனதாம் நுகம்பூண்டலை [1] யறியா ; சகடந் தான் பண்டம் பெரிதாக இடப்பட்டது; ஆதலால், அது பள்ளத்தே இழியினும்மேட்டிலே ஏறினும் அவ்விடத்துவரும் இடையூறறிவார் யார்தானென்று நினைந்து உப்புவாணிகர் அச்சுமரத்தின்கண்ணே அடுத்துக் கட்டப்பட்ட சேமவச்சுப்போன்ற புகழ்விளங்கிய இடக்கவிந்த கையையுடைய உயர்ந்தோய், நீ திங்களாகிய நாள்நிறைந்தமதியத்தை யொப்பை ; ஆதலின், நின் நிழற்கணவாழுமவர்கட்குத் துன்பமாகிய இருள் எவ்விடத்துளளது?—எ-று.

திங்கள் நாணிறைமதியத்தனையையென்றது, அறிவும் நிறைவும் அருளு முதலாகிய குணங்களால் அமைந்தாயென்றவாறும்.

சேமவச்சன்னையென்றது, ஏற்றிழிவுடையவழி அச்சுமுறிந்துழிச் சேமவச்சு உதவினாற்போல நீ காக்கின்றநாட்டிற்கு ஓரிடையூறு உற்றால் அதுநீக்கிக் காத்தற்குரியையென்பதாம்.

'எருதே யிளைய நுகமுண ராவே, சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே' என்பது உவமங்கருதாது சகடத்திற்குவரும் ஏதங்குறித்து உமணர் சேமவச்சுயாத்தற்குக் காரணமாயின்றது. (கOஉ)

(பி - ம்.)—1 'மதியா'

---

(கOங.) ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
ரு செல்வை யாயிற் சேணோ னல்லன்
முனைசுட வெழுந்த மங்குன் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி

---

க-உ. புறநா. க : க; கரு : கச - அ; "நரம்பின் றீர்ந்தொடை பழுனிய, வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப், பண்ணமை முழவும் பதலையும் பிறவுங், கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக், காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்" (பதிற். சுக : க - ரு); "திண்வார் விசித்த முழவொ டாகுளி, நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில், மின்னிரும் பீலி யணி தழைக் கோட்டொடு,......நொடிதரு பாணிய பதலையும்......நேர்சீர் சுருக் கிக் காய கலப்பையிர்" மலைபடு. ங - கங.

ங. மண்டை-ஒருவகையுண்கலம் (வாணாய்); புறநா. ககரு:உ; கஉரு: ங; களசு : உ - ங; "பிழக்பெய் மண்டை" மணி. ரு : சுஉ.

ரு. புறநா. சு : உஉ; உங : கூ - கO; ருள : எ.

பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
க0 மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் [1] பெருப்ப
வலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்கவன் றாளே.

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.
அதியமானெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—காவினது ஒருதலைக்கண்ணே பதலைதூங்க ஒருதலைக்கண்ணே தூளையை அகத்தேயுடைய சிறிய முழாவைத் தூங்கும்பரிசு தூக்கி இடுவோரின்மையின் ஏலாதுகவிழ்ந்த என்மண்டையை இட்டுமேலர்த்தவல்லார் யாரெனச்சொல்லிச் சுரத்திடத்தேயிருந்த சிலவாகியவளையையுடைய விறலி, நீ அவன்பாற்போவையாயின் அவன் சேய்மைக்கண்ணுனல்லன்; முனைப்புலத்தைச் சுடுதலானெழுந்த இருட்சியையுடைய கரியபுகை மலையைச் சூழும் முகில்போல இளங்களிற்றைச் சூழும் பகைவர்தேயத்திருந்தான், பலவேற்படையையுடைய அதியமான்; ஒருபொழுதும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் படுதலான் ஈரம்புலராத மண்டை மெழுகானியன்ற மெல்லிய அடைபோலக் கொழுத்தநிணம் மிக உலகம் வறுமையுறுதலையுடைய காலமாயினும் பாதுகாத்தலைவல்லன்; அவன்றாள்வாழ்க.—எ - று.

பதலையென்பது, ஒருதலைமுகமுடையதொருதோற்கருவி.

பகைப்புலத்தோனென்றகருத்து : பகைவர்பால் திறைகொண்ட பொருளுடையனுதலின், நீ வேண்டியவெல்லாந்தருதல் அவனுக்கு எளிதென்பதாம்.

உம்மை, சிறப்பு.

சேணேனல்லனென்பதற்குப் பரிசில் நீட்டிப்பானல்லனென்று உரைப்பினுமமையும். (க0௩)

---

க0. "நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை" (மதுரை. ௨ ௨ ); "தேனிறாலனை நீஞ்சுவை யின்னடை" சீவக. உ௬எச.

க0 - கஉ. புறநா. உஉ : உ௬ - அ.

(பி - ம்.)—1 'பரிப்பவறத்தற்காலை'

---

(க0௪.) போற்றுமின் மறவீர் சாற்றுது நும்மை
யூர்க்குறு மாக்க ளாடக் கலங்குந்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கு
மீர்ப்புடைக் கராஅத் தன்ன [1] வென்னை

---

உ. ஊர்க்குறுமாக்கள்: புறநா. ௯௪ : முதலாமடிக்குறிப்பைப் பார்க்க.

ச. என்னை: புறநா. எஅ: உ.

க - ச. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை முன்னின்று கன்னின் றவர்" குறள். எஎக.

(பி - ம்.)—1 'எந்தை'

ரு நுண்பல் கரும நினையா
திளையனென் றிகழிற் பெறலரி தாடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நீங்கள் பாதுகாமின், மறவீர், நுமக்கு நாங்கள் அறிவிப்பேம்; ஊரின்கண் இளம்புதல்வர் ஆடக் கலங்குகின்ற காலளவாயின அளவிற்பட்ட நீருள்ளே யானையைக்கொன்றுவீழ்க்கும் இழுத்தலையுடைய முதலையையொக்கும் என் இறைவனது நுணுகிய பலகருமத்தையும் நினையாதே அவனை இளையனென்று மதியாதிருப்பின் நுங்களுக்கு வென்றிபெறுதல் அரிது.— எ - று.

மறவீர், நுமக்குச் சாற்றுதும் ; என்னை இளையனென் றிகழின் வென்றி பெறுதல் அரிது ; ஆதலால், நீர் போற்றுமினெனக் கூட்டுக.

மீப்புடையென்றோதி, மிகுதியையுடையவென்று செப்பினுமமையும். (கOச)

---

(கOரு.) சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
ரு கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினை செலினே.*

திணை - பாடாண்டிணை ; துறை - விறலியாற்றுப்படை.

வேள்பாரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—சிவந்த அணியைப்பெறுகுவை, ஒளிதங்கிய நுதலினை யுடைய விறலி, பெரிய இடத்தையுடைய சுனையின்கண் தழைத்த கரிய

---

சு. கண்ணேணி - கணுக்களிலேயே அடிவைத்து ஏறிச்செல்லும்படி அமைத்துள்ள மூங்கில்; "கலைமகை யற்ற காணபி னெடுவரை, நிலைபெய் திட்ட மால்புநெறி யாக" மலைபடு. நகரு - சு.

எ-அ "வாணி நீரினுந் தீந்தண் சாயலன்" (பதிற். அசு); "வேனிற் புனலன்ன நுந்தை" (கலி. அச); "புனலெந்து சாயல் .....நன்னன்" மலைபடு. ருக - ச.

* மு. புறநா. கOகூ : கசு - அ ; ககக ; கஉஅ : ரு-எ ; கருஅ : க-சு ; உநஎ : சு - எ ; "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" (குறுந். கககூ) ; "பாரி நீம்பெரும் பைஞ்சுனை பூத்த, தேங்கமழ் புதுமலர்" (அகநா. எஅ); விறலியாற்றுப்படைக்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. நகு - ந.

இதழையுடைய நீலத்தினது வண்டுமொய்க்கும் புதியமலரின்கட் குளிர்ந்த அரிகலக்க மழைபெய்யினும் பெய்யாதொழியினும் அருவி கொள்ளிற்கு உழுத பரந்தநிலத்திடை நீரோடுகாலாக ஓடக் கணணையுடைய நெடியமலையினது சிகரந்தோறும் இழிதரும் நீரினும் மிகவினிய மென்மையையுடைய வேள் * பாரிபக்கலே நீ பாடிச்செல்லின்.—எ - று.

விறலி, பாரிவேள்பாற் பாடினை செலின், சேயிழைபெறகுவையெனக் கூட்டுக.

அவன்மலையாதலால், எக்காலமும் அருவி கோடுதோறிழிதருமெனப் பட்டது.

புதுமலர்த் தண்சிதர் கலாவப்பெய்யினும் பெய்யாதாயினும் உழைகாராக் கோடுதோறிழிதரும் அருவிநீரினும் இனியவெனவினையையும்.

எனவே அவன்குணங்கள் தோன்றிநின்றன. (௧௦௫)

---

* பாரியின்பெருமையை "கொடுக்கிலாதானைப்பாரியேயென்று கூறினுங்கொடுப்பாரிலை" (தே. சுந்தர), "களியானை செம்பொன், றரும்பாரி" (தஞ்சை. ௫௭) எனபவற்றாலுமுணர்க.

---

(௧௦௬.) நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் [1] பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினுங்
௫ கடவன் பாரி கைவண் மையே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நல்லனவென்றும் தீயனவென்றும் சொல்லப்படுவன அல்லாத குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம்பூவாயினும் ஒருவனுடையனவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்னா; அதுபோல, யாதும் அறிவில்லாதாரும் புல்லிய குணங்களையுடையாரும் செல்லினும் பாரி கைவண்மைசெய்தலைக் கடப்பாடாகவுடையன்.—எ - று.

'குவியிணர்ப் புல்லிலை யெருக்கம்' என்றது, முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர்.

உம்மை, இழிவுசிறப்பு.

மெல்லியரென்பதற்கு வறுமையுற்றாரென்றுமுரைப்பா. (௧௦௬)

---

௨. "புலலெருக்கங்கண்ணி" (தொல். கிளவி. ௫௬. சே. "ஒல்லேம்"); "துன்னியவூரினும்விரைசார்ந் தறியாத புலலெருக்குஞ் சூடிக் கொண்டாய்" இரத்தினகிரிக்கலம்பகம், ௫௬.

(பி - ம்.)—[1] 'வேண்டேமென்னா'

(க0எ.) பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.*

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ-ள்.—பாரிபாரியென்றுசொல்லி அவனது பல புகழையும்வாழ்த்தி அவ்வொருவனையே புகழ்வர், செவ்விய நாவையுடைய அறிவுடையோர்; பாரியாகிய ஒருவனுமேயல்லன், மாரியுமுண்டு, இவ்விடத்து உலகத்தைப் பாதுகாத்தற்கு.—எ - று.

உலகுபுரத்தற்கு மாரியுமுண்டாயிருக்கப் பாரியொருவனைப்புகழ்வர் செந்நாப்புலவரெனப் பழித்ததுபோலப் புகழ்ந்தவாறு. (கOஎ)

---

* மு. பாடாணடிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு (தொல். புறத்திணை. சூ. உசு - இளம்; ௯௲௫ - ந) மேற்கோள்; "உவமிக்கப்படும் பொருளொடு உவமை தோன்றவருதலேயன்றி உவமையது தன்மைகூறலும் உவமையாதற்குரித்துப் பயனிலை பொருந்திய வழக்கின்கணென்றவாறு; எனவே, இவ்வாறு வருவது பயனிலையுவமைக்கணென்று கொள்க; 'பாரிபாரி.........புரப்பதுவே' இது மாரிபோலும் பாரியது கொடையென்னுது இவ்வாறு கூறும் பொருண்மையும் உவமமாம் எ - று" (தொல். உவம. சூ. ௩௬ - இளம்); "உவமத்தன்மையும்" என்னும் (௯௲௬௪) சூத்திரத்தில், "அது 'பாரிபாரி.....புலவர்'எனனும் பாட்டினுள் உலகளித்தற்கு மாரியுமுணடென மாரியை உவமித்துச் சிறப்பித்துக் கூறுவான் மாரியைச்சிறப்பித்துப் பாட்டுடைத் தலைவனுகியபாரியை உயர்த்துக் கூறுதான்போல இயலபினுன உவமை கூறினுனும்; இது மாரிக்கும் பாரிக்கும் ஓரிழிவிலலை எனனுந் தன்மைபடக் கூறவே அவனுயர்வு கூறுதலிற் பயனிலை புரிந்த வழக்கெனப்படுமென்பது" என்றனர் பேராசிரியர்; விலக்குவமையின்பாறபடுமென்பர் ~~தண்டியலங்காரம்~~ (தண்டி. சூ. ௩௮; இ - வி. சூ. ௬௪௫ - உரை); குறிப்புவமையின்பாற்படுமென்பர் காரிரத்நகவிராயர். (மாறன். சூ.கOO); "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள். உகக) என்பது ஈண்டு அறியத்தக்கது.

---

(கOஅ.) குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி
யார மாதலி னம்புகை யயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத் தவழும்

---

உ. புறநா. ௬௨௦: கஉ.
க - ௩. "புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, யெறிபுனந் தீப்பட்டக் கால்" நாலடி. கஅO.

பறம்பு பாடின ரதுவே யறம்பூண்டு
௫ பாரியும் பரிசில ரிரப்பின்
வாரே னென்னு னவர்வரை யன்னே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—குறத்திமடுத்ததாகப்பட்ட வற்றிய கடைக்கொள்ளி சந்
தனமாதலால் அதன் அழகியதாகியபுகை அதற்கு அருகாகிய சாரற்கண்
வேங்கையின் பூங்கொம்பின்கட் பரக்கும் பறம்பு, பாடுவார்க்குக் கூறிட்டுக்
கொடுத்தலின் அவருடையதாயிற்று; தன்மத்தைப்பரித்துப் பாரியும் பரி
சிலர்வேண்டுவாராயின் அவ்வழி வாரேனென்னுனாய் அவரெல்லையின்கண்ணே
நிற்பன்.—எ - று.

சந்தனப்புகை வேங்கையின்மிசைத்தவழும் பறம்பெனவே, இவையொ
ழியமரமின்மையும், பகைவர்சுடும் புகையின்மையுங்கூறியவாறாயிற்று.(க0அ)

ச - சு. "அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார், என்பு முரி
யர் பிறர்க்கு" குறள். எ௨.

---

(க0௯.) அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் [1] முரசின் மூவிரு முற்றினு
முழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
௫ இரண்டே, தீஞ்சுளைப் பலவின் [2] பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே

க. புறநா. ககக: க.
௨. "ஆளிட்டுக் கடந்து வாளம ருழக்கி, யேந்துகோட்டியானை
வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக் கைவண் பாரி" (அகநா. எஅ)
௩. "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே: இது, விளையுமேயெனற்
பாலது, விளையும்மேயெனஒற்றில்வழிஒற்றை விரித்தவாறு; இதனுட் சிறிய
விலை யெனற்பாலது சிறியிலையெனத் தொகுத்தவாறு" நன்- வ். ௫. க௫௫.
௪. கிழங்கு கீழே தாழவிருத்தலை, வீழ்த்தலென்றல மரபு; "வள்ளி
கீழ் வீழா வரைமிசைத் தேன்றொடார்" (கலி. ௩௯); "கீழ்செல வீழ்ந்த
கிழங்கொடு" (மதுரை. ௫௩௪); "வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழி
தொறும்,விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை" மலைபடு. க௨எ-அ.

(பி - ம்.)—1 'முரசம்' 2 'பழம்வீழக்கும்'

நான்கே, அணிநிற வோரி [1] பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற் [2] றவன் மலையே வானத்து
க௦ மீன்க ணற்றதன் சுனையே [3] யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினுந்
[4] தாளிற கொள்ளலிர் வாளிற் றூரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
கரு சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
[5] விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
வாடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே.*

திணை - [6] நொச்சி ; துறை - மகண்மறுத்தல்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இரங்கத்தக்கது, பாரியுடையபறம்பு, பெருமையைக்கொண்ட முரசினையுடைய நீயிர் மூவேந்தரும் சூழினும் ; உழவரால் உழுது விளைக்கப்படாதன நான்குவிளையுளையுடைத்து ; அவற்றுள், முதலாவது, சிறிய இலையையுடைய மூங்கிலினது நெல்விளையும் ; இரண்டாவது, இனிய சுளையையுடைய பலாவினதுபழம் ஊழக்கும் ; மூன்றாவது, கொழுவிய கொடியையுடைய வள்ளிக்கிழங்கு தாழவிருக்கும் ; நான்காவது, அழகிய நிறத்தையுடைய ஓரிபாய்தலான் அதன்மேற் [7] பவரழிந்து கனத்தநெடிய மலை தேனைப்பொழியும்; அகலநீள உயரத்தால் வானிடத்தையொக்கும், அவனதுமலை ; அவ்வானத்தின்கண் மீனையொக்கும், அம்மலையின்கட்சுனை ; அவ்விடத்து மரந்தோறும் கட்டப்பட்ட யானையையுடையீராயினும் இடந்தோறும் பரப்பப்பட்ட தேரையுடையீராயினும் உங்கள் முயற்சியாற்கொள்ள மாட்டீர் ; நுமது வாள்வலியால் வழங்கானான் ; யான் அறிவேன், அதனைக்

ச - கூ. "கொளற்கரிதாய்க் கொண்ட கூழ்த்தாகி யகத்தார், நிலைக் கெளிதாநீ ரரண" குறள். எசரு.

க-கப. "பீரிவர் யுருமொடு மாரி முற்றிய,பலகுடைக் கள்ளின் வண் மகிழ்ப் பாரி, பலவுறு குன்றம் போலப், பெருங்கவி னெய்திய வருங்காப் பினளே" நற். உருஉ.

கசு. ஒலித்தல - தழைத்தல ; "ஒலிதெங்கின்" பதிற். கக: எ.

* மு. உழிஞைத்திணையின் துறைகளுளொன்றாகிய 'அகத்தோன் செல்வம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. க௦-இளம்; ௳டி ௳டி கஉ - ந.

(பி - ம்.)—1 'பாயமீதழிந்து' 2 'அகன்மலையே வான்கணத்து' 3 ஆங்குப், புலக்...தேரினராயினு, 'மரந்...களிற்றினராயினும்' 4 'வாளிற்கொள்ள லிற்றுளிற்றூரலன்' 5 'விரைபொலி' 6 'காஞ்சி' 7 'பவணழிந்து'

காணும்பரிசை; வடித்து முறுக்கப்பட்ட நரம்பினையுடைய சிறியயாழைப் பண்ணி வாசித்து நறுநாற்றத்தையுடைய தழைத்த கூந்தலையுடைய நும் விறலியர்பின்வர ஆடினிராய்ப் பாடினிராய்ச் செல்லின் அவன் நுமக்கு நாட்டையும் மலையையும் கூடத்தருவன்.—எ - று.

அளிதோவென்பது, ஈண்டுவியப்பின்கண் வந்தது.

ஓரியென்பது, தேன்முதிர்ந்தாற் பரக்கும் * நீலநிறம்; முசுக்கலையெனினும் அமையும்.

குன்றம் தேன்சொரியுமெனவே இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்து மேல் ஏறிநின்றது.

நான்குபயனுடைத்தென்றுவைத்து, நெல்விளையும் பழமூழ்க்கும் கிழங்கு வீழ்க்கும் தேன்சொரியுமென்று அவற்றின் செய்கைதோன்றக் கூறினுனெனினும், கருதியது நெல்லும் பழமும் கிழங்கும் தேனுமாகக்கொள்க.

வான்கணற்றணிமலையேயென்று பாடமோதுவாருமுளர்.

வான்கணற்றென்றது, மலையின் ஓக்கமும் பரப்பும்.

மீன்கணற்றென்றது, சுனையினது பன்மையும், தெளிவும், சிறுமையும்.

ஈண்டுக்கண்ணென்பது, அசைநிலை.

தாரென்றது, படையுழத்தலும் அழித்தற்குவேண்டும் கருவிமுதலாயின இயற்றலும்.

விறலியரென்றது, அவர் உரிமைமகளிரை. (கoகூ)

* "நீனெய்தாமழகோதை" (பரி. கக:கஉச); "நீனிற வோரி பாய்ந்தென நெடுவரை, நேமியிற் செல்லு நெய்க்க ணிறாஅல்" மலைபடு. ருஉச - ரு.

---

(கக0.) [1] கடந்தடு தானை மூவிருங் கூடி
யுடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
ரு [1] யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே.

திணையும் துறையும் அவை.

மூவேந்தரும் பறம்புமுற்றியிருந்தாரை அவர் பாடியது.

இ - ள்.—அஞ்சியாது எதிர்நின்றுகொல்லும் படையினையுடையமூன்று திறத்தீருங்கூடிப் பொருதீராயினும் பறம்புகொள்ளுதற்கு அரிது; முந்நூறு

---

க. கடத்தல் - வருந்தாதெதிர்நிற்றல்; "மூன்றூர்க கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற, வென்வேலான்" கலி. உ.

உ. புறநா. கoகூ : கஈ; ககக : உ.

ங - ச. "உள்ளி யுள்ளமெல்லாமுவ நீயுமவ், வள்ளி யோரின் வழங்கினர்" கம்ப. ஆற்று. ச.

(பி - ம்.)—1 'யானும்'

ஊரையுடைத்து, குளிர்ந்த நல்ல பறம்புநாடு ; அம்முந்நூறூரும் பரிசிலர் பெற்றனர் ; நீயிர்பாடினிராய்வரின், நமக்கு யாமும்பாரியுமுள்ளேம் ; அதுவேயன்றி மலையுமுண்டு.—எ - று.

நீர் பாடிவரினும் பறம்புநாடு பரிசிலர் முன்னேபெற்றமையின், அது நுமக்குக் கிடையாதென்பது கருத்தாகக்கொள்க. (௧௧0)

---

(௧௧௧.) அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே
நீலத், திணைமலர் புரையு முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இரங்கத்தக்கது, பெரிய கரிய குன்றம் ; அது வேலான் வெல்லுதலவேந்தர்க்கோ அரிது ; நீலத்தினது இணைந்தமலரையொக்கும் மையுண்டகண்ணையுடைய கிணையையுடைய விறலிக்கு எளிது, பாடினளாய்வரின்.—எ - று.

அளிதோவென்றது ஈண்டுவியப்பின்கண்வந்தது.

பாடினளாய்வரினென்றகருத்து : அவட்கும் அவ்வாறன்றித் தன் பெண்மையால மயக்கிவென்றுகோடல அரிதென்பதாம். (௧௧௧)

---

௧. புறநா. ௧0௯ : ௧.

௨. புறநா. ௧0௯ : ௧௩ ; ௧௧0 : ௨.

௨ - ௩. "எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்" கலி. ௯௯.

௪. புறநா. ௧0௩ : ௧௫ - ௬.

---

(௧௧௨.) அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவி
னெந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளா
ரிற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
௫ குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

பாரிமகளிர் பாடியது.

இ - ள்.—மூவேந்தரும் முற்றியிருந்த அற்றைத்திங்களின் அவ்வெள்ளிய நிலாவின்கண் எம்முடைய தந்தையையுமுடையேம் ; எம்முடைய மலையையும் பிறர்கொள்ளார்; இற்றைத்திங்களது இவ்வெள்ளியநிலவின்கண் வென்றறைந்த முரசினையுடைய அரசர் எம்முடைய மலையையுங்கொண்டார்; யாம் எம்முடைய தந்தையையுமிழந்தேம்.—எ - று.

திங்களை மாதமென்பாருமுளர்.

ஒருவனை மூவேந்தருமுற்றியிருந்தும் வஞ்சித்துக்கொன்றமையின், 'வென்றெறி முரசின்வேந்தர்' என்றது, ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பாய் நின்றது.(௧௧௨)

---

(௧௧௩.) மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவு
மட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
நட்டனை மன்னோ முன்னே யினியே
௫ பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே
கோறிரண் முன்கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைப் பார்ப்பார்ப்படுக்கக்கொண்டு போவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது.

இ-ள்.—மதுவிருந்த சாடியை வாய்திறப்பவும் ஆட்டுக்கிடாயை வீழ்ப்பவும் அடப்பட்டு அமைந்தொழியாத கொழுவிய துவையையும் ஊனையுடைய சோற்றையும் விரும்பிய பரிசே தரும் மிக்க செல்வமுதிர்ந்து எம்மோடு நட்புச் செய்தாய் முன்பு ; இப்பொழுது, பாரி இறந்தானாகக் கலங்கிச் செயலற்று நீர்வார்கண்ணையுடையேமாய்த் தொழுது நின்னை வாழ்த்திச்செல்லுதும், பெரிய புகழையுடைய பறம்பே, கோற்றொழிலாகச் செய்யப்பட்ட திரண்ட குறிய வளையையணிந்த முன்கையினையுடைய மகளிரது மணங்கமழும்* கரியகூந்தலைத் தீண்டுதற்கு உரியவரை நினைந்து.—எ-று.

பறம்பே, பெருவளம்பழுனி நட்டனை முன் ; இனி நாறிருங்கூந்தற் கிழவரைப் படர்ந்து சேறுமெனக் கூட்டுக.

மன், கழிவின்கண் வந்தது.

வாழியும் ஓவும், அசைநிலை.

ஆனாக்கொழுந்துவையென்பதற்கு விருப்பம் அமையாத கொழுந்துவை யெனினுமமையும். (௧௧௩)

---

௧. புறநா. ௨௬௨ : ௧.

௫. "பல்வளம் பழுனிய" மணி. ௯ : ௨௮.

௬. "நீர்வார் கண்ணேம்" (நற். ௧௭௫); தன்மைப்பன்மை வினைக் குறிப்புமுற்று வினையெச்சக்குறிப்பானதற்கு மேற்கோள் ; நன்-மயிலை. சூ. ௩௫௦ ; நன்-வி. சூ. ௩௫௧ ; இ-வி. சூ. ௨௫௦-உரை.

* "கூந்த லிணைகொடுப்பேம் யாம்" (கலி. ௧௦௧); "தோடேந்து பூங் கோதை வேண்டேன் கூந்தல் தொடேல்" சீவக. ௧௨௨௯.

(கக௪.) ஈண்டுநின் றோர்க்குந் தோன்றுஞ் சிறுவரை
சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற
களிறுமென் றிட்ட கவளம் போல
நறவுப் பிழிந்திட்ட கோதுடைச் சிதறல்
௫ வாரசும் பொழுகு முன்றிற்
றேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைக்கொண்டுபோம் கபிலர் பறம்புநோக்கி நின்று சொல்லியது.

இ - ள்.—இவ்விடத்து நின்றோர்க்குந் தோன்றும், சிறிது எல்லைபோய் நின்றோர்க்குந் தோன்றும், நிச்சயமாக; யானை மென்று போகடப்பட்ட கவளத்தினது கோதுபோல மதுப்பிழிந்து போகடப்பட்ட கோதுடைத்தாகிய சிதறியவற்றினின்றும் வார்ந்த மதுச்சேறொழுகும் முற்றத்தையுடைய தேர் வழங்கும் இருப்பையுடைய உயர்ந்தோனுடைய மலை.—எ - று.

நெடியோன் குன்று தோன்றுமெனறது, புகழான்உயர்ந்து காணாதார்க்கும் செவிப்புலனாகத் தோன்றும், அவனுளனாயகாலத்து; இப்பொழுது பிற மலைபோலக் கட்புலனாகத் தோன்றுமளவாயிற்றெனக் கையற்றுக் கூறியவாறாகக் கொள்க. (கக௪)

சு. தேர்வீசிருக்கை: (புறநா. கக௪:௫); "தேர்வீசு கவிகை" மலைபடு. ௩௬௬.

---

(கக௫.) ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே பல்வே
௫ லண்ணல் யானை வேந்தர்க்
கின்னா னாகிய வினியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒருபக்கம் அருவி ஆர்த்தொழுக ஒருபக்கம் பாணருடைய மண்டைகள் நிரம்ப வாக்கவேண்டி வடிக்க உக்க இனிய கள்ளாகிய தேறல் கல்லையுருட்டியொழுகும், பல வேற்படையுடனே தலைமைபொருந்திய யானையையுமுடைய வேந்தர்க்குக் கொடியோனாகிய இனியோன்மலை; அது கழிந்தது.—எ - று.

குன்றுதேறல் கல்லலைத்தொழுகும்; இனி அது கழிந்ததென்று கூட்டுக.

உ. மண்டை: புறநா. ௧௦௩ : ௩ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

அருவியும் அவனுளனாயின் உளதாவதென்பது கருத்து.

மன், கழிவின்கண் வந்தது.

குன்று தேறல்கல்லலைத்தொழுகுமெனை இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்துமேல் ஏறிநின்றது. (கசுரு)

---

(கசுசு.) [1] தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்
கூம்பவிழ் முழுநெறி புரள்வரு மல்கு
லேந்தெழின் மழைக்க ணின்னகை மகளிர்
புன்மூசு கவலைய முண்மிடை வேலிப்
ரு பஞ்சி முன்றிற் சிற்றி லாங்கட்
பீரை நாறிய சுரையிவர் மருங்கி
னீத்திலைக் குப்பை யேறி யுமண
ருப்பொ யொழுகை யெண்ணுப மாதோ
ேநாகோ யானே தேய்கமா காலை
க0 பயில்பூஞ் சோலை மயிலெழுந் தாலவும்
பயிலிருஞ் சிலம்பிற் கலைபாய்ந் துகளவுங்
கலையுங் கொள்ளா [2] வாகப் பலவுங்
கால மன்றியு மரம்பயம் பகரும்
யாண ரறாஅ வியன்மலை யற்றே
கரு யண்ண னெடுவரை யேறித் தந்தை

---

க. "மலிசுனைக்குவளைத், தேம்பாயொண்பூ" அகநா. ருoஅ.

உ. முழுநெறி - புறவிதழொடிந்தமுழுப்பூ; "கழனி யாம்பன் முழுநெறிப் பகைத்தழை" (அகநா. கருசு); "கழுநீர்ப் பிணையன் முழுநெறி" சிலப். உ : ருசு.

க-உ. "முழுநெறிக்குவளை" (சிலப். உ : கசு) என்பதற்கு, இதழொடிக்கப்படாத குவளையென்று பொருள் கூறி, இவ்வடிகளை மேற்கோள் காட்டினர் அடியார்க்குநல்லார். தழை: புறநா. சுக : க; ருசுo : க; "மணிப்பூம் பைந்தழை தைஇ", "மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி, யரிமல ராம்பலொ டார்தழை தைஇ, விழவாடு மகளிர்" (அகநா. உo, களசு); "இளையிதழ் பறியாப் பைவிரி யல்குற், கொய்தழை தைஇ" (குறிஞ்சி. கoக - உ); "பைந்தழைமாமகளிரொடு" பட்டின. கூக.

அ. ஒய்தல் : புறநா. எo : கஎ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கங. "கால மன்றியு மரம்பயன் கொடுத்தலின்" (மலைபடு. கஙசு); "கால மின்றியுங் கனிந்தன கனி", "தீங்கனி, காலமின்றிக் கனிவது காண்டி ரால" கம்ப. வனம்புகு. சுசு; நாடவிட்ட. கஅ.

(பி - ம்.)—1 'தீம்பெருங்' 2 'வாகிப்'

பெரிய நறவிற் கூர்வேற் பாரிய
தருமை யறியார் போரெதிர்ந்து வந்த
வலம்படு தானை வேந்தர்
பொலம்படைக் கலிமா வெண்ணு வோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இனிய நீரையுடைய பெரிய ஆழ்ந்த சுனைக்கட் பூத்த செங்கழுநீரினது முகையவிழ்ந்த புறவிதழொடித்த முழுப்பூவாற் செய்யப்பட்ட தழையசையுமல்குலையும் மிக்க அழகையுடையகுளிர்ந்த கண்ணிணையும்இனிய முறுவலையுமுடைய மகளிர் புலமொய்த்தகவலையையுடையனவாகிய முள்ளால் நெருங்கியவேலியையும் பஞ்சுபரந்த முற்றத்தையுமுடைய சிறியமனையிடத்தின்கட் பீர்க்குமுளைத்த சுரைபடர்ந்தவிடத்தில் ஈத்திலையையுடையகுப்பையின்கண்ணேறிஉமணர் உப்புச்செலுத்தும் சகடத்தையெண்ணுவர்;நோவேன், யான் ; எனதுவாழ்நாள் கெடுவதாக ; பயின்ற பூவையுடையசோலைக்கண் மயிலெழுந்து ஆடவும் பயின்ற பெரியமலையின்கண்ணேயேறி முசுக்கலைதாவியுகளவும் அம்முசுக்கலையும் நுகர்ந்துவெறுத்தலாற் கொள்ளாவாம்பரிசு காலமன்றுகவும் மரங்களாபலவும் காயும்பழமுமுதலாயினவற்றைவிளைந்து கொடுக்கும் புதுவருவாயொழியாத அகன்ற மலையைப்போலும் பயனுடைத்தாகிய தலைமையையுடைய உயர்ந்த வரையின்கண்ணேயேறித் தம்முடைய தந்தையாகிய மிக்க மதுவினையும் கூரியவேலினையுமுடைய பாரியதுபெறுதற்கருமையையறியாராயப் போரேற்றுவந்த வென்றிப்பட்ட சேனையையுடைய அரசரது பொன்னாற்செய்யப்பட்ட கலமுதலியவற்றையுடையமனஞ்செருக்கிய குதிரையையெண்ணுவார்.—எ - று.

வியன்மலையென்றது, அரைமலையை.

நெடுவரையென்றது, உச்சிமலையை.

இன்னகைமகளிர், நெடுவரையேறி முன்பு வேந்தர்கலிமாவை எண்ணுவோர், இப்பொழுது ஈத்திலைக்குப்பையேறி உமணர் உப்பொயொழுகையை எண்ணுவர் ; இதற்கு நோவேன்யான் ; எனதுவாழ்நாள் கெடுவதாகவென வினைமுடிவு செய்க.

அற்றேயென்னுமேகாரம், அசைநிலை.

வியன்மலை அத்தன்மைத்தெனப் பிறிதொருதொடராக்கி உரைப்பினுமமையும். (ககஎ)

---

கசு - அ. "ஏந்துகோட் டியானை வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக் கைவண் பாரி" அகநா. எஅ.

கூ. புறநா. நடுரு : கச ; "பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (மலைபடு. ருஎச); "புனையும் பொலம்படைப் பொங்குளைமான்" பு - வே. க௦ : முல்லைப்பொதுவியற்பால, உ.

(ககஎ.) மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந்
தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்
வயலக நிறையப் புதற்பூ மலர
மனைத்தலை மகவை யீன்ற வமர்க
ரு ருமா நெடுநிரை நன்புல் லாரக்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே
பிள்ளை வெருகின் முள்ளெயி றுரையப்
பாசிலை முல்லை முகைக்கு
கO மாய்தொடி யரிவையர் தந்தை நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—சனிமீன் புகைகளோடுகூடிப் புகையினும் எல்லாத்திசையினும் புகைதோன்றினும் தென்றிசைக்கண்ணே வெள்ளிபோக்குறினும் வயலிடம் விளைவுமிகப் புதலிடத்துப பூமலர மனையிடத்துக் குழவியையீன்ற மேவிய

---

க-உ. புறநா. நரு : கூ-அ; சனி கரியநிறமுடையனாதலின் மைம்மீனென்றார்; சனிபுகைதலாவது, இடபம் சிங்கம் மீனம் இவற்றோடுமாறுபடுதல்; இவற்றுள், சனி தனக்குப் பகைவீடாகிய சிங்கராசியிற் புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பனென்பதை, "மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய" (தேவாரம்), "அடையார்தமக்கு,மகத்தின் சனியன்னதிர வாணன்" (தஞ்சை. சஅ), "மகத்தில வாழசனியாயினே" (வாயுசங்கிதை, கடவுள். எ), "விசயன் றடமுற் குதவி செய்யாமன், மகத்திற் சனிபோல வளைக்குவம் யாம்" (வில்லி-பாரதம், கக-ஆம்போர். சO) என்பவற்றாலுணர்க; (நக்ஷத்திரங்களுள் மகம், பூரம், உத்தரத்தின் முதற்பாதம் சிங்கராசிக்கு உரியவை.) தூமம், புகைக்கொடியென்றுங் கூறப்படும்; தூமகேதுவென்பதுமிதுவே; இது வட்டம், சிலை, நுட்பம், தூமமென்னுங் கரந்துறை கோட்கள் நான்கனுளொன்று; இதன் தோற்றம் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிக்குமென்பர்; "தூமகேது புவிக்கெனத் தோன்றிய" (கம்ப. மந்தரை சூழ்ச்சி. உக); "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்" (சிலப். கO: கOஉ-ந) என்பதனுரையில இவ்வடிகளைமேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்.

ரு. 'கோஒல் செம்மையிற் சான்றோர்பல்கி யெனவரூஉம் பண்புபொருளி யையபின்றேனும் பெயர்கொளவருதற்பாற்படுதலும்,...இதனாற் கொள்க' தொல். வேற்றுமை. சூ. ரு-ந.

அ. வெருகு-காட்டுப்பூனை; இதனை, "பட்டி ப வேலியும் புதலும் பற்றி, விடக்கிற்கு வேற்றுயிர் கொலவது" (தொல். மரபு. சூ. கூஅ) என்பர் பேராசிரியர்.

அ-கூ. "வெருகுவேட்பச் சிரிப்பனபோன் முகைத்த முல்லை", சீவக. கசுருக.

கண்ணையுடைய ஆமாவினது நெடியநிரை நல்லபுல்லைமேயக் கோல் செவ்விதாகலின் அமைந்தோர் பலராக மழைபிழைப்பறியாத புல்லியநிலத்தின்கண்ணது, இளையவெருகினது கூரியபல்லைப்பொப்பப்பசிய இலையையுடைய முல்லை முகைக்கும் நுணணிய தொழிலையுடைய வளையினையணிந்த மகளிருடைய தந்தைநாடு.—எ - று.

பல்கியென்பதனைப் பலகவெனத்திரிக்க.

அரிவையர்தந்தைநாடு, பெயல்பிழைப்பறியாப் புன்புலத்ததுவெனக் கூட்டுக.

என்றதனாற்போந்தது : புன்புலத்ததாயிருந்ததே ! அது பெயல் பிழைப்பறியாமை, கோல்செம் மையினான் உளதாயதன்றே; அவ்வாறு*கோல்செவ்விதாக நிறுத்தியவனை இழப்பதேயென்று அவன் நாடுகண்டு இரங்கியவாறாகக் கொள்க. (கசஎ)

* "முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி, யொல்லாது வானம் பெயல்", "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர், காவலன் காவா னெனின்" குறள். ருருசு, ருசo.

---

(கசஅ.) அறையும் பொறையு மணந்த தலைய
வெண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரைத்
தெண்ணீர்ச் சிறுகுளங் கீள்வது மாதோ
கூர்வேற் குவைஇய மொய்ம்பிற்
ரு தேர்வண் பாரிதண் பறம்பு நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—பாறையும் சிறுகுவடுங்கூடிய தலையையுடையவாகிய எட்டாம்பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரைகளையுடைத்தாகிய தெளிந்த நீரையுடைய சிறியகுளம் பாதுகாப்பாரின்மையின் உடைவதுபோலும், கூரியவேலையேந்திய திரண்டதோளையுடைய தேர்வண்மையைச்செய்யும் பாரியதுகுளிர்ந்த பறம்புநாடு.—எ - று.

நாடுகுளங்கீள்வதென இடத்து நிகழ்பொருளின்றொழில இடத்துமேல ஏறி நின்றது.

மாதோ, அசைநிலை. (கசஅ)

---

ரு. புறநா. கசுஎ : ரு; உ00: ரு - சு; உoக: உ - ரு; "சுரும்புண, நறவுவா யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரியும்" (சிறுபாண். அஎ-கக); "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும், தொல்லையளித்தாரைக் கேட்டறிதும்" (பழ. நுசுக) ; "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையு, மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத் - தொல்லை, யிரவாம லீந்த விறைவர்போ னீயுங், கரவாம லீகை கடன்" பு - வெ. கூ: நு.

(௧௧௯.) கார்ப்பெய றலைஇய காண்பின் காலைக்
களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்பச்
செம்புற் றீயலி னின்னளைப் புளித்து
மென்றினை யாணர்த்து நந்துங் கொல்லோ
௫ நிழலி னீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்து
மிரவலர்க் கீயும் வள்ளியோ னாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கார்காலத்து மழைபெய்துமாறிய காட்சியினியகாலத்துக் களிற்று முகத்தின்கட் புகர்போலத் தெறுழினது மலர்பூப்பச் செம்புற்றின் கண் ஈயலை இனியமோரோடு கூட்டி அடப்பட்ட புளிங்கறியையுடைத்து; மெல்லிய தினையாகிய புதுவருவாயையுடைத்து, முன்பு; இது அது கெடுங் கொல்லோ! நிழலில்லாத நெடிய வழிக்கணின்ற தனிமரத்தையொப்பமுரசை யுடைய அரசரின்மிகுத்தும் இரவலர்க்கு வழங்கும் வண்மையையுடையவனது நாடு.—எ - று.

பூப்பவென்னும் வினையெச்சம் இன்னளைப் புளித்தென்றும் குறிப்பொடு முடிந்தது.

வள்ளியோனாடு, இன்னளைப்புளித்து; யாணர்த்து; அது நந்துங் கொல்லோவெனக் கூட்டுக.

தெறுழென்றது, காட்டகத்ததொருகொடி; புளிமாவென்றுரைப்பாரு முளர். (௧௧௯)

---

௧. "தலைப்பெய றலைஇய" முருகு. ௯.

௩. புறநா. ௫௧: ௯-௧௦ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க. "சிறுதலைத் தருவின் பழுப்புறு விளைதயிர், ரிதைப்புன வரகி னவைப்புமா ணரிசியொடு, கார்வாய்ப் பொழிந்த வீர்வாய்ப் புற்றத், தீயலபெய் தட்ட வின்புளி வெஞ்சோறு" அகநா. ௩௯௪: ௨ - ௫.

௫. "அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா, நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கி" (நாலடி. ௨0௨), "அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க்களித்தல் அவற்கியல்பு" சீவக. ௩ - ந.

௬ - எ. புறநா. ௧௧௫: ௫ - ௬.

(௧௨0.) வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்
கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்

பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
௫ களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி
மென்மயிற் புனிற்றுப் பெடைகடுப்ப நீடிக்
கருந்தாள் [1] போகி யொருங்குபீள் விரிந்து
கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவர கரியத்
௧௦ தினைகொய்யக் கவ்வை கறுப்ப வவரைக்
கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக
நிலம்புதைப் பழுனிய மட்டின் றேறல்
புல்வேய் குரம்பைக் [2] குடிதொறும் பகர்ந்து
நறுநெய்க் கடலை விசைப்பச் சோறட்டுப்
௧௫ பெருந்தோ ளாலம் பூசன் மேவர
வருந்தா யாணர்த்து நந்துங் கொல்லோ
விரும்பல் கூந்தன் மடந்தையர் தந்தை
யாடுகழை நரலுஞ் சேட்சிமைப் புலவர்
பாடி யானாப் பண்பிற் பகைவ
௨௦ ரோடுகழற் கம்பலை கண்ட
செருவெஞ் சேஎய் பெருவிற னாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வெம்மைமுதிர்ந்த வேங்கைமரத்தையுடைய சிவந்த மேட்டு நிலத்துக் கார்காலத்து மழையான் மிகுந்த பெரிய செவ்வியையுடைய ஈரத்தின்கட் புழுதிகலக்கப் பலசால்பட உழுது வித்தித் தாளியடிக்கப்பட்ட பல கிளையையுடைய செவ்வியின்கட் களையை அடியினின்றும் களைதலான் இலை தழைத்துப் பெருகி மெல்லிய மயிரினையுடைய ஈன்றணிய பேடையையொப்ப ஓங்கி கரிய தண்டுநீண்டு எல்லாம் ஒருங்கு சூல்விரிந்து கதிரினது அடியும் தலையும் ஒழியாமல் மிகக்காய்த்துச் சீரிதாகவிளைந்த புதியவரகையறுக்கத் தினையையரிய எள்ளிளங்காய்கறுப்ப அவரையினது கொழுவிய கொடியின்

ச. பல்லியாடுதல், தாளியடித்தல், ஊடுடித்தலென்பன ஒருபொருட் சொற்கள்; அது நெருங்கி முளைத்த பயிர்களை விலகுருதற்கும் வருத்தமின்றிக் களைபிடுங்குதற்குமாகக் கீழ்நோக்கியுள்ள கூரியபல முனைகளையுடைய பல்லகையின் இரண்டுபக்கத்தும் மேற்புறத்திலுள்ள வளையங்களிற் கட்டிய கயிறுகளைச் சேர்த்துப் பூட்டிய நுகத்தை வாய்கட்டப்பட்டுள்ள எருதுகளின் பிடரியில் வைத்துப்பூட்டியுழச்செய்தல்.

௧௦. "சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்ப" மதுரை. ௨௭௧.

(பி - ம்.)—1 'போக்கி' 2 'குடிதொறும்'

கள வெள்ளைக்காய் அறுக்கும்செவ்வியாக நிலத்தின்கட் புதைக்கப்பட்ட முற்றிய மதுவாகிய தேறலைப் புல்லாலே வேயப்பட்ட சிறியமனையின்கட் டியுள்ள இடந்தோறும் நுகரக்கொடுக்க நறியநெய்யிலே கடலைதுள்ள அதனோடு சோற்றையட்டு ஊட்டுதற்குப் பெரியதோளையுடைய மனையாள் கலம்பூசுதலைப்பொருந்த வருந்தவேண்டாத புதுவருவாயையுடைத்து, முன்பு; இனி அது கெடும்போலும் ! கரிய பலவாகியகூந்தலையுடைய மடந்தையர்க் குத் தந்தையாகிய அசைந்த மூங்கில இமைக்கு தொலிக்கும் உயர்ந்த உச்சியை யுடைய, புலவர் பாடப்பட்டமையாத தன்மையையுடைய பகைவரது புறக் கொடுத்தோடும் வீரக்கழலினது ஆரவாரத்தைக்கேட்டு நாணிப் பின் செல் லாது கண்டுநின்ற போரைவிரும்பிய சேயையொக்கும் பெரிய வென்றியை யுடையவனது நாடு.—எ - று.

வித்தி ஆடியசெவ்வியெனவியையும்.

நந்தியென்பதுமுதலாய வினையெச்சங்கள் விளைந்தவென்னும் பெய ரெசசவினையோடும், அரியவென்பதுமுதலாக மேவரவென்பதீறாக நின்ற வினையெச்சங்கள் யாணர்த்தென்னும் குறிப்புவினையோடும் முடிந்தன.

பகர்ந்தென்பது, பகரவெனத் திரிக்கப்பட்டது.

விசைப்பச் சோறட்டுமேவரவென இயையும்.

செருவெஞ்சேஎய் பெருவிறலது சேட்சிமையையுடையநாடு, யாணர் த்து ; அது நந்துங்கொல்லோவெனக்கூட்டுக.

பெருந்தோளென்பது, பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொ ழித்தொகை.

வெப்புளென வெம்மைக்கு அதுவும் ஒரு வாய்பாடாய்நின்றது. வெம் மை உள்ளும் முதிர்ந்தவெனினுமமையும். (கஉ0)

---

(கஉக.) ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிது
மீத லெளிதே மாவண் டோன்ற
(ரு) லதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. *

---

ந. வரிசை : புறநா. கூ: கசு. (ரு ௭ ௯, ரு உ ௮)

உ - ச. புறநா. உச: ௩0; "அறிவுமடம் படுதலு மறிவுநன் குடை மையும், வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும், பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த" சிறுபாண். உகசு - அ.

ரு. ம. புறநா. ௩ரு: ௩0.

சு. "தத்தம்,வரிசையா னின்புறாஉ மேல்" (நான்மணி.சுஎ); "பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி, னதுநோக்கி வாழ்வார் பலர்" குறள். ருஉஅ.

* ம. பாடாண்டிணைக்குரிய விடைகள் பலவற்றுள், சிறிதென்றவிடை க்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩சு - ந.

திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—ஒருதிசைக்கண் வள்ளியோனாகிய ஒருவனை நினைந்து நான்கு திசையினுமுள்ள பரிசின்மாக்கள்பலரும் வருவர் ; அவர் வரிசையறிதல் அரிது ; கொடுத்தல் மிகவும் எளிது; பெரிய வண்மையையுடைய தலைவ, நீ அவ்வரிசையறிதலை நன்றாக அறிந்தாயாயின், அறிவுடையோரிடத்து வரிசை கருதாது ஒருதரமாகப்பார்த்தலைத் தவிர்வாயாக.—எ - று. (௧௨௧)

---

(௧௨௨.) கடல்கொளப் படாஅ துடலுந ருக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
யழல்புறந் தரூஉ மந்தண ரதுவே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
௫ மூவரு ளொருவன் றுப்பா கியரென
வேத்தினர் தரூஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே
வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
யரிவை தோளள வல்லதை
௧0 நினதென விலைநீ பெருமிதத் தையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கடலாற்கொள்ளப்படாது, அதனைக்கொள்ளுதற்குப் பகைவர் மேற்கொள்ளார், வீரக்கழலணிந்த இலக்கணத்தாற்றிருந்திய நல்ல அடியையுடைய காரி, நினது நாடு ; அது, வேள்வித்தீயைப் பாதுகாக்கும் பார்ப்பாருடையது ; கெடாத செல்வத்தினையும் வென்றிபொருந்திய படையையுமுடைய மூவேந்தருள் ஒருவனுக்கு வலியாகவேண்டுமென்று அம்மூவர் பாணின்றும்வந்தோர் தனித்தனி புகழ்ந்து நினக்குத்தரும்பொருள், நுமது குடியை வாழ்த்தினராய்வரும் பரிசிலருடையது ; ஆதலால், வடதிசைக்கட் டோன்றும் அருந்ததியையொக்கும் கற்பினையும் மெல்லிய மொழியினையுமுடைய அரிவையுடைய தோளமாத்திரையல்லது நின்னுடையதென்று சொல்ல ஒன்றுடையையல்லையாயிருக்கவும் நீ பெரிய செருக்கினையுடையையாயிராநின்றாய் ; இதற்குக்காரணமென்னை?—எ - று.

---

௧ - ௨. காரியின்நாடு, மலையும் மலைசார்ந்த இடமுமாதலின் இங்ஙனங் கூறினார்; இவன் இராசதானி பெண்ணையாற்றங்கரையிலுள்ள திருக்கோவலூரென்று, “துஞ்சா முழவிற் கோவற் கோமான், நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப், பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல்” (அகநா. ௩௫) என்பதனால் தெரிகின்றது.

௪ - ௭. புறநா. ௩௨0: ௧௪ - ௮.

௮ - ௯. “வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினாள்; கலி, ௨.

ஏத்தினர்தரூஉமென்று பன்மையாற்கூறியது, அவ்வேந்தன் அமைச்சரை.

மூவருமா யாரொருவன்; எனக்குத் துப்பாகியரெனவ அம்மூவரும் ஏத்தினர்தரூஉமென்று உரைப்பினுமமையும்.

நாடு அருந்தணரது; கூழ இரவலரது; அரி வதோளளவல்லைத நினக்கு உரித்தாகக்கூறுதற்கு யாதும் இல்லையாயிருந்தது; நீ பெருமிதத்தையுடையயாயிருந்தாயென வியந்துகூறியவாறு. (கஉஉ)

---

(கஉ௩.) நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின்
யார்க்கு மெளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
௫ பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—நாட்காலையே மதுவையுண்டு நாளோலக்கத்துமகிழ்ச்சியை மகிழின், தேர்வழங்குதல யாவர்க்கும் எளிது; கெடாத நல்ல புகழ்விளங்கு மலையன் மதுநுகர்ந்து மகிழாது வழங்கிய பொற்பட்டங்களால் அணியப்பட்ட உயர்ந்ததேர், பயன்பொருந்திய முள்ளூர்மலையுச்சியின்கண்ணுண்டாகிய மழை யினது துளியினும் பல.—எ-று.

இதன்கருத்து: ஏனையோர்கொடை செயற்கையென்றும், இவன் கொடை இயற்கையென்றும் கூறியவாறு. (கஉ௩.)

---

க. "துளங்கு தசும்பு வாக்கிய பசும்பொறித் தேற,லிளங்கதிர் ஞாயிற் றுக் களங்கடொறும் பெறுகுவிர்" (மலைபடு. ௪௬௩-௪.) நாணமகிழ: புறநா. உ௬: ௫.

௫. முள்ளூர் மலையனுடைய தென்பது, "ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்த வொள்வாண் மலையன" (நற். க௭0),"முரண் கொ டுப்பிற் செல்வேல் மலையன், முள்ளூர்க் கானம்" (குறுந். ௩௧உ), "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி" (அகநா. உ0௯) என்பவற்றாலும் விளங்கும்.

௯. புறநா. ௩௪: உ0-உ௩ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

(௧உ௪.) நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
௫ பீடுகெழு மலையற் பாடி யோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நல்லநாளன்றாகப்போகிய புள்நிமித்தம் இடையேநின்று தடுப்பச் செவ்வியன்றாகச்சென்றுகூடிக் கூறுபாடன்றாக முனியும்வார்த்தைகளைச்சொல்லினும் வறிதாக மீள்வாரல்லர், ஒழுங்குபட ஓசைநிறைந்து ஒலிக்கும் அருவியையுடைய பெருமைபொருந்திய மலையையுடையோனைப்பாடியவர்கள்.—எ - று.

மலையற்பாடியோர், வறிதுபெயர்குவரல்லரெனக்கூட்டுக.

அன்றியென்பது, அன்றெனத்திரிந்தது செய்யுளாகலின்.

வறிதென்னும் குறிப்புவினையெச்சம், பெயர்குவரல்லரென்பதனுட பெயர்தலோடு முடிந்தது. வறியரென்றுரைப்பாருமுளர். (௧உ௪)

---

௧. "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்" (மலைபடு. ௪௪௮); "நாளும் புள்ளுங் கேளா வூக்கமொடு, டெங்கோ னேயினை ஞதலின் யாமதுச், செங்கால் வெட்சியுந் தினையுந ரூஉய், மறிக்குரற் குருதி மன்றுதுகளவிப்ப, விரிச்சி யோர்த்தல வேணடா, வெயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே" (தகடூர்யாத்திரை); 'அன்றி' என்னும் குறிப்புவினையெச்சத்தின் ஈற்று இகரம் செய்யுளில உகரமாகததிரிந்து வநததற்கும் (தொல். உயிர்மயங்கு. சூ. ௩௫ - இளம்; ந; நன் - மயிலை. சூ. ௧௭௨; நன் - வி. சூ. ௧௭௩; இ - வி. சூ. ௯௧ - உரை), அது செய்தெனெச்சவினைக்குறிப்பாய் வநததற்கும் (தொல். வினை. சூ. ௩௪ - பேர்; ௫௭, ௫௭, ௫௭, ௩௧-ந; நன் - மயிலை. சூ.௩௪௯; இ - வி. சூ. உ௪௯ - உரை) மேற்கோள்.

உ. திறனன்று மொழிதல: "திறனறிநது சொலலுக சொலலை யறனும், பொருளு மதனினூஉங் கில்" குறள். ௬௪௪.

௧ - ௩. குறுந். ௧௪0; வினையெச்சக்குறிப்பு அடுக்கிவநது ஒருவினை கொண்டதற்கு மேற்கோள்; (நன் - மயிலை. ந. ௩௫௪); இவை அடுக்காகாவென்பர் விருத்தியுரையாசிரியர்; நன் - வி. சூ. ௩௫௫.

௪. புறநா. ௩௯௯: உஉ - ௩.

---

(௧உ௫.) பருத்திப் பெண்டின் பனுவ லன்ன
நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை

---

௧. பருத்திப்பெண்டு: புறநா. ௩உ௬: ௫; "ஆளில பெண்டிர் தாளிற் செய்த, நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள" (நற். ௩௫௩); "நுண்ணிய பலவாய பஞ்சுநுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செய்கை

பருஉக்கண் மண்டையொ டூழ்மாறு பெயர
வுண்கு மெந்தைநிற் காண்குவந் திசினே
௫ நள்ளாதார் மிடல்சாய்த்த
வல்லாளநின் மகிழிருக்கையே
யுழுத நோன்பக டழிதின் றாங்கு
நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே
குன்றத் தன்ன களிறு பெயரக்
௧௦ கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே
வெலீஇயோ னிவனெனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமரந் தாங்கிய
வல்வேன் மலைய னல்ல னாயி
௧௫ னல்லமர் கடத்த லெளிதும னமக்கெனத்
தோற்றோன் றானு நிற்கூ றும்மே
தொலைஇயோ னிவனென
வொருநீ யாயினை பெரும பெருமழைக்
கிருக்கை சான்ற வுயர்மலைத்
௨௦ திருத்தகு சேஎய்நிற் பெற்றிசி னோர்க்கே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சேரமான்மாந்தரஞ்சேரலிரும்பொறையும் சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியும் பொருதவழிச் சோழற்குத் 1 துப்பாகிய தேர் வண்மலையனை வடமவண்ணக்கன்பெருஞ்சாத்தனார் பாடியது.

---

மாணபினால ஒரிழைப படுத்தலாம் உலகத்து நூனூற்றலென்பது" (இறை. சூ. ௧ - உரை); "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா - எஞ்சாத, கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியு மாறு" நன்னூல், சூ. ௨௪.

௧ - ௨. புறநா. ௩௯௯ : ௧௨ - ௪ ; "இழுதி னன்ன வானிணம்" (மலைபடு. ௨௪௪) ; "இன்னுமவ்விலேசானே, 'நெருப்புச்சினந் தணிந்த நிணந் தயங்கு கொழுங்குறை' என்றாற் போலச் சினமில்லாததனை யுள்ளதுபோலக் கூறுவனவுங் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக்கல்லது சுவை தோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படாவென்பது. இது பிறன்கட் டோன்றிய பொருள்பற்றிவரும்" தொல். மெய்ப்பாடு. சூ. ௧௦ - பேர்.

௭. புறநா. ௩௬௮ : ௧௪ ; "அழி - வைக்கோல் ; 'ஆளழிவாங்கியதரி திரிப்ப' இது சிலப்பதிகாரம்; 'உழுத நோன்பக டழிதின் றாங்கு' இது புறநானூறு" தக்க. ௬௫௪ - உரை ; தொல். உவம. சூ. ௨௦ - பேர்.

(பி - ம்.)—1 'துப்பாகியவொருவனும்மலையனை வடவண்ணத்தன் பெரிசாத்தன்'

இ - ள்.—பருத்திநூற்கும் *பெண்டாட்டியது சுகிர்ந்தபஞ்சுபோன்ற நெருப்புத் தன்வெம்மை ஆறுதற்கேதுவாகிய நிணமசைந்த கொழுவியதடிகளைப் பெரிய உடலிடத்தையுடைய கள்வார்த்தமண்டையோடு முறை முறையாக ஒன்றற்கொன்றுமாறுபட உண்பேமாக, எம்முடைய தலைவ, நின்னைக்காண்பேன்வந்தேன், பகைவரது வலியைத்தொலைத்த வலிய ஆண்மையையுடையோய், நினது மகிழ்ச்சியையுடைய இருக்கைக்கண் ; உழுதவலியபகடு பின் வைக்கோலைத்தின்றாற்போல நினது தாளாற்றலாற்செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின் நீ விரும்பியுண்ணும் கள், நல்ல அமிழ்தாவதாக ; மலைபோலும்யானைபட எதிர்நின்று கொன்று வென்றவனும், நம்மை வெல்வித்தோனிவனென்று நின்னையே மகிழ்ந்து சொல்லும் ; வீரக்கழலாகிய அணியாற்சிறந்த செய்ய அடியாலே போர்க்களத்தைக் கைக்கொள்ளவேண்டி விரைந்துவந்த போரைத்தடுத்தவலியவேலினையுடையமலையனல்லனாயின் நல்ல போரைவென்றுதல் நமக்கு எளிதெனத் தோற்றவனும், நம்மைத் தொலைவித்தோன் இவனென்று நின்னையே புகழ்ந்துசொல்லும்; ஆதலால், நீ ஒருவனேயினை, பெரும, பெரிய மழைக்கு இருப்பிடமாதற்கமைந்த உயர்ந்த மலையையுடைய திருத்தக்க சேயபொருப்பாய், நின்னை நட்பாகவும் பகையாகவும் பெற்றோர்க்கு.—எ - று.

பனுவலன்னநிணமென இயையும்.

நிலங்கவர்பென்பது, கவர்வெனத் திரிக்கப்பட்டது. எமது நிலத்தைக் கைக்கொண்டெனினுமமையும்.

தாளாற்றலாற் செய்தபொருளில் நல்லவெல்லாம் பரிசிலர்க்குவழங்கி எஞ்சியது உண்டலான், அமிழ்தின்றாங்கென்றார்.

காணகுவந்தென்பன, ஒருசொன்னீர்மைப்பட்டு உண்குமென்பதற்கு முடிபாய் நின்றன.

உண்குமென்பது சுற்றத்தை உளப்படுத்தி நின்றமையின், பன்மையொருமை வழுவமைதியாய் நின்றது.

மன், கழிவின்கண் வந்தது.

பெரும, சேஎய், வென்றோனும், வெலீஇயோனிவனென நிற்கூறும் ; தோற்றோனும், தொலீஇயோனிவனென நிற்கூறும் ; அதனால், நிற் பெற்றிசினோர்க்கு ஒருநீயாயினையாதலால், நின்மகிழிருக்கைக்கண்ணே உண்கும் காணகுவந்திசின் ; பகடு அழிதின்றாங்கு நீ உண்ணுநறவு நல்ல அமிழ்தாக வென மாறிக்கூட்டுக.

நெருப்புச் சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை என்பதற்கு எரியாது பூத்துக்கிடக்கின்ற தழல்போலும் நிணந்தயங்குகொழுங்குறையெனினுமமையும்.

பருஉக்கண்மண்டையென்பதற்குக் கள்ளையுடைய உடலிடம்பரிய மண்டையெனினுமமையும். (கஉ௫)

---

* பெண்டாட்டி - பெண்மையையுடையாள் ; "ஒருபெண்டாட்டி தமரொடு கலாய்த்து" இறை. சூ. க - உரை

(௧௨௬.) ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீ
ரோடாப் பூட்கை யுரவோன் மருக
௫ வல்லே மல்லே மாயினும் வல்லே
நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்கு
லுயிர்ந்தொலிர் தன்ன தூங்கிரு ளிறும்பிற்
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந
தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய
௧௦ நிலமிசைப் [1] பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற வந்த ணாள
னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடின னதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடற்
௧௫ பொலந்தரு நாவா [2] யோட்டிய வவ்வழிப்
பிறகலஞ் செல்கலா தனையே மத்தை
யின்மை துரப்ப விசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே முள்ளெயிற்
றரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
௨௦ வண்ணல் யானையொடு வேந்துகளத் தொழிய
வருஞ்சமந் ததையத் தாக்கி நன்று
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.
மலையமான் திருமுடிக்காரியை [3] மாறோக்கத்து நப்பசலையார்பாடியது.

இ - ள்.—பகைவருடைய யானையினது பட்டத்திற் பொன்னைக்கொண்டு பாணரது தலை பொலியும்படிசெய்து வாடாத பொற்றாமரையைச்சூட்

---

௪. புறநா. ௧௬௬ : ௭ ; "ஓடாப்பூட்கை" புறநா. உ௪௭

௫-௭. "கார்வண்டு, தொக்கிருந்தா லொத்துழலும் தூங்கிருள்வெய் யோற் கொதுங்கிப், புக்கிருந்தா லன்ன பொழில்" நள. சுயம். உஉ.

௮. புறநா. உ௨௬ : ௧ ; "பல் றக்குரலருவி" (பதிற். ௭௦) ; "பறை யிசையருவி" (சிலப். உ௫ : உ௮) ; 'இசை' என்னும் உரிச்சொல் ஒலித்தற் பொருளிற் பண்பில வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. ௫. ௪௫௮ ; நன். வி. ௫. ௪௫௬.

(பி - ம்.)—1 'பிறந்தமக்கள்' 2 'ஓட்டியவழிப்பிறர்கலஞ்' 3. 'மாறோ கத்து'

டிய சிறந்த தலைமையினையும் புறக்கொடாத மேற்கோளினையுமுடைய வெ
ய்யோன்மரபினுள்ளாய், ஒன்றைக்கற்றறியேமாயினும் அறிவேமாயினும் விரைய
நின்னிடத்துப் புகழைச் சொல்லுவேமாயின், இராப்பொழுது தான் ஓரிடத்தே
உறங்குவதுபோன்ற செறிந்த இருளையுடைய சிறுகாட்டையும் பறையொலி
போலும் ஒலிபொருந்திய அருவியையுமுடைய முள்ளூர்க்குவேந்தே
அழித்தற்கரிய தன்மையையுடைய நின்சுற்றத்துடனே பெருக நிலத்தின
மேல் மிக்க மாந்தரெல்லாரினும் அறிவின்கண்மாசற்ற * அந்தணனாகிய
கபிலன் இரந்துசெல்லும்புலவர்க்கு இனிப்புகழ்தற்கு இடனில்லையாகப் பர
ந்து புகழ்நிற்கப்பாடினன்; அதனைக் கொண்டு சினமிக்க சேனையையு
டைய சேரன் மேலைகடலின்கட் பொன்னைத்தரும் நாவாய்செலுத்திய அவ்
விடத்து வேறுசில மரக்கலம் போகமாட்டாத அத்தன்மையையுடை
யேமாயும் எமது மிடிதீர்க்க நின்புகழ்கொண்டுவந்த நினது வண்
மையிலே சில சொல்லத்தொடுத்தனம், யாங்கள்; மூடுபோலும் பலவினை
யுடைய பாம்பையெறியும் இடியேறுபோல முரசு கிளர்ந்தொலிப்ப
பத் தலைமையையுடைய யானையுடனே அரசுபோர்க்களத்தின்கட்பட்ட
பொறுத்தற்கரிய பூசலைச் சிதறவெட்டிப் பெரிதும்பொருந்தாதபகைவரைத்
தடுக்கும் பெண்ணையாற்றுப்பக்கத்தையுடைய நாட்டையுடையோய்.—எ-று.

உரவோர்மருக, பொருந, நாடுகிழவோய், நின்வயிற்கிளக்குவமாயின்,
அந்தணன் கிளையொடும்பொலிய இசைநிற்பப்பாடினன்; அதற்கொண்டு
பிறர்கலம்செல்லாத அனையேமாயும், இன்மைதீர்த்தலால இசைதரவந்த
நின்வண்மையிற் சிலதொடுத்தேம்யாமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மக்கட்கெல்லாமென்பது, ஐந்தாவதன்மயக்கம். மக்கட்கெல்லாம் ஒக்க
வெனினுமமையும்.

வண்மையிற்றொடுத்தனமென்பதற்கு நின்வண்மையால் வளைப்புண்
டனமெனினுமமையும். (கஉசு)

*அந்தணனாகிய கபிலன் : புறநா : உ௦௦ : கஉ ; உ௦க : எ - பார்க்க.

(கஉஎ.) களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்

பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்

களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்

கான மஞ்ஞை கணனொடு சேப்ப

ரு ஈகை யரிய விழையணி மகளிரொடு

சாயின் றென்ப வாஅய் கோயில்

க. புறநா. கசரு: ரு; "கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை
நிறுப்ப" (நெடுநல். எ௦); "கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. ருஙச.

க-சு. "ஒப்புரவி னாலவருங் கேடெனி னஃதொருவன், விற்றுக்
கோட் டக்க துடைத்து" (குறள். உஉ௦); "வள்ளன்மையில்லாதான் செல்
வத்தின் மற்றையோ, னல்குரவே போலு நனிநல்ல" நீதிநெறி. சுஎ.

சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுக ழொரீஇய
௧0 முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே.*

திணை - அது ; துறை - கண்டநிலை.

ஆயை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

இ - ள்.—களாப்பழம்போலும் கரிய கோட்டையுடைத்தாகிய சிறிய யாழைக்கொண்டுபோம் இனிய பாட்டைவல்லபாணர் பரிசிலபெற்றுக் கொண்டுபோனார்களாக, களிறுகள் இலையாகிய புல்லிய பக்கத்தையுடைய நெடியதறியின்கண்ணே காட்டுமயில்கள் தத்தம் இனத்தோடு தங்கப் பிறிதோரணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தையணிந்த மகளிருடனே பொலிவழிந்துசாய்ந்ததென்று சொல்லுப, ஆயுடையகோயிலை ; நுகர்தற்கினித்தாகிய தாளிப்பையுடைய அடிசிலைப்பிறர்க்கு உதவலின்றித்தம்முடைய வயிற்றையேநிறைத்துச் சொல்லுதற்கமைந்தமேம்பட்டபுகழைநீங்கிய முரசுபொருந்திய செல்வத்தினையுடைய அரசர்கோயில், இதனை யொவ்வாது.—எ - று.

என்றதன் கருத்து : செல்வர்நகர், பெருந்திருவுடைமையிற் சிறந்ததுபோன்றிருப்பினும் ஆய்கோயில்வறிதெனினும் இஃது அதனினுஞ்சிறந்ததென்பதாம்.

ஆய்கோயில் சாயின்றென்ப; ஆயினும், முரசுகெழுசெல்வர்நகர் இதனையொவ்வாதெனக்கூட்டுக. (௧உ௭)

---

௭ - ௧0. "நறியவை வயலவர் நாவி னீர்வர, வுறுபத நுங்கிய வொருவனுகையான்" கம்ப. பள்ளியடை. ௧௧௧.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்திக்கொடாஅர்ப்பழித்தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. உ௯ - இளம்; டி. டி. சூ. ௩௫ - ந.

---

(௧உ௮.) மன்றப் பலவின் மாச்சினை மந்தி
யிரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனிசெத் தடிப்பி
னன்னச் சேவன் மாறெழுந் தாலுங்
௫ கழறொடி யாஅய் மழைதவழ் பொதியி

---

௧ - உ. புறநா. அ௯ : ௭ - அ.

௩. செத்து - கருதி ; "தூவற்கலித்த புதுமுகை யூன்செத், தறியாதெடுத்த புன்புறச் சேவல்" மலைபடு. ௧௪௬ - ௭.

௫. மு. குறுந். அ௪ : ௩.

வாடுமகள் குறுகி னல்லது
பீடுகழு மன்னர் குறுகலோ வரிதே.

திணை - அது ; துறை - வாழ்த்து ; இயன்மொழியுமாம்.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஊர்ப்பொதுவின்கண் பலவினது பெரிய கோட்டின்கண் வாழும் மந்தி பரிசிலர் தூக்கிவைக்கப்பட்ட பிணிப்புப்பொருந்திய மத்தளத்தினது ஓசையினிய தெளிந்தகண்ணைப் பலாப்பழமென்றுகருதித் தட்டின விடத்து அதன்கண் வாழும் அன்னச்சேவல் அவ்வோசைக்குமாறாகவெழுந்து ஒலிக்கும் கழலவிடப்பட்ட வீரவளையையுடைய ஆயது மூங்கில்படியும் பொதியின்மலை, ஆடச்செல்லுமகளிர் அணுகினல்லது பெருமைபொருந்திய அரசரணுகுதலரிது.—எ - று.

இது, கொடைச்சிறப்பும் வென்றியும் கூறியவாறாயிற்று. (கஉஅ)

---

கூ - எ. புறநா. ருச : ச - கச ; கoகூ : கரு - அ.

---

(கஉகூ.)[1] குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை யயரும்
தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவ
ரு ஆஅ யண்டிர னடுபோ ரண்ண
லிரவலர்க் கீத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பி னானா
தொருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

திணை - அது ; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

---

உ. மதுவை மூங்கிற்குழாயில வார்த்து முற்றச்செய்தலை, "நெடுங்கணுடைமைப் பழுனிய கடுந்திறற், பாப்புக் கடுப்பன்ன தோப்பி", "அம்பணை விளைந்த தேக்கட் டேறல" (அகநா. நூசஅ, நூகூஅ), "நீடமை விளைந்த தேக்கட் டேறல" (மநந. கக௫) என்பவற்றாலுமறிக.

கூ. பரிசிலர்க்கு யானை கொடுக்கப்படுதலை, புறநா. கநo, கநக, கந௫, க௫க - ஆம் பாட்டுக்களாலும், "இரவலர் வருஉ மள்ளவை யண்டிரன், புரவெதிர்ந்து தொகுத்த யானைபோல" (நற். உநஎ)," துடியடியன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென"(பொருந. கஉ௫ - கூ), "குன்றுங் கியபொன்னும் வேழக்குழாமுங் கொடைபுகழ்ந்து, சென்றோர் முகக்கும்" (தஞ்சை. கசகூ) என்பவற்றாலுமறிக.

(பி - ம்.)—[1] 'குறையிறை'

இ - ள்.—குறிய இறப்பையுடைய சிறிய மனையின்கட் குறமக்கள் வளைந்த மூங்கிற்குழாயின்கண் வார்த்திருந்து முதிர்ந்த மதுவை நுகர்ந்து வேங்கைமரத்தையுடைய முற்றத்தின்கட் குரவைக் கூத்தையாடும் இனிய சுனையை யுடைத்தாகிய பலாமரத்தையுடைய பெரிய மலையையுடையோன், ஆயாகிய அண்டிரன், கொல்லும் போரைச்செய்யும் தலைவன், அவன் இரப்போர்க்குக் கொடுக்கப்பட்ட யானைத்தொகைபோல, மேகமறைத்தலின்றி ஆகாயம் பலமீனையும் பூக்குமாயின் அமையாது, பரிதியிடத்தும் கரிய இடம் இல்லையாகப் பெருக வெண்மையைச் செய்யுமாயின் அம்மீன்றொகை அதற்குத் தப்பாது.—எ - று.

யானையிற் பிழையாதெனவு இயையும். மன், அசை. (கஉக)

---

(கரு௦.) விளங்கு[1]மணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்
கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
(ரு) வண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—விளங்கிய மணிகளானியன்ற வளைந்த பூணாகிய ஆரத்தையுடைய ஆயே, நினது நாட்டின்கண இளையபிடி ஒருகருப்பம் பத்துக்கன்று பெறுமோதான்? நின்னையும் நின்மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு இனிய முகத்தை ஒளியாது வெளிப்படுத்திக் காதலித்து நீகொடுத்த தலைமையையுடைத்தாகிய யானையை யெண்ணின், நீ கொங்கரை மேலகட

---

க. புறநா. உ௦௦ : அ; ளபல ஒழிந்த யனைப்புள்ளி சிறுபான்மை விளியேற்றதற்கும், (தொல். விளி. ந. கஉ - ஞளம்; சே, கல்; ந), யகாரவீற்றுயர்திணைப்பெயர் அளபெடையாகிய விளியுருபேற்றதற்கும் (நன் - மயிலை. சூ. ௩௦௬) மேற்கோள்.

க - உ, "விளங்குமணிக் கொடும்பூ ணாஅய்...பத்தீனும்மோ: என்புழி யகரம் விளியேற்றதாலெனின் அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சியின்மையின் எடுத்தோதிற்றிலராயினும் 'செய்யுணமருங்கின' என்னுமதிகாரப்புறனடையான் இலக்கணவெவலாமமைத்துக் கொள்க" (தொல். விளி. சூ. ௩ரு-பேர்) ; யகாரவீறு சேய்மைக்கண் அளபெடுத்தல விளியுருபாமெனக் கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினார் ; இ - வ். சூ. உகஉ - உரை.

௩ - ரு. புறநா. கஉக : ச - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.)—1 'மணிப் பசும்பூணாய்', 'மணிக்கொடும் பூணாய்'

ஓட்டப்பட்ட நாளில் அவர் புறக்கொடுத்தலால் தம்மிடத்தினின்றும் பெயர்த்துப் போகடப்பட்ட வேலினும்பல.—எ - று.

தலைப்பெயர்த்திட்டவேலென்றகருத்து: படைக்கலமில்லாதாரை ஏதஞ்செய்வாரில்லையாதலின், தம்முயிர்க்கு அரணாகப் பெயர்த்திடப்பட்ட வேலென்பதாம்; அன்றி, புறக்கொடுத்தோடுகின்றார் முன்னோக்கிச் சாய்த்துப் பிடித்தவேலென்பாருமுளர்.

இதனாற் கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (கூ0)

---

(கூக.) மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முகிலினம் சென்றுதங்கும் உயர்ந்தமலைக்குத் தலைவன், சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியினையும் வாய்த்தவாளினையுமுடைய அண்டிரனது மலையைப் பாடினவோ களிறுகளை மிகவுமுடைய இந்தக் கவினையுடைய காடு?—எ - று.

யானைக்குப் பிறப்பிடமாயிருக்கிற காட்டினும் அண்டிரனைப்பாடினோர், யானை மிகவுமுடையரென்று அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறு.

ஆய்க்கு அண்டிரனென்பதும் ஒரு பெயர். (கூக)

ச. புறநா. கஉகூ : கூ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

---

(கூஉ.) முன்னுள்ளு வோனைப் [1] பின்னுள்ளி னேனே
யாழ்கெழு மனைமகள் போழ்கென் றுவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி
ரு குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்றோ யிமயந்

ச. "கவரி...நரந்தங்கனவும்" பதிற். கக.

ரு. புறநா. ககசு : க ; "குவளையம் பைஞ்சுனை" மலைபடு. உரு

(பி - ம்.)—1 'பின்னுள்ளின் யானே'

தென்றிசை யாஅய் குடியின் றாயிற்
பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேனா யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திட்டுப்போவதாக; அவனையன்றிப் பிறரைப்புகழ்ந்தநாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன்புகழன்றிப் பிறர்புகழைக்கூறக்கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறுபோலத் தூர்வதாக; நரந்தையையும் நறியபுல்லையு மேய்ந்த கவரிமாக் குவளைப்பூவையுடைய பசிய சுனையின்நீரை நுகர்ந்து அதன் பக்கத்ததாகிய தகரமரத்தினது குளிர்ந்தநிழலின்கண் தனது பிணையுடனே தங்கும் வடதிசைக்கண்ணதாகிய வானைப்பொருந்தும் இமயமலையும் தென்றிசைக்கண் ஆய்குடியும் இல்லையாயின் இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ்மேலதாகிக் கெடும்.—எ - று.

1 ‘முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளினேனே’ என உள்ளம் ஆழ்தற்குக்காரணங்கூறினமையால், பிறரைப்புகழ்ந்தநாவெனவும், பிறர்புகழ்கேட்ட செவியெனவும் ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்துரைக்கப்பட்டது.

அன்றி வடதிசை, தேவருலகோடு ஒத்தலான், இமயத்தால் தாங்க வேண்டுவதில்லை; தென்றிசைக்கண் ஆய்குடி தாங்கிற்றில்லையாயின், இவ்வுலகுபிறழும்; அதனால் இமயத்துக்கு முன்னுள்ளப்படுவோனைப் பின்னுள்ளினேனாதலால், எனதுள்ளம் ஆழ்க; எனது நாப்போழ்க; எனதுசெவி தூர்வதாக வென்றதாக்கி உரைப்பினுமமையும்.　(கஙஉ)

அ. ‘திசை’ என்னுஞ்சொல் ஏழாம்வேற்றுமையுருபாக வந்ததற்கு மேற்கோள்; நன்-மயிலை. ரு. ௨0க.

(பி - ம்.)—1 ‘இமயத்திற்கு ஒருதரமாக உலகத்தைத் தாங்கும் ஆயுளனாகவும் பிறரிசையைக்கேட்ட செவிதூர்க; கேட்டுப் பிறரை நினைத்தவுள்ளம் ஆழ்க; நினைத்துப பிறரைப்பாடியநாப் போழ்வதாகவென உள்ளமொழிந்தவற்றிற்கும் காரணம் வருவித்துக்கொள்க’.

(கஙங.) மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
ரு கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி

ரு. “மயிலகண் டன்ன மடநடை மகளிர்” (முருகு. ௨0ரு); “நன்மாமயிலின் மென்மெல வியலி” மதுரை. ருௐஅ.

மாரி யன்ன [1] வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே.*

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—மெல்லிய இயலினையுடைய விறலி, நீ நல்லபுகழைச் செவியாற் கேட்பினல்லது அவன்வடிவைக் கண்டறியாய்; காண்டலை விரும்பினையாயின், மாட்சிமைப்பட்ட நினது மணம்வளரும் கூந்தலிலே வரையிடத்துக் காற்றுவந்தசைப்பப் பீலியையுடைய மயில்போலக் காட்சியுண்டாக நடந்து மழைபோன்ற வண்மையையுடைய தேரினையுடைய வேள் ஆயைக் காணச்செல்வாயாக.—எ - று.

'விரைவளர் கூந்தல் வரைவளி யுளர' என்றது, 'கொண்டைமேற்காற்றடிக்க' என்பதொருவழக்குப்பற்றி நின்றது.

என்றதனாற் பயன்: பிறிதொன்றால் இடையூறில்லையென்பதாம்.

ஆய் மாரியன்னவண்மையனாதலின், விறலியை அம்மாரியைக்கண்ட மயில்போலக் களித்துச்செல்லென்றவாறும்.

யாழநின்னொன்று பாடமோதுவாருமுளர். (கஙங)

---

சூ. 'அன்ன' என்பது பயனுவமத்தின்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். உவம. சூ. கங - இளம்; இ - வி. சூ. ௬௪உ - உரை.

சூ - எ. "மாரி யன்ன வண்மைத், தேர்வே ளாயைக் காணிய சென்மே: என்பது பயனுவமம்; என்னை? மாரியான் விளைக்கப்படும் பொருளும் வண்மையாற்பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு" (தொல்.உவம. சூ. க - பேர்; இ - வி. சூ. ௬௩௯-உரை); உவமையினது உயர்ச்சியாற் பொருட்கு உயர்ச்சியாயிற்று என்பதற்கும், தொன்றுதொட்டு வரும் உவமைக்கும் மேற்கோள்; (மாறன். ௬௨, ௬௫ - உரை); 'ஈன்றவெம்' என்னும் கல்லாடச் செய்யுளில், 'மறிதிரை......மேனியை' (அடி. கஉ - அ) என்பதன் விசேடவுரையில் இவ்வடியைப் பயவுவமத்தின் வகையென்று மேற்கோள் காட்டுவர் மயிலேறும்பெருமாள்பிள்ளை.

*டு.பாடாண்டிணைத்துறைகளுள் விறலியாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை சூ. ௩0 - இளம்; ௩௬ - ந.

(பி - ம்.)—1 'வண்கை'

(கஙச.) இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை [1] வணிக னாயலன் பிறருஞ்

---

க - உ. புறநா. கசக: கச - ரு ; "ஏற்றகை மாற்றாமை யென்னாத்
தாம் வரையா, தாற்றாதார்க் கீவதா மாண்கடன்" (நாலடி. ௬௮); "இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு, மும்மையே யாமென்பா ரோரார் காண்" (திணைமாலைநூற்றைம்பது, கஉங) ; "வறியார்க் கொன்றீவதே யீகைமற் றெல்லாங் குறியெதிர்ப்பை நீரதுடைத்து" (குறள், உஉக)

(பி - ம்.)—1 'வாணிகனு அயலல்லன் பிறவும்'

சான்றோர் சென்ற நெறியென
வாங்குப் பட்டன் றவன்கைவண் மையே *

திணை - அது, துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—இப்பிறப்பிற் செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவுமென்று கருதிப் பொருளை விலையாகக்கொடுத்து அதற்கு அறங்கொள்ளும்வணிகன் ஆயல்லன்; அமைந்தோர் பிறரும் போயவழியென்று உலகத்தார்கருத அந்த நற்செய்கையிலே பட்டது, அவனது கைவண்மை.—எ - று.

அன்றி, ஆய் அறவிலைவணிகனல்லன்; பிறரும் சான்றோர்சென்ற நெறியெனக்கருதி அச்செய்கையிலேபட்டதன்று, அவன் கைவண்மை யென்றுரைப்பாருமுளர். இதற்குப் பட்டன்றென்பது மறைப்பொருள்படாமையின், பட்டதன்றென்பது பட்டன்றென விகாரமாகக்கொள்க. (கஙச)

"வைப்பாலே வள்ளல் வழங்குவானை வாணிகன்" (சிறுபஞ்ச. ருச); "ஆற்று நர்க்களிப்போ ரறவிலை பகர்வோர்" (மணி. கக: கூ-); "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா லும்பப், பெறுநன்றி மன்றவும் பெரிதென் - றுறு நன்றி, தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே, வானவா முள்ளத் தவர்" யா - வி. எழுத். ரு. ச - ம் மேற்.

* மு. 'இது பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென்றமையின், அய லோரையும் அடுத்தூர்ந்தேத்தியது' (தொல். புறத்திணை. சு. ஙரு) என்பர் நச்சினார்க்கினியர்.

---

(கஙரு.) கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
யருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்
வளைக்கை விறலியென் பின்ன ளாகப்
ரு பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்

க - ச. "உயர்ந்தோங்கு பெருமலை யூழிற்றேறலின், மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடிக், கணங்கொள் தோகையிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்குவளை விறலியர்" மலைபடு. சக - சா.

சா. "வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனும் சிறந்த தொழிலு, மறியக் கூறி யாற்றுழி வழங்கல்", "கண்கூடு கண்வரி யுள்வரி புறவரி, கிளர்வரி யென்றோ டொன்றிய வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடுத்துக்கோ ளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" சிலப். அ: எ, கoஅ - உரை, மேற்.

படுமலை நின்ற பயங்கெழு சீறியா
ழொல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி
௧௦ வந்தனெ னெந்தை யானே யென்று
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை யிரியல் போக்கு
மலைகெழு நாடன் மாவே ளாஅய்
களிறு மன்றே மாவு மன்றே
௧௫ யொளிறுபடைப் புரவிய தேரு மன்றே
பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயி னெமதெனப்
பற்ற றேற்றாப் பயங்கெழு தாயமொ
டன்ன வாகநின் னூழி நின்னைக்
௨௦ காண்டல் வேண்டிய வளவை வேண்டா
ருறுமுரண் கடந்த வாற்றற்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—புலியியங்கும் சிகரமுயர்ந்த நெடியமலையின்கண் ஏறுதற் கரிய பிளப்பின்கட் சிறியவழியையேறுதலான் வருத்தமுற்று உடல்வளைவைப் பொருந்திய பயில அடியிட்டு நடக்கின்ற மெலலியநடையினையுடைய வளையை யணிந்த கையையுடைய விறலி எரியின்றோவரப் பொன்னைக் கம்பியாகச் செய்தாற்போன்ற முறுக்கடங்கிய நரம்பினையுடைய வரிப்பொருண்மை யோடேயிலும் பாட்டு நிலைதோறும் மாறிமாறி யொலிப்பப் படுமலைப்பாலை நிலைபெற்ற பயன்பொருந்திய சிறியயாழைத் தளர்ந்த நெஞ்சத்துடனே ஒரு

எ. படுமலைப்பாலை - பாலைப்பண் பன்னிரண்டனுள் ஒன்று; அது கைக்கிளை குரலாகத் தோன்றுவது.

அ. ஒல்கா-தளரா; "ஒல்கா வுள்ளத் தொழியாஞ்சி" மணி. ௧௫ : ௧அ.

௧௧. "வயிரியமாக்கள்...மன்றநண்ணி" (பதிற். உ௬); "மன்றில வதியுநர் சேட்புலப் பரிசிலர்" மலைபடு. ௪௬உ.

௧உ. புறநா. ௧உ௬ : ௬.

௧௧ - உ. "பொருநர்க், குருகெழுபெருஞ்சிறப்பி, னிருபெயர்ப் பேராய மொ, டிலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்" மதுரை. ௬௬ - ௧0உ.

உஉ. "மீக்கூற்றென்பது புகழ்; அதுமேலாய சொல்லாற் பிறந்த புகழென்னுமேம்பாடெனப்பொருடந்து நிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை" நன் - வி. சூ. ௧எஅ.

மருங்கிலேயுணைத்துக்கொண்டு புகழ்தற்கமைந்த தலைமையையுடைய நினது நல்லபுகழை நினைந்துவந்தேன், என்னுடைய இறைவா, யான் ; எந்நாளும் மனத்தின்கண்வந்த பரிசிலரைக்காணிற் கன்றுடனே * கறைபொருந்திய அடியையுடைய யானையை அணியணியாகச் சாய்த்துக்கொடுக்கும் மலையையுடையநாடனே, மாவேளாகிய ஆயே, யாம்வேண்டியது: யானையுமன்று ; குதிரையுமன்று; விளங்கிய பொற்டையையுடைய குதிரையிற்பூட்டப்பட்ட தேருமன்று ; பாணரும் புலவரும் கூத்தர் முதலாயினருமாகிய அவர்கள தமமுடைய பொருளென வளைத்துக்கொள்வாராயின அதனை எம்முடையதென்று அவர்பானின்றும் மீணடு கைக்கொளளுதலைத் தெளியாத பயன் பொருந்திய உரிமையோடுகூடி மற்றும் அத்தன்மையவாக, நின்னுடைய வாழ்நாட்கள் ; யான்வந்தது நின்னைக் காணடலவேண்டிய மாத்திரையே. பகைவரது மிகக மாறுபாட்டைவென்ற வலியையுடைய, யாவரும் ஒப்பப் புகழும் நாட்டையுடையாய்.—எ - று.

நாடுகிழவோய், யான்வந்தது, களிறுமுதலாயினவேண்டியன்று ; நின்னைக் காணடலவேணடிய அளவே ; நின்னூழி அனனவாகவெனக்கூட்டுக.

அலலதூஉம், யானைமுதலாயினவன்றிப் பிறவற்றையும் பாணர்முதலாயினர் தமதெனத்தொடுககுவாராயினென இயைததுரைப்பினுமமையும்.

கொடுவரி, பணபுத்தொகைபபுறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம்.

இனித், 'தைதமெலலொதுககின்' எனவும், 'வடிநவிலபனுவல' எனவும், 'ஒளிறுநடைபபுரவிய' எனவும் பாடமோதுவாருமுளர்.

வடிநவில பனுவல புலம்பெயாத்திசைப்பவென்றுகொணடு வடித்தல் பயின்ற பாட்டை இசைதோறும் பெயாத்துவாசிக்கவென்றுரைப்பாருமுளர்.

பொதுமீக்கூற்றம் பொதியிலுமாம். (௧௩௫)

---

* புறநா. ௩௬ : ௧ - ௨ உரை.

---

(௧௩௬.) யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பஃறுன்னத்
திடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
வீர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
௫ பேஎற்பகையென வொன்றென்கோ
வுண்ணாமையி னூன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவென் பல்கிளையொடு

---

௪ - ௫. புறநா. ௬௮ : ௩ - ௪ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க ; ௧௩௮ : ௫.

பசியலைக்கும் பகையொன்றென்கோ
கo வன்னதன்மையு மறிந்தீயார்
நின்னதுதாவென நிலைதளர
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன்றென்கோ
கரு ஆஅங், கனைப்பகையு மறியுனு
யெனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் னிசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
யிவண்வந்த பெருநசையே
உo மெமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
வனைத்துரைத்தனன் யானாக
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசி லல்கலுந்
உரு தண்புனல் வாயிற் * றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
யுண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.
அவனைத் துறையூர் 1 ஓடைகிழார் பாடியது.

---

கo 'செய்த' என்பதன் குறிப்பாய் 'அன்ன' என்பது வந்ததற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. கஎ - ந ; இ - வி. சூ. உசரு - உரை.

கங. "மகாஅ ரன்ன மந்தி" (சிறுபாண். ருசு) ; "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" மலைபடு. உஙசு - எ.

கக-ச. "ஒப்போன்கூற்றென்றுரோனும் சிறுபான்மை வலியாற்கொள்ளு மிடத்தும் தாவென்பது வருமெனக்கொள்க; 'நின்னது... ஒன்றென்கோ' எனவரும்" தொல். எச்ச. சூ. ருo - ந.

உக - உ. புறநா. கடுச: க - உ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

உங - ச. புறநா. கசo : சா - அ.

உரு - சா. புறநா. கூ : அ - கக ; சங : உக - ங ; ருரு : கஎ - உக.

* இது பாடிய புலவர் துறையூரினராதலின் அவ்வூர்த்துறைமணலைக் கூறினர்.

(பி - ம்.)—1 'அரிசில்கிழார்'

இ - ள்.—யாழ்ப்பத்தரினது புறத்தையொப்ப இழைசூழ்ந்த பலதையலினது இடைக்கண் உளவாகிய புரைகளைப்பற்றி ஒன்றோடொன்றுதொடர்ந்த பிணிப்பு விடாதேகிடக்கின்ற ஈரினது திரளோடு தங்குதல் மிக்க பேனாகியபகையை ஒரு பகையென்பேனோ? உண்ணாமையின் உடம்பு புலர்ந்து கண் தெளிந்தநீரால் நிறைந்து வியர்ப்புற்ற எனது பலசுற்றத்தோடு பசிநோய்வருத்தும்பகையை ஒருபகையென்பேனோ? அப்பெற்றிப்பட்ட எனதியல்பையும் அறியாராய் நின்னைப்பொருளைத் தாவென்றுசொல்லி எம்முடையநிலைகள் தளரும்படி மரங்கள்செறிந்த குளிர்ந்தமலையிற் குரங்கு போலப் பறித்துக்கொள்ளும் இயல்பையுடைய புல்லிய குறிய ஆறலை கள்வர் பரந்துவந்தலைக்கும்பகையை ஒருபகையென்பேனோ? எல்லாப பகையும் அறிவான் ஆயேயெனக்கருதி எமதுவாக்கினால மிகவும் நினதுபெயரை வாழ்த்தி நின்னுடையபுகழை நச்சி ஞாயிறுசுடப்பட்ட சுரத்தின்கண்ணே யேறி இவ்விடத்துவந்த பெரிய நச்சுதலையுடையேம்; இங்ஙனம் * வறுமையுற்ற எங்களுக்கு ஒன்றை இடுவோரன்றே பயன்கருதாது பிறர்க்கு இடுமவர்களாவாரெனவும் எம்மையொழிந்த பிறர்க்கு இடுவோரன்றே பயன்கருதியிடுதலால தங்களுக்கே இடுவோரெனவும் அவ்வளவாக யான் சொன்னேனாக, நினக்குப்பொருந்தியது நீ ஆராய்ந்து எமக்குப் பரிசில்தந்தனையாய் விடுவாயாக; நாடோறும், குளிர்ந்தநீரோடும் வாய்த்தலைகளையுடைய துறையூரின்கண் துறைமுன்னர் நுண்ணிய பலமணலினும் பலநாள் வாழ்கவென வாழ்த்தி உண்பேம், பெரும, நீதந்தசெல்வத்தை.—எ - று.

பெரும, நீ நல்கியவளத்தை அகலும் ஏத்தி உண்பேம்; நினக்கொத்தது நீ நாடிப் பரிசில்நல்கினை விடுமதியெனக் கூட்டுக.

'ஆயென' என்பதற்கு ஆயென்று பிறர்சொல்லவென்றும், 'எமக்கீவோர் பிறர்க்கீவோர்' என்பதற்கு எமக்கீவோர் எம்வறுமைகண்டு வருத்தமுறுவோர் யாவர்க்கும் ஈவோரெனவும், 'பிறர்க்கீவோர்தமக்கீப' என்பதற்குப் பிறர்க்குக்கொடுப்போர் அக்கொடுக்கப்படுகின்றோர் தமக்கேகொடுப்போராவரெனவுமுரைப்பாருமுளர்.

கசிவுற்றவென்பதற்கு இரக்கமுற்றவெனினுமமையும்.

பேஎற்பகையெனவென்புழி எனவும், ஆங்கனைப்பகையுமென்புழி ஆங்கும் அசைநிலை.

கண்டெண்ணீரின் மல்கியெனவும், வாயாரப்பெயரேத்தியெனவும் மாற்றப்பட்டன. (கஙசு)

* "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம், குறியெதிர்ப்பை நீர துடைத்து" குறள், உஉக.

---

(கஙஎ.) இரங்கு முரசி னினஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை
யின்னு மோர்யா னவாவறி யேனே
நீயே, முன்யா னறியு மோனே துவன்றிய

---

க. 'இரங்கு' என்னும் உரிச்சொல் ஒலித்தற்பொருட்பண்பில்வந்ததற்கு மேற்கோள்; நன் - பெயில. சூ. சருஅ; நன் - வி. சூ. சருகூ.

உ. முந்நீரேணி : புறநா. ஙரு : க.

௫ கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பி னொலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினுங்
கண்ணன்ன மலர்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரி னாளும்
௧0 பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படருஞ்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்க னாடனை
நீவா ழியர்நின் றந்தை
௧௫ தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே.

**திணை - அது ; துறை - இயன்மொழி ; பரிசிற்றுறையுமாம்.**
**நாஞ்சில்வள்ளுவனை ஒரு சிறைப் [1] பெரியனார் பாடியது.**

இ - ள்.—ஒலிக்குமுரசினையும் இனமமைந்தயானையையுமுடைய கடலாகிய எல்லையையுடைய நிலத்தின் கண் வென்றிபொருந்திய மூவேந்தரை இன்னமும் யானொருவனே பாடுமவாவையறியேன்; நீதான் முன்னேதொடங்கி யானறியுமவன்; நீர்நிறைந்த பள்ளத்தின்கண் விதைத்தவித்து நீரின்மையாற் சாவாது கரும்புபோலத்தழைக்கும், மழையால் முகந்துசொரியப்பட்டநீர் கோடைகாயினும் மகளிர்கண்போன்ற குவளைமுதலிய மலர்பூக்கும், கரியதாளையுடைய வேங்கைமலரின் நாடோறும் பொன்போலும் அப்பூவைச்சுமந்து மணிபோலும் நீர் கடற்கட்செலலும் செவ்விய மலைப்பக்கத்தையுடைய நாஞ்சிலென்னுமலையையுடைய பொருந, சிறிய வெளிய அருவியையுடைய பெரிய மலையையுடைய நாட்டையுடையாய், நீ வாழ்வாயாக; நின்னைப் பெற்றோராகிய நின்தந்தையும் தாயும்வாழ்க.—எ - று.

நீர் மலர்பூக்குமென இடத்துநிகழ்பொருளின்றொழில இடத்துமேல் ஏறிநி ---

கோடைக்காயினுமென்பதுபாடமாயின், கோடைக்கட்காயினுமென்றானும் கோடைக்கணாயினுமென்றானுமுரைக்க.

முன்னின்ற பெயரெச்சமூன்றும், நாஞ்சிலென்னும் நிலப்பெயர்கொண்டன.

தன்பழமைதோன்றப் புகழ்ந்துகூறுவான், மூவரையும் பாடுமவாவை இன்னுமறியேனென்றதாகக்கொள்க. (௧௩௭)

---

௯. கழைக் கரும்பு : “ ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே ” (மலை படு. ௧௧௯); “மோடு கொண்டெழூஉ மூரிக கழைககரும்பு” சூளா. நாடு. ௨௫.

௧௧. மணி - பளிங்கு ; புறநா. ௧௫0 : ௨௭.

௧௪ - ௫. ரகரவீற்றுவியங்கோள் வாழ்த்துதற்பொருளில வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. ௬. ௩௩௭ ; இ - வி. ௫. ௨௪௧ - உரை.

(பி - ம்.)— 1 ‘பெயரியனார்’, ‘பெயரினார்’

(கஙஅ.) ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலையின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
யுள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
௫ சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண
நீயே பேரெண் ணலையே நின்னிறை
மாறி வாவென மொழியலன் மாதோ
வொலியிருங் கதுப்பி னாயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
௧௦ மரனணி பெருங்குர லனைய னாதலி
னின்னை வருத லறிந்தனர் யாரே.

திணை - அது ; துறை - பாணாற்றுப்படை.

அவனை மருதனிளநாகன் பாடியது.

இ - ள்.—பெற்றத்தினது இனமிக்க வழிபலவும்போந்து மானினமிக்க மலையின்கழிய மீனினந்தழைத்த துறைபலவற்றையுநீந்தி நினைந்துவந்த வள்ளிய ஓசையையுடைத்தாகிய சிறியயாழையும் சிதாராகிய உடையையுமுடைய மூத்தபாணனே, நீதான், அவன்பாற் செலக்கருதிப் போகின்றமையின் பெரிய எண்ணத்தையுடையை ; நின்னுடைய தலைவனை இப்பொழுது போய்ப் பின் ஒருநாட் பரிசிற்குவாவென்றுசொல்லான் ; தழைத்த கரியகூந்தலையுடைய ஆயிழைக்குத்தலைவன், கிளி மருவிய அகன்றபுனத்தின்கண் மரப்பாதும் பின்கண்வைத்த பெரிய கதிரையொப்பனாதலின், நீ அவன்பாற் பரிசில் பெற்றுவருதற்கண் நின்னைப்*பழையபாணனென்று அறிவார்யார்.—எ - று.

'நின்னைவருதலறிந்தனர்யார்' என்றதன்கருத்து : நின்னை அறிவாரும் அறியாததன்மையையாவையென்பதாம்.

அறிவார்யாரென்பது, அறிந்தனர்யாரெனக் காலமயக்கமாயிற்று.

நினக்கு அவன் பரிசில் தப்பாமல் தருமென்பான், நின்னிறையென்றான்.

'கிளி.......குரலனையன' என்றது, கிளியீடுவாயத்தாற்போலவனென்னும் வழக்கைப்பற்றிநின்றது. (கஙஅ)

---

௫. முதாரி - முதுமை ; சிலப். கரு : உச - உரை.

ச - ௫. புறநா. கசு : ௩ - ச ; க௪௯ : ௩ - ௫.

எ. "இரந்தோர்க் கென்றுமன்றுங், காலம்பகராதார் காழிநகர் தாமே" தேவாரம்

அ. ஆயிழைகணவன் : புறநா. ௩ : ௩ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

* பொருந. கசு - ௬௦.

(கஙகூ.) சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளைஞருமே
யடிவருந்த நெடிதேறிய
கொடிமருங்குல் விறலியருமே
௫ வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவ
லோடாப் பூட்கை யுரவோர் மருக
வுயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந
மாயா வுள்ளமொடு பரிசி றுன்னிக்
கo கனிபதம் பார்க்குங் காலை யன்றே
யீத லானான் வேந்தே வேந்தற்குச்
சாத லஞ்சாய் நீயே யாயிடை
யிருநில மிளிர்ந்திசி னாஅங் கொருநா
ளருஞ்சமம் வருகுவ தாயின்
கரு வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தோள் வடுப்படப் பலமுட்டுக்களையுங்காவிய சிலவாயமயிரை யுடைய பல இளையோரும் அடிவருந்த நெடும்பொழுது ஏறிய கொடிபோலும் இடையினையுடைய விறலியரும் என இவர் வாழ்தலைவிரும்பிப் பொய்சொல லேன் ; மெய்சொல்லுவேன் ; புறக்கொடாத மேற்கோளையுடைய வலியோர் மரபிலுள்ளானே, உயர்ந்த உச்சியையுடைத்தாய் உழப்படாத நாஞ்சிலென் னும் பெயரையுடைய மலைக்குவேந்தே, மறவாதநினைவுடனே பரிசிற்குவந்து பொருந்திப் பின்புநின்று நின்மனம்நெகிழும் செவ்விபார்க்கும் காலமல்ல, யான் வறுமையுற்று நிற்கின்றநிலைமை ; நினக்கு வேண்டிற்றுத்தருதலை அமையாஅன், நின்னுடைய அரசன் ; அவ்வரசன் பொருட்டுச் சாதலுக்கு அஞ் சாய், நீ ; அவ்விடத்துப் பெரிய நிலம்பிறழ்ந்தாற் போல ஒருநாள் பொறுத் தற்கரிய பூசல் வருவதாயின், வருந்துதலுமுளதாம், எனது பசித்துன் பத்தையுடைய சுற்றம்.—எ - று.

அதனாற் போர்வருவதன்முன்னே பரிசில் தந்துவிடுவாயாகவென்பது கருத்து.

வேந்து என்றது சேரனை. (கஙகூ)

---

எ. புறநா. சஉ௬ : ௪. கக. குறள், ௬அ௫ - பரிமேல் பார்க்க.

கஉ. முதுரை, ௬. க - கூ. புறநா. கoகூ.

(௧௪௦.) தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன் 380 : 84
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் [1] படப்பைக் கொய்த
அடகின் [2] கண்ணுறை யாக யாஞ்சில
௫ அரிசி வேண்டினே மாகத் தான் [3] பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே [4] யன்னதோர்
தேற்றா வீகையு [5] முளதுகொல்
௧௦ [6] போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.*

திணை - அது ; துறை - பரிசில்விடை.

அவனை [7] ஔவையார் பாடியது.

இ - ள்.—பெரிய நிலைமையையுடைய பலாமரத்தையுடைத்தாய நாஞ்சில் மலைக்கு வேந்தன், அறிவுமெல்லியன், நிச்சயமாக ; செவ்விய நாவையுடையபுலவீர், வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப்பக்கத்தின்கட் பறித்த இலைக்கு மேலே தூவுவதாக யாங்கள் சில அரிசிவேண்டினேமாக, தான் பரிசிலர்க்குதவும் வரிசை யறிதலால் எம்வறுமையைப்பார்த்தலேயன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய சுரஞ்சூழ்ந்த மலைபோல்வதொரு பெரியயானையையளித்தான் ; ஆதலான், ஒருவற்கு ஒன்றனைக் கொடுக்குமிடத்து அப்பெற்றிப்பட்டதொரு தெளியாத கொடையும் உளதோ தான் ? பெரியோர் தாங்கள் செய்யக்கடவ முறைமையைத் தெரிந்து பாதுகாத்துச் செய்யார்கொல்.—எ - று.

பிறவென்பது, அசைநிலை.
கொல்லென்பது, பின்பும் கூட்டியுரைக்கப்பட்டது. (௧௪௦)

---

க. அகரவீற்றுஉரிச்சொல் 'தடவுநிலை' என உகரம் பெற்றுவந்ததற்கு மேற்கோள் ; தொல். குற்றியலுகரப். சூ. எ௭ - ந.
௨. கண்ணுறை - மேற்படி ; புறநா. ௬௧ : ௫.
௫ - சூ. 'பிற' என்னும் இடைச்சொல் அசைநிலையாகவந்ததற்கு மேற்கோள் ; தொல். இடை. சூ. ௩௧-சே ; பேர் ; ந; இ-வி. சூ. உ௫௫-உரை.
௫-அ. புறநா. ௧௩௯ : ௨௦ - ௨௧ ; " சிரப்பான் மணிமவுலிச சேரலர்கோன் றன்னைச், சுரப்பா டியான்கேட்கப் பொன்னொடோ நீந்தா,னிரப்பவரென்பெறினுங் கொள்வார் கொடுப்பவர், தாமறிவார் தங்கொடையின் சீர் " தமிழ்நாவலர்சரிதை, ௨௪.
* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை.சூ. ௨௯ - இளம்; மேற்படி மேற்படி ௩௫ - ந.
(பி-ம்.)—1 'படப்பைகொய்த' 2 'கையுறையாக' 3 'பிறர்' 4 'இன்னதேற்றா' 5 'உண்டுகொல' 6 'போற்றாதம்ம' 7 'அவர்பாடியது'

(கசக.) பாணன் சூடிய பசம்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
ரு யாரீ ரோவென வினவ லானாக்
காரெ ழுெக்கற் கடும்பசி யிரவல
1 வெல்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
யின்னே மாயினே மன்னே யென்று
கம0 முடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே
கரு பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே.*

திணை-அது; துறை-பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையுமாம்.
வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர் பாடியது.

இ - ள்.—'பாணன்சூடிய ஓட்டற்ற பொன்னாற்செய்யப்பட்ட தாமரைப்பூ மாட்சிமைப்பட்ட அணியினையுடைய விறலியணிந்த பொன்னரி மாலையுடனேவிளங்கக் கடியகுதிரையைப்பூண்ட நெடியதேரைப் பிணிப்பை விட்டு இளைப்பாறி ஊரின்கண் இருந்தீர்போலச் சுரத்திடையிருந்தீர் ; நீர்யாவிர் பாணரோ' என எம்மைக்கேட்டலமையாத புல்லென்ற சுற்றத்தையும் மிக்கபசியையுமுடைய இரவலனே, வென்றிவேலையுடைய தலைவனைக் காண

க - உ. புறநா. கக : கக - எ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

ரு. புறநா. கரு0: உ௬.

எ. வினைத்தொகைக்கு இவ்வடி மேற்கோள் ; தொல். எச்ச. சூ. கக - ந.

அ - கூ. பொருந. ௭அ.

கஉ. மு. புறநா. கசரு : ௬.

க0 - கஉ. புறநா. கசரு : க - ௬ ; "கானமஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, வருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருகனுடைப் பேகனும்" சிறுபாண். அரு - எ.

கரு - ரு. புறநா. க௬ச ; நாலடி. ௯ச; குறள், உஉஉ.

* மு. பாணாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩0- இளம் ; ௵. ௵. சூ. ௩௬ - ந.

(பி - ம்).—1 'வென்வேல'

முதன்முன் யாம் நின்னினும்வறியேம் ; இப்பொழுது அவ்வறுமைநீங்கி இத்தன்மையேமாயினேம் ; எந்நாளும், உடா போர்வாதலை அறிந்துவைத்தும் படாத்தினை மயிலுக்குக் கொடுத்த எம்மிறைவன், மதமிக்கயானையினையும் மனஞ்செருக்கிய குதிரையினையுமுடைய பேகன், எவ்வளவாயினும் கொடுத்தல் அழகிதென்று மறுபிறப்பைநோக்கிற்றேவெனின், அன்று ; பிறரது மிடியைக்கருதிற்று, அவனது கைவண்மை.—எ - று.

எங்கோ, பேகன் ; அவன் கைவண்மை மறுமைநோக்கிற்றன்று ; பிறர் வறுமை நோக்கிற்றெனக்கூட்டுக.

'நின்னினும்புல்லியேமன்' என்பது, 'பண்டுகொடுமன்'என்பதுபோல நின்றது. ஒழிந்த மன், அசைநிலை. (கசக)

---

(கசஉ.) அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்து
[1] முறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
ரு கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வற்றியகுளத்தின்கண்ணேபெய்தும் அகன்றவிளைநிலத்தின்கண்ணேசொரிந்தும் இவ்வாறு குளத்தும் விளைநிலத்தும் பெய்யாது களர்நிலத்தை நிறைத்தும் எவ்விடத்தும் வரையாத மரபினையுடைய மாரிபோல மதமிக்க யானையினையுடைய கழலபுனைந்த காலையுடைய பேகன் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுதலல்லது பிறர்படைவந்து கலந்தபொழின் அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்.—எ - று.

---

க - ம். "மழைவள்ளல்" சீவக. அசஅஅ.

ரு. புறநா. கசக : கo-கஉ; "கொடைமடம்படுதல்-அகாரணத்தாற் கொடைகொடுத்தல்" (ஞானமிர்தம், கஎ-உஎ);"கொடைமடம் வரையாது கொடுத்த லாகும்" (திவாகரம்) ; "கொடைமட மென்று சொல்ப வரையாது கொடுத்த லாமே" (சூடாமணி. ங : கo); "வலலார்வல்ல கலைஞருக்கு மறைநூ லவர்க்குங் கடவுளர்க்கு, மில்லாதவர்க்கு முளவாக்கு மிரந்தோர் தமக்குந் துறந்தவர்க்குஞ், சொல்லா தவர்க்குஞ் சொலவர்க்குஞ் சூழுஞ் சமயா திபர்களுக்கு, மல்லாதவர்க்கு மிரவிமக னரியதாள மளிக்கின்றான்" (வில்லி—பாரதம், கிருட்டினன்றூது.உஎ ரு) என்னுஞ்செய்யுளிற் கொடைமடம் விளங்கக்கூறப்பெற்றிருத்தல காண்க ; "கொடைமடம்படுதலலலதென்பது வசைபோன்று புகழ்; இது செம்பொருளின்பாற்படும்" தொல், செய், சூ. கஉச - ந.

(பி - ம்.)—1 'உறுநிலத்துதவா'

*படைமடமென்றது, வீரரல்லார்தார்மேலும், முதுகிட்டார்மேலும், புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் செல்லுதல். (கடஉ)

* "உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிட்டார் பற்றேது மின்றி - நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மனுநூலோ, ரெவ்வகைச் சேவகர் சென்று" (சிறுபஞ்ச. ௭௪); "சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர், பாடு பாணியர் பல்லியத் தோளினர், ஆடு கூத்த ராகி யெங்கணும், ஏந்துவா ளொழிய... வேண்டுவயிற் படர்தரக், கச்சையானைக் காவலர்நடுங்க......அதரிதிரித்த வாளேருழவன்" (சிலப். உ௬ : உஉ௫ - ௩௪) என்பனவும், 'ஏந்தலன்' 'கைப்படை', 'வீறின்மையின்' (சீவக. உஉ௫அ, உஉ௫௯, உ௨௬௧) என்னுஞ் செய்யுட்களும், "மீளுய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழிதொறு மேய்வுற்று, ருளார் பறவையின் வடிவுற் றார்சிலர் சிலர்நான் மறையவ ருருவானார், மானார் கண்ணின மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்று, ரானார் சிலர்சில ரையா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்" (கம்ப. அக்க. ௪0) என்பதும், "படைமயக் குற்ற போதும் படைமட மொன்றிலாதான்". (சூடாமணி. ௯ : ௧0) என்பதும் ஈண்டறியற்பாலன.

---

(௧௪௩.) மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்.
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
௫ புனத்தினை யயிலு நாட சினப்போர்க்
கைவள் ளீகைக் கடுமான் பேக
யார்கொ லளிய டாளே நெருநற்
சுரனுழந்து வருந்திய வொக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
௧0 நளியிருஞ் சிலம்பிற் சீறூ ராங்கண்
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று
நின்னுநின் மலையும் பாட வின்னா

௧. "குன்றக் குறவ னார்ப்பி னெழிலி, நுண்ப லழிதுளி பொழியு நாட" (ஐங்குறு. உ௫௧);"ஏனற்பசுங்கதி ரென்றூழக்கழிய வெழிலியுன்னிக், கானக்குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா" (திருச்சிற். ௧௫௯) 'என' என்னும் இடைச்சொல வினைப்பொருண்மைகுறித்து வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. ௧0-சே; இ - வி. ௫. உ௫௫-உரை.

௯. "பறையிசையருவி" (புறநா. ௧உ௬ : அ) என்பதன் குறிப்பைப் பார்க்க.

௧௨. "தாக்கரு மாபிற் றன்னுந் தன்னாத, வீன்பெரு நெடுவரை• வளனும் பாடி" சிறுபாண். ௧௨௭-௮.

இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையக நனைப்ப விம்மிக்
௧௫ குழலினை வதுபோ லழுதனள் பெரிதே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம்.

அவனால் துறக்கப்பட்ட கண்ணகிகாரணமாக அவனைக் கபிலர் பாடியது,

இ - ள்.—மலையை மழைவந்து சூழகவென்று மிக்கபலியைத்தூவி அம் மழை மிகப்பெய்தலான் அப்பெயல் அமைந்து முகில மேலேபோவதாக வேண்டுமெனத் தெய்வத்தைப்போற்றிய குறமாக்கள் மழை இடத்துமாறிய உவகையராய் மலைச்சாரற்கட் புனத்தினையை உணணுநாட, சினத்தினாற் செய்யும் போரையும் கைவணமையாற் கொடுக்கும் கொடையினையுமுடைய விரைந்த குதிரையையுடைய பேக, அவ்வருந்தத்தக்காள், யாரோதான் ? நெரு நற்றுச்சுரத்தின்கண்ணே நடந்துவருந்திய எனதுசுற்றம் பசித்ததாக, கடிப்பு அறையப்பட்ட முரசுபோல ஒலிக்கப்பட்ட அருவியையுடைய பெரிய உயர் நதமலைக்கட் சிறிய ஊராகிய அவ்விடத்து வாயிற்கண்ணேவந்து தோன்றி வாழ்த்திநின்று நின்னையும் நினமலையையும்பாட, அப்பொழுது இன்னாதாகச் சொரியப்பட்ட கண்ணீரை ஒழித்தலமாட்டாளாய் அக்கணணீர் முலையிடத்தை நனைப்பப் பொருமிக குழல இரங்கியொலிப்பதுபோல அழுதாள், மிகவும்.—எ - று.

மழை வேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து ஒழித்தற்கும் பலிதூஉய்ப்பேணிய குறவராகியமாக்களென்க.

குறவர்மாக்கள், இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

மாக்கள் புனத்தினை அயிலுநாட, பேக, என்னொக்கல்பசித்தென வாயிற் றோன்றி வாழ்த்திநின்று நின்னும்நின்மலையும்பாடக் குழல இனைவதுபோல அழுதாள் ; அவ்வளிக்கத்தக்காள் யார்கொல் ? அவளபால அருள்பண்ணைத் தருமென வினைமுடிக்க.

இது, நின்மலையிற்குறவர்மாக்கள கடவுட்பேணி மழைவேண்டிய பொழுது பெற்றுத் தாம்வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்றுஇன்ப நுகர்வாளாகவேண்டுமென்பதொருநயந்தோன் றநின்றது.

மழைமிகப்பெய்தலானென்பது, ஆற்றலாற் கூறப்பட்டது.

---

௧௩. இகுத்தல - சொரிதல ; மலைபடு. ௨௨௬.

௧௩ - ௪. "மைக்க ணீல வாலிசிந்த வைகிய மங்கைமென் முலைத் தடத்து" நைடதம், கைக்கிளை, ௧.

௧௫. "நெய்த லுண்கண் பைதல கூரப், பின்னிருங் கூந்தன் மறை யினள் பெரிதழிந், துதியன் மண்டிய வொலிதலை ஞாட்பின், இம்மென் பெருங் களத் தியவ ருதும், மாம்பலங் குழலி னேங்கிக், கலங்கஞ ருறுநவோள்" (நற். ௧௧௩); "குழலேங்கு மாறேங்கி யழுதார் கோதை மடவாரே" (சீவக. ௨௯௪௫); "வேய்ங்குழல விளிகொ ணல்யாழ வீணையென் றினையநாண வேங்கி னள்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். ௩.

பேகனுற்றுறக்கப்பட்ட கண்ணகியை அவனோடுகூட்டவுறுவார், அருள் பண்ணவேண்டுமென்று இரந்துகொண்டுகூறினமையின், குறுங்கலியாயிற்று. (கசரு)

---

(கசச.) அருளா[1] யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
ரு கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
வினைத லானா ளாக விளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தண்
[2] முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
க0 யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
யெம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வருஉ மென்ப வயங்குபுகழ்ப் பேக
னொல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாகப் [3] பரணர் பாடியது.

இ - ள்.—அருள்பண்ணுயாதல் கொடிது; மாலைக்காலம்வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணாகிய செவ்வழியென்னும்பண்ணிலே வாசிக்கும்

---

க. ஆகமென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்திநிற்றற்குமேற்கோள்; தொல். இடை. சூ. ௩உ - ந.

உ. புறநா. கசகு : ரு ; கசஎ : உ.

௩. புறநா. கருச : க௩. னகரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் அம்முப்பெற்று நிற்றற்கும், (தொல். குற்றியலுகரப். சூ. எஅ - ந), செயவெனெச்சம் முற்றாய்த்திரிவுழி ஆகவென்னும் இடைச்சொல்வந்து அதன் பொருளையே உணர்த்திச் செயவெனெச்சமாய் நிற்றற்கும் (ஷ இடை. சூ. ௩உ-ந) மேற்கோள்.

ச. செயவெனெச்சம் முற்றாய்த்திரிவுழி ஆகவென்னும் இடைச்சொல் வந்து அதன்பொருளையேயுணர்த்திச்செயவெனெச்சமாய்நிற்றற்குமேற்கோள்; தொல். இடை. சூ. ௩உ - ந.

அ - ம். "செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்" சிறுபாண். கசஎ.

*மு. "அருளாயாகலோ.... நல்லூரானே : இது கண்ணகி காரணமாக வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர்பாடிய கைக்கிளை வகைப்

(பி-ம்.) 1 'ஆகலோகொடிதேமருள்' 2 'முகைபுனை' 3 'வன்பரணர்'

பரிசுபண்ணி நினைந்து மழையையேற்றுக்கொண்ட காட்டைப்பாடினேமாக, நீலநறுநெய்தல்போன்றுபொலிந்த மையுண்டகண்கள் கலங்கிவீழ்ந்த இடைவிட்ட துளிகள் பூணையுடைய மார்பைநனைப்ப வருந்துதல அமையாளாக, இளையோய், 'கிளைமையையுடையையோ எம்முடையகேண்மையை விரும்புவோனுக்கு' என யாங்கள் தன்னை வணங்கிக்கேட்டேமாக, அவர் காந்தள் மொட்டுப்போலும் விரலாலே தன் கண்ணீரைத்துடைத்து ஏங்கா அவனுடைய கிளைஞரேமல்லேம் ; கேட்பாயாக, நீ இப்பொழுது ; எம்மை ஒப்பாளொருத்தியுடைய அழகைக்காதலித்து எந்நாளும் வருமென்று பலரும்சொல்லுவரென்றுகூறினள் ; விளங்கிய புகழையுடைய பேகன், ஒலிமென்முழங்கும்தேருடனே முல்லைவேலியையுடைய நல்லூரின்கண்.—எ - று.

கிளையையோவென ஓகாரமும் எமருளென ஒருசொல்லும் வருவித்துரைக்கப்பட்டன.

நின்கானம் பாடினேமாக, இனைதலானாளாக, யாம் தற்றொழுதனம் வினவ, தன்கண்ணீர்துடைத்துப் பேகன் ஒருத்தி நலனயந்து நல்லூரின்கண் என்றும் வருஉமென்பவென்றாள் ; அவளை அருளாயாதல கொடிதெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

எம்போலொருத்தியென்றது, உவமைகருதாது வன்மையுரைதோன்ற நின்றது; எம்மைப்போலும் பொதுமகளொருத்தியென அவளை இழித்துக் கூறியவாறுமாம்.

இனி, யாம் தற்றொழுதனம்வினவினேமாக, அவளாயத்தார் தம்விரலால் அவள் கண்ணீரைத்துடைத்து யாம் அவன்கிளைஞரேமல்லேம்; இது புகுந்தவாறு யாம் கூறக்கேளென முன்புகூறிப் பின் பேகன் எம்போலொருத்தி நலன் நயந்து நல்லூரின்கட்சென்று வருமென்றுசொன்னார்கள் ; இவ்வாறு இளையோரும் ஆயத்தாரும் உறும் துன்புறவுநேர்த்து அருளாயாதல கொடிதெனவுரைப்பினுமமையும். (௧௪௪)

பாடாண்பாட்டு; கிளையை யன்மெனக் கேள்வெய்யோற்கென வினவ, யாம் கிளையமல்லேம் ; முல்லைவேலிநல்லூர்க்கண்ணே வருமென்று சொல்லுவரெனக்கூறுதலின், அஃது ஏனைக்கைக்கிளைகளின் வேறாயிற்று" தொல். புறத்திணை. சூ. ௩௫ - ந.

---

(௧௪௫.) மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமு மிலமே
௫ களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

௧ - ௩. புறநா. ௧௪௧ : ௧0 - ௧௨.

௫. ழ. புறநா. ௧௨௭ : ௧; "மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. ௫௩௪.

ஐயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
யறஞ்செய் தீமோ வருள்வெய் யோயென
விஃதியா மிரந்த பரிசிலஃ திருளி
னினமணி நெடுந்தே ரேறி
௧௦ யின்னா துறைவி யரும்படர் களைமே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள் காரணமாக அவர்பாடியது.

இ - ள்.—மெல்லிய தகைமையையுடைய கரிய மயில் குளிரால் நடுங்கு மென்று அருளசெய்து படாய்கொடுத்த அழியாத நல்லபுகழினையுடைய மதம்பட்ட யானையையும் மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய பேக, யாம் பசித்தும்வருவேமல்லேம்; எம்மாற்பரிக்கப்படுஞ்சுற்றமுமுடையேயல்லேம்; களாப்பழம்போன்ற கரியகோட்டையுடைய சிறிய யாழை*இசையின்பத்தை விரும்பியுறைவார் அவ்விசையின்பத்தால் தலையசைத்துக் கொண்டாடும்படி வாசித்து, அறத்தைச்செய்வாயாக அருளைவிரும்புவோயென்று இது, நின்பால் யாம் இரந்தபரிசில்; இற்றையிரவின்கண் இனமாகிய மணியையுடைய உயர்ந்ததேரையேறிப்போய்க் காண்டற்கு இன்னாதாக உறைகின்றவளை பொறுத்தற்கரிய நினைவாலுண்டாகிய நோயைத் தீர்ப்பாயாக.—எ - று.

பேக, தேரேறி இன்னாதுறைவி அரும்படர் களை; யாழைப்பண்ணியாம் இரந்தபரிசில் இதுவெனக்கூட்டுக.

இதுவென்றது, அப்படிப் படர் களைதலை.

'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப், படாஅ மீத்த......பேக' என்ற கருத்து: இவ்வாறு ஒருகாரணமின்றியும் அருளபண்ணுகின்ற நீ நின்னால் வருந்துகின்ற இவட்கு அருளாதொழிதல் தகாதென்பதாம்.

இனி, 'அருள்வெய்யோய், யாமிரந்தபரிசில், அறஞ்செய்யவேண்டு மென்று கூறுமிது; அவ்வறந்தான் யாதென்றுகேட்பின், நின்பால் அருள பெறுமையின் இன்னாதுறைவி அரும்படரை நீசென்று களைதல்; அதனைச் செய்வாயாகவெனக் கூட்டியுரைப்பினுமமையும்.

'பனிக்குமென் றஞ்சி' என்பதூஉம் பாடம். (௧௪௫)

---

௧௦. முன்னிலைமுன்னர் ஏகாரம் அசைநிலைமரபின் மெய்யூர்ந்துவருதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. ௫௨ - பேர்.

* "பண்வனப்புக், கேட்டார் நன்றென்றல்" (சிறுபஞ்ச. ௧); "இசை பெறு திருவின் வேத்தவை" (மலைபடு. ௩௯), 'இசையை எக்காலத்தும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களம்' (ஷ உரை) என்பவை இங்கே அறியற்பாலன.

(கசசு.) அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை
யவைபெறல் வேண்டேஎ மடுபோர்ப் பேக
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட வென்னை நயந்து
௫ பரிசி னல்குவை யாயிற் குரிசினீ
1 நல்கா மையி னைவரச் சாஅ
யருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
க௦ தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாக அரிசில்கிழார்பாடியது.

இ - ள்.—அத்தன்மையவாக; நின்னாலே தரப்பட்ட பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமுமாகிய அவைபெறுதலைவிரும்பேம்; கொல்லும்போரையுடைய பேக, சிறியயாழின் செவ்வழியாகப்பண்ணி வாசித்து நினது வலிய நிலமாகிய நல்ல மலைநாட்டைப்பாட, என்னைக்காதலித்துப் பரிசில்தருகுவையாயின், தலைவனே, நீ அருளாமையாற் கண்டாரிரங்க மெலிந்து அரிய துயரத்தானவருந்தும் உன்னுடைய திருந்திய அணியையுடைய அரிவையது தழைத்த மயிலினதுபீலியைக் காலொன்றக்குவித்தாற்போன்ற தழைத்த மெல்லியகூந்தற்கண்ணே மணங்கமழும் புகையைக்கொளுவித்துக் குளிர்ந்த மணங்கமழும் மாலையைச்சூட வளவிய செல்வத்தையுடைய உயர்ந்த தேரைநின்குதிரைகள் பூண்பனவாக.—எ - று.

அன்னவாகவென்றது, இரவலர்க்கு அருங்கலவெறுக்கைகளை எளிதிற் கொடுப்பையன்றே? அவ்வெறுக்கை எமக்கும் எளிதாகவென்றவாறும். (கசசு)

---

க - உ. "அரும்பொருட் பரிசிலே னல்லலேன்" சிலப். உஅ : களக.

௩. புறநா. கசச : ௨; கசஎ : ௨.

எ. துயருழத்தல்: மணி. பதி: சஅ.

அ - ௯. "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரிய வாம்" குறுந். உ௨௫.

௯ - க0. புறநா. கசஎ : ௬ - அ; "பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா, னறுமலர்க் கூந்த லொளணி பெறுகென" சிலப். உஎ : உக௫ - ௬.

எ - கக. "மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாணநின் புரவி நெடுந்தேர்" பதிற். அக : ௩க - ௨.

(பி - ம்.)—1 'நலகாமையினீவரச'

(௧௪௭.) [1] கன்முழை யருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வா னின்றுறை தமியள் கேளா
நெருந லொருசிறைப் புலம்புகொண் டுறைய
௫ மரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தன்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல வின்று பெயரி
னதுமனெம் பரிசி லாவியர் கோவே.*

திணையும் துறையும் அவை.

அவள்காரணமாக அவனைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—கன்முழைக்கணின்றும் விழும் அருவியையுடைய பலமலைகளை அரிதிற்கழித்துச் சிறியயாழைச் செவ்வழியென்னும்பண்ணை வாசிக்கும்படியாகப் பண்ணி வாசித்துவந்ததற்குக் கார்காலத்துமழையினது இனியதுளி வீழ்கின்ற ஓசையைத் தமியளாகக்கேட்டு நெருநற்று ஒருபக்கத்துத் தனிமைகொண்டிருந்த அரிபரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்ணினையும் அழகியமாமைநிறத்தினையுமுடைய அந்த அரிவையது நெய்யாற்றுறக்கப்பட்ட மைபோலும் கரியமயிரை ஒப்பமிடப்பட்ட நீலமணியினும் மாசறக்கழுவிச் செவ்விமலர்நெருங்கும்பரிசு இன்று வருவையாயின், அதுவாகும், எம்முடையபரிசில்; ஆவியருடையவேந்தே.—எ - று.

உறை - துளி; என்பது ஆகுபெயரால துளியினோசையை. மன், அசை.

சீறியாழ் செவ்வழிபண்ணிவந்ததற்கு அரிவைகூந்தல் புதுமலர் கஞலும்படி அவள்பால் என்றெடும்வரின் எம்பரிசில அதுவெனக்கூட்டுக.

நெய்பூசுதலோடு பேணுதலைத்துறந்தவெனினுமமையும்.

செவ்வழிபண்ணிவந்தது, புதுமலர்கஞலவென்று இயைத்துரைப்பாருமுளர். (௧௪௭)

---

உ. புறநா. ௧௪௪ : உ ; ௧௪௬ : ௩.

௩. "முடங்கிறைச சொரிதரு மாத்திர ளருவி, யின்ப லிமிழிசை யோர்ப்பனள்" முல்லை. ௮௭ - ௮.

௬ - ௭. பரி. ௧௦: ௮௬. "மணியேசுமிருங்கூந்தல்" கலி. ௭௭.

௮. புறநா. ௧௩௪ : ௩. ௬ - ௮ புறநா. ௧௪௬ : ௯ - ௧௦.

௯. "ஆவியர் பெருமகன் பெருங்க ளுடனை பேகனும்" சிறுபாண். ௮௬-௭.

௮ - ௯. "புதுமலர்....கோவே : இதனுள் மன்னென்பது ஆமென்பது குறித்து நின்றது" (தொல். இடை. சூ. ௪ - பேர் ; ந); மன்னென்பது பெயர்ச்சொல்லை அடுத்து வந்ததற்கு மேற்கோள் ; நன்-மயிலை. சூ. ௪௧௯.

* பு. கைக்கிளைவகைப் பாடாண்பாட்டிற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ௩௫ - ந.

(பி - ம்.)— 1 'கன்முழைகையருவி'

(கசஅ.) கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
னசைவளி ஞென்று ணசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்பப்
௫ பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்த
லெய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

1 கண்டீரக்கோப் பெருநள்ளியை வன்பரணர் பாடியது.

இ - ள்.—உச்சிக்கணின்றும் ஆலித்து இழிதரும் அருவியினையுடைய உயர்ந்த மலையையுடைய நள்ளி, நினது தளர்ச்சியில்லாத வலியமுயற்சியா லுண்டாய நச்சப்படும் செல்வத்தை வாழ்த்தி நாடோறும் நல்ல அணிகலத்தைக் களிற்றோடே கொண்டுவந்து நெற்கூடுவிளங்கும் அகலியநகரின்கணிருந்து [illegible]திருந்தபரிசிலர்க்கு அளித்துவிடுத்தலால், பிறர்க்கு யும்பெருமையில்லாத அரசரைப்புகழும்புகழ்ச்சியைவிரும்பி அவ்வரசர்செய்யாதனவற்றைச்சொல்லி அவர்குணங்களைக் கூறுதலை அறியாததாயிற்று, எம்முடைய சிறிய செவ்விய நா.—எ - று.

பொய்கூறாமையிற் 'செந்நா' என்றார் ; தற்புகழ்ந்தாராகாமற் 'சிறு செந்நா' என்றார்.

அருவியவென்பது, விகாரம்.

நள்ளி, நீ பரிசின்முற்றளித்தலான், எம் சிறுசெந்நா நின்னசைவள னேத்தி மன்னரைப்புகழ்ச்சிவேண்டிக் கிளத்தல் எய்யாதாகின்றெனக் கூட்டுக.

நின்னசைவளனேத்திக் கொணர்ந்து முற்றளித்தலாலெனப் பரிசிலர் மேலேற்றி உரைப்பினுமமையும். (கசஅ)

---

க. புறநா. கருஅ : ௩. "நளிமலை நாடன் நள்ளியும்" சிறுபாண். க0எ.

உ. புறநா. கசஉ : கஎ - ௫ ; "மடியிலான் செலவம்போன் மாநாத" (கலி. ௩௫) ; "ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா, ஊக்க முடையா னுழை" குறள், ௫கச) ; புறநா. உஎ : உக-ஆம் அடியையும் அதன் குறிப் பையும் பார்க்க.

௩ - ச. புறநா. கசஅ : ௩ - ச ; கருக : அ - க.

(பி - ம்.)—1 'கண்டீரக்கோபெருநற்கிள்ளி'

(௧௪௯.) நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தன ரதுநீ
௫ புரவுக்கடன் பூண்ட வண்மை யானே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நள்ளி, வாழ்வாயாக ; நள்ளி, நள்ளென்னும் ஓசையையுடைய மாலைப்பொழுதின்கண்ணே மருதமென்கின்றபண்ணை வாசித்துக் காலைப்பொழுதின்கண் கைவழியாகிய யாழின்கட் செவ்வழியென்னும் பண்ணைவாசித்து வரலாற்றுமுறைமையை எம்முடைய பாணர்சாதியிலுள்ளோர் மறந்தார் ; அவ்வாறு மறந்தது, நீ கொடுத்து ஓம்புதலைக் கடனாக மேற்கொண்ட வண்மையான்.—எ - று.

கையகத்து எப்பொழுதும் இருத்தலான், யாழைக் கைவழியென்றார், ஆகுபெயரான்.

'வரவவர் மறந்தனர்' என்பதூஉம் பாடம். (௧௪௯)

---

உ - ந. மாலையிற் செவ்வழிப்பண்ணும் காலையில் மருதப்பண்ணும் வாசிக்க வேண்டுமென்பது இசைநூன்மரபு ; இதனை, "நிலவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி", "யாழோர் மருதம் பண்ண" (மதுரை. ௫௪௦, ௬௫௮) என மாலைக்கும் காலைக்கும் உரியனவாக அப்பண்கள் கூறப்பெற்றிருத்தலாலும் அறிக.

உ - ௫. புறநா. ௧௫௰ : எ - ௧௨.

---

(௧௫௦.) கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னு முள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தவென்
னுயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
௫ மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்

---

௧ - ௨. "நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன, நிலந்தின் சிதாஅர்" பதிற். ௧௨ : ௧௧ - ௨௦.

௬. "முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி, மின்னுறழ் மிமைப்பிற் சென்னிப் பொறப்ப" முருகு. ௮௪ : ௫.

செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
றொழுதனனெழுவேற் கைகவித் திரீஇ
யிழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
௧0 கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் [1] விரைவனன் சுட்டுநின்
னிரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலி
னமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
௧௫ நன்மா னளிய நறுந்தண் சாரற்
[2] கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
௨0 (மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தன)
னெந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் [3] பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே

எ. வல்வில் வேட்டுவன்: ஓரேகாலத்திற் பல பொருள்களை யூடுருவிச் செல்லும்படி அம்பையெய்யும் விற்றொழிலையுடைய வீரனை வல்வில்லி யென்றல் மரபு; இதனை, புறநா. ௧௫௨: ௧ - ௬-ஆம் அடிகளாலும் அவற்றின் குறிப்புரையாலுமுணர்க.

அ. "கைகவியாச் சென்று" அகநா. ௯: ௨௧.

௯. "இழுதி னன்ன வானிணஞ் செருக்கி" மலைபடு. ௨௪௪.

௧௨. ஞெலிதீ: புறநா. ௨௪௭: ௨.

௧௩. புறநா. ௩௨0: ௧௪; ௩௭அ: ௨௩; ௩௯௧: ௧௯; ௩௯௭: ௧0.

௧௫. புறநா. ௧௩௯: ௧௨.

௧௯. காட்டுநாடு: "வன்புலக் காட்டுநாட் டதுவே" (நற். ௫௯); பாண்டிநாட்டின் உள்நாடொன்றற்குக் காட்டுநாடென்று பெயர் வழங்கியதாகத் தெரிகின்றது; திருவால. ௪௪: ௫௪ - ஆம் செய்யுள்பார்க்க.

௨௧. "மடைசெறி கடகத் தோளான்" சூடாமணி. ௯: ௧0.

௨௪. இசின், தன்மைக்கண் வந்தது; (புறநா. ௨௨: ௩௬; ௧௫௧: எ); "கேட்டிசினல்லனே" நற். ௧௧௫.

(பி - ம்.)—1 'விரைவினன்' 2 'கண்முகையருவி' 3 'பெயரும்'

௨௫ இரும்புபுனைந் தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
யம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்
பளிங்குவகுத் தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளியவ னெனவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கூதிர்க்காலத்துப் பருந்தினது கரியசிறகையொத்த துணி யாகிய சீரையையுடையேனாய்ப் பலாவழியைப் பொருந்தி, தன்னையுநினையேனாய வேற்றுநாட்டின்கட்சென்றனனது ஏய்ந்த செலவாலுளதாகிய வருத்தத்தினையும் மிடியையும்பார்த்து மானினது நிணத்தொலைத்த, குருதி தோய்ந்த அழகிய வீரக்கழலினையுடைய காலினையும் வாலிய ஒளியையுடைய அழகிய நீலமணிவிளங்கும் உச்சியையுமுடைய செலவத்தையுடைய தலைவனாகிய ஒரு வலியவில்லினையுடைய வேட்டுவன், தன்னை அஞ்சலிபண்ணினேனாய் எழுந்திருப்பேனாகக் கைகவித்து இருத்தி நெய்யிழுதுபோன்ற வெள்ளிய நிணத்தையுடைய கொழுவியதடியைக் காட்டுவழியின்கண் வழிமயங்கிப் போகிய இளையர்தாம் விரையவந்து பொருந்துவதற்குமுன்னே கடிதாகத் தான்கடைந்த தீயான் விரைந்துசுட்டு நினது மிகப்பெரிய சுற்றத்துடனே தின்மினென்றுதருதலான் அதனை யாங்கள் அமிழ்துபோலத்தின்று சுடுகின்ற பசிதீர்ந்ததாக, நல்ல மரச்செறிவையுடைய நறிய குளிர்ந்த மலைச்சாரற்கண் மலையுச்சியினின்றும் வீழ்ந்த அருவிநீரைக் குவளக்குடித்து விடைகொள்ளத்தொடங்கினேனாக, விரையவந்து பெறுதற்கரிய பெருமையமைந்த நல்ல அணிகலங்கள் தருதற்குவேறொன்றில்லை,யாம் காட்டுநாட்டின்கண்ணேமெனச்சொல்லித் தனது மார்பிற்பூணப்பட்ட விளங்கிய முத்துவடங்களையுடைய ஆரத்தைக் கொளுத்துச் செறிந்த முன்கைக்கணிந்த கடகத்துடனே தந்தனன் ; நும்முடையநாடு எந்நாடோவென்றுகேட்ப நாடும் சொல்லிற்றிலன் ; நீர் யாரெனக்கேட்பப் பெயரும் சொல்லிற்றிலன் ; அவனுடைய பெயரும் பிறர்பிறர் வழியின்கண்ணே சொல்லக்கேட்டேன்யான் ; இரும்பாற் புனைந்து செய்யப்படாத மிக்க புகழையுடைய தோட்டியாகிய அம்மலையைக் காக்கும், அழகிய பெரிய பக்கமலையினையும் பளிங்கை வகுத்தாற்போன்ற வெளியநிறத்தையுடைய இனியநீரையுமுடைய பெரிய மலைநாட்டையுடைய நள்ளி அவனென.—எ - று.

நீங்கி, நீங்க.

பலவுமுதற்பொருந்தித் தொழுதனனெனவும், மலைகாக்கும் நள்ளியென வுமியையும்.

அவன் நள்ளியெனப் பிறர்பிறர்கூற வழிக்கேட்டிசினெனக்கூட்டுக. ()

௨௭. புறநா. ௧௯௭ : ௧௧.

௨௮. "நளிமலை நாட னள்ளியும்" (சிறுபாண். ௧௦௭) ; 'நளி' என்னும் உரிச்சொல் பெருமையையுணர்த்தியதற்கு மேற்கோள் ; தொல். உரி. சூ. ௨௪ - சே ; ௸ ௸ ௸ ௨௬ - பேர்; ௸ ௸ ௸ ௨௨-ந; இ -வி. சூ. ௨௮௪ - உரை.

(கருக.) பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
கிழவன் சேட்புலம் படரி னிழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
ரு பெண்டிருந் தம்பதங் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோ னாகலி னன்று
முயங்க லான்றிசின் யானே பொலந்தேர்
நன்ன னுருக னன்றியு நீயு
முயங்கற் கொத்தனை மன்னே வயங்குமொழிப்
க0 பாடுநர்க் கடைத்த கதவி னாடுமழை
யணங்குசா லடுக்கம் பொழியுநும்
மணங்கமழ் மால்வரை வரைந்தன ரெமரே.

திணையும் துறையும் அவை.

இளங்கண்டீரக்கோவும் [1]இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச் சென்ற பெருந்தலைச்சாத்தனார் இளங்கண்டீரக்கோவைப் புல்லி இளவிச்சிக்கோவைப் புல்லாராக, என்னை என்செய்யப் புல்லாயிரென அவர் பாடியது.

---

உ. "மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்" (நற். ௩௨); "மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்" பட்டினப். க .

ந. இழை - ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலங்கள்; தொல். களவு. ரு. ச - ந.

ச. "இரும்பிடிப் பரிசிலர் போல" (அகநா. கக); "பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கை" சிறுபாண். க .

ரு. "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும் புகழ்" குறள். உஙஉ.

எ. இதன்: புறநா. கசுo: உச - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

கக. புறநா. கருசு: க0 - கக; "அணங்குடைச் சாரல்:......இரும்பில" பெரும்பாண். ஙசுச - ரு.

க0 - கஉ. புறநா. கசுஉ. உ0 - க.

ரு - கஉ. கொடுப்போர்த்தேத்திக் கொடாஅர்ப் பழித்தல். தொல். புறத் திணை. ரு.

* விச்சி - ஒருமலை; இதனைச் சார்ந்த விச்சிக்கோ; (புறநா. உ00: ச); "விச்சிமலைச் சாரற் பட்டுக் கொண்டு பகடாழ்" (தே. யாழ்); "விறல்கெழு தானை விச்சியர் பெருமகன்" (குறுந். ௩௨௮); "இருபெருவேந்தரும் விச்சியும் வீழ" பதிற். அ-ஆம் பதிகம்.

(பி - ம்.)—1 'இளவச்சிரக்கோ'

இ - ள்.—முன்பேயும் முன்பேயும் பாடுவார்விரும்ப விசும்பைப் பொருந்திய உச்சியையுடைய சிறந்த மலைப்பக்கத்துத் தங்கணவன் நெடுந் தூரத்தேசெல்லின் ஆற்றாளைத் தாயொழிந்து புல்லியதலையையுடைய மெல்லியவிழையைப் பரிசிலாகக்கொண்டு அவர்பெண்டிரும் தம் தாத்திலே பரிசில்கொடுக்கும் வாளியபசும்பூழயுடைய கண்டு ககோணுதலாலே பெரிதும் தழுவிக்கொண்டு ஒருதலையாமை நீதேர் யானை; பொன்னாற்செய்யப்பட்ட தேரினையுடைய நன்மையமைந்த யானையோடு நீயும் தழுவுதற்குப் பொருந்தினையாயினும் விளங்கும் மொழியையுடைய பாடுவார்க்கு அடைத்த கதவுகாரணமாக, இயங்குமுகில் தெய்வமழை த அசைமலைக்கண்ணே சொரியும் நமது மணநாறும் உயர் தம்மை யப் பாடுதலை நீக்கினார், எம்முன்னோர்; ஆதலான், முயங்கிற்றிலேன்.—எ - று.

பெண்டிரும் தம்பதங்கொடுக்குமெனவே ஆடவரும் தம் தாத்தே களிறுகொடுத்தல் போந்தது.

'இறைவன்' என்பது, 'ஏவலிளையர் தாய்வயிறு கறிப்ப' என்பது போலப் பன்மைசுட்டிநின்றது.

'நன்மையருகின்றியும்' என்றதற்கு *"பெண்கொலை புரிந்த நன்னன் போல, வரையா நிரயத்துச் செலீயரோ அன்னை" என்றமையின், அதுவும் வரைதற்கு ஒரு காரணமாக உரைப்பாருமுளர்.

பதமென்றது, பரிசிலை.

மை, ஒழிசிச் சுக்கொண்டது. (கருக)

* குறுந்தொகை, ருஉ.

---

(கருஉ.) வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல

---

உ. பேழவாயுழுவை: புறநா. ருஉ: கூ. பெரும்பிறிது: மணி. உரு: உஅ.

ச. "வேழக்கரும்பு, கேழற்பன்றியென்புழித் தொக்கவில்லையெனினும் தொகையென வேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலிற் றொகையெனப்பார்க்கும் ஒட்டி ஒருசொன்னீர்மைப் படுதலும் தொகையிலக்கணமென வேண்டும்" (தொல். எச்ச. சூ. கசு - சே); "கேழற்பன்றி, வேழக்கரும்பென்பனவற்றிற்குத் தொக்கன இன்மையிற் றொகைச்சொல்லாமாறு என்னையெனின், அவற்றிற்கும் ஒன்றையொன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்குவரும் ஆகிய என்னும் வாசகம் தொக்குநின்றதென்றே கோடும்" (தொ. சொ. சூ. கசு - ந); "கேழற் பன்றி...கேழற்பன்றி முதலாயினவும் சாதிதொக்க பண்புடைமையின் ஈண்டு வேண்டினரென்க", "பூமலர், பூம்போது, களிற்றொருத்தல, கேழற்பன்றி

௫ தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பி னம்புமிகத் திளைக்குங்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடைய
௧௦ னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
சாரல் லருவிப் பயமலைக் கிழவ
னோரி கொல்லோ வல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ண நீரு
மண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்
௧௫ கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்

யென்றற்றொடக்கத்த வோவெனின்,......சேழலென்பது யாப்பன்றி முத லாவற்றை நீக்குதலானும் பொருளோ [illegible] மையின் ஒருபொருட் பன்மொழியாகா ; பண்புத்தொகையு மடங்குமெனக" நன்-மயிலை. ௩௯௪, ௩௪௭.

௩ - ௪. ஊற்றலைக்கேழற்பன்றி: "ஊற்றலை யுழுவை பன்றி யிடம் வலந் திரிய" சீவக. [illegible]௨௦[illegible].

௬. வல்வில் வேட்டம்-மிக்க வன்மையையுடையதும் பலவற்றை ஊடுருவிச் செல்லும்படி அம்பை விடுதற்குச் சாதனமுமாகிய வில்வேட்டம் ; (புறநா. ௧௫௦: ௭); "அ[illegible] [illegible] வெற்ற[illegible], [illegible] [illegible] [illegible] துணித்த [illegible] [illegible]" திவ. பெரியதிருமொழி, ௫. ௧ : ௪.

௧ - ௯. இவ்வடிகளோடு, "அரியுகைக் கடவுருவத் தாண்டகைத் [illegible]யார்த்த, [illegible]யுருவைப் புய[illegible] [illegible]யுருவ [illegible], [illegible]யுருவக் [illegible] [illegible] [illegible], மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றெருவாளி", "[illegible] [illegible] [illegible] [illegible]", "ஏழு மாமர முருவிக் கீழுலகமெ [illegible] [illegible], [illegible] குருவிப் [illegible] [illegible] [illegible], [illegible] [illegible] [illegible] [illegible]" (கம்ப. [illegible] ௨[illegible] ; மராமர. ௧[illegible], ௧[illegible]) [illegible] ஒப்புநோக்கற்பாலன.

௮. கொலைவன் - கொலைத்தொழிலைச் செய்பவன் ; "கொலைவ [illegible] போர் கொற்றவை [illegible]" மணி. ௨௫: ௧௭.

௧௦. ம. மது. ௧௦௪.

௧௪. புறநா. ௯௫: ௧.

௧௫. "கண்விடுத் தியற்றிய [illegible]ம்பு" (பதிற். ௪௧) ; "மைக்களி றெடுத்த நோயுடை நெடுங்கை, தொகுசொற் கோடியர் தூம்பினுயிர்க்கு, மதத்தம்" (அகநா. ௧௧௧) ; "கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த்தூம்பின" மலைபடு. ௯.

ணெல்லரி தொடுமி ஞாகுளி தொடுமின்
பதலை யொருகண் பையென வியக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்
றிறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
௨௦ மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்
கோவெனப் பெயரிய காலை யாங்கது
தன்பெய ராகலி னாணி மற்றியா
நாட்டிட னாட்டிடன் வருது மீங்கோர்
வேட்டுவ ரில்லை நின்னொப் போரென
௨௫ வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்திற்
றானுயிர் செகுத்த மானிணப் புழுக்கோ
டானுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவி னன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்
௩௦ சுரத்திடை நல்கி யோனே விடர்ச்சிமை
யோங்கிருங் கொல்லிப் பொருந
னோம்பா வீகை விறல்வெய் யோனே.*

---

௧௭. "கொடிதரு பாணிய பதலையும்" (மலைபடு. ௧௧) என்பதும், 'மாத்திரையைச் சொல்லும் தாளத்தையுடைய ஒருகண்மாக்கிணையும்' என்னு மதனுரையும் ஈண்டு அறியற்பாலன.

௧௪ - ௮. மலைபடு. ௨ - ௧௧.

௨௦. "துறைபல முற்றிய" (மலைபடு. ௪௦) என்பதனுரையைப்பார்க்க.

௨௨. ஆகலென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்தி நிற்றற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. ௩௨-ந.

௨௧ - ௨. புறநா. ௧௫௦: ௨௨ - ௩; "சான்றோர், புகழுமுன்னர் நாணுப, பழியாங் கொல்பவோ காணுங் காலே" (குறுந். ௨௫௨); "தம்புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச" (கலி. ௧௧௯); "பிறர்தன்னைப் பேணுங்கா ணாணலும்" திரி. ௯.

௨௫. புறநா. ௩௯௯: ௨௯; "ஒன்றியான் பெட்டா வளவையின்" (பொருந. ௭௩); "நீசில மொழியா வளவை" சிறுபாண். ௨௩௫.

௨௮. "தாவி னன்பொன் றைஇய பாவை" அகநா. ௨௧௨.

௩௧ - ௨. கொல்லிமலை ஓரிக்குரியதென்பது, "கொல்லி யாண்ட வல்வில் லோரி" (புறநா. ௧௫௮: ௫), "ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி", "வல்வில், லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. ௨௦௮, ௨௦௯) என்பவற்றாலும் விளங்கும்.

* மு. "வேழம் வீழ்த்த விழுத்தொடைப்பகழியென்னும் புறப்பாட்டு, இடைநிலத்திற்பரிசுபெற்றமைகண்டார்க்குக்கூறியது" தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

வடிநவி லம்பின் வில்லோர் பெரும
கைவள் ளீகைக் கடுமான் கொற்ற
வையக வரைப்பிற் றமிழகங் கேட்பப்
பொய்யாச் செந்நா நெளிய வேத்திப்
௨௰ பாடுப வென்ப பரிசிலர் நாளு
மீயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே.

திணை-பாடாண்டிணை; துறை-பரிசிற்றுறை; இயன்மொழியும், அரசவாகையுமாம்.

பிட்டங்கொற்றனைக் கருவூர்க் கந்தப்பிள்ளைசாத்தனார் பாடியது.

இ - ள்.—அருவி புலித்திழியும் வேய்பயிலு மறை அகன்றவிடத்து மிளகு கொடிவளரும் மலைச்சாரலினிடத்து மலர்ந்தகாந்தளினது கொழுவிய கிழங்குபிறழக்கிளறித் தணியத்தோட்டகூடத் தறுகண்மையையுடைய கேழலுழுதபுழுதிக்கண்ணே நல்லநாள்வந்த செவ்வியைப்பார்த்துக் குறவர் அந்நிலமுழாதே அதுவே உழவாக வித்திய பரியதோகையையுடைய சிறிய தினை முற்பட விளைந்த புதுவருவாயாகிய கதிரை நல்லநாளின்கண்ணே புதி துண்ணவேண்டி மரையானைக்கறந்த நுரைகொண்ட இனியபாலை மானினது தடி புழுக்கப்பட்ட புலால்நாறும் பானையினது நிணந்தோய்ந்த வெளிய நிறத்தினையுடைய பெரியபுறத்தைக் கழுவாதே உலைநீராகவார்த்து ஏற்றிச சந்தனவிறகான் உவிக்கப்பட்ட சோற்றைக் கூதாளி கவின்பெற்ற மலைமல்லிகை நாறுமுற்றத்து வளவிய குலையையுடைய வாழையினது அகன்ற இலைக கண்ணே பலருடனேபகுத்துண்ணும் ஊராகப்படாத குதிரையென்னுமலைக் குத்தலைவ, கூரியவேலையும் நறைக்கொடியின் நாரால் தொடுக்கப்பட்ட வேங் கைப்பூமாலையினையும் வடித்தல்பயின்ற அம்பினையுமுடைய வில்லாட்களுக குத்தலைவ, கையான்வழங்கும் ஒள்ளிய கொடையினையும் கடிய குதிரை யையுமுடையகொற்ற, உலகத்தெல்லையுள் தமிழ்நாடுகேட்கப் பொய்யாத செவ்வியநா வருந்தும்படி வாழ்த்திப் பாடுவரென்றுசொல்லுவர் பரிசிலர், நாடோறும்; கொடாதவேந்தர் நாணக் கெடாது பரந்த நினது வசையில்லாத வலியபுகழை.—எ - று.

கிழவ, பெரும, கொற்ற, பரிசிலர் நின்புகழையேத்திப் பாடுபவென்ப; அதனால், யானும் நின்பாற் பரிசில்பெற்றுப் பாடுவேனாகவேண்டுமெனப் பரி சிற்றுறைக்கேற்பக் கூறியதாக்குக.

ஊராக்குதிரை, மலைக்குவெளிப்படை. நறை - * பச்சிலைக்கொடி.()

---

கஅ. தமிழகம்: பதிற். உ - ஆம் பத்தின்பதிகம்; சிலப். ா : ௬எ; மணி. கஎ : கூஉ.

கக. புறநா. ௫௬ : கக - உ; கச௮ : கூ - எ.

* "பைங்கொடி - பசிலைக்கொடி; எல்லாவற்றிலும் பசுத்திருத்த லின், பச்சிலை யென்றுபெயர் பெற்றது" (முருகு. கக௦-ந) என்பது இங்கே அறியற்பாலது.

(௧௬௯) நும்படை செல்லுங் காலை யவர்படை
யெடுத்தெறி தானை முன்னரை யெனாஅ
வவர்படை வருஉங் காலை நும்படைக்
கூழை தாங்கிய வகல்யாற்றுக் குன்று
௫ விலங்கு சிறையி னின்றனை யெனாஅ
வரிதாற் பெருமநின் செவ்வி யென்றும்
பெரிதா லத்தையென் கடும்பின திடும்பை
யின்னே விடுமதி பரிசில் வென்வே
லிளம்பல் கோசர் விளங்குபடை கன்மா
௧௦ றிகலின ரெறிந்த வகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க் குலையாநின் வலன்வா ழியவே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—நும்முடையபடை பகைவர்மேற் போம் காலத்து அவரது படையாகிய வேல்முதலாயவற்றை ஓக்கியெறியும் படைக்கு முன்னோயிற் றையாகலானும், அவர்படை அடர்த்துவருங்காலத்து நும்படையினது அணியைத்தாங்கவேண்டி அகன்ற ஆற்றின்கட் குறுக்கேதடுத்துக்கிடக்கின்ற

---

௪ - ௫. புறநா. உ௮௭, ௩௩௦; "வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத், தொன்னா ரோட்டிய செருப்புகன் மறவர்" (மதுரை. எ௨௫ - ௬); "வருவிசைப் புனலைக் கற்சிறை போல, வொருவன் றாங்கிய பெருமையானும்" (தொல். புறத்திணை. ௫. ௮); "பொருபடையுட கற்சிறைபோன், றொருவன்றாங்கிய நிலையுரைத்தன்று" பு - வெ. ௩ : ௧௰.

௮. புறநா. ௧௩௬ : ௨௪.

௯ - ௮. புறநா. ௧௯௯ : ௬ - ௧௫.

௯. கோசர் - ஒருவகைவீரர் ; "நாலூர்க் கோசர் நன்மொழி", "ஒன்றுமொழிக்கோசர்" (குறுந். ௧௫, ௭௩); "மெய்ம்மலி பெரும்பூட் செம்மற்கோசர்", "வடுவுடை முகத்தர், கடுங்கட் கோசர்", "காடபுக்கக நிறுத்த பல்வேற் கோசர்", "ஒன்றுமொழிக் கோசர்", "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர்", "பல்லிளங்கோசர்", "புனைதேர்க் கோசர்", "ஊர்முது கோசர்" (அகநா. ௧௫, ௯௦, ௧௧௩, ௧௯௬, ௨௦௫, ௨௧௬, ௨௫௧, ௨௬௨); "அவ வயகம் விளங்க, நான்மொழிக் கோசர்", "கடந்தடு வாய்வா ளிளம்பல கோசர்" (மதுரை. ௫௦௮-௯, ௭௭௩); "கொங்கிளங்கோசர் - குறும்புசெலுத்துவார் சிலவீரர்" (சிலப். உரைபெற. ௨ : அரும்பத) என்பவை இங்கே அறியற்பாலன ; புறநா. ௨௮௩, ௩௯௬ - பார்க்க.

௯ - ௧௧. புறநா. ௪ : ௬ அடிக்குறிப்பு ; சீவக : ௯௯௫.

மலையையொப்ப அதனைத்தடுத்துநின்றாயாதலானும் பெருமா; நின்னைக் காணலாங்காலம் பெறுதலரிது, எந்நாளும் ; எனதுசுற்றத்தினது இடும்பை பெரிதாதலால் நீ இப்பொழுதே எனக்குப் பரிசில்தந்துவிடுவாயாக; வென்றி வேலையுடைய இளைய பலகோசர் விளங்கிய டைக்கலங்கற்பார் மாறுபட்ட னராயெறிந்த அகன்ற இலையையுடைய முருக்காகிய பெரியமரத்தாற்செய் யப்பட்ட தூணமாகிய இலக்கைப்போலப் பொருவார்க்குத்தொலையாத நினது வென்றிவாழ்வதாக.—எ - று.

'எஞ' என்பன, எண்ணிடைச்சொல்.

'எளிதாலத்தை' என்று பாடமோதுவாருமுளர். (௧௬௯)

---

(௧௭0.) மரைபிரித் துண்ட நெல்லி வேலிப்
பரலுடை முன்றி லங்குடிச் சீறூ
ரெல்லடிப் படுத்த கல்லாக் காட்சி
வில்லுழு துண்மார் நாப்ப ணொல்லென
௫ விழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டு
மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டற்
குறுக லோம்புமின் றெவ்வி ரவனே
௧0 சிறுகண் யானை வெண்கோடு பயந்த

---

௧. மரை-மரையா; ஒருவகைவிலங்கு; "மரையாமரலகவர" கலி. ௬.

௧ - ௨. நெல்லிக்காயை மரையா உண்ணும்; "நெல்லி, மரையில மாரு முன்றிற், புலவேய் குரம்பை நல்லோ ரூரே", "புரிமட மரையான் க நரை நல்லேறு,தீம்புளி நெல்லி மாந்தி" (குறுந். ௨௩௫, ௩௬௭); "புல்லிலைப் பராரை நெல்லி யம்புளித் திரள்காய், கான மடமரைக் கணநிரை கவரும்' "பளிங்கத் தன்ன தோற்றப், பல்கோ ணெல்லிப் பைங்கா யருந்தி, மெலகி கவுள மடமரை யோர்க்கும்" அகநா. ௬௯, ௩௯௯.

௪. புறநா. ௩௩௧: ௨; "வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்' "வானம் வேண்டா வில்லே ருழவர்" (அகநா. ௩௫, ௧௧௩); "வில்லே ரு வர் பகை கொளினும்" குறள், ௮௭௨.

௬ - ௭. புறநா. ௩௭0 : ௬ ; "துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்து (பொருந. ௨௧0); "ஆகுளி கடுப்பக், குடிஞை யிரட்டு நெடுமலை" மலைபடு ௧௪0 - ௪௧.

௮. பிட்டன் : புறநா. ௧௭௨ : ௮ ; அகநா. ௭௭, ௧௪௩.

௧0 - ௧௧. யானைக்கோடு முத்தம் பயத்தல்: புறநா. ௧௬௧ : ௧௬ - "முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற" (பதிற். ௩௨); "பெருங்களிற்

வொளிதிகழ் முத்தம் விறலியர்க் கீத்து
நார்பிழிக் கொண்ட வெங்கட் டேறல்
பண்ணமை நல்யாழ்ப் பாண்கடும் பருத்தி
நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்க்
கரு இரும்பு பயன்படுக்குங் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொருஉ
முலைக்கல் லன்ன வல்லா ளன்னே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை ; தானைமறமுமாம்.
அவனை உறையூர்மருத்துவன்தாமோதரனார் பாடியது.

வல்லாண்முல்லையாவது,—

* "இல்லும் பதியு மியல்புங் கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று."

இ - ள்.—மலையாளாற் பிளத்துண்ணப்பட்ட நெல்லியாகிய வேலியை யுடைத்தாய் அதனாது விலைதயாகிய பாலுடைத்தாகியமுற்றத்தினையுடைய அழகிய குடியையுடைய சிறிய ஊரின்கட் பகற்பொழுதெல்லாம் வேட்டை யாடித்திரிந்த கல்விலலாத காட்சியையுடைய விலங்காகிய ஏனாதுழுதுண்ண பாருடையநடுவே ஓசையையுடைத்தாக இழிந்தபிறப்பினையுடையபுலையன் தனதுவலியகைசிவப்ப வலியால் முடுக்கிக்கொட்டும் வலியகண்ணினையுடைய அச்சத்தைச்செய்யுந்துடி புலிகிடக்கும்சேய மயிலின்கட்போராததயோடு கூடியொலிக்கும் மிகப்பொருந்திய நாட்டையுடையதாகிய கூரியவேலையுடைய பிட்டனை அணுகுதலைப் பாதுகாமின், பகைவீர், அவனருன் சிறுகண்ணினை யுடைய யானையினது வெளியகோடுதாப்பட்ட ஒளிவிளங்குமுத்தத்தை விறலி யருக்குக்கொடுத்து நாரைபிழிந்துகொள்ளப்பட்ட விரும்பத்தக்க † கள் ளாகியதெளிவைப் பண்பொருந்தின நல்லயாழினையுடைய பாணர் சுற்றத் தைநுகர்வித்து இவ்வாறு தன்பாற் பரிசில்நசைசென்றோர்க்கு மெல்லியனு யிருத்தலல்லது பகைவர்க்கு இரும்பைப்பயன்படுத்துகின்ற வலியகையை

---

முத்துடை வான்கோடு" (நற். ௩0ச - ரு) ; "யானை, முத்தார் மருப்பு" (குறிஞ்சி. ௩ரு - சா); "யானை, முத்துடை மருப்பின்" மலைபடு. ருகஎ - அ.

கஉ. புறநா. உஎஉ : ௩ ; "நாரரி நறவு முடிருந்த நந்தைக்கு", "பன் மீன் கொள்பவர் முகந்த விப்பி, நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்" அகநா. உகசு, உகூஎ.

கரு. பண்ணமைநல்யாழ்: புறநா. கஎச: கக.

கஉ - ரு. புறநா. கஎ0: க0 - கக.

கஎ. உலைக்கல்: குறுந். கஉ.

கச - எ. புறநா. க0௬: கக - அ; கஎஅ : ௬ - கக.

* புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், உரு.

† புறநா. உஉச: க - ச.

யுடைய கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கூடத்தோடேயெற்று மாறுபடும் உலையிடத்து அடைகல்போலும் வலிய ஆண்மையையுடையன்.—எ - று.

பிட்டன் நசைவர்க்கு மென்மையலலது பகைவர்க்குக் கல்லன்ன வல்லாளனாதலால், தெவ்விர், அவனைக் குறுகலோம்புமினெனக்கூட்டுக.

வலிதுரந்தென்பதற்கு மாற்றார்வலியைக்கெடுத்தெனினுமமையும்.

நார்பிழிக்கொண்டவென்பதற்குக் கோதைப்பிழிந்துகொண்டவெனினுமமையும். (கஎO)

---

(கஎக.) இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னு
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
ரு யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்
றான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப
வருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்ற
னினமலி கதச்சேக் களனொடு வேண்டினுங்
களமலி நெல்லின் குப்பை வேண்டினு
கO மருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
பிறர்க்கு மன்ன வறத்தகை யன்னே
யன்ன னாகலி னெந்தை யுள்ளடி
முள்ளு நோவ வுறாற்க தில்ல
வீவோ ரீயவிவ் வுலகத்து
கரு வாழ்வோர் வாழவவன் றாள்வா ழியவே.*

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—இன்றுபோகினும் தருவன் ; சிறிதுநாட் கழித்துப்போகினும் தருவன் ; பின்னையும் முன்னே தந்தேனென்னாது பயின்று நாடோறும்

---

க - ரு. புறநா. கசஉ : ரு.

க - எ. புறநா. சஉ : க ; கOக : க - ர ; கஅO : க - எ; உOஙு: க - கூ.

கO. புறநா. கருக: ஙு - ௯; கருஙு : உ.

கஉ - ஙு. 'உள்ளங்காலில் முள்ளுத்தையாமலிருக்கவேண்டும்' என்பது ஒருபழமொழி.

கரு. புறநா. எO: கசு-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; ஙுஅஉ, ஙுஅசு.

* ம். "இன்று செலினும்...தாள்வாழியவே : இது படர்க்கையாகிய இயன்மொழிவாழ்த்து" தொல். புறத்திணை. சூ. ஙுரு - ந.

செலினும் பொய்யாளுகி யாம்வேண்டினபடியே எம்முடைய வறியகலத்தை நிரப்புவோன்; தான்விரும்பினபடியே தன்னுடைய அரசுவப்பச் செய்தற்கரிய போர்த்தொழில்களை முடிப்பானாக, திருந்தியவேலையுடையகொற்றன்; இனமாகிய மிக்க வெவ்விய சேக்களைத் தொழுவோடேவேண்டினும் களத்தின்கண்மலிந்த நெல்லின்குவையையைவேண்டினும் பெறுதற்கரிய அணிகலங்களைக் களிற்றுடனேவேண்டினும், பெரியதகைமையையுடையான், பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யுங்கூற்றையுடையான்; அத்தன்மையனாதலால், எம்முடைய இறைவனது உள்ளடிக்கண் முள்ளுமுட்பட நோவச் சென்றுறுதொழியவேண்டும், ஈவோரரிதாகிய இவ்வுலகத்தின்கண் உயிர்வாழ்வோர்வாழும்பரிசு அவனது தாள் வாழ்வதாக.—எ - று.

பிறர்க்குமென்பது, எச்சம். நிலை, விழைவின்கண்வந்தது.

திருந்துவேற்கொற்றன், பெருநிரைச், சேக்களனொடுவேண்டினும், நெல்லின் குப்பைவேண்டினும், அருங்கலம் களிற்றொடுவேண்டினும் நமக்கேயன்றிப் பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யுந் தகுதியையுடையன்; யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப்போன்; தான்வேண்டியாங்குத் தன் இறையுவப்ப அருந்தொழில்முடிப்பானாகவேண்டுவது; எந்தை உள்ளடி முள்ளும் நோவவுறற்க; வாழ்வோர் வாழ அவன்தாள் வாழியவெனக் கூட்டுக.

'வாழ்வோர்வாழவ்' என்றேழி, வாழ்வோர்வாழும் வாழ்வெல்லாம் அவன் தான்வாழ்கவென்றமை பயினுமமையும்.

தானைமுயற்சியெனினுமமையும்.  (களக)

---

(களஉ.) ஏற்றுக வுலையே யாக்குக சோறே
கள்ளுங் குறைபட லோம்புக வொள்ளிழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக
வன்னவை பிறவுஞ் செய்க வென்னதூஉம்
ரு பரியல் வேண்டா வருபத நாடி
யைவனங் காவலர் பெய்தீ நந்தி
ஞெளிதிகழ் திருந்துமணி நளியிரு ளகற்றும்
வன்புல நாடன் வயமான் பிட்ட

---

உ - ரு. புறநா. கக: கக - உ.

எ. மணி இருளைப்போக்குமென்பதை, "இருட்பருகுமணி" (சீவக. கசுகூ) என்பதன் உரையாலுமுணர்க.

அ - கO. பிட்டன் - சேரனுடைய வீரன்; புறநா. களO : அ; "வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை, யானாதுறவின் வண்மகிழ்ப் பிட்டன்", "வானவன் மறவ, னசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும், பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்" அகநா. எஎ, கசரு.

ஞாயமர் கடக்கும் வேலு மவனிறை
௧0 மாவள் ளீகைக் கோதையு
மாறுகொண் மன்னரும் வாழியர் நெடிதே.

திணையும் துறையும் அவை.

அவனை வடமவண்ணக்கன் தாமோதரனார் பாடியது.

இ - ள்,—உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; மதுவையும் நிறைய உண்டாக்குக; விளங்கிய அணிகலத்தையுடைய பாடுதலவல்ல விறலியர், மாலையும் சூடுக; அத்தன்மையனமற்றும் செய்க; சிறிதும் இரங்குதல் வேண்டா, மேல வரக்கடவ உணவை ஆராய்ந்து ஐவனநெல்லைக்காப்பார் காவற்கிட்டப்பட்ட தீ அவ்விடத்துக்கெட்டகாலத்து ஒளிவிளங்கும் திருந்தினமாணிக்கம் செறிந்த இருளைத்துரக்கும் வலியநிலமாகிய மலைநாட்டையுடையவன், வலியகுதிரையையுடையபிட்டன்; பொருதற்கரியபோரை வெல்லும் வேலும் அவன்றலைவனாகிய பெரிய வள்ளியகொடையையுடைய கோதையும் அவனோடுபகைத்தவேந்தரும் நெடிதுவாழ்க.—எ - று.

பிட்டன்வேலும் கோதையும் மாறுகொள்மன்னரும் நெடிதுவாழியர்; அதுவேவேண்டுவது; மேல்வரும் உணவைத்தேடி என்னதூஉம் பரியல் வேண்டா; ஆதலால், ஏற்றுக; ஆக்குக; ஓம்புக; கோதையும்புனைக; பிறவும்செய்கவெனமாறிக் கூட்டுக.

மாறுகொண்மன்னரும் வாழியரென்றகருத்து: இவன்வென்றுதிறை கொள்வது அவருளராயினென்பதாம்.

விறலியரென்பது, ஈண்டு முன்னிலைக்கண் வந்தது.

வேண்டாவென்பது, வினைமேனின்றதோர் முற்றுச்சொல்.

அன்னவைபிறவுமென்பது, பூசுவன உடுப்பன பூண்பன முதலாயின வற்றை.

வருவதுநாடியென்றோதி, ஐவனத்துக்குவரும் இடையூறுநாடியென்று அதனைக் காவலென்பதனொடுமுடிப்பினுமமையும். (௧௭௨)

௯. "கைவண் செழிய ஆலங்கானத் தமர்கடந் துயர்த்த வேல" அகநா. ௧௭௫.

௧0. "வான நாண வரையாது சென்றோர்க், கானா தீயுங் கவிகைவண் மைக், கடுமான்கோதை" புறநா. ௫௪ : ௬ - ௮.

---

(௧௭௩.) யான்வாழு நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை

௧. பண்ணன்: புறநா. ௭0: ௧௩; ௧௮௧: ௬; ௩௮௮; வாழ்த்துதற் பொருண்மைக்கண்வந்த யகரவீற்று வியங்கோள்வினைமுற்றிற்குமேற்கோள்; நன் - மயிலை. ௬. ௨௬௭; இ-வி. ௬. ௨௩௯ - உரை.

யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
வூணொலி யரவந் தானுங் கேட்கும்
௫ பொய்யா வெழிலி பெய்விட நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேருஞ்
சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் [1] வீறுவீ றியங்கு
மிருங்கிளைச் சிறாஅர்க் காண்டொறுங் கண்டு
௧௦ மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவ னில்ல
மணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே.

திணையும் துறையும் அவை.

சிறுகுடிகிழான்பண்ணனைச் சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன் பாடியது.

இ - ள்.—யானுயிர்வாழுநாளையும்பெற்றுப் பண்ணன்வாழ்வானாக ; பாணரே, காண்பீராக, இந்தப் பரிசிலனது சுற்றத்தின்வறுமையை. புது வருவாயையுடைத்தாகிய பழுத்தமரத்தின்கணணே புள்ளினமொலித்தாற் போன்ற ஊணொலியுண்டாகிய ஆரவாரந்தானுங்கேட்கும் ; காலந்தப்பாத மழை பெய்யுங்காலத்தைப்பார்த்துத் தம்முட்டைகளைக்கொண்டு மேட்டு நிலத்தினையடையும் மிகச்சிறிய எறும்பினது சிலவாகிய ஒழுக்கத்தையொப்பச் சோறுடைக்கையினராய் வேறுவேறுபோகின்ற பெரியசுற்றத்தோடுங் கூடியபிள்ளைகளைக்காண்பேம் ; கண்டுவைத்தும் எம்பசிவருத்தத்தானும் வழிவரல்வருத்தத்தானும் பின்னரும்பின்னரும் விதுப்புற்றுக கேளாநின் றேம் ; தெளிய, பசிநோய்தீர்க்குமருத்துவனது மனை அணித்தோ ? தூரித்தோ ? எங்களுக்கு நீர்சொல்லுமின்.—எ - று.

---

௩ - ௪. புறநா. ௪௭ : ௧ ; ௩௭௦ : ௧௧.

௫ - ௭. கருத்து : "இனித் தெளிவு எ - து, எறும்பு முட்டைகொண்டு தெற்றியேறின் மழை பெய்தது மழைபெய்யுமென்பது" (தொல். வினை. சூ. ௪௫ - இளம்); "எறும்பு முட்டைகொண்டு தெற்றியேறின மழைபெய்தல் நூலாற்றெளிந்தான் அவை முட்டைகொண்டு தெற்றியேறியவழி, மழை பெய்யாமுன்னும் மழை பெய்தது, மழை பெய்யும் என்னும் ; ஆண்டு எதிர் காலத்திற்குரிய பொருள் இறந்தகாலத்தானும் நிகழ்காலத்தானும் தோன்றியவாறு கண்டுகொள்க", "எறும்பு முட்டைகொண்டு திட்டையேறியது கண்டுழி மழை பெய்வதாமென்னாது மழைபெய்தது பெய்கின்றதெனக்கூறுதல் தெளிவு" ஷை ஷை ஷை ௪௮ - சே; கல் : ௩ ; நன் - மயிலை. சூ. ௩௮௩ ; நன் - வி. சூ. ௩௮௪.

௧௧. "பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோர், இசைச்சொ லளவைக் கென்னா நிமிராது", "பசிப்பிணிமருந்து" மணி. ௧௧ : ௮௦-௮௧ ; ௨௮ : ௨௧௭.

௧௨. வினைக்குறிப்புச்சொல், பிறிதின்கிழமையாகிய உடைமைப்பொருள் பட நிற்றற்கு மேற்கோள்' தொல். வினை. ௨௰ - சே; கல் ; ௩.

(பி - ம்.)—1 'வீற்றுவீற்று'

காண்க இவனென்பது, காண்கிவனெனக் கடைக்குறைந்துநின்றது. தானென்பது, அசைநிலை.

இது, பரிசில்பெறப்போகின்றான் வருகின்றவரைக்கண்டுவினவுவான் பண்ணனது இயல்புகூறிவாழ்த்தியவாறு.

இனி, பரிசிலன்றான், 'அரவமுங்கேட்கும்; சிறாரைக்காண்டும்; கண்டும் மற்றும் மற்றும்வினவுதும்; நீர் எமக்குப் பசிப்பிணிமருத்துவனில்லம் அணித்தோ சேய்த்தோ கூறுமின்' என்னாநின்றான்; இவனகடும்பினது இடும்பையைப் பாணர்காண்க; இங்ஙனம் எம்போலும் இரவலர்வறுமையைத்தீர்க்கின்றபண்ணன்வாழியவென்று பெறப்போகின்றானைக்கண்டு பெற்றுவருகின்றான் பக்கப்பாணரைநோக்கிக் கூறியதாக உரைப்பினுமமையும். இதற்கு என்னாநின்றானென ஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது.

அன்றியும், பரிசிற்குச்செல்கின்றான், பசிப்பிணிமருத்துவனில்லம் அணித்தோசேய்த்தோவென்று பலகாலும்வினவ, அதனை உட்கொண்டு, ஊணொலியரவமுங்கேட்கும்; இருங்கிளைச்சிறார்க்காண்டும்; கண்டும் மற்றும் மற்றும்வினவுதுமெனச் சாதியொருமையாலுளப்படுத்திக்கூறிப் பின்பு இங்ஙனம் காணவும் கேட்கவும்படுவது நுமக்கு ஏற அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கென்று அவனைநோக்கிக்கூறி, பின்பு இங்ஙனம் என் வறுமையும்தீர்த்து இவன்வறுமையுந்தீர்க்கவிருக்கின்றபண்ணன் யான் வாழுநாளும்பெற்றுவாழ்வானாகவெனப் பரிசில்பெற்றுவருகின்றான் தன்பக்கப்பாணரைநோக்கிக் கூறியவாறாகவுரைப்பாருமுளர்.

இனி, செல்கின்றான்பக்கப்பாணருள் ஒருவன் ஆண்டுநிற்கின்ற பாணன் பக்கப்பாணரைநோக்கிக் கூறியதாகவுரைப்பாருமுளர்.

ஈண்டும் இவனென்றது, பரிசிலனை.

'மற்றும்மற்றும் வினவுந்தெற்றென' என்று பாடமோதுவாருமுளர். (௧௭௩)

---

(௧௭௪.) அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றீரக் கடுந்திற
௫ [1] லஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்
கரசிழந் திருந்த வல்லற் காலை
முரசெழுந் திரங்கு முற்றமொடு கரைபொரு

௬. "அரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை" சிலப். ௪: ௮; ௨௭: ௧௩௨.

௭. "வள்வார்முரசங் கறங்கும்மணி முன்றில் வேந்தன்" நைடதம், அன்னத்தைத்தூது. ௬௪.

(பி - ம்.)—[1] 'அஞ்சனவண்ணன்'

திரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி
மல்ல னன்னாட் டல்ல றீரப்
௧௦ பொய்யா நாவிற் கபிலன் பாடிய
மையணி நெடுவரை யாங்க ணொய்யெனச்
செருப்புகன் மறவர் செல்புறங் கண்ட
வெள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
யருவழி யிருந்த பெருவிறல் வளவன்
௧௫ மதிமருள் வெண்குடை காட்டி யக்குடை
புதுமையி னிறுத்த புகழ்மேம் படுந
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்மு
னீண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇய
௨௦ ருயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலி
னறுகொன் மருங்கின் மாதிரந் துழவுங்
கவலை நெஞ்சத் தவலந் தீர
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
கல்கண் பொடியக் கானம் வெம்ப

---

௧௦. "பொய்யாச் செந்நா" (புறநா. ௧௬௮: ௧௬); "மரம்புரிகொள்கை வயங்குசெந் நாவி, னுவலே கூராக் கவலையி னெஞ்சி, னனவிற் பாடிய நலலிசைக்கபிலன்" பதிற். ௮௫.

௧௧. "மைபடுமாலவரை" (நற். ௩௭௩.) "மைபடுமாமலே" அகநா. ௧௫௩.

௧௨. செருப்புகன் மறவர்: புறநா. ௩௧: ௯ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்கணாடவர்" (அகநா. ௧௫௭); "ஒன்னுரோட்டிய செருப்புகல் மறவர்" மதுரை. ௭௨௬.

௧௦ - ௧௩. முள்ளூர்மலே மலையனுடையதென்பதும் அதனைக் கபிலர் பாடியதும் இந்நூல் ௧௨௩ - ஆம் பாடல் முதலியவற்றாலும் விளங்கும்.

௧௫. புறநா. ௩ : ௧; "மதிமருள் வெண்குடை மன்னவன்", "மதிமருள் வெண்குடை மன்னை" (மணி. ௪ : ௨௭ ; ௨௨ : ௧௬௪); "மலைமிசைத் தோன்று மதியம்போல யானைத்தலைமிசைக் கொண்ட குடையர்" நாலடி. ௨௧.

௧௬ - ௨௦. "ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல், காண் டகு சிறப்பினுங் கடவுள ரலலது" (மணி. ௧௪ : ௩௮ - ௯); "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" கம்ப, நகர. ௫.

௨௦ - ௨௩. "சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ, ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன, நீயோ தோன்றினை" மணி. ௧௦: ௧௦ - ௧௨.

உரு மல்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்
கோடை நீடிய பைதறு காலை
யிருநில நெளிய வீண்டி
யுருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

மலையமான் சோழியவேனாதி 1 திருக்கண்ணனை மாறோக்கத்துநப் பசலையார்பாடியது.

இ - ள்.—பிறரைவருத்தும் அச்சத்தினையுடைய அசுரர் திரள் கொண்டுபோய் மறைத்தாராக, சேய்மைக்கண்ணே விளங்காநின்ற தலைமையினையுடைய ஞாயிற்றைக் காணாமையால் இருளானது உலகத்தாரது கண்ணைமறைத்த வட்டமாகிய உலகத்தினது 'நோய்கொண்ட துன்பம் நீங்கும்பரிசு மிக்கவலியையுடைய அஞ்சனம்போலும் நிறத்தையுடைய திருமேனியையுடையகண்ணன் அந்தஞாயிற்றைக்கொண்டுவந்து இவ்வுலகத்தின்கண் அந்தகாரநீங்கும்பரிசு ஆகாயத்தின்கண்ணே நிறுத்தினாற்போலப் பகைவேந்தரொடுபொருது உடைந்துபோதலால் தம் வேந்தனை இழந்துழலும் இன்னாமையையுடைய பொழுதின்கண் முரசு ஒளிர்ந்துமுழங்கும் செண்டுவெளியையுடைய கோயிலுடனே கரையைப்பொருது முழங்கும் நீராலே உடைந்து ஆழ்ந்தோடுகின்ற மிக்க பெரிய காவிரியையுடைய வளவிய நலநாட்டினது துயரங்கெடப் பொய்யாதநாவினையுடைய கபிலனாற்பாடப்பட்ட முகிலணிந்த பெரிய மலையிடத்து விரையப் போரைவிரும்புமறவர் ஓடுபுறங்கண்ட இகழ்ச்சி யற்ற' தலைமையினையுடைய முள்ளூரின்மலையுச்சியின்கண் பிறராற்காண்டற்கு அரிய இடத்தின்கணிருந்த பெரியவென்றியையுடைய சோழனது திங்கள் போலும் வெண்குடையைத் தோற்றுவித்து அக்குடையைப் புதுமையுண்டாக. நிலைபெறுவித்த புகழ் மேம்படுந, வரைமுழைஞ்சில்வாழும் புலியை யெழுதப்பட்ட இலாஞ்சனையையுடைய கோட்டையையும் விளங்குதலையுடைய அணிகலத்தினையும் வண்டார்க்கப்பட்ட கண்ணியையும் பெரிய புகழினையுமுடைய நும்முன்னாகிய தந்தை இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்ல அறத்தின்பயனை ஆண்டாகிய தெய்வலோகத்துப்போய் நுகரவேண்டிப் போனானாதலின், நல்ல நெறியைக்கொன்ற பக்கத்தினையுடைய திசையெங்குஞ் சூழ்வரும் கவலையுற்றமனத்தின்கண் வருத்தங்கெட நீவந்துதோன்றினாய், இணர்ந்தமாலையையுடையதலைவ, மலையிடம்பொடியக் காடு தீமிக மிக்க நீரெல்லையையுடைய நீர்நிலைகள்பலவும் முளிய இவ்வாறு கோடை நீடப்பட்ட பசுமையற்றகாலத்துப் பெரியநிலங்குழியும்பரிசு திரண்டு உருமேறுமுழங்கும் மின்முதலாயினதொகுதியையுடைய மழை சொரிந்தாற் போல.—எ - று.

---

உரு - சு. "உருகெழு மண்டிலங், கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம், பயங் கெடத் திருகிய பைதறு காலை" அகநா. உசூஉ.

உ௪. புறநா. க௭க : சு.

உ௫ - ௮. புறநா. கசு௦: க - ரு.

(பி - ம்.)—1 'திருக்கிள்ளியை'

முற்றமென்றது, அதனையுடையகோயிலை.
வெளிமுற்றமொடு வெண்குடை காட்டியென இயைப்பினுமமையும்.
கோட்டைவெளியாகிய சுடர்ப்பூணென்றுமாம்.

ஞாயிற்றை அஞ்சனவுருவன் தந்துநிறுத்தாங்கு முற்றமொடு நாட்டு அல்லல்தீர வளவன்வெண்குடைகாட்டி அக்குடைநிறுத்த புகழ்மேம்படுந, நிரைத்தாரண்ணல்; நும்முன் பெயர்ந்தனனாகலின், நெஞ்சத்து அவலந்தீரப் பைதறுகாலை மழை பொழிந்தாங்கு நீதோன்றினை; ஆதலால், இவ்வுலகத்திற்குக் குறை என்னையெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

அவுணர் கணங்கொண்டொளித்தென ஞாயிறுகாணாத பருவாரீர அஞ்சனவுருவன் தந்துநிறுத்தாங்கெனபது, தேவர்களும் அசுரர்களும் பொருவுழிப் பகலும் இராப்போல இயங்கித் தாம்போர்செய்தற்பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தார்கள்; ஞாலம் அதனால் உள்ளபருவாரீரத் திருமால அதைக்கொண்டுவந்துவிட்டதொருகதை.

'விடர்ப்புலிபொறித்தகோட்டை' என்றதனால், சோழனொடுதொடர்பு பட்டு * அவனுக்குத் துப்பாதல் தோன்றி நின்றது.

'ஆறுகொண்மருங்கின்' என்று பாடமோதுவாருமுளர். (௧௭௪)

* "மூவரு ளொருவன் றுப்பா கியரென வேத்தினர் தரூஉங் கூழே" புறநா. ௧௨௨: ரு - சு.

---

(௧௭ரு.) எந்தை வாழி யாத னுங்கவென்
னெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
யென்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுது
ரு மென்னியான் மறப்பின் மறக்குவென் வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் [1] கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
வுலக விடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்
௧0 பலர்புர வெதிர்ந்த வறத்துறை நின்னே.

௧. ஆதனுங்கன் : புறநா. ௩௮௯ : ௧௪.
அ. "உலக விடைகழி யொருங்குட னீங்கி" சிலப். ௧0 : உ௪.
சு - அ. "விண்பொரு நெடுங்குடை யியறேர் மோரியர், பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த வறை", "வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த, விலங்குவெ ளருவிய வறை", "மோரியர், தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு, விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத், தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த வறை" அகநா. ௬௯, ௨௫௧, ௨௮௧.
(பி - ம்.)—1 'கொடித்தேரோரியர்'

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது.

இ - ள்.—என்னுடைய இறைவ, வாழ்வாயாக ; ஆதனுங்க, யான் ஒன்றைச்சொல்லநினைப்பின், நினதுபுகழல்லது சொல்லாமையால், எனது நெஞ்சை வெளிப்படுத்திக் காணலுறுவோர் ஆங்குநின்னைக் காணுநிற்பர் ; நின்னையுடைய யான் நின்னைமறப்பின் மறக்குங்காலமாவது சொல்லக்கேட்பாயாக ; என்னுடைய உயிரானது என்னுடம்பைவிட்டு நீங்குங்காலத்தும் என்னை யான்மறக்குங்காலம் உண்டாயின் அப்பொழுதுமறப்பேனல்லது மறவேன். வென்றிவேலையுடைய விசும்பைத்தோயும் நெடியகுடையினையும் கொடியணிந்த தேரினையுமுடைய நிலமுழுதுமாண்டவேந்தரது திண்ணிய ஆர்சூழ்ந்த சக்கரமியங்குதற்குக் குறைக்கப்பட்ட வெள்ளிமலைக்கு அப்பாலாகிய உலகத்திற்குக் கழியும் இடைகழியாகிய அற்றவாயின்கண் தேவர்களால் நிறுத்தப்பட்டு இருபொழுதும்ஒருபெற்றியே நிலைபெற்று விளங்கும் பரந்த இடத்தையுடைய ஆதித்தமண்டலத்தையொப்ப நாள்தோறும் இரவு பகலென்னாமல் பலரையும்காத்தலை ஏற்றுக்கொண்டு ஒருபெற்றியே விளங்கிய அறத்துறையாகியநின்னை.—எ - று.

எந்தை, வாழி ; ஆதனுங்கனே, மண்டிலத்தன்ன அறத்துறைநின்னை நின்னுடையேனாகியயான் மறப்பின் மறக்குங்காலமாவது என்யான்மறப்பின் மறக்குவென் ; ஆதலால், என்னெஞ்சைத்திறப்போர் நிற்காண்குவரெனக் கூட்டி வினைமுடிக்க.

**மோரியராவார்** - சக்கரவாளசக்கரவர்த்திகள் ; விச்சாதரரும், நாகருமென்ப.

'திகிரி திரிதரக்குறைந்த' என்றோதி, சக்கரவாளத்திற்கு அப்பாற்பட்ட உலகத்து மோரியர் திகிரி ஊடறுத்துச்சேறலிற் குறைந்த பிளவுபட்ட வாயிற்கு அப்பாலாகிய உதயகிரிக்கண் நிலைபெற்ற ஆதித்தமண்டலமென்றுரைப்பாருமுளர். (கஎரு)

---

(கஎசு.) ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்
யாமையீன் புலவு நாறு முட்டையைத்
தேனா றாம்பற் கிழங்கொடு பெறூஉ
ரு மிழுமென வொலிக்கும் புனலம் புதவிற்
பெருமா விலங்கைத் தலைவன் சீறியா

---

க. "விளையா டாயமொடோரை யாடாது" (நற். சுஅ); "ஓரை யாயங் கூற", "ஓரைமகளிர்" குறுந். சஅ, ஙகசு, சOக.

ங. ஆமைமுட்டை : "நிறைச்சூ லியாமை மறைத்தீன்று புதைத்த கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டை" அகநா. ககூO.

ரு. "புனலம் புதவின் மிழலை" புறநா. உச : கக.

ழில்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
யுடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீ
க0 ரோரூ ருண்மையி னிகந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்
கழிமென் சாயல் காண்டொறு நினைந்தே.

திணையும் துறையும் அவை.

* ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணைநன்னாகனார்பாடியது.

இ - ள்.—விளையாட்டுத்திரட்சிக்கண் ஒள்ளியவளையையுடைய மகளிர் கேழற்பன்றியுழுத கரியசேற்றைக்கிளறின், அதன் கண்ணே ஆமையீனப்பட்ட புலாலாறும்முட்டையைத் தேனாறும் ஆம்பலினது கிழங்குடனே பெறும் இழுமென்னும் அநுகரணமுண்டாகமுழங்கும் நீர்வழங்கும்வாய்த் தலைகளையுடைய பெரிய மாவிலங்கையென்னும் ஊர்க்குத் தலைவன், சிறிய யாழையுடைய வறியோர்தொடுக்கும் புகழ்மாலை நடும் நல்லியக்கோடனைத் துணையாக நீயுடையையாதலான், என்னைப் பொருந்தியவிதியே, நீ ஒரு குறையுடையையல்லை, வாழ்வாயாக; பாரியது பறம்பின்கட் குளிர்ச்சியை யுடைய சுனையிடத்துத் தெளிந்தநீர் போய்த்தேடிக்கொள்ள வேண்டாமல் ஒரூரின்கண்ணேயுண்டாதலின் அதனை யாம் வேண்டியபொழுது உண்கின் றேமென்று நெகிழ்ந்திருந்தாரையொப்ப அவனைக்காணுதொழிந்த நாட்களை எனக்கு நாட்களாய்க்கருதலவல்லவென்று உட்கொண்டு அவனொடுதொ டர்ந்த †நட்பு இன்றேபோல இடையறாதுசெல்லவேண்டுமென்று பின்வரு

எ. "இல்லோர் செம்மல" சிலப். கரு : கூ0.

சு - எ. "நன்மா விலங்கை மன்ன ருள்ளும், ...பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை, நல்லியக் கோடனை", "செல்லிசை நிலைஇய பண்பி, னல்லியக் கோடனை" சிறுபாண். கஉ0 - உக ; உசுஅ - கூ.

எ. "அறிந்தோர் சொன்மலை" ழநது. உகூரு.

அ. "நல்லைமன் றம்ம பாலே" குறுந். உஉகூ.

கூ. ழ. புறநா. ருருஎ : கூ; குறுந். ககூகூ : ரு.

கூ - க0. "இனியே, பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர், தைஇத் திங்கட் டண்ணிய தரினும், வெய்ய வுவர்க்கு மென்றனிர்" குறுந். ககூகூ.

கக - உ. செய்யாவெனனும் வாய்பாட்டுவினையெச்சம் வினைமுதலும் இறந்தகாலமும் தழுவிவந்ததற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ருசரு.

கரு. சாயல் ஆண்பாலார்க்கும் கூறப்படுதல், "நீரினு மினிய சாயற் பாரிவேள்" (புறநா. க0ரு) என்பதனாலும் அதன் குறிப்பாலும் உணரலாகும்.

* இவன், பத்துப்பாட்டிற் சிறுபாணாற்றுப்படைத்தலைவன்.

† "இன்றே போல்கநும் புணர்ச்சி" புறநா. ருஅ : உஅ.

காளைக்கு இரங்காநின்றது என்னுடையநெஞ்சம், அவனது மிக்க மெல்லிய சாயலைக் காணுந்தோறும்நினைந்து.—எ - று.

என்னெஞ்சம் அவன்சாயலைக்காணுந்தோறும் நினைந்து வழிநாட்கிரங்கும் ; என்னைப்புணர்ந்தவிதியே, நீ நல்லியக்கோடனை உடையையாதலால், நீ என்னகுறையையுடையை ; நீவாழவாயாகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'இல்லோர்சொன்மலை' என்பதற்கு இல்லோர்சொல்லைச்சூடுமென்றும், 'எற்புணர்த்தபாலே' என்றேதி என்னை அவனோடுகூட்டியவிதியேயென்றும், 'வழிநாட்கிரங்கும்' என்பதற்கு இன்னும் இவனோடுதொடர்ந்தநட்பு இடையற்றுக்கழியுங்கொலென்று இரங்குமென்றும் உரைப்பாருமுளர். (கஎசு)

---

(கஎஎ.) ஒளிறுவாண் மன்ன ரொண்சுடர் நெடுநகர்
வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கிப்
பாடிப் பெற்ற பொன்னணி யானை
தமரெனின் யாவரும் புகுப வமரெனிற்
ரு றிங்களு நுழையா வெந்திரப் படிபுழைக்
கண்மாறு நீட்ட நணிநணி யிருந்த
குறும்பல் குறும்பிற் றதும்ப வைகிப்
புளிச்சுவை வேட்ட செங்க ணுழவர்
தீம்புளிக் களாவொடு துடரி முனையின்
கo மட்டற னல்யாற் றெக்க ரேறிக்
கருங்கனி நாவ லிருந்துகொய் துண்ணும்
பெரும்பெய ராதி பிணங்கரிற் குடநாட்
டெயினர் தந்த வெய்ம்மா னெறிதசைப்

க. "ஒளிறுவாட் பொருப்பன்" பரி. உஉ: க.

உ. கண்வெளிறுபோதல்: "நீளிடை யத்த நோக்கி வாளற்றுக், கண்ணுங் காட்சி தெளவின" (நற். ருகள); "என் கணனே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே" (குறுந். சச); "கோலஞ் செயபவர் கோல வெறிப்பின், மாலை வண்டின மாலைக்கண கொண்டவே" (சீவக. உருகூள) ; திரங்கல - உலர்தல; "நிழலிடம் பெறாது, மடமா னம்பிணை மறியொடு திரங்க' ஐங்குறு. ருஉகூ.

க - உ. "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புகத்தாம் பெறாஅர் புறங்கடை - பற்றி, மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத், தவந்தாற் றவஞ் செய்யா தார்" நாலடி. ருக.

சு. "நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து" பரி. கஎ: உரு.

கூ. "களவுட்புளி" (புறநா. ருருஉ);"களவும் புளித்தன" அகநா. ருகூச

கo. புறநா. ககரு: ரு - ச.

கக. "காலி னுதிர்ந்தன கருங்கனி நாவல்" மலைபடு. கருரு.

பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை
கரு வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
விரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே.

திணையும் துறையும் அவை.

மல்லிகிழான்காரியாதியை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—விளங்கிய வாளையுடைய வேந்தரது ஒளியையிளக்கத்தினையுடைய உயர்ந்தகோயிற்கண் கண்ணொளிகெடப் பலநாள் நின்றுலர்ந்து அவ்விடத்துப் பாடிப்பெற்ற பொற்பூவையணிந்தயானே, தமக்குச்சிறந்தாராயின் எல்லாரும் எளிதிற்புகப்பெறுவா. போராயினு, திங்களாலும் நுழையப்படாத பொறிகளைப்பொருந்திய இட்டியவாயிலையுடைத்தாய்க் கள்ளை ஒருவர்க்கொருவர் மாறுமாறாகநீட்டிட ஒன்றற்கொன்று அணித்தாயிருந்த குறிய பல அரணின்கண்ணேயிருந்து அக்கள்ளை நிரம்பவுண்டுகாலங்கழித்துப் பின்னைச் செருக்கினால் விடாய்மிக்குப் புளிச்சுவையை விரும்பிய மதத்தாற்சிவந்த கண்ணையுடைய ஆண்மக்கள் இனியபுளிப்பையுடைய களாப்பழத்துடனே துடரிப்பழத்தைத்தின்று வெறுப்பிற் கலையாதுப் பைந்தேன் அரித்தொழுகுகின்ற நல்ல காட்டியாற்றினது மணற்குன்றின்கணணேயேறிக் கரிய நாவற்பழத்தைப்பறித்து இருந்துண்ணும் பெரிய பெயரையுடையனாகிய ஆதியினது, பிணங்கிய அரில்பட்ட காட்டையுடைய குடநாட்டின்கண் மறவர் எய்து கொடுவரப்பட்ட எய்ப்பன்றியினது கடியப்பட்ட தசையினது செவ்வியையுடைய நிணமிக்க புதியவெண்சோற்றுக்கட்டியை வருவார்க்கெல்லாம் ஒப்பக்கொடுக்கசொரியப் பெரியபனையோலையாணியன்ற குடையிலே நுகரும் பெரியபுலர்ச்சியையுடைய விடியற்காலத்துச்சிருக்கு நிகரொவ்வாது.—எ - று.

எந்திரப்புழையையுடைய நணிநணியிருந்த குறும்பிற் கண்மாறுநீட்டத் ததும்ப உண்டுவைகிட புளிச்சுவைவேட்ட ஆடவர் முனையின் எக்கரேறியிருந்து நாவற்கனி கொய்து உண்ணுமெனவிளையையும்.

பாடிப்பெற்றயானேம் பன்னாள்இரங்கிப பெற்றமையிற் பனங்குடையின் மிசையும் வைகறைச்சீர்சாலாதென்றார்.

வெளிறுகண்போகப்பாடியெனக்கூட்டி, வெண்மை இடத்தினின்றும் நீங்கப் பாடியெனினுமமையும்.

வைகறைச் சீர்சாலாதென்றது, அக்காலத்து அவன்செய்யுஞ்சிறப்பினை நோக்கி.

'கைமாறு நீட்டி நணிநணி யிருந்து, குறும்பல குறும்பிற் றதும்ப உண்டுவைகி' என்று பாடமோதுவாருமுளர். (கஉ௰)

கச. 'ஊன்சோற்றமலை' புறநா. ௬௩ :

கச-ரு. "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்" குறள், அசு.

கசு. பனங்குடை - பனையோலையாற்செய்யப்பட்ட உண்கலம் ; (புறநா. ௱௫௨); "வேணீருண்ட குடையோ ரன்னர்" (கலி. உ௩); "ஆறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடை" அகநா. ௱௨௧.

(கள அ.) கந்துமுனிந் துயிர்க்கும் யானையொடு பணைமுனிந்து
காலியற் புரவி யாலு மாங்கண்
மணன்மலி முற்றம் புக்க சான்றோ
ருண்ணா ராயினுந் தன்னொடு சூளுற்
ரு றுண்மென விரக்கும் பெரும்பெயர்ச் சாத்த
னீண்டோ ரின்சா யல்னே வேண்டா
ரெறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பிற்
கள்ளுடைக் கலத்த ருள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபே ராளர்
கய அஞ்சி நீங்குங் காலை
யேம மாகத் தான்முந் துறுமே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

1 பாண்டியன் கீரஞ்சாத்தனை அவர் பாடியது.

இ - ள்.—கம்பத்தை வெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளும் யானையோடு பந்தியை வெறுத்துக் காற்றுப்போலும் இயல்புடைய குதிரை ஆலிக்கும் அவ்விடத்து இடுமணல் மிக்க முற்றத்தின்கட் புக்க சான்றோர் அப்பொழுது உண்ணாராயினும் தன்னுடனே சார்த்திச் சூளுற்று உண்மினென்று அவரை வேண்டிக்கொள்ளும் பெரிய பெயரையுடைய சாத்தன் எம்போல வாரிடத்து இனிய மென்மையையுடையன் ; இங்ஙனம் மெல்லியனாயினும் விரும்பாதாரெறியும் படைக்கலம் தம்மிற்கலந்த அஞ்சத்தக்க [illegible]ரின்கண் வீரபானத்தையுடைய கலத்தினராய் அதனையுடைய தமது ஊர்க்குவளேயிருந்து சொல்லிய வீரம் மேம்பட்ட வார்த்தையைப் போரின்கண் மறந்த சிறிய பேராண்மையை யுடையோர் போர்க்[illegible]து அஞ்சிப் புறங்

---

க. புறநா. உரு: க - உ.

உ. "காலியக் கன்ன கதழ்பரி கடைஇ" [illegible]ரை. சசO.

க - உ. " பணைநிலைப் புரவி யாலு மோ[illegible]ம்" (சிலப். கரு: கசஎ); "பணைநிலைப் புரவி பலவெழுந் தால" [illegible]. எ. ககள.

ச-ரு. "உண்ணு நோனபி தன்[illegible]டு சூளுற், றுண்மென விரக்குமோர் களிமகன்" மணி. ரு: கOஉ - ரு.

ரு - ரு. "இருநதோம்பி யி[illegible]ழ்வ தெல்லாம் விருந்தோம்பி, வேளாண்மை செய்தற் பொருட்டு" [illegible]

எ. மயங்கிய ஞாட்பு: [illegible]ர், அக. "மயங்கமர்" (கலி. ருக); "கழுமிய ஞாட்பு" நா. ருசரு : கஎ ;

கூ. நெடுமொழி : டிவழி. [illegible]க.

[illegible] "சொலலுத லியார்க்கு மெளிய வரியவாஞ். ருசு: கூ; ருஎகூ: உஉ. "சொலலுத லியார்க்கு மெளிய வரியவாஞ் சொல்லிய வண்ணஞ்செயல்" குறள். சகூச.

கக. "அழிபடைசால்லிய வண்ணஞ்செயல்" [illegible]

கூ - கக. புறநாங்கல்" சிறுபாண். உகக.

(பி - ம்.)—. ருச; கஎO: கச - எ.

'பாண்டிக்குதிரைச்சாக்கையனை அவர் பாடியது'

கொடுத்து ஓடுங்காலத்து அவர்க்கு அரணகத்தான் தன்வலியான் முந்துற்று நிற்டன்.—எ - று.

நெடுமொழி மொழிதலாற் பேராண்மையும், பின் அதனை மறத்தலாற் சிறுமையுமுடைமையின், சிறுபேராளரென்றார்.

'நெடுமொழி மறந்து' என்பதூஉம் பாடம். (கஎஅ)

---

(கஎகூ.) ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை
மலர்ப்போர் யாரென வினவலின் மலைந்தோர்
விசிபிணி முரசமொடு மண்பல தந்த
௫ திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்
படைவேண்டுவழி வாளுதவியும்
வினைவேண்டுவழி யறிவுதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் றேஎத்
தசைநுகம் படாஅ வாண்டகை யுள்ளத்துத்
க௦ தோலா நல்லிசை நாலை கிழவன்
பருந்துபசி தீர்க்கு நற்போர்த்
திருந்துவே ளுகற் கூறினர் பலரே.

திணையும் துறையும் அவை.

நாலைகிழவனாகனை [1] வடநெடுந்தத்தனார் பாடியது.

இ - ள்.—உலகத்தின்மேல வண்மையுடையோர் இறந்தாராகப் பிறர் பால ஏலாதுகவிழ்ந்த எனது இரத்தலையுடைய மண்டையை ஏற்கும்பரிசு இட்டுமலர்த்த வல்லார்யாரென்று கேட்டலில், தன்னொடு மாறுபட்டோரது வலித்துப் பிணிக்கப்பட்ட முரசத்தோடு மண்பலவற்றையும் கொண்ட திருமகள் விரும்பிய நுண்ணிய தொழில்பொருந்திய ஆபரணத்தையுடைய பாண்டியன்மறவன், அவனுக்குப் படைவேண்டியவிடத்து வாட்போரையுதவியும் ஆசியற்கேற்றகருமசசூழ்ச்சிவேண்டியவிடத்து அமைச்சியலோடு நின்று அறிவு உதவியும் இவ்வாறு வேண்டுவன அவ்வரசனிடத்து உதவித் தான் பூண்ட நுகம் ஒருபாற்கோடித் தளராமற் செலுத்தும் பகடுபோல

---

க - ரு. புறநா. க௦ரு : ரு - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

ச - ரு. "நிலந்தந்த பேருதவிப், பொலந்தார் மார்பி னெடியோன்" (மதுரை. சு௦ - சுக); "நிலந்தரு திருவிற் பாண்டியன்" தொல். சிறப்புப்.

சு - அ. "முறைவேண்டுநர்க்குங் குறைவேண்டுநர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி" பெரும்பாண். சசரு - எ.

க௦. தோலா நல்லிசை: புறநா. ருசு : க௧.

(பி - ம்.)—1 'வடமநெடுநத்தனார்', 'வடமநெடுந்தச்சனார்'

ஆண்மையினும் சூழ்ச்சியினுந் தளராத் ஆண்மைக்கூறுபாடு பொருந்தி ஊக்கத்தினையும் தோலாத நல்ல புகழையுமுடைய நாஞ்சிலவன், பருதினது பசிதீர்க்கும் நல்ல போரைச் செய்யும் திருந்திய வேலையுடைய நாஞ்சிற்ப் பலரும் சொன்னார்.—எ - று.

பருந்துபசிதீர்க்கும் வேலெனவிளையும். (கஎசு

---

(கருo.) இரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
யில்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
யிறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக் கொண்ட விழுப்பு ணோய்தீர்ந்து
ரு மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்
[1] தீர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞ
னின்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
கo யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
முண்ணா மருங்கு காட்டித் தன்னூர்க்

---

உ. புறநா. உoச: உ; "இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிளிவு" (கலி. உ); "உளா, திரப்போ னின்மை கண்டுங், கரப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர். "கலிமாறேயே" என்னும் பாடல்.

ச. "இரும்புமேய்ந்த தொழிந்த மிச்சில வரைமார்பன்", "இரும்புண்டு மிகுத்த மார்பு", "இரும்பெச்சிற் படுத்தமார்பர்" சீவக. கஎகo, உஉசக, உஙருங.

ரு. "மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்" (நற். உஉசு) ; "மரமுதல் சாய மருந்துகொண் டாங்கு" (பெருங். க. ௩ ௨: கஅஅ); "பாலகொண்ட வெத்தியெனவே யுடல் வடுப்பட்ட வெமர்" (வேங்கைக்கோவை, கூகூ); தொல். உவம. ரு. உo. பேர். மேற்.

ரு - கூ. "கொடுஞ்சமரிற் பட்ட வடுத்துளைத்த கல்லபிராமம்" தனிப் பாடல்.

எ. புறநா. கஎங : கக; "ஈர்ந்தையோனே......பகைஞனென்புழி, ஈர்ந்தையோனென்னுமுற்றிற்கு முடிபாகிய பகைஞனென்னும் பெயரை இடையினின்றசொல் விசேடித்துநின்றது" தொல். எச்ச. சூ. ருகூ - ந.

கூ. முதுவாயிரவல: புறநா. சஅ: எ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.)—1 'ஈரந்தையோன்', 'ஈந்தையோன்'.

கருங்கைக் கொல்லனை யிரக்குந்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.*

திணையும் துறையும் அவை; துறை - பாணாற்றுப்படையுமாம்.

1 ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—நாடோறும் தொடர்ந்துகொடுக்கும் செல்வமுமுடையானல்லன்; இங்ஙனம் வறிஞனாயினும் இரந்தோர்க்கு இல்லையெனச்சொல்லி மறுக்கும் புன்மையுமுடையனல்லன்; தன் அரசக்குவந்துற்ற போரானமைந்த இடும்பைகளைத் தான்பொறுத்து அந்தப்போரின்கட் படைக்கலங்கள் சுவைக்கொண்ட சிறந்தபுண்ணாகியநோய்தீர்ந்து, மருந்துவாங்கிக்கொள்ளப் பட்டமரம்போல வாளூற்ற வடு ஒன்றோடொன்றுயிரவி ஆண்மைக்குறை பாடின்மையின் வசையின்றி அழகுபெற்ற உடம்பையுடையனாய் வண்மையை ஏற்றுக்கொண்டு ஈர்ந்தையென்னுமூரின்கண்ணேயிருந்தான், பாணரதுபசிக்குப்பகைவனாயவன்; நினதுவறுமைநீங்கவேண்டுவையாயின் எம்முடனே நீயும் வாராய் முதியவரையையுடைய இரவல, யாம் தன்னையிரக்கும்பொழுது தான் எம்முடைய உண்ணுதமருங்கினைக்காட்டித் தன்னுடைய ஊரின் வலிய கையினையுடைய கொல்லனைவேண்டிக்கொள்ளாநிற்கும் அவன்; திருந்தின இலையையுடைய நெடியவேலைவடிப்பாயாகவெனச்சொல்லி.—எ - று.

பாண்டரிப்பசைஞன் ஈர்ந்தையோன்; அவன்தன்னை யாமிரக்குங் காலைத் தான் எம்மருங்கைக்காட்டி வேலைவடித்திசினெனக் கொல்லனையிரக்கும்; இரவல, இன்மைதீரவேண்டின், எம்மொடு நீயும் வருவாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இரக்குமென்று இழித்துக்கூறியது,பலகாலும் வடிக்கவேண்டுதலானும் பசிகது உதவவேண்டுதலானும். (கஅ0)

கஉ. புறநா. கஎ0: க௫.

கஉ - ௩. புறநா. ௩கஉ: ௩.

* ւp. தும்பைத்திணைக்குரியதுறைகளுள், ‘தார்நிலை’ என்பதற்கு மேற்கோள்காட்டி, “இதனுள், பாணன் அதுதோன்றப் புகழ்ந்தவாறு காண்க” என்பர் (தொல். புறத்திணை. ௫. கஎ - இளம்); “இரப்பாது கொடுக்குமென்னும் புறப்பாட்டினுள் இறையுறவிழுமந்தாங்கியென்பதும் அது” ௸ ௸ ௸ கஎ - ந.

(பி - ம்.)—1 ‘ஈரந்தூர்கிழான்கோயமான்’

---

(கஅக.) மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
கருங்க ணெயிற்றி காதன் மகனொடு
கான விரும்பிடிக் கன்று தலைக்கொள்ளும்
பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கைப்

க. மன்றமரம்: புறநா. எக, ௨எக, ௩எச.

௪. புறநா. உக: ௬; “வன்புலக் காட்டுநாட் டதுவே” நற். ௫௬.

ரு புலாஅ லம்பிற் போரருங் கடிமிளை
வலாஅ ரோனே வாய்வாட் பண்ண
னுண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டி
னின்னே சென்மதி நீயே சென்றவன்
பகைப்புலம் படரா வளவைநின்
க0 பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே.

திணையும் துறையும் அவை.

வல்லார்கிழான்பண்ணனைச் சோணாட்டுமுகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடியது.

இ - ள்.—மன்றத்தின்கண்ணே நிற்கப்பட்ட விளாவினது மனையிடத்து வீழ்ந்த விளாம்பழத்தைக் சரியகண்ணையுடையமறத்தி காதன்மகனுடனே காட்டுவாழுங் கரியபிடியினது கன்றுவந்தெடுக்கும் பெரிய அரண்சூழ்ந்த வலிய நிலத்தின்கண் ஊராகிய இருப்பையும் புலால்நாறும் அம்பினையுடைய பொருதற்கரிய காவற்காட்டினையுமுடைய வல்லாரென்கிற ஊரிடத்தானாகிய வாய்த்தவாளையுடைய பண்ணன்; நினது உண்ணப்பெறாத வறியசுற்றம் உண்டு பிழைத்தல்வேண்டுவையாயின், நீ இப்பொழுதேசெல்வாயாக; போய் அவன் வேற்றுபுலத்துச்செலலாத எல்லையில் நினது பசிக்குப்பகையாகிய பரிசிலை நினது வறுமையைக்காட்டினையாய்க் கொள்ளுதற்கு.—எ - று.

'அம்பிற்போரருங்கடிமிளை' என்பதற்கு அம்பாற்பொருதற்கரிய கடிமிளையெனினுமமையும்.

காட்டிப் பரிசில்கொள்ளுதற்கு இன்னேசென்மதியெனக்கூட்டுக.

மதி, முன்னிலையசைகரும் அசை. (கஅக)

---

ரு. புலாலம்பு: "புலவுநுனைப்பகழி" (பெரும்பாண். உகூக); "புலவுக்கணை" (பு - வெ. க: க0); போரருங்கடிமிளை: "கடிமிளைக் குண்டுகிடங்கின் மெமதி னிரைஞாயி, லம்புடை யாரெயில" (பதிற். உ0: கஎ-கூ); "அருங்குழுமிளை" மதுரை .கூசு.

சு. புறநா. கஅ0 : எ.

எ - அ. "பாசம், பசிப்ப மடிவையைக் கொளாலும்" திரி. உ0.

கூ - க0. புறநா. கா கூ: கச - ரு.

---

(கஅஉ) உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்

---

க. 'அம்ம' என்னும் இடைச்சொல அசைநிலையாக வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. உஎ - பேர்.

க - உ. "இநதிரர்க்கும் புகழ்வரிதே" (சீவக. கஎங); 'இந்திர குமரர்' என்பதற்குத் தேவகுமரரென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோள் காட்டினர்; சிலப். கசு: கஎஉ - அடியார்.

உ - ங. "இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்" பதிற். ஙஅ.

தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
ரு புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.*

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி பாட்டு.

இ - ள்.—உண்டேகாண், இவ்வுலகம் ; இந்திரர்க்குரிய அமிழ்தம் தெய்வத்தானாதல் தவத்தானாதல் தமக்குவந்துகூடுவதாயினும் அதனை இனிதென்றுகொண்டு தனித்து உண்டலுமிலர் ; யாரோடும் வெறுப்பிலர் ; பிறர் அஞ்சத்தகுந்துன்பத்திற்குத் தாமும் அஞ்சி அதுநீர்த்தற்பொருட்டு மடிந் திருத்தலுமிலர் ; புகழ்கிடைக்கின் தம்முடைய உயிரையுங்கொடுப்பர் ; பழியெனின் அதனான் உலகமுழுதும்பெறினும் கொள்ளார் ; மனக்கவற்சி யிலலார் ; அப்பெற்றித்தாகிய மாட்சிமைப்பட்ட அத்தன்மையராகித் தமக் கென்று முயலாத வலிய முயற்சியையுடைய பிறர்பொருட்டுமுயலவார் உண்டாதலான்.—எ - று.

அஞ்சித்துஞ்சலுமிலரென மாறிக்கூட்டுக.

இவ்வுலகம், பிறர்க்கெனமுயலுநருண்மையான் உண்டெனக்கூட்டுக.

ஆலும் அம்மவும், அசை. (கஅ௨)

---

ச. "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்" (குறள், ௪௨௮); "அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி, யுறுவ துலகுவப்பச் செய்து - பெறுவதனா, லின்புற்று வாழு மியல்பினா ரெஞ்ஞான்று, மதுன்புற் று வாழ்த லரிது" நாலடி. எச.

ரு - சு. "வானவன் வைத்த விழுநிதி பெறினும், பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி,யீத லுள்ளமொ டிசைவேட் குவையே" மதுரை. உ0௩ - ரு.

அ. "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" அகநா. ருச; மணி. ரு: எ௩.

௯. "பிறர்க்கற முயலும் பெரியோய்" மணி. கக: ௬௩.

அ - ௯. "தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வன்" (மணி. உரு : கக்௬-எ); "தனக்கென், றுன்னு முள்ளான் பிறர்க்கே யுறுதிக் குழந்தான்" துண்டல. கடவுள்.

* பகட்டினானும் ஆவினானும் துகட்டபு சிறப்பிற சான்றோர் பக்கமென்பதற்கு இச்செய்யுளை மேற்கோள்காட்டி, நோன்றாட் பிறர்க்கென முயலுநர் வணிகவேளாளரென்பர் இளம்பூரணர்; (தொல். புறத்திணை. சூ. கஎ); "உண்டாலம்ம.................உண்மையானே : இது, வகைபடமுன்னோர் கூறிய செந்துறைப் பாடாண்பாட்டு; முனிவர் கூறுமாறு போலக்கூறிப் பரவலும் புகழ்ச்சியுங் கூறாது மறுமைப்பயன் பிறர்க்கு உறுதி பயப்பக்கூறலிற் கைக்கிளைப்புறனாய்ப் பாடாணாயிற்று" தொல். செய். சூ. உஎ - ந.

(கஅங.) உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு
ரு மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னா தவரு
ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
கட மேற்பா லொருவனு மவன்கட் படுமே.*

திணையும் துறையும் அவை.

பாண்டியன் ஆரியப்படை [1] கடந்த நெடுஞ்செழியன் பாட்டு.

இ-ள்.—[2] தன்னாசிரியற்கு ஒருறுபாடுற்றவிடத்து அதுநீர்த்தற்குவந்
உதவியும் மிக்கபொருளைக்கொடுத்தும் வழிபாட்டுநிலைமையைவெருதுகற்ற
ஒருவற்கு அழகிது ; அதற்கு என்னேகாரணமெனின், பிறப்பு ஒருதன்மை
யாகிய ஒருவயிற்றுப்பிறந்தோருள்ளும் கலவிவிசேடத்தால தாயும் மன
வேறுபடும்; ஒருகுடியின்கட் பிறந்தபலருள்ளும் மூத்தோன்வருகவென்னு
அவருள் அறிவுடையோனசென்றநெறியே அரசனும்செலலும் ; வே
பாடுதெரியப்பட்டநாற்குலத்துள்ளும் கீழ்க்குலத்துள் ஒருவனகற்பின் மே
குலத்துளொருவனும் இவன் கீழக்குலத்தானென்று பாராது கலவி
பொருட்டு அவனிடத்தே சென்று வழிபடுவனுதலான்.—எ - று. (கஅங

உ. குறள், ருகூரு - பரிமேல். உரைநடை.

ரு - சு "ஒருகுடியிற், கல்லாது மூத்தானைக் கைவிடுங் கற்று, ளிை
மைபா ராட்டு முலகு" நான்மணி. சுரு.

எ. "அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்" வெற்றிவேற்கை.

அ - கட. "தோணி யியக்குவான் றொலலை வருணத்துக், காணி,
கடைப்பட்டா னென்றிகழார் - காணு, யவன் றுணையா வாறபோ யற்றே,
நூல் கற்ற, மகன் றுணையா நல்ல கொளல" (நாலடி. காஉஅ);"வேற்றுமை..
படுமே: இது வேதமொழிந்த கலவியோதல் கூறிற்று" தொல். புறத்திணை
சூ. கசு - இளம்.

* ழ. "சிறப்பின்பாலார் மக்களல்லார், மறப்பின் பாலார் மன்னர்க்கு
(மணி. உரு: ருக - உ); "உற்றுழி...படுமே: இது வேளாளர் ஓதலின்சிற
புக் கூறியது" தொல். புறத்திணை. சூ. உ0 - ந.

(பி - ம்.)—[1] 'தந்த' [2] 'தம்மாசிரியர்க்கு'

(கஅச.) காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
ரு மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
*வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
க0 யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே.

1 திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் அறிவுடைநம்பியுழைச்சென்ற பிசிராந்தையார் பாடியது.

இ - ள்.—காய்த்த நெல்லையறுத்துக் கவளமாகக் கொள்ளின் ஒருமாவிற்குறைந்தநிலத்திற்கதிரும் பலநாளைக்காகும்; நூறுசெய்யாயினும் யானை தனித்துப்புக்கு உண்ணுமாயின் அதனது வாயின்கட்புகுந நெல்லினும் கால மிகவும் கெடுக்கும்; அப்பெற்றிய அறிவுடைய அரசன் இம்முறை

உ. மா - ஒருவகையளவை; "மாமாவின் வயின் வயின் நெல்" பொருந. கஅ0.

ச. வேற்றுமைக்கண் யகரவீற்றின்முன் பகரம் இயல்பாதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. உஉ௰; நன் - வி. சூ. உஉ௰; இ - வி. சூ. கருரு - உரை.

ரு - சு. "குடியோம்பிக், கொளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம், வெள்ளத்தின் மேலும் பல" நீதிநெறி. உசு.

அ. "கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்" (பெரும்பாண். உக); "கல்லென் சுற்றக் கடுங்குர லவித்து" குறிஞ்சி. கருக.

ரு - கக. புறநா. எரு.

* மு. "வாய்ப்படுங் கேடு மின்றும் வரிசையி னறிந்து நாளுங், காய்த்தநெற் கவளந் தீற்றிற் களிறுதான் கழனி மேயின், வாய்ப்படா மிதிப்பப் பொன்றும் வகையினால் மன்னன் கொள்ளின், வித்தகர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே" (சீவக. உகூ0எ); "மாநகரப்புறச் சிறுபுலப் பயன்களும் வயக்கரி நிலைநாடித், தாளரித்திடி னடுபசி கெடுமது சாரத்துப்புக் குண்ணின் வேலி, யானை தெண்ணிலும் காலினு மழிந்துவாய் புகலின்றிப், போனதாமது போன்றதவ் விறைமகன் புவியெலாம் பொலிவற்றே" (சீகாழித்தலபுராணம், பூதவிமோசனமானவத்தியாயம், எ); வாயுறைவாழ்த்திற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. உகூ - இளம்; செய் டு டு நரு - ந.

(பி - ம்.)—1 'திணையும் துறையுமவை'

கொள்ளுநெறியை அறிந்து கொள்ளின் அவன்நாடு கோடிபொருளினை ஈட்டிக்கொடுத்துத் தானும் மிகவுந்தழைக்கும்; வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடோறுந்தரமறியாத உறுதிகூறாது* அவன் விரும்புவதனையே தானுங் கூறும் ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடுகூடி அன்புகெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின் அந்த யானைபுக்கபுலம்போலத் தானும் உண்ணப்பெறான், உலகமுங்கெடும்.—எ - று.

பரிவுதப வென்றது, அக்குடிகட்குவருத்தமிகவென்றுரைப்பாருமுளர்.

'மெல்லியனகிழவனாகி' என்றும் பாடம். (க௮௪)

* "இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று, புகழினு மொக்கப்புகழ்ப" நீதிநெறி. ௪௪.

---

(க௮௫.) கால்பார் கோத்து [1] ஞாலத் தியக்குங்

காவற் சாகா டுகைப்போன் மாணி

னூறின் றாகி யாறினிது படுமே

யுய்த்த றேற்றா னாயின் வைகலும்

௫ பகைக்கூழ் ளள்ளற் பட்டு

மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே.*

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

தொண்டைமான் இளந்திரையன் பாட்டு.

இ - ள்.—உருளையையும் பாரையுங்கோத்து உலகின்கண்ணே செலுத்தும் காப்புடையசகடந்தான் அதனைச்செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடில்லையாய் வழியை இனிதாகச்செலவும்; அவன் அதனை இனிதாகச்செலுத்துதலைத் தெளியமாட்டானாயின் அது நாடோறும் பகையாகிய செறிந்த சேற்றிலேயழுந்தி மிகப்பல தீயதுன்பத்தை மேன்மேலுமுண்டாக்கும்.—எ - று.

இஃது, உலகாளுமுறைமைகூறுதலையுட்கொண்டு சகடஞ்செல்லுறு மாற்றைக்கூறினமையின், நுவலாநுவற்சியென்றுமலங்காரமாயிற்று; ஒட்டென்றுகூறுவாருமுளர்.

அன்றி இதற்கு உலகத்தின்கண்ணே உலகியற்கையைநிறுத்தி அதனோடு ஞாலத்தின்கண்ணே செலுத்தப்படும் காப்பாகிய சகடம் தன்னைச்

---

உ. காவற்சாகாடுகைப்போன்: (புறநா. ௬௦: எ - ௬; உ௫௬: உ); "அவை யாவுள்ளும் காவற்சாகாடுகைத்தற்கண் அவ்வரசர்க்கு இணையாய அமைச்சனதியல்பு" குறள். ௬௪ - ஆம் அதி. அவ.

* ம். "ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யலைமணித் தேரை வல்லானேர்நிலத் தூருமாயின் வீடுபல் காலஞ்செல்லு, மூர்நில மறித தேற்றா தூருமேன் முறிந்து வீழும், தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே" சீவக. உ௩௦௬.

(பி - ம்.)—[1] 'ஞாலத்தியங்கும்'

செலுத்துவோன் மாட்சிமைப்படின் தனக்கு ஓரிடையூறுமின்றாகி நெறி முறைமையோடக்கும்; அதனைச் செலுத்துதல் தெளியானாயின் அச்சாகாடு நாளும் மறுதலையென்னும் செறிந்த அள்ளலிலே அகப்பட்டுத்தடக்கும் தன் கீழ்வாழ்வார்க்கும் மிகப்பலவாகிய தீக்கேட்டினை மேன்மேலே தருமெனவும் பொருளுரைப்பர்; இப்பொருட்குப் பாரென்றது, உலகியற்கையை.

கால் - உருளை. (கஅரு)

---

(கஅசு.) நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலக
மதனால், [1] யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.*

திணையும் துறையும் அவை.

2 மோசிகீரனூர் பாடியது.

இ - ள்.—வேந்தனாகிய உயிரையுடைத்து, பரந்த இடத்தையுடைய உலகம்; அதனான், இவ்வுலகத்தார்க்கு நெல்லும் உயிரன்று, நீரும் உயிரன்று, யான் உயிரென்பதனை அறிகை வேலால்மிக்க படையையுடைய அரசனுக்கு முறைமை.—எ - று.

மன்னனுயிர்த்தென்றகருத்து: † உயிரையாக்கும் நெல்லும் நீரும் உளவாவது மன்னன்முறைசெய்து காப்பினென்றதாம். (கஅசு)

உ. "உலகிற் கோருயிர்ப், பெற்றியான் படாபதி யெனும் பேருடை; வெற்றிவேள் மணிமுடி வேந்தர் வேந்தனே" (சூளா. நகர. கூ); "மன்னுயிர் ஞாலக் கின்னுயி ரொக்கு மிறை" (பெருங். உ. சக: சஎ-அ); "உலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன்" (திருவிளை. பழியஞ்சிய. சச); சிறப்பினால உயர்திணை அஃறிணையானதற்கு மேற்கோள்; நன். மயிலை. கூஎஅ; இ - வி. சூ. உகூகூ - உசா.

* ம. "நெல்லுயிர் மாந்தர்க்கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற், புல்லுயிர் புகைந்து டொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை, மலைலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய், நலனுயிர் ஞாலந் தன்னு ளுமைவேயம்பியென்றான்" சீவக. உகூ0அ.

† "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" குறள், ருசரு.

(பி - ம்.)—1 'யாமுயிர்' 2 'மாதிமாதிரத்தனார்பாட்டு'

---

(கஅஎ.) நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ

க. "நாடாகொன்றோ காடாகொன்றோ வென்பனவற்றையும் நாடேயாக காடேயாக என இதன்பாற்படுத்துக; இவற்றுள் ஏவல் கண்ணாதது இது வெனவுணர்க" தொல். வினை. சூ. உகூ - ரு.

எவ்வழி நல்லவ ராடவ
ரவ்வழி நல்லை வாழிய நிலனே.

திணையும் துறையும் அவை.

ஔவையார் பாடியது.

இ - ள்.—நிலனே, நீ ஒன்றில நாடேயாக, ஒன்றிற்காடேயாக; ஒன்றிற் பள்ளமேயாக, ஒன்றில் மேடேயாக; எவ்வாறாயினும் எவ்விடத்து நல்ல ஆண்மக்கள் அவ்விடத்து நீயும் நல்லையல்லது, நினக்கென ஒரு நலமுடைமை யல்லை வாழி.—ஏ - று.

தீயநிலனேயாயினும் நல்லோருறைதயின் நன்றெனவும், நல்லநிலனேயாயினும் தீயோருறைதயின் தீதெனவும், தன்னிடத்து வாழ்வோரியல்பல்லது தனக்கென ஓரியல்புடையதன்றென நிலத்தை இழித்துக்கூறுவதுபோல உலகத்தியற்கைகூறியவாறாயிற்று.

* ஒன்றேவென்பது, எண்ணிடைச்சொல். (கஅ

ங - ச. "க ...க் கெளியன் கடுஞ்சொல்லனல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள், ஙஅ.

* புறநா. ஙஉ: ... எக: கசு.

---

(கஅஅ.) படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
ரு நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்

---

க. படைப்பு: புறநா. உஉ: ஙo.

க - உ. "துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப், பகு நடந்தகூழ் பலரோடுண்க" (நாலடி.உ); "இல்வாழ்க்கையைப் பலபடைப்பாகிய செல்வத் தோடே நடத்தி", "பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையும் கொடுத்து" சிலப். உ: அச - கூo; கரு: ருச. எரு அடியார்.

ங. "தளர்பு தளர்போடும் பூங்கட் புதல்வன்" (அகநா சுசு); "குறு குறு நடந்து செல்லும்" (ஆனைக்கா. அகிலாண்ட. அ); "மொகு மொகு வென்பது இரட்டைக்கிளவி......குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (தக்க அகூ - உரை. மேற்); இரட்டைக்கிளவிக்கு மேற்கோள்; நன் - மயிலை ரு. ஙகூரு; நன் - வி. ரு. ஙகூசு.

ச - ரு. குறள், சுச - பரிமேல். மேற்.

ங - சு. "முறியினா முலைமெல்லரும் பன்ன மூரல்வெண் டயிரளை பொதிந்து, குறுகுறு நடந்து சிறுவர்வந் தீண்ட" பாகவத. சு: விருந்தவன. கூ.

பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.*

திணையும் துறையும் அவை.

பாண்டியன் அறிவுடைநம்பி பாட்டு.

இ - ள்.—படைக்கப்படும் செல்வம் பலவற்றையும்படைத்துப் பலருடனே கூடவுண்ணும் உடைமை மிக்கசெல்வத்தையுடையோராயினும் காலம் இடையேயுண்டாகக் குறுகக்குறுக நடந்துசென்று சிறியகையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலேயிடும் கூடப்பிசைந்துதோண்டியும் வாயாற்கவ்வியுங் கையாலதுழாவியும் நெய்யையுடையசோற்றை உடம்பின் கட்படச்சிதறியும் இங்ஙனம் அறிவை இன்பத்தான்மயக்கும் புதல்வரை இல்லாதார்க்குப் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை, தாம் உயிர்வாழு நாளின்கண்.—எ - று.

தொட்டென்பதற்குக் கூடவாரிப்பிடித்தெனினுமமையும்.

குறையென்பது, முடிக்கப்படுங்கால முடிக்கப்படும்பொருள்.

இனிப் பயக்குறையுள்ளதென ஒருசொல்வருவித்துத் தாம்வாழுநாளும் இல்லையென்று கூறுவாருமுளர். (௧௮௮)

எ. "குறை-இன்றியமையாப்பொருள்; அது, 'பயக்குறையில்லைத்தாம் வாழு நாளே' என்பதனானுமறிக" (குறள். ௬௧௨ - பரிமேல்); "பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறையென்றார்,...'பயக்குறை...நாளே' என்றாற்போல" தொல். உரி. சூ. ௪௦௦ - சே.

* மு. பொருளொடுபுணர்ந்தபக்கமென்பதில், 'புணர்ந்தபக்கமென்றதனாற் புதல்வர்ப்பெறுதலுங்கொள்க' என்று கூறி இதனை மேற்கோள் காட்டினர் ; தொல். புறத்திணை. சூ. ௧௭ - இளம்; ௵ ௵ ௵ ௨௧ - ந.

(௧௮௯.) தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கு
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கு
௫ [1] உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே

௧ - ௨. புறநா. ௮: ௧ - ௫.

௩. "அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்" (சிலப். ௪: ௮௧- அடியார்) என்பதற்கு மேற்கோள்.

௫. "நாழியரிசிக்கேநாம்", "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்" (நல்வழி. ௧௯, ௨௮); வினைப்பெயர், செயப்படுபொருண்மேற் பெயராய்க் காலந் தோன்றி நின்றதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. சூ. ௯௧; ந.

(பி - ம்.)—1 'உண்பவைநாழியுடுப்பன'

பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீத
றுய்ப்பே மெனினே தப்புந பலவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனூர்மகனூர் நக்கீரர் பாடியது.

இ - ள்.—தெளிந்த நீராற்சூழப்பட்ட உலகமுழுதையும் பிறவேந்தர்
குப்பொதுவாதலின்றித் தமக்கேயுரித்தாக ஆண்டு வெண்கொற்றக்குடை
யால் நிழல்செய்த ஒருதன்மையையுடையோர்கரும், இடையாமத்தும் நண்ட
கலும் துயிலானாய் விரைந்தசெலவையுடைய மாக்களைப் படுக்கக்கருதி
செல்லும் கல்வியில்லாத ஒருவனுக்கும் உண்ணப்படும்பொருள் நாழி, உடு
கப்படுமவை இரண்டே; பிறவுமெல்லாம் ஒக்குமாதலாற் செல்வத்தா
பெறும்பயனாவது கொடுத்தல்; செல்வத்தையாமே நுகர்வேமென்றுகரு
தின் தவறுவன பல.—எ - று.

பலவென்றது, அறம்பொருளின்பங்களை.

பகலை ஒருமாத்திரையென்றும், கடுமாவை யானையென்றும், கல்லா
ஒருவனைப்பாகனென்றும் உரைப்பாருமுளர். (கஅகூ

எ - அ. "வழங்கலுந் துய்த்தலுந் தேற்றுதான் பெற்ற, மூழங்கு மு
சடைச் செலவம் - தழங்கருவி, வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்
றே, நாய்பெற்ற தெங்கம் பழம்" பழ. கருக.

---

(கசுo.) விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கு
மெலிமுயன் றனைய ராகி [1] யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ
௫ டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
வன்றவ ணுண்ணு தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப [2] வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும்
கo புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்

ச - ௫. இயைபென்னுமுரிச்சொல கூட்டமென்னும் குறிப்புணர்த்து
வதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. கக - ந; இ - வி. சூ. உகூo-உரை.

கo. புலிபசித்தாற் புல்லைத் தின்னுதென்பது ஒரு பழமொழி.

க - கo. புறநா. உகூஎ: கசு - எ.

(பி-ம்.)—1 'உடையதம்' 2 'வேட்டெழுந்தாக்கிருங்களிற் றொருத்தல்'

துரனுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ.

திணையும் துறையும் அவை.

1 சோழன் நல்லுருத்திரன் பாட்டு.

இ - ள்.—விளைந்த செவ்வியையுடைய சிறிய இடத்தைப்பார்த்து வளைந்ததாகிய உணவைக்கொண்டு முழைபின்கண்ணே நிறைய வைக்கும் எலிமுயன்றாற்போலும் சிறியமுயற்சியராகி உள்ள தம்முடையசெல்வத்தை நுகராது இறுகப்பிடிக்கும் உள்ளமிகுதியில்லாருடன் பொருந்தியநட்பு இல்லையாக; தறுகண்மையையுடைய கேழலாகியபன்றி தனது இடப்பக்கத்தே பட வீழ்ந்ததாக, அன்று அவ்விடத்து உண்ணாதாகிப் பிற்றைநாட் பெரிய மலையின்கண் தனதுமுழையிடம் தனிமைப்பட உணவைவிரும்பியெழுந்து பெரியகளிறாகியஒருத்தலை நல்லவலப்பக்கத்தேபடப் படுக்கும் புலிபசித்தாற் போலும் குறையில்லாத மேற்கோளையுடைய வலியையுடையோர்நட்போடு பொருந்திய நாட்கள் உளவாக.—எ - று.

சிறிடமென்றது, விளைந்துமுற்றியபின் அறுப்பதற்கு முன்னாகிய இடத்தை.

இல்லாகியர், உளவாகியரென்பன ரண்டு வியங்கோட்பொருளவாய் நின்றன. (கக0)

---

சு - கக. "தொடங்குவினை தவிரா வசைவி னோன்றாட், கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த, தாழ்வி லுள்ளம்" (அகநா. உக); "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை, யிடம் வீழ்ந்த துண்ணா திறக்கும்" (நாலடி. ௩00); "வாய்வ தாகிய பொரு ளினை வல்விரைந் தன்னே, வாய்வ தாய்கில ராக்குவரேன் புகுந்தழிப் பார் போற், காய்வ தாகிய திறத்தினாற் கதழுநதுதா யிடத்து, வீழ்வ தாக்கியுண் ணுதுபோதுவ விளவேங்கை" தணிகைப்புராணம், களவு. சரு.

(பி - ம்.)—1 'சோழநல்லுத்திரன்'

---

(கசுக.) யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு

---

க - உ. "உலகின்புறுதலாவது, இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றேமென்றும், யாண்டு பலவாக நரையில மாயினேமென்றுமுவத்தல்" குறள். ௩கக - பரிமேல்.

௩. மாண்ட: "மனைத்தக்க மாண்புடையளாகி", "மனைமாட்சி யில் லாள்க ணில்லாயின்", "இல்லவண் மாண்பானால்" குறள். ருக, ருஉ, ருௗ.

ச. "மேகமே சேர்கொடை வேந்தமிர்து சேவகனு, மாகவேசெய் யி னமிர்து" (சிறுபஞ்ச.ச); "வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறூஉ,

௫ மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே.

திணையும் துறையும் அவை.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந்தையாரை, 'கேட்குங்காலம்பலவாலோ? நரைநுமக்கில்லையாலோ?' என்ற சான்றோர்க்கு அவர் சொற்றது.

இ - ள்.—நுமக்குச்சென்றயாண்டுகள் பலவாயிருக்க நரையில்லையாகுதல் எப்படியாயினீரெனக் கேட்பீராயின், என்னுடைய மாட்சிமைப்பட்ட குணங்களையுடைய மனைவியுடனே புதல்வரும் அறிவுநிரம்பினர்; யான் கருதிய அதனையே கருதுவர், என்னுடைய ஏவலசெய்வாரும்; * அரசனும் முறையல்லாதனசெய்யானுய்க்காக்கும்; அதற்குமேலே யானிருக்கின்றவூரின்கண் நற்குணங்களால் அமைந்து பணியவேண்டுமுயர்ந்தோரிடத்துப்பணிந்து ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினையுடைய சான்றோர் பலராதலான்.—எ - று.

'ஆன்றவிந்தடங்கிய' என்பதற்குக் கல்வியாலநிறைந்து அதற்கேற்பச் சுவைமுதலியவற்றிற்செல்லும் அறிவவிந்து மனமொழிமெய்களான் அடங்கியவெனினுமமையும்.

'யாங்காகியர்' என்பதற்கு எவ்வாறாயிற்றென்றும், எப்படியாலாயிற்றென்றும் பொருள்கூறுவாருமுளர். (௧௯௧)

---

மிக்குலிசஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்க, ணிளம்போக்கி நின்றுரிகல்வாட்டி வேந்தன், மனம்போல வந்த மகன்" பு - வெ. உ: ௫.

௫. "அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும், பல்லவையோர் சொல்லும் பழுதன்றே" சிலப். உ0: இறுதிவெண்பா, க.

எ. "நற்றவ முனிவரும் கற்றடங் கினரு, நன்னெறி காணிய தொன்னூற் புலவரு, மெங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையின்,...வஞ்சி" மணி. உ௬: எ௪ - அ.

* "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறையென்று வைக்கப்படும்" குறள். ௩அஅ.

---

(௧௯௨.) யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா

---

க. "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு" (குறள். ௩௯௭.) முற்றும்மைக்கு, 'யாதுமூரே' என்பது மேற்கோள்; தொல். இடை. ௬. எ - கல்; ந.

உ. "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்" (குறள். ௫0௫); "பெருமையுஞ் சிறுமையுந் தாந்தர வருமே" வெற்றிவேற்கை.

நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
௫ இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவி
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
௧௦ முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே

திணையும் துறையும் அவை.

கணியன்பூங்குன்றன் பாட்டு.

இ - ள்.—எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார்; கேடும் ஆக்கமும் தாமேவரினல்லது, பிறர்தரவாரா; நோதலும் அதுதீர்தலும் அவற்றையொப்பத் தாமேவருவன; சாதலும் புதிதன்று, கருவிற்றோன்றிய நாளே தொடங்கியுள்ளது; வாழ்தலை இனிதென்று உவந்ததுமிலம்; ஒரு வெறுப்புவந்தவிடத்து இன்னாதென்றிருத்தலுமிலம்; மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலான் அமையாது கல்லையலைத்து ஒலிக்கும் வளவிய பேர்யாற்றுநீரின்வழியேபோம் மிதவைபோல அரியவுயிர் ஊழின்வழியேபடுமென்பது நன்மைக்கூறுபாடறிவோர் கூறிய நூலாலே தெளிந்தேமாகலான், நன்மையான்மிக்கவரை மதித்தலுமிலேம்; சிறியோரைப்பழித்தல் அம்மதித்தலினுமிலேம்.—எ - று.

தலைஇயென்பதனைத் தலையவெனத்திரிக்க.

'முனிவி னின்னா தென்றலு மிலமே' என்றதற்கு முன்னேகூறிய வாழ்தலைவெறுப்பான் இன்னாதென்று இகழ்ந்திருத்தலுமில்லேமெனினும் அமையும். (௧௯௨)

---

௪. "வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்,பொருந்துத லன்றோ புதுமை" நன்னெறி, ௧௨.

௮. "கல்லலைத் தொழுகு மன்னே" புறநா. ௧௧௫ : ௪.

௯. "நீர்வழிப் பட்ட புணை" நீதிநெறி. ௪௪.

௯ - ௧௦ "முன்னே யொருவன் முடித்தான்றன் றுப்பெலாம்" அறநெறி. ௧௧௪.

௩ - ௧௧. "சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தி னாகு, மாதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய், நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே" சீவக. ௨௬௯.

(கஙௌ.) அதனொறிந் தன்ன நெடுவெண் களரி
1 னொருவ னாட்டும் புல்வாய் போல
வோடி யுய்தலுங் கூடுமன்
னொக்கல் வாழ்க்கை தட்குமா காலே.

திணையும் துறையும் அவை.

* 2 ஓரேருழவர் பாட்டு.

இ - ள்.—தோலைப் புடைத்துவைத்தாற்போன்ற நெடிய வெளிய களரின்கண் ஒருவன் அலைக்கும்புல்வாய் எளிதின் ஓடிப்பிழைக்குமாபோலே யானும் நன்னெறிக்கண்ணே யொழுகிப் பிழைக்கவுங்கூடும்; சுற்றத்தோடு கூடிவாழும் இல்வாழ்க்கை அதன்கட் செல்லவொட்டாது காலைத் தளையாநிற்கும்; ஆதலான் உய்தல்கூடாது.—எ . று.

மன், கழிவின்கண்வந்தது. மா, அசைநிலை. (கக௩)

ச. "உலோகமா பாலன்", "அநங்கமாதிலகன்" (சீவக. ௩௯௫, ௨00௧) என்னுமிடங்களில, 'மா, வியங்கோளசையன்றி இசைநிறைத்து நின்றது' எனக்கூறி இவ்வடியை மேற்கோள்காட்டுவர் நச்சினார்க்கினியர்; 'மா' என்பது முன்னிலையசையன்றி அசைச்சொல்லாகவந்ததற்குமேற்கோள்; தொல். இடை. சூ. ௪௭ - ந ; இ - வி. ந. ௨௭௫ - உரை.

க - ச "காட்டகத் தொருமகன் றுரக்கு மாக்கலை, யோட்டுடைத் தாமெனி னுய்யு நங்கள், யாட்டியிட் டாருயி ரளைந்து கூற்றுவ, னீட்டிய நிழன்மதுப் போல வுண்ணுமே" சீவக. ௨௯௩0.

* "ஓரே ருழவன் போல" குறுந். ௧௩௧.

(பி - ம்.)—1 'ஒருவனோட்டும்' 2 'ஒன்னொருழவர்பாட்டு'

---

(கக௪.) ஓரி னெய்தல் கறங்க வோரி
லீர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
௫ படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்

---

க. "நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையும்" மணி. சு: ௭௧.

க - ௨. "நிறையுஞ் செலவத் தெதிர்மனைக ளிரண்டி னிகழ்மங் கலமயங்க, ளிறையுமொலியொன் றினிலொன்றி லழுகை யொலிவந் தெழுதலும்" பெரிய. வெள்ளானை. ரு.

௩. புறநா. க௪௭ : அ - கூ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

௫. னகரவீற்றுவினைச்சொல்லின ஈற்றயலினின்ற ஆகாரம் செய்துள் ஓகாரமானதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௩௫௨ ; நன் - வி. சூ. ௩௫௩.

வின்னு தம்மவிவ்[1] வுலக
மினிய காண்கித னியல்புணர்ந் தோரே.*

திணை - அது ; துறை - பெருங்காஞ்சி.

பக்குடுக்கைநன்கணியார் பாடியது.

இ - ள்.—ஒருமனையின்கண்ணே சாக்காட்டுப்பட்டறை ஒலிப்ப ஒருமனையின்கண்ணே மணத்திற்குக்கொட்டும் மிகக்குளிர்ந்த முழவினது ஓசை மிக ஒலிப்பக் காதலரோடு கூடினமகளிர் பூவணியையணியப் பிரிந்தம்களிரது வருத்தத்தையுடைய உண்கண்கள் நீர்வார்ந்து துளிப்ப இப்பரிசு ஒத்து ஒவ்வாமைப்படப் படைத்தான் நிசசிதமாக, அப்பண்பில்லாதோனாகிய நான்முகன் ; கொடிது இவ்வுலகினதியற்கை ; ஆதலான், இவ்வுலகினது தன்மை அறிந்தோர் வீட்டின்பத்தைத்தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க,—எ - று.

காண்கவென்பது, காண்கெனக் குறைக்கப்பட்டது.

இதனியல்புணர்ந்தோர் இவ்வின்னாமையை இனியவாகக் காண்கவென்றுரைப்பினுமமையும். (௧௯௪)

* மு. “ மன்றங் கறங்க மணப்பறை யாயின, வ றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை, யொலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே, வலிக்குமா மாண்டார் மனம்” நாலடி. ௨௩.

(பி - ம்.)—1 ‘ உலகினதியற்கை, யினிய ’

---

(௧௯௫.) பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
௫ பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
[1] நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமி னதுதா

---

௧. புறநா. ௨௪௯ : ௧; ‘பல’ என்னுஞ்சொன்முன் பிறவரின் அகரம் விகற்பித்து வருமென்பதற்கும், (நன் - மயிலை. சூ. ௧௬௯) ரகரவீற்றுயர்திணைப்பெயரின் ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றதற்கும் (நன்-வி. சூ. ௩௦௯) மேற்கோள். ௩௦௮.

௧ -௩. சொலலுவான் குறிப்பினாற்பொருளறியவந்ததற்கு மேற்கோள்; நன்- மயிலை. சூ. ௨௬௮; நன் - வி. சூ. ௨௬௯.

௬ - ௭. “ வறுமையா லீத லிசையா தெனினு, மிரவாமை யீதலிரட்டியுறும் ” (நாலடி. ௯௫) ; பாடாண்டிணைத்துறைகளுள், ஓம்படை பற்றி வந்ததற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ௩௦ - இளம்.

(பி - ம்.)—1 ‘ நல்லவை ’

னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ[1] நெறியுமா ரதுவே.*

திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
நரிவெரூஉத்தலையார் பாடியது.

இ - ள்.—பல அமைந்த குணங்களையுடையீர், பல அமைந்த குணங்களையுடையீர், கயலினது முட்போன்ற நரைமுதிர்ந்த திரைந்தகதுப்பினையும் பயனில்லாத முதுமையையுமுடைய பல அமைந்த குணங்களையுடையீர், மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும் கடிய வலியினையுமுடைய ஒருவன் பாசத்தாற் கட்டிக்கொண்டு போங்காலத்து இரங்குவீர் நீர் ; நல்வினையைச் செய்யமாட்டீராயினும் தீவினையைச் செய்தலைப் பரிகரிமின் ; அதுதான் யாவரும் புகழ்வரென்றது ஒழியவும் நல்ல நெறியின்கண்ணே செலுத்தும் வழியும் அதுதான்.—எ - று.

பலராகிய சான்றீரென்பது, பல்சான்றீரெனத்தொக்கது ; † "பல்குட்டுவர்" என்பதுபோல.

பலவாகிய குணங்களால் அமைந்தீரெனினுமமையும்.

பயனின் மூப்பென்றுவைத்துப் பல்சான்றீரேயென்றது இகழ்ச்சிக் குறிப்பு ; அடுக்கு, விரைவின்கண் வந்தது. (௧௯௫)

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள் 'கழிந்தோரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்) ; "பலசான்றீரே......அதுவே : இது வீடு ஏதுவாகவன்றி வீடுபேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக் கூறியது ; வெ. வெ. வெ. ௨௪ - ந.

† மதுரைக்காஞ்சி, ௧௦௫.

(பி - ம்.)—1 'நெறியுமற்றதுவே'

(௧௯௬.) ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
௫ தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை

௪ - ௫. "இயைவது கரத்தலிற் கொடுமையில்லை" முதுமொழிக் காஞ்சி, ௫௫.

௬-௭. "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத் தியற்கை", "நட்டார்க்கு நள்ளா தவர்க்கு முளவரையா, லட்டது பாத்துண்ட லண்டுண்ட-லட்ட, தடைத் திருந்து தண்டொழுகு மாவதின்

யனைத்தா கியரினி [1] யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டனெ மதனா
௧0 னோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதன்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
௧௫ செல்வ லத்தை சிறக்கநின் னாளே.*

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சியநன்மாறன் பரிசில் நீட்டித்தானை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—தம்மாற்கொடுக்க இயலும்பொருளை இயலுமென்றுசொல லிக்கொடுத்தலும், யாவர்க்கும் தம்மாற்கொடுக்க இயலாதபொருளை இல்லை யென்றுசொல்லி மறுத்தலுமாகிய இரண்டும் தாளாண்மைப்பக்கத்துளவாகிய நட்பின்கூற்றினுள்ளன; தனக்கு இயலாததனை இயலுமென்றலும் இயலும்பொருளை இல்லையென்று மறுத்தலுமாகிய இரண்டும் விரைய இரப்போரை மெலிவித்தலன்றியும் ஈவோர்புகழ் குறைபடும்வழியாம்; இப்பொழுது நீ எம்மளவிற்செய்தசெய்தியும் அத்தன்மைத்தாகுக; இஃது எத்துணையும் எங்குடியிலுள்ளார் முன்புகாணாதது யாம்கண்டேம்; அத்தீங்கினால், நின் பிள்ளைகள் நோயின்றியேயிருப்பாராக; யானும் வெயிலென்றுநினைந்து போக் கைவெறேனாய்ப் பனியென்றுகொண்டு மடிந்திரேனாய் விட்டுநீங்காமையாற் கல்லாற்செய்தாற்போன்ற எனது மனைநாவின்மிகுதியான் வளிமறையாகிய

---

மாக்கட், கடைக்குமா மாணடைக கதவு" (நாலடி. ககக, உஎக); "இசைவ கொடுப்பதூஉ மிலலென்பதூஉம், வசையன்று வையத்தியற்கையஃ தன்றிப், பசைகொண் டவனிற்கப் பாத்துண்ணா னாயி, னசைகொன்றான் செல்லுலக மில்" பழ, உச.

௧௩ ; "உயிரினுஞ் சிறந்த நாணும்" (நற். கஎ); "தாயிற் சிறந்தன்று நாண்டையலாருக் கநாண்டகைசால்...தோளிதிண் கற்பின் விழுமிதன்று" (திருச்சிற். உ0ச);"உயிரினுஞ் சிறநதன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிச் சிறந்தன்று" தொல். களவியல, சூ. உஉ.

௧ச - ௫. 'அத்தை' என்னும் இடைச்சொல் முன்னிலைக்கண் அசைநிலையாய் வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. சகூ௬; நன் - வி. சூ. சச0.

* மூ. பாடாண்டிணைத்துறைகளுள் கொடார்ப்பழித்தற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. உகூ-இளம்; ஷை ஷை ஷை சூ. ௩௫-ந); "ஓல்லுவ தொல்லுமென்னும் புறப்பாட்டினுள், 'நோயிலராக நின்புதல்வர்' எனவும், 'சிறக்கநின் னாளே' எனவும் வரும் மங்கலச்சொல் கெடுகவென்னும் பொருள் பட்டவாறு காண்க" ஷை பொருளியல், சூ. சஅ - இளம்,

(பி - ம்.)—1 'அதுவே'

மனையிடத்து நாணல்லது வேறில்லாத கற்பினையும் ஒளியையுடைத்தாகிய நுதலினையும் மெல்லிய இயலினையுமுடைய குறுமகளை நினைந்து போவேன்; நின் ஆயுள்மிகுவதாக.—எ - று.

'நோயிலராகநின்புதல்வர்' என்பதூஉம், 'சிறக்கநின்னுள்' என்பதூஉம் குறிப்புமொழி.

அன்றி, பரிசில்மறுத்தலான் இவன்புதல்வர்க்கும் இவனுக்கும் *தீங்கு வருமென்றஞ்சி நோயிலராகவெனவும், சிறக்கநின்னுளெனவும் கூறினராக உரைப்பினுமமையும்.

நல்குரவென்பது, நல்லெனக் குறைந்துநின்றது.

'கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை' என்பதற்குக் கல்லாற் செய்தாற்போன்ற பயன் கொள்ளாத யாக்கையையுடைய எனது நல்கூர்ந்த வளிமறையெனவும், கல்லைத் துளைத்தாற்போன்ற காற்றடைமாத்திரையாகச் செய்யப்பட்ட நல்கூர்ந்த என்மனையெனவுமுரைப்பாருமுளர். (௧௬௬)

* "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா லும்மை, யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்" நாலடி. ௫௮.

---

(௧௬௭.) வளிநடந் தன்ன [1] வாச்செல லிவுளியொடு
கொடிநுடங்கு மிசைய [2] தேரின ரெனாஅக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் [3] களிற்றின ரெனாஅ
௫ [4] வுருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றிய ரெனாஅ
மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே

---

௧. புறநா. ௧௭௮: ௨ - ஆம் அடிக்குறிப்பையும், "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி" அகநா. ௨௨௪ - என்பதையும் பார்க்க.

௩. "கடன்மரு'-ானை" அகநா. ௨௧௨.

௧ - ௬. "வளிநடந்தன்ன......களிற்றின ரென என்பதனுள் 'எனவும் என்பது' எனவென்று வந்து எண்ணுக்குறித்தது" தொல். இடை. சூ. ௪0 - பேர்.

௫. "கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப், பெய்தினி வாழியோ பெருவான்" (குறுந். ௨௭0); "உருமிடிமுரசம்" புறநா. ௩௨௧.

௧ - ௮. "வளிநடந்தன்ன......இலமே: என்புழி வினைக்குறிப்பு எண்ணிவந்து தொகைபெறாது நின்றது" தொல். இடை. சூ. ௪௪ - பேர்.

(பி - ம்.)—1 'வாஅய்செலிவுளி' 2 'தேரினமெனாஅ' 3 'களிற்றினமெனா' 4 'உருமுரான்றன்ன'

யெம்மால் வியக்கப் படூஉ மோரே
௧௦ யிடூமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉஞ்
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாட்றிந் தொழுகும் பண்பி னோரே
௧௫ மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்து
முணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளே
நல்லறி வுடையோர் நல்குர
வுள்ளுதும் பெருமயா முவந்துநனி பெரிதே.

திணையும் துறையும் அவை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசினீட்டித் தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—காற்றியங்கினாற்போலும் தாவுதலுடைத்தாகிய கதியை யுடைய குதிரையோடு கொடிநுடங்கும் உச்சியையுடைய தேரினையுடைய ரெனவும் கடலைக் கண்டாற்போலும் ஒள்ளியபடைக்கலத்தையுடைய சேனை யுடனே மலையோடுமோறுபட்டுப் பொருங் களிற்றினையுடையரெனவும் இடி முழங்கினாற்போலும் அஞ்சத்தக்க முரசத்தோடு போரின்மேம்படும் வெற் றியையுடையரெனவுங்கருதி நிலத்தைப்பொருந்தின படையினையுடைய ஒள் ளியபூணினையுடைய அரசர் வெண்கொற்றக்குடை நிழற்றப்படுஞ்செல்வத் தை மதித்தலிலலேம்; எங்களால் மதிக்கப்படுவோர், இடப்பட்ட முள் வேலியையுடையதோட்டத்து மறிதின்னா தொழிந்து நின்ற குறிய நாற்றத்தினை யுடைய முஞ்ஞையது கொழுவியகண்ணிறங்கிளைக்கப்பட்ட குறிய இலையைப் புல்லியநிலத்திலவிளைந்த வரகினதுசோற்றுடனேபெறுகின்ற சிறிய ஊரை யுடைய வேந்தராயினும் எம்மிடத்துச்செய்யும் முறைமையையறிந்துநடக் கும் குணத்தினையுடையோர்காண்; யாம் மிகப்பெரிய துன்பமுறினும் சிறி தும் அறிவிலாதோருடையசெல்வம் பயன்படாமையின் அதனைநினையேம்; நல்லறிவினையுடையோரதுவறுமை பயன்படுதலின் அதனைப் பெருமானே, யாம் உவந்து மிகப்பெரிதும் நினைப்பேம்.—எ - று.

எனுவென்பது, எண்ணிடைச்சொல. (௧௯௭)

௧௧. முஞ்ஞை: புறநா. ௩௨௦: ௧; ௩௨௮: ௧௪.

௧௦ - ௧௧. "முன்றிலாடு முஞ்ஞை மூதிலை கறிக்கும்" தொல். செய். சூ. ௩௧ - பேர்; ந.

௧௫ - அ. "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே, கல்லார் கட் பட்ட திரு" குறள். ௪0௮.

(௧௯௮.) அருவி தாழ்ந்த பெருவரை போல
வாரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்
கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமரு ளவ்வாய்க்
ரு கிண்கிணிப் புதல்வர் பொலிகென் றேத்தித்
திண்டே ரண்ண னிற்பா ராட்டிக்
காதல் பெருமையிற் கனவினு மரற்றுமென்
காமர் நெஞ்ச மேமாந் துவப்ப
வாலமர் கடவு ளன்னநின் செல்வம்
௧0 வேல்கெழு குருசில் கண்டே னாதலின்
விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த
தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாகப்
பணித்துக்கூட் டுண்ணுந் தணிப்பருங் கடுந்திற
னின்னோ ரன்னநின் புதல்வ ரென்று
௧ரு மொன்னார் வாட வருங்கலந் தந்துநும்
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்
முன்னோர் போல்கிவர் பெருங்க ணோட்டம்
யாண்டு நாளும் பெருகி யீண்டுதிரைப்
பெருங்கட னீரினு மக்கட னணலினு
௨0 நீண்டுயர் வானத் துறையினு நன்று
மிவர்பெறும் புதல்வர்க் காண்டொறு நீயும்
புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி

---

௧ - ௨. "மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை, யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச், செலவுநா ணுழந்த சேய்வரற் கான்யாறு" (சிறுபாண். ௧ - ௩); "அலைநீ ராடை மலைமுலை யாகத், தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற், கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" சிலப். ரு. ௧ - ௩.

௩. "கடவுட்கற்பின் மடவோள்" அகநா. ௩௧௪.

௪. "மணிபுரை செவ்வாய்" கலி. எ௯, அ௧; அகநா. ௧௬, ௬௬.

௩ - ௬. "கடவுட்கற்பொடு குடிக்கு விளக்காகிய, புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பி, னன்னராட்டிக் கன்றியுமெனக்கு, மினிதாகின்றாற் சிறக்க நின்னாயுள்" அகநா. ௧அ௪.

அ. ஏமாத்தல்: புறநா. ௧0௧: ௬ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௧௧. "வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி" (மணி. ரு : ௨௪); "வாழ்கநின் கண்ணியாதோ" சீவக. ௧௮௬0. புறநா. 77: [illegible]

௧அ - ௨௨. பன்மைக்கு மணலையும் நீர்த்துளிகளையும் உவமங்கூறுதலை, "எத்துணை யாற்று ளிடுமணல் நீர்த்துளி, புற்பனி யுக்க மரத்திலை நுண்மயிர்,

நீடு வாழிய நெடுந்தகை யானுங்
கேளில் சேஎய் நாட்டினெந் நாளுந்
௨௫ துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கிநின்
னடிநிழற் பழகிய வடியுறை
கடுமான் மாற மறவா தீமே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை வடமவண்ணக்கன் 1 பேரிசாத்தனார் பாடியது.

இ - ள்.—அருவிதாழ்ந்த பெரியமலைபோல ஆரத்தோடுபொலிந்தமார்பின்கண் வேட்கைதணியாத தெய்வத்தன்மையமைந்த கற்பினையும் செய்ய ஆபரணத்தையுமுடைய உன்னுடைய மடவோள்பெறப்பட்ட பவழமணி போன்ற அழகிய வாயையும் கிண்கிணியையுமுடைய புதல்வர் பொலிக வென்றுவாழ்த்தித் திணிகியதேரை யுடையவேந்தே, நின்னைப் புகழ்ந்துபரிசின்மேல் அன்புபெரிதாகலிற் கனவின்கண்ணும் நின்புகழையே கூறும் எனதுவிருப்பத்தையுடையநெஞ்சம் இன்புற்று மகிழ ஆலிலையின்கண்மேவிய திருமால்போலும் நின்னுடையசெல்வத்தையெல்லாம் வேலையுடையதலைவ, கண்டேன்; ஆதலால விடைகொண்டேன்; வாழ்க, நினது கண்ணி, தொடர்புபட்ட குளிர்ந்த தமிழ்நாடெல்லைமுழுதும் கொள்ளையாகக்கொண்டு நின்பகைவரைத்தாழ்த்து அவர்கள்பொருள்களையும் வாங்கிக்கொண்டுண்ணும் தணித்தற்கரிய மிகக்வலியையுடைய நின்னையொக்கும்வலியையுடைய நின்னுடையமைந்தர்; எந்நாளும் பகைவர்தேய அவருடைய பெறுதற்கரிய அணிகலத்தைக் கொண்டுவந்து நும்முடைய பொன்னுடையநெடியநகரின்கண் பொலியவைத்த நின்னுடைய முன்னுள்ளோரைப்போலக, இவருடைய பெரியகண்ணோட்டம்; யாண்டுந்நாளும்மிகுச செறிந்ததிரையையுடைய பெரியகடலிரிலும் அகக்கடல கொழித்திடப்பட்ட மணலினும் நீண்டுயர்ந்த மழையிற்றுளியினும் பெரிதும் இவர் பெறும்பிள்ளைகளைக்காணுந்தோறும் நீயும் விரும்பியசெல்வத்துடனே புகழும் இனிதாகவிளங்கி நெடுங்காலம் வாழ்க; பெருந்தகாய், யானும், உறவில்லாத தூரிய நாட்டின்கண்ணே நாடோறும் துளியைநச்சுதலையுடைய வானம்பாடியென்னும் புட்போல நின்னுடைய வணமைநசையான் இரங்கி நினது அடிநிழற்கட் பழகிய அடியின் வாழ்வேன்; விரைந்தசெலவையுடைய குதிரையையுடைய மாறனே, நீ செய்தசெயலை மறவாதொழிவாயாக.—எ - று.

புதல்வர்மார்பிற் பொலிகெனக் கூட்டினுமமையும்.

ரத்துணை யும்பிற ரஞ்சொல்லி னார்மனம், புக்கன மென்று பொதியறைப்பட்டார்" (வளையாபதி) என்னுமிடத்தும் காண்க.

௨௩. புறநா. ௫௫: ௧௭.

௨௫. "தற்பாடிய தளியுணவிற், புள்" பட்டின. ௩ - ௪.

௨௬. அடியுறை: புறநா. ௬௭: ௧௨ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.)—1 'பெரியசாத்தன்'

* 'ஆலமர் கடவு ளன்னநின்' என்றதற்கு ஆலின்கீழமர்ந்த முக்கட்செல வணங்கிய கடவுளையொப்ப என்றும்நிலைபெற்றிருப்பேனென்றிருக்கின்ற நின்னென்றுரைப்பினுமமையும்.

'நின்முன்னோர் போல்கிவர்பெருங்கண்ணோட்டம்' என்றது, அவரும் வழங்காதுவைத்தலிற் கண்ணோட்டமிலர்; இவரும் அவரையொக்கக் கண்ணோட்டமிலராகவென்பதாயிற்று.

'முன்னோர்போல்கிவர்பெருங்கண்ணோட்டம்' எனவும், 'வாழ்கநின் கண்ணி' எனவும், 'நீடுவாழியர்' எனவுநின்றவை குறிப்புமொழி; அன்றி, என்னிடத்து நீ செய்தகொடுமையால நினக்குத் தீங்குவரும்; அதுவாரா தொழிகவென வாழ்த்தியதூஉமாம்.

மறவாதீமேயென்றது, என்னளவில் நீசெய்தசெய்தியை மறவாதொழி யென்பதாயிற்று.

'யாண்டுநாளும்பெருகி' என்பதற்கு நின்னுளே திங்களனையவாக; அத் திங்கள் யாண்டோரனையவாக; யாண்டே ஊழியனையவரம்பினவாக வென் பது கருத்தாகக்கொள்க. (௧௯௬)

* புறநா. ௬௧; ருஅ; "ஆலமர் செல்வ னணிசால பெருவிறல", "ஆல மர்செல்வன" (கலி அ௧, அரு); ஆலமர் கடவுள் " (முருகு. உருசு); "ஆலமர் செலவன் " சிலப் : உ௪ ; மணி. ௩ : ௧௪௪.

---

(௧௯௯.) கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழ
நெருந லுண்டன மென்னாது பின்னுஞ்
செலவா ருவே கலிகொள் புள்ளின
மனையர் வாழியோ விரவல ரவரைப்
௫ புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவ
ருடைமை யாகுமவ [1] ருடைமை
யவரின்மை யாகு மவரின் மையே.

திணையும் துறையும் அவை.

பெரும்பதுமனார் பாட்டு.

இ - ள்.—தெய்வமுறையும் ஆலமரத்தினது பெரியகொம்பின்கட் பல பழத்தை நென்னலுமுண்டேமென்னுவாய்ப் பின்னும் அவ்விடத்துப்போதலை

க. "கடவுளாலத்து" (நற். ௩௪௩); "அழல புரை குழைகொழு நிழறரும் பலசினை, யாலமுங்கடம்பு......வேறுவேறுபெயரோய்" (பரி. ௪: ௬௬ - ௬); "துறையு மாலமுந் தொல்வலிமராமு, முறையுளிப்பராஅய்", "ஆலுங்கடம்பு மணிமார்" கலி. ௧0௧, ௧0௬.

௧ - ௩. "புட்பயில பழுமரப் பொலிவிற்றாகிய, மட்டிலா வளநகர்" சீவக. ௬௩

(பி - ம்.)—1 'உடைமையின்மை'

யமையா, ஒலி ு போர் ; அவரை ருந்தின புள்ளினம் ; அத்தன்மையினையுடையார் இரப் ஆண்மக்களது ாத்தற்கு எதிர்ந்துகொள்ளும் மிக்கசெய்கையையுடைய டைய வறுமையா ல்வமாகும், அவ்விரப்போர்செல்வம்; அவ்வாண்மக்களு வாழியும், ஓ ம், அவ்விரப்போருடைய வறுமை.—எ - று.

ஆசைநிலை. (௧௯௯)

(௨00.) பணிவளை.

கனிகவர்ந்துவந்த பாசிலைப் பலவின்
செழுக துண்ட கருவிரற் கடுவன்
மழைமிசை ந்தியொடு சிறந்துசேண் விளங்கி
௫ கழைமிசைத் யறியா மால்வரை யடுக்கத்துக்
கிணர்ந்தின்று துஞ்சங் கல்லக வெற்ப
களங்கொண் செருக்கிய நெருப்புத்தலை நெடுவேற்
விளங்குமணி கனலுங் கடுங்கண் யானை
இவரே, பூத்த கொடும்பூண் விச்சிக் கோவே
௧0 நாத்தழும் பிருப யருஅப் புனைகொடி முல்லை
கறங்குமணி யப் பாடா தாயினுங்
பரந்தோங்கு சி ந்தேர் கொள்கெனக் காடுத்த
யானே, பரிசிலன் ற் பாரி மகளிர்
வரிசையில் வண மன்னு மந்தண னீயே
௧௫ னினக்கியான் கொடுக்கும் வாண்மேம் படுந
ரடங்கா மன்னரை டுப்பக் கொண்மதி சினப்போ
மடங்கா விளையு டைக்கு

திணை - அது ; துறை டுகிழ வோயே.
பாரிமகளிரை விச்சி பரிசிற்றுறை.
பாடியது. காணுழைக் கொண்டுசென்ற .கபிலர்

ச. புறநா. ௧௭௬ : ௩௨ - .
எ. புறநா. ௫௩ : ௫-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.
அ. புறநா. ௧௩0 : ௧. க்குறிப்பைப் பார்க்க.
௯ - ௧௧. புறநா. ௨0௧ : ௨ -
௯ - ௧௨. பாரி, முல்லைக்குத் தே.
௫ - ஆம் அடியின் குறிப்பால் விளங் கொடுத்தவரலாற்றை, புறநா.௧௧அ:
௧௩. புறநா. ௧௨௬ : ௧௧ ; ௨ ணர்க.
௯ - ௧எ. பெருங். ச. ௧௫ : ௨ எ.

ரந்தணன் புலவன் கொண்டுவந் தனனே
நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றிச்
செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
௧௦ யுவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறற்போ ரண்ண
லுரணி யானைச் சேட்டிருங் கோவே
யாண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
௧௫ வொலியற் கண்ணிப் புலிகடி மாஅல்

௭. புறநா. ௨௦௦ : ௧௩.

௮. விசுவபுராணசாரமென்னும் தமிழ்நூலின் பதிகத்தில் ௧௫-ஆம் செய்யுளில், "சம்புமா முனிவன் வேள்வித் தழலருள் பிறந்தோன்" எனவும், ஒட்டையர்களருளிச்செய்த தெய்விகவுலாவில், "சம்புகுலத் தொருவன்" எனவும் வந்திருத்தலின், இதில், 'வடபான் முனிவன்' என்றது அச்சம்பு முனிவனாக இருத்தல் கூடுமோவென்று ஊகிக்கப்படுகின்றது.

௯. புறநா. ௩௭ : ௧௧-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௧௦ - ௧௨. துவரை - மைசூர் இராச்சியஞ்சார்ந்த துவாரசமுத்திரமென்னுநகரம்; இந்நகரில் அரசர் பதினெண்மரும் பதினெண்குடிவேளிரும் இருந்தனரென்றும், அவர்களை அகத்தியமுனிவர் அழைத்துப் போந்து பல இடத்தும் தாபித்தனரென்றும், அவர்களுள் இருங்கோவேள் சிற்றரசனென்றும் தெரிகின்றது; இதனை, "துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணலை வழிக்கொண்டு அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் ......கொண்டு போந்து", "மலயமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழைநரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக்குடிப்பிறந்த வேளிர்" (தொல். பாயிரம்; அகத்திணை. சூ. ௨) எனவும் போந்துள்ள நச்சினார்க்கினியர் வாக்கியங்களாலுணர்க.

௧௪. புறநா. ௨௦௩ : ௧௧.

௧௫. ம. புறநா. ௨௦௨ : ௧௦; தபங்கரென்னுமுனிவர் ஒருகாட்டில் தவஞ்செய்கையில் ஒருபுலி அவர்மேற்பாய்தற்கு நெருங்க, அதுகண்ட அம்முனிவர் அங்குவேட்டையாடவந்த சாளனென்னும் யாதவ அரசனை நோக்கி 'ஹொய்ஸள' என்றுகூற, அவன் அப்புலியைத் தன்னம்பால் எய்துகடிந்தமையால் ஹொய்ஸளனென்றும் புலிகடிமாலென்றும் வழங்கப்பட்டானென்று சிலர்கூறுவர்; சசகபுரத்தையடுத்த காட்டிலுள்ள தன்குலதேவதையான வாஸந்திகாதேவியைச் சளனென்னுமரசன் வணங்கச்சென்றபோது புலியால் தடுக்கப்பட்டு வருந்துகையில், அக்கோயிலிலிருந்த பெரியவர் அவனை நோக்கி 'ஹொய்ஸள' என்றுகூறி ஓர் இரும்புத்தடியையருள, அவன் அதனைக்கொன்றமைபற்றி 'ஹொய்ஸளன்' என்றும் 'புலிகடிமால்' என்றும் பெயர்பெற்றனனென்று வேறு சிலர் கூறுவர்.

(௨௦௨) வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்
கட்சி காணாக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச் சிதறுபொன் மிளிரக்
கடிய கதழு நெடுவரைப் படப்பை
௫ வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
யிருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்
கோடிபல வடுக்கிய பொருணுமக் குதவிய
நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி
நுந்தை தாய நிறைவுற வெய்திய
௧௦ வொலியற் கண்ணிப் புலிகடி மாஅ
லும்போ லறிவி னுமரு ளொருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
யிகழ்ந்ததன் பயனே யியறே ரண்ண
லெவ்வி தொல்குடிப் படீஇயர் மறறிவர்
௧௫ கைவண் பாரி மகளி ரென்றவென்
றேற்றாப் புன்சொ னோற்றிசிற் பெரும!
விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்
தரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுக
௨௦ லிரும்புலி வரிப்புறங் கடுக்கும்

---

௧ - ௨. புறநா. ௧ : ௬ - .

௪. மு. மணி. பதி : ௨ ; : .

௧௦. புலிகடிமால்: புறநா. ௨௦௧: ௧ -ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௧௬. "தேற்றுகிலேமை பாது, 'தேற்றாப் புன்சொ னோற்றிசின்' என்பதுபோலத் தெரிந்தக்கன்னையாது" திருச்சிற். ௪௫ - பேர்.

௧௮. "அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை", "கருங்கால் பொன்னிணர் வேங்கை", "கருங்கால் வேங்கை" நற். ௧௫௨, ௧௬௮, ௧௭௮, ௨௫௭. குறு.

௧௮ - ௨௦. வேங்கைப்பூப் பரந்த பாறை புலிபோற்றோன்றுமென்பது பின்வருவனவற்றாலும் விளங்கும்; "கருங்கால் வேங்கை வீயுகு துறுகல், இரும்புலிக் குருளையிற் றோன்றும்" (குறுந். ௪௭); "மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின, அழுகை மகளிர்க் குழூஉச் செப்ப" (பரி. ௧௪: ௧௧ - ௨); "குறவ ருன்றிய குரமையை புதைய, வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம், புலிசெத்து" (அகநா. ௧௨); "கருங்கால் வேங்கை கானற பூக்கண்டே, இருங்கால வயவேங்கை போய்கதும்" (திணைமாலை. ௨௬); "நறமலை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகணனி, மறமலை வேங்கை யெனக்கணி யஞ்சும்" திருச்சிற். ௬௬.

**பெருங்கல் வைப்பி னாடுகிழ வோயே.**

**திணையும் துறையும் அவை.**

**இருங்கோவேள் பாரிமகளிரைக்கொள்ளானாகக் கபிலர் பாடியது.**

இ - ள்.—வெட்சியையுடைய காட்டின்கடுவன் வேட்டுவரலைப்பத் தனக்குப் புகலிடங்காணாத கடமாவினது கல்ல ஏறு வரைச்சாரன்மணி மேலேகிளம்பவும் சிதறியபொன் விளங்கவும் விரையவோடும் நெடியமலைப்பக்கத்து வெற்றிநிலைபெற்ற சிறந்த புகழ்பொருந்திச் சிற்றரையம் பேரரையமென இருகூற்றாற் பெயர்பெற்ற உட்குப்பொருந்திய பழைய ஊரின்கட் பலகோடியாக அடுக்கப்பட்ட பொன்னை நுங்களுக்கு உதவிய நீடியநிலையையுடைய அரையத்தினது கேட்டையும் இனிக் கேட்பாயாக ; அது கெடுதற்குக்காரணம்: நினது தாளால் தரப்பட்ட பொருளையன்றி நுந்தையுடைய உரிமையை நிறையப்பெற்ற தழைத்த கண்ணியையுடைய புலிகடிமாலே, நும்மையொக்கும் அறிவினையுடைய நுங்குடியுளொருவன், புகழ்ந்தசெய்யுளையுடைய கழாஅத்தலையாரென்னும்புலவரை அவமதித்ததனாலுண்டான பயன் ; இயற்றப்பட்டதேரையுடையதலைவ, இவர் எவ்வியுடைய பழைய குடியிலேபடுவார்களாக ; பின்னை இவர் கைவண்மையையுடைய பாரிமகளிரென்று சொல்லிய எனது தெளியாத புன்சொல்லைப் பொறுப்பாயாக;பெருமானே, யான் நின்னை விடைகொண்டேன்; நின்வேல் வெல்வதாக ; அரைமலையில் முகையறமலர்ந்த கரியகாலையுடைய வேங்கையினது கரிய புறவிதழையுடைய ஒள்ளியபூப்பரந்த பொற்றைக்கல் பெரும்புலியினது வரியையுடையபுறத்தையொக்கும் பெரிய மலையிடத்தூர்களையுடைய நாட்டையுடையோய்.—எ - று.

புலிகடிமால், அண்ணல், நாடுகிழவோய், அரையத்துக்கேடும் கேள், இனி; அது கழாத்தலையையிகழ்ந்ததன்பயன் ; இப்பொழுது எவ்வி தொல்குடிப்படீஇயர், இவர் பாரிமகளிரென்ற புன்சொலைபொறுப்பாயாக; பெருமானே, நின்னைவிடுத்தேன்; நின்வேல்வெல்வதாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒலியற்கண்ணி - தளிர்மாலையெனினுமமையும்.

நீடுநிலையரையத்துக்கேடும் கழாத்தலையையிகழ்ந்ததன்பயனென்ற உம்மையான், இவ்விகழ்ச்சியும் உனக்குக் கேடுதருமென்பதாயிற்று.

அது கெடுதற்குக்காரணம், கழாத்தலையை நூமருள் ஒருவன் இகழ்ந்ததனால், அவன்வாக்குத் தப்பாதாகலின், அவன்வசையாகப்பாடினனென்று சொல்லுவர் ; அதுவேயென்பதாம்.

'வெல்இயர்நின்வேல' என்றது குறிப்புமொழி.

'நுந்தைதாயநிறைவுறவெய்திய' என்பதூஉம், 'நும்போலறிவின்' என்பதூஉம் இகழ்ச்சிதோன்ற நின்றன.

வேங்கைவீ தாய துறுகல் இரும்புலிவரிப்புறங்கடுக்குமென்றகருத்து : ஏதம்செய்யாததூஉம் ஏதம்செய்வதுபோலக் கண்டார்க்கு அச்சம்வரத் தோன்றுமென்றமையான், இதுவும் இகழ்ச்சிதோன்ற நின்றது. (உ0உ)

---

௨௧. தொல். விளிமரபு, சூ. ௩௨ - ந. மேற்.

(௨0௩.) கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்
தொல்லது [1] விளைந்தென நிலம்வளங் கரப்பினு
மெல்லா வுயிர்க்கு [2] மில்லால் வாழ்க்கை
யின்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்
௫ முன்னுங் கொண்டிரென நும்மனோர் மறுத்த
லின்னு தம்ம வியறே ரண்ணல்
லில்லது [3] நிரப்ப லாற்று தோரினு
முள்ளி வருநர் நசையிழப் போரே
யனையையு மல்லை நீயே யொன்னு
௧0 ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்
பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானலிளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங்குடையார் பாடியது.

இ - ள்.—கழிந்தகாலம் பெய்தேமெனக்கருதி மழை பெய்யாதுமாறினும் முற்காலத்துவிளைந்தேமெனக்கருதி நிலம் விளைவை ஒழியினும் எல்லாவுயிர்கட்கும்உயிர்வாழ்க்கையில்லை; அதுபோல இன்னமும் எனக்குப்பரிசில் தாருமென்றுசொல்லி எம்போல்வார் இரப்பின் அவர்க்கு முன்னும்பரிசில்

---

௧ - ௨. "தகரவுகரம், 'கழிந்தது......கரப்பினும்' என்னும் புறப்பாட்டினுள், 'பொழிந்து' எனவும், 'விளைந்து' எனவும் இறந்தகாலம்பற்றி வந்தமையின் ஏனையவற்றிற்குஞ் சிறுபான்மை இறந்தகாலமுமுண்டென வறிந்துகொள்க", "கழிந்தது......கரப்பினும் : எனபுழிப் பொழிந்தெனவும் விளைந்தெனவும் இறந்தகாலம் உணர்த்தின" (தொல். வினை. சூ. ௨௦ - கல்; ந); "கழிந்தது...கரப்பினும் : என்ப பொழிந்து விளைந்தென்னும் துவ்வீற்றுத் தன்மையொருமைவினைமுற்றுககள் இறந்தகாலமும் சிறுபான்மை காட்டுமெனவுங்கொள்க" இ - வி. சூ. ௫௦ - உரை.

௬ - ௧௧. "பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற, வரிய வென்னு தோம்பாது வீசி" (பதிற். ௪௪); "அரிய வெல்லா மெளிதி னிற்கொண், டுரிய வெல்லா மோம்பாது வீசி" மதுரை. ௧௪௫ - ௬.

* ௱. "கொள்ளார் தேஎங்குறித்த கொற்றமும் - பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டான்போலச் வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்தவெற்றியும் ; தன்னையிகழ்ந்தோரையும், தான் இகழ்ந்தோரையும் கொள்ளாரென்ப......'கழிந்தது பொழிந்தென' என்னும் புறப்பாட்டினுள், 'ஒன்னார்....வள்ளியோய்' என்பதுமது" தொல். புறத்திணை. சூ. ௧௨ - ௩.

(பி - ம்.)—1 'விளைந்ததுநிலம்' 2 'இலவாழகலைகயேயின்னும்' 3 'நிரப்பதாற்றுத'

கொண்டீரென்று நும்போல்வார் மறுத்தல் இன்னாது; கேளாய். இயற்றப்பட்ட தேரையுடைய அண்ணலே, இல்லாதபொருளைத் தேடிவிரும்பமாட்டாத வறுமையோரினும், அவராற்பரிசில்வேண்டிவரப்படுவோர் கொடாராயின் அவ் *விரப்போரால் நச்சப்படும் இன்பத்தையிழப்பர்; தம்வறுமையாற்கொடுக்க முடியாமையின் நாணி அவரெதிர் முகநோக்கமாட்டாது இன்பமிழக்குமாந்தர்தன்மையையுமல்லை நீ, இறந்துபடுவை; பகைவரது அரிய அரண் அவரிடத்ததாகவும் அதனை அழித்துக்கொள்ளுவதன்முன்னே நும்முடைய தேனைப் பாணர்க்குக் கடனாகக்கொடுக்கும் வென்றியோடுகூடிய வண்மையையுடையோயாதலான் எம் இறைவ, நீ இரப்போரைப்பாதுகாத்தலை முறைமையாகப் பரிகரிப்பாயாக.—எ - று.

அணையையுமல்லையென்பதற்கு இரவலர்வேண்டுமளவும் பாணியாது முன்னே அளித்தலின், நசையிழப்போர்தன்மையையுடையாயல்லையென்றுமாம்.

எம்மனோரென்றது பிறரைநோக்கியன்றென வுணர்க.

'பொழிந்தென', 'விளைந்தென' என்பனவற்றை வினையெச்சமாக்கி மாறினும் கரப்பினுமென்னும் வினையோடுமுடிப்பினுமமையும். (௨௦௩)

* "ஈத்துவக்கு மின்பம்" குறள். ௨௨௮.

---

(௨௦௪.) ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற [1] லதனினு முயர்ந்தன்று
௫ தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட
லுண்ணா [2]ராகுப நீர்வேட் டோரே
யாவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
[3] சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினு
முண்ணீர் மருங்கி னதர்பல வாகும்

௧ - ௨. புறநா. ௧௯௪: ௭, ௧௯௦: ௨-ஆம் அடிக்குறிப்புக்களைப்பார்க்க.

௪. "அவர், வேண்டாவென்று மறுக்கவும் தாம் வலியப் போகவிட்டென்றவாறு" மதுரை. ௨௨௦ - ந.

௧ - ௬. "ஈயென விரத்தலென்னும் புறப்பாட்டினுள், 'தெண்ணீர்... வேட்டோரே' என்றவழி, நீர்ச்செல்வங் கடல்போற் பெரிதேனும் பிறர்க்கு இனிதாய் நுகரப்படாதென விசையைச் செம்பொருளாகாமற் கூறியவாறு காண்க" தொல். செய். ௨. ௧௨௬ - ந.

௫ - ௯. புறநா. ௧௯௪: ௧ - ௪.

(பி - ம்.)—1 'அதனினுயர்ந்தன்று' 2 'ஆகுவர்' 3 'சேற்றொடு'

(௨௦௫.) முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே
விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
யுறுவர் செல்சார் வாகிச் செறுவர்
௫ தாளுளந் தபுத்த வாண்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணந் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக
௧௦ வார்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்
கடல்வயிற் குழீஇய வண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத் தேரோ
டொளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரால பரிசிலர் கடும்பே.

திணையும் துறையும் அவை.

கடியநெடுவேட்டுவன் பரிசினீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ-ள்.—நிறைந்தசெல்வத்தையுடைய மூவேந்தராயினும் எம்மைப் பேணுதலின்றி ஈதலை யாங்கள் விரும்பேம்; வெற்றியாலுளதாகிய சினந் தீர்ந்த விரைந்த செலவையுடைத்தாகிய குதிரையையுடைய அஞ்சி வந்தடைந்த பகைவர்க்குச் செல்லும் புகலிடமாய அவ்வாறன்றிப் போர்செய்யும் பகைவருடைய முயற்சியையுடைய கிளர்ந்த உள்ளத்தைக்கெடுத்த வாட்போரின் மிக்க படையினையுடைய வெள்ளியபூவையுடைத்தாகிய முல்லைவேலியையுடைய கோடையென்னும் மலைக்குத் தலைவ, சிறியனவும் பெரியனவுமாகிய புழைகளைப் போக்கற விலக்கிய மானினத்திரட்சியைத் தொலைத்த கடிய செலவையுடைய சினமிக்க நாயையும் வலியவில்லையுமுடைய வேட்டுவ, நீ நோயின்றி இருப்பாயாக; இடித்து மிக்க ஓசையையுடைய புதுப்பெயலைத் தரவேண்டிக் கால்வீழ்த்துக் கடலிடத்தே திரண்ட தலைமையையுடைய முகில் நீரின்றி மீளாதவாறுபோலத் தேருடன் விளங்கிய கோடுயர்ந்த தலைமையையுடைய களிற்றையின்றி மீளா, பரிசிலரது சுற்றம்.—எ-று.

புரவியையுடைய விறற்சினந் தணிந்த உறுவரென இயையும்.

செல்சார்வாகித்தாளுளந் தபுத்த பொருநவென இயையும்.

புழைகெடவிலங்கிய நாயென வியையும்.

---

௧-௨. புறநா. ௧௫௩ : ௨௨-௫.

௩. புறநா. ௨௦௩ : ௧௪.

௮-௯. புறநா. ௩௩ : ௧-௨.

வெள்ளியென்றது அதனையுடைய மூலையை.

மூவராயினுமென்ற உம்மை சிறப்பும்மை.

கோடைப்பொருந, வேட்டுவ, பெட்பின்றீதல் யாம்வேண்டலம்; பரிசிலர்கடும்பு களிறின்றுபெயரல ; நீ நோயிலையாகுகவெனக்கூட்டுக.

யான்களிறின்றிப்பெயராநின்றேனென்பது கருத்தாகலின், நோயிலையாகவென்பது இகழ்ச்சிக்குறிப்பு.

'புழைகெட விலங்கி'என்பதூஉம் பாடம். (௨0௫)

---

(௨0௬.)வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தா
[1] முள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
௫ பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொ
லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
௧0 காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
[2] மரங்கொஃ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
யெத்திசைச் செலினு மத்திசைச் சோறே.*

---

௧. மு. சிலப். ௨0 : ௨௪ ; விளியேற்கும்பொழுது ஆயீறு.... ஏகாரம்பெற்று வந்ததற்கு மேற்கோள்; தொல். விளி. சூ. ௧௨ - ந ; நன் - மயிலை. சூ. ௩0௬ ; நன் - வி. சூ. ௩0௭.

௪. மு. புறநா. ௪௭ : ௬.

அ - ௯. புறநா. ௨0௭ : ௭.

௧0. "நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்", "காஅய்க் கொண்டநம் மியம்" மலைபடு. ௧௩, ௩௯௫.

௧0-௧௩. "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு, வேற்றுநா டாகா தமவேயா மாயினா, லாற்றுணா வேண்டுவ தில்" பழ. ௫௫.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், 'சேய்வரல் வருத்தம்வீட வாயில், காவலர்க்குரைத்த கடைநிலை' என்பதற்கு மேற்கோள்;(தொல். புறத்திணை. சூ. ௨௧ - இளம்) ; "வாயிலோயே......சோறே : இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில்கடாயதின்றாம்" ஷை ஷை ஷை ௩௫ - ந.

(பி-ம்.)—1 'முன்னியது முடிக்குமுரனுடை' 2 'மரங்கொறச்சர்'

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சி பரிசினீட்டித்தானை ஔவையார் பாடியது.

இ - ள்.—வாயில்காப்போய், வாயில்காப்போய், வண்மையுடையோரது செவியிடத்தே விளங்கிய சொற்களை விதைத்துத் தாம் நினைந்தபரிசிலை விளைக்கும் வலியையுடைத்தாகிய நெஞ்சினையுடைய, மேம்பாட்டிற்கு வருந்தும் இப்பரிசிலான்வாழும் இல்வாழ்க்கையையுடைய பரிசிலர்க்கு அடையாத வாயிலகாப்போய், விரைந்த குதிரையையுடைய குருசிலாகிய நெடுமானஞ்சி தான் தன்தரமறியான்கொல்லோ? அதுகிடக்க, என்தரமறியான்கொல்லோ? அறிவும்புகழுமுடையோர் இறந்தாராக வறிய இடத்தையுடைய உலகமுமன்றே; ஆகலாற் காவினேம் கலங்களை; கட்டினேம் முட்டுக்களை; மரத்தைத்துணிக்குந் தச்சன்பயந்த மழுவையுடைய கைத்தொழில்வல்ல மகார் காட்டிடத்துச்சென்றால அக்காட்டகம் பயன்படுமாறு அவர்க்கு எத்தன்மைத்து? எமக்கும் யாதொருதிசைக்கட்போகினும் அத்திசைக்கட் சோறு அத்தன்மைத்து.—எ-று.

கலம் - யாழுமாம்.

உள்ளத்தையுடைய பரிசிலரெனினுமமையும்.

மழுவென்றது வாய்ச்சியை; தறிகையுமாம்.

காட்டகமென்றாரேனும் கருதியது அதன்கண் மரமாகக்கொள்க.

பரிசிலர்க்குச் சிறாரும், கல்விக்கு மழுவும், செல்லுந்திசைக்குக் காடும், சோற்றிற்குக் காட்டுள்மரமும் உவமையாகக்கொள்க. (௨௦௬)

---

(௨௦௭.) எழுஇனி நெஞ்சஞ் செல்கம் யாரோ
பருகு வன்ன வேட்கை யில்வழி
யருகிற் கண்டு மறியார் போல
[1] வகனக வாரா முகனழி பரிசி
றாளி லாளர் வேளா ரல்லர்
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே யுலகம் பேணுநர் பலரே

௨. "பருகு வன்ன காதலுள்ள மொடு" (அகநா. ௩௩௩); "பருகு வன்ன வருகா நோக்கமொடு" (பொருந. ௭௭); "பருகு வன்ன நோக்க மொடு" (பெருங். ௩. ௭: ௮௦); "பருகுவான் போல நோக்கும்", "பருகு வனள்போ னோக்கி" (பாக. ௪: துருவன்பதம். ௩௫; ௸ ௧௦: சகட முதைத்த. ௨௧); "மலர்த்தடங் கண்ணோ ளையாப், பருகுவான் போல நோக்கி" கூர்மபு. திருக்கல்யாண. ௬௧.

௭. இவ்வடியுடன், "காத மிருபத்து நான்கொழியக் காசினியை, யோதக் கடல்கொண் டொளித்ததோ-மேதினியிற், கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா நீமுனிந்தால், இல்லையோ வெங்கட் கிடம்" (தனிப்பாடல்) என் பது ஒப்புநோக்கற்பாலது.

(பி-ம்.) ௧ 'அகனகு'

மீளி முன்பி னாளி போல
வுள்ள முள்ளவிந் தடங்காது வெள்ளென
௧௦ னோவா தோன்வயிற் றிரங்கி
வாயா வன்கனிக் குலமரு வோரே.

திணையும் துறையும் அவை.

வெளிமான்துஞ்சியபின் அவன் தம்பி இளவெளிமானைப் பரிசில் கொடுவென அவன்சிறிதுகொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—எழுந்திருப்பாயாக, இனி எம்முடையநெஞ்சமே, யாம்போவேமாக; யார்தாம், கண்ணாற்பருகுவதுபோலும் விருப்பமில்லாதவிடத்துத் தம்மருகே கண்டுவைத்தும் கண்டறியாதார்போல உள்ளமகிழவாராத தம்முகமாறித்தரப்பட்ட பரிசிலைப்பிறிதோரிடத்துச்செலலமுயலும் முயற்சியில்லாதோர் விரும்பாரலலர்; இங்ஙனம் வருவீராகவென்று எதிர்கோடல் வேண்டும் தாமுடையோர்க்கு; பெரிது உலகம்; விரும்புவோரும் பலர்; ஆதலால், மறம்பொருந்திய வலியையுடைய யாளியையொப்ப, உள்ளம் மேற்கோளின்றித்தணியாது, கண்டோர்யாவர்களும் தெரியத் தம்மைக் கண்டிரங்காதவனிடத்தே நின்றுதிரங்கி உளளுறநெகணியாத வலியபழத்தின் பொருட்டுச் சுழல்வோர்.—எ - று.

வன்கனியென்றது, நெஞ்சுநெகிழ்ந்துகொடாதபரிசிலை.

உலமரலும்: அலமரல் போலவதோருரிசசொல்.

வாயா வன்கனிக்கு உலமருவோர்யாரோ? நெஞ்சமே, உள்ளம் உள்ளவிந்தடங்காது யாளிபோல இனி எழுவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

வரிசையோர்க்கு யாளிபோல உள்ளம் உள்ளவிந்தடங்காதென்முற்றுக்கி உரைப்பாருமுளர். (௨௦௭)

---

அ. "ஆளி நன்மானணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி" பொருந. ௧௩௯ - ௪௦.

௧௧. "நற்றேண் மருவற் குலமரு வோரே" ஐங்குறு. ௪௯௪.

---

(௨௦௮.) குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
௫ யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்

௧ - ௨. "சேட்சென்று நல்குவார் கட்டே நசை" நாலடி. ௨௯௩.

வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமான்அஞ்சியுழைச்சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது இதுகொண்டுசெல்கென்று அவன்பரிசில்கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லியது.

இ - ள்.—குன்றுகளும் மலைகளும் பல பின்கழியவந்தேன் யான் பரிசில்கொண்டேனாய்ப் போதற்கெனச்சொல்லிநின்றவென்னை அன்புற்றருளி இப்பொருளைக்கொண்டு இவ்வாறுபோக, தாமெனைச்சொல்ல என்னை எப்பரிசறிந்தான், பகைவரால் தடுத்தற்கரியவேந்தன் ? என்னையழைத்துக்காணாதே தந்த இப்பொருட்கு யான் ஓர் ஊதியமேகருதும் பரிசிலனல்லேன் ; விரும்பித் தினைத்துணையளவாயினும் நன்று, அந்தப்பரிசிலரது கல்விமுதலாகிய பொருந்திய எல்லையையறிந்து கொடுத்துவிடின்.—எ - று.

ஈங்கனஞ்செல்கவென்றது, காணாதே அவன்சொல்லிவிட்டவார்த்தையை.

அவர்துணையளவறிந்து பேணி நல்கினர்விடின், தினையளவாயினுமினிதெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

யான் தரங்கெடப் பொருள்கொடுபோமவனல்லேன் ; ஆகையின் இதுவும் கொடுபோவல் ; நீ எனக்குத் தரமறிந்து தரவேண்டுமென்பதாம்.

'அவர்துணையளவு' என்றது தம்மை உலகின்மேலிட்டுக்கூறினர். (௨௦௮)

கூ. புறநா. கஉக : ங.

எ, கூ. புறநா. கருகூ : உஉ - ரு ; உ௦ரு : க - உ.

* மு. பரிசிலன்நிலைகூறியதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. ரு. நசா - ந.

---

(௨௦௯.) பொய்கை நாரை போர்விற் சேக்கு
நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி யவிழ்ந்த வாம்ப
லகலடை யரியன் மாந்தித் தெண்கடற்
ரு படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கு
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
பல்கனி நசைஇ யல்குவிசும் புகந்து
பெருமலை விடரகஞ் சிலம்ப முன்னிப்

க. போர்வு - நெற்கதிர்ப்போர் ; "கயலார் நாரை போர்விற் சேக்கும்" ஐங்குறு. க.

உ. புறநா. உச : க ; "நெல்லரிதொழுவர்" நற். கஉரு.

அ. புறநா. கூக : அ.

பழனுடைப் பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப்
க0 பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
னசைதர வந்துநின் னிசைநுவல் பரிசிலேன்
வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந
வீயா யாயினு மிரங்குவே னல்லே
ளேயிலே யாகுமதி பெரும நம்முட்
கரு குறுநணி காண்குவ தாக நாளு
நறும்ப லொலிவருங் கதுப்பிற றேமொழித்
தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்
பெருவரை யன்ன மார்பிற்
செருவெஞ் சேஎய்நின் மகிழிருக் கையே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

* மூவன்பரிசில்நீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—பொய்கைக்கண் மேய்ந்த நாரை போரின்கண்ணே யுறங்கும் நெய்தலையுடைய அழகியவயற்கண் நெல்லையறுக்குமுழவர் மூங்கையவிழ் இன்ற மெல்லிய இதழ்கள் நெகிழ்ந்த ஆம்பலினது அகன்ற இலையதனலே மதுவையுண்டு தெளிந்த கடலினது ஒலிக்குந்திரையின் இனியராகிய தாளத் தேயாடும் மென்புலத்தார்களையுடைய நலலநாடுகளுக்கு வேந்தே! பலபழத் தையும் நச்சித்தாம் வாழ்தற்கிடமாகிய ஆகாயத்தின்கண்ணே உயரப்பறந்து பெரியமலையின்முழை எதிரொலிமுழங்கச்சென்று அவ்விடத்துப் பழ முடைய பெரியமரம் பழுத்துமாறிற்றாகவருந்திப் பழம்பெறாதேமீளும் புள்ளினத்தையொப்ப நினது நச்சப்படுந்தன்மைகொடுவரவந்து நின்புகழைக் கூறும் பரிசிலேன்யான் வறியேனாய் மீளக்கடவேனோ? வாட்போரின்கண் மேம்படுவோய், நீ ஒன்றை யீத்திலையாயினும் யான் அதற்கு வருந்துவேனல் லேன் ; அதுநிற்க, நோயின்றியிருப்பாயாக ; பெரும, நம்மிடத்துளதாகிய அணிய அணுமையைக் காண்பதாக; நாடொறும் நறிய பலவாகிய தழைத்த மயிரையும் தேன்போலுஞ்சொல்லையும் ஆராய்ந்த ஆபரணத்தினையுமுடைய மகளிர் ஒருவரினொருவர் புணர்தற்குக் காலம்பார்க்கும் பெரியமலைபோலு மார்பினையுடைய போரை விரும்பும் சேயையொப்பாய்! நினது மகிழ்ச்சியை யுடைய நாளோலக்கம்.—எ - று.

பாணிபார்க்கும் மார்பு - பாணிபார்த்தற்கு ஏதுவாகிய மார்பு.

நம்முட் குறுநணி காண்குவதாகவென்றது, நீ என்மாட்டுச்செய்த அன்பின்மையை அவ்விருக்கையன்றிப் பிறரறியாதொழிவாராகவென்னும் நினைவிற்று.

---

கஉ. வினையெச்சத்தன்மை வினைக்குறிப்புமுற்றுக்கு மேற்கோள் ; தொல். எச்ச. சூ. சுக - ந.

கச. புறநா. உ0ரு : க.

*மூவனென்னும்பெயர் நற்றிணை கஅ-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.

பொருந, வாண்மேம்படுந, சேஎய், நின் இசை நுவல்பரிசிலேன் வறுமை யேன் பெயர்கோ நீ ஈயாயாயினும் இரங்குவேனல்லேன்; பெரும, நோயிலை யாகுமதி; நம்மூட் குறுநணியை நின்னிருக்கை காண்குவதாக; பிறர்கானு தொழிகவெனக்கூட்டுக.

நோயிலையாகென்பது, நீசெய்ததீங்கால் நோயுறாவை, அஃதுறுதொழிக வென்பதாம்; இனி, நின்மகிழிருக்கைக்கண் நம்மூள் மிக அணித்தாதாக காணுங் காட்சி உளதாகவென்றுமாம்.

இதனாற் காட்சியுண்டாகாதென்பது குறிப்பு.

இனி, 'குறுநணி காண்குவ தாக' என்பதற்கு நம்மிடத்து மிகவும் அணித் தாற்காணுங்காட்சி உளதாகவென்பதுகூடாது, நீசெய்தகொடுமையானென் றுரைப்பினுமமையும். (௨0௬)

---

(௨௭0.) மன்பதை காக்குநின் புரைமை நோக்கா
தன்புகண் மாறிய வறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயி
னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ
௫ செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி
யுயிர்சிறி துடையா ளாயி னெம்வயி
னுள்ளா திருத்தலோ வரிதே யதனா
லறனில் கூற்றந் திறனின்று துணியப்
பிறனா யினன்கொ லிறீஇயரென் னுயிரென
௧0 நுவல்வுறு சிறுமையள் பல்புலந் துறையு
மிடுக்கண் மனையோ டீரிய விந்நிலை
விடுத்தேன் வாழியர் குருசி லுதுக்கா
ணவல நெஞ்சமொடு செல்வனிற் கறுத்தோ

---

௧. புறநா. ௭௧ : ௧௭.

௩. "நும்ம னோருமற் றினையராயினென்புழி அன்னோரென்பது உவம வுருபாகிய இடைச்சொல் முதனிலையாகப் பிறந்தபெயர்" தொல். எச்ச. சூ. ௧௪ - ந.

௩ - ௪. தொல். எச்ச. சூ. ௧௪ - ந். மேற்; "நும்ம னோருமற் றினைய ராயி, னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ; என்புழி அன்னோரென்பது இடைச் சொன்முதனிலையாகப்பிறந்த குறிப்புப்பெயராகலானும், நும்மையன்னோர் எம்மையன்னோரென இரண்டாவது விரித்தற்கேற்புடைமையறிக" ஷை ஷை ஷை ௧௪ - சே.

௫. "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" புறநா. ௩ : ௬.

ரருங்கடி முனையரண் போலப்
கடு பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.

சோமான்குடக்கோச் சேரலிரும்பொறை பரிசினீட்டித்தானைப் பேரங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—உயிர்ப்பன்மையைக்காக்கும் நினது உயர்ச்சியைப்பாராது காதல கண்மாறிய அறமில்லாதபார்வையுடனேகூடி நம்போல்வார்யாவரும் இதற்கொத்த அறிவையுடையராய் அருள்மாறுவாராயின் எம்போலவார் இவ் வுலகத்துப் பிறவாதொழியக்கடவர்; குற்றந்தீர்ந்த கற்பினையுடையளாய எம்மைவிரும்பியகாதலி இறந்துபடாது உயிர்வாழ்வுடையாளாகக்கூடின் எம்மிடத்து நினையாதிருத்தல் அரிது; அதனால், அறனில்லாதகூற்றம் திறப் பாடின்றி உயிர்கொளத்துணிய இறந்துபட்டாளல் கொல்லோ ? என்னுயிர் கெடுவதாகவென்று சொல்லுதலுற்ற நோயையுடையாளாய்ப் பலபடவெறுத் துறையும் மனைவியது துன்பந்தீர்க்கவேண்டி இப்பொழுதே விடைகொண் டேன்; வாழ்வாயாக ; இறைவ, இதனைப்பாராய் ; இன்னுமையையுடைய நெஞ்சத்துடனே போவேன், நின்னை வெகுண்டாரது அணுகுதற்கரிய காவலையுடைய முனையிடத்து அரணைப்போலப் பெரிய செயலற்ற எனது வறுமையை முன்போகவிட்டு.—எ - று.

குருசிலே, நும்மனோரும் இனையராயின் எம்மனோர் இவட்பிறவார்; எங்காதலி உயிர் சிறிதுடையளாயின் நினையாதிருத்தலரிது ; அதனால், அம் மனையோளிடுக்கண் தீர்க்கவேண்டி இப்பொழுதே விடுத்தேன்; நிற்கமுந் தோர்முனையரண்போலக் கையற்ற என்புலம்பு முந்துறுத்துச்செல்வேன், வாழியரெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'உதுக்காண்' என்றது அசசெலைவ.

என்வறுமை என்னை விட்டுநீங்கப்போதலையொழியப் புலம்பை முந் றுத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக்கூறியவதனால், 'வாழியர்குரு சில' என்பது இகழ்ச்சிக்குறிப்பாயிற்று.

'உயிர்வெங்காதலி' என்று பாடமோதுவாருமுளர். (உகо)

---

(உகக.) அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே
றணங்குடை யரவி னருந்தலை துமிய
நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக்
குன்றுதூ வெறியு மரவம் போல
௫ முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்
றரைசுபடக் கடக்கு முரைசா றேன்றனின்
றுள்ளி வந்த வோங்குநிலைப் பரிசிலென்

---

க - ச. புறநா. கஎ : கஅ - கூ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

வள்ளியை யாதலின் வணங்குவ னிவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
௧௦ னுள்ளியது [1] முடித்தோய் மன்ற முன்னாட்
கையுள் ளதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்த
நாணு யாயினு நாணக் கூறியெ
னுணங்கு செந்நா வணங்க வேத்திப்
௧௫ பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
னாடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வ லத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
யில்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
௨௦ பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோள் மறந்த புதல்வனொடு
[2] மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—அஞ்சத்தக்க முறைமையையுடைய வெய்யசினத்தையுடைய மழையின்கணுள்ள இடியேறு, அச்சமுடைய பாம்பினது அணுகுதற்கரிய தலைதுணிய நிலவகலத்தை நின்றுபார்ப்பதுபோன்ற நீண்டமலைபிறழச் சிறுமலைதூவவெறியும் ஓசைபோல வீரமுரசு இரங்கொலிக்கும் படையுடனே மேற்சென்று வேந்தர்பட எதிர்நின்றுகொல்லும் புகழமைந்த தலைவ, நீ வள்ளியையாதலான் எமக்குத் தாழ்ந்து பரிசில நல்குவனிவனென்று நின்னை நினைந்துவந்த உயர்ந்த நிலைமையையுடைய பரிசிலேனாகிய யான் நினக்கு எம்மை எதிரேற்றுக்கொள்ளாமாந்தரது கொடுமையைச்சொல்லவும் நின்னுடைய நினைவேசெய்தாய், நிச்சயமாக; முன்னைநாட் பரிசில்கையிலேபுகுந்தது போலக்காட்டிப் பிற்றைநாட் பொய்யைப் பெற்றுநின்ற நினதுபுறநிலைமைக்கு யான்வருந்திய வருத்தத்திற்கு நீதான் நாணுயாயினும் நீநாணச் சொல்லி எனது நுண்ணிய ஆராய்ச்சியையுடைய செவ்வியநா வருந்தப் புகழ்ந்து நாடோறும் பாடப்பாடப் பின்னரும் பாடவேண்டும்புகழை யேற்றுக்கொண்ட நினது வென்றிபொருந்திய அகன்றமார்பை வணங்கிவாழ்த்திப் போவேன் யான்; நாடோறும் உணவில்லாமையான் இடந்தோறுமிடந்தோறும் மாறிமாறி அகழ்தலால் இல்லெலிமடிந்த பழையசுவராகிய எல்லையையுடைய பாலில்லாமையாற் பலபடிசுவைத்து முலையுண்டலைவெறுத்த பிள்ளையுடனே மனையின்கண்ணே வறுமையுற்றிருந்த என்னுடைய ஒளிபொருந்திய நுதலையுடையாளை நினைந்து.—எ - று.

௨௦ - ௨௧. புறநா. ௧௬௪ : ௩ - ௫.

(பி - ம்.)—1 'செய்தோய்' 2 'மனைத்தொலைஇருந்த'

1 கொள்ளா வென்ப கள்ளின் வாழ்த்திக்
. கரந்தை நீடிய வறிந்துமாறு செருவிற்
௧௦ பல்லா னினநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
தடிந்துமாறு 2 பெயர்த்ததிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி ; துறை - * உண்டாட்டு.

ஔவையார் (உ௬௯)

அ. என்ப, அசைநிலை. கள்ளின் வாழ்த்தி : புறநா. ௩௧௬: ௧.

௯. கரந்தை - ஒருவகைப் புதர்ப்பூ ; இப்பூவாற் றொடுத்த மாலையை நிரைமீட்போர் சூடுவதுமரபு.

வாள்கொள்ளாவென முடிக்க.

* உண்டாட்டு - கள்ளுண்டு களித்தாடல்.

(பி - ம்.)—1 'கொள்ளாவென்ப' 2 'பெயர்த்தவிக்'

---

(உ௭௦.) பன்மீ னிமைக்கு மாக விசும்பி
னிரங்கு 1 முரசி னினஞ்சால் யானை
நிலந்தவ வுருட்டிய நேமி யோருஞ்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
௫ நறுவிரை துறந்த நாறு நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
யின்னிசை கேட்ட துன்னரு மறவர்
௧௦ வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை

௧. மாகவிசும்பு : புறநா. ௩௫ : ௧அ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

உ-௩. ஒலிக்கு முரசினையும் இனமிக்கயானைகளையும் நிலத்தில் மிகச் செலுத்திய ஆஞ்ஞாசக்கரத்தையுமுடைய அரசர்களும்.

௪. வேட்ப - விரும்புவார்.

௫. நல்லமணமுடையபொருள்களை நீக்கியதனால் மணமில்லாத வெளுத்த தலைமயிரையுடைய (௬) தாயெனக்கூட்டுக ; புறநா. உ௭௬ : ௧ பார்க்க.

அ. அரிக்குரற்றண்ணுமை : புறநா. உ௪௯ : ௪ ; ௩௬௯ : உ௧ ; ௩௯௬ : ௪.

(பி - ம்.)—1 'முகிலினினஞ்சால்'

விழுநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மையோன் றிறத்தே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.

கழாத்தலையார்.

கண்டார் தாய்க்குச்சொல்லியது. (உ௭0)

க௨. நவி - கோடாலி.

க௩. "கணையும் வேலும் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை, யிருநிலந் தீண்டா வகை" (தொல். புறத்திணை. சூ. க௲); "அப்பணைக் கிடந்த காளை" தகடூர்யாத்திரை.

(க௩) ஆண்மையோன்றிறத்தை (௩) கேமியோரும் (௪) வேட்ப வென்க ; பு - வெ. ௪ : க௲ - ஆம் பாடலைப்பார்க்க.

---

(உ௭க.) [1] நீரற வறியா நிலமுதற் கலந்த
[2] கருங்குரா னொச்சிக் கண்ணார் குரூஉத்தழை
[3] மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
௫ வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
[4] தொறுவாய்ப் பட்ட தெரிய [5] லூன் செத்துப்
பருந்துகொண் டுகப்பயாங் கண்டன
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே.*

திணை - நொச்சி ; துறை - செருவிடைவீழ்தல்.

6 வெறிபாடிய காமக்கண்ணியார். (உ௭க)

க. நீரறவறியா: புறநா. க: க௨.

உ. புறநா. உ௭உ : க; "மாக்குரனொச்சி" (நற். ௩0௫; அகநா. கக௭); "கருங்குரனொச்சி" தகடூர்யாத்திரை.

க - ௪. புறநா. உ௭உ: க - ௫; "ஐதக லல்குற் றழையணிக் கூட்டுங், கூழை நொச்சி". அகநா. உ௭௫.

* பு. உழிஞைத்திணைத்துறைகளுள், 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கக - இளம்.

(பி - ம்.)—1 'நீளற வறியா நில முதற்கரந்த' 2 'கருங்காலொச்சிக் கண்ணார்குவவுத்தழை' 3 'மெல்லிமகளிர்க்கல்குற்' 4 'தெற்றுவாய்' 5 'உரன் செத்துப் பருந்துகண்டுவெப்பவும்' 6 'வெறியாடிய'

(உஎஉ.) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காத னன்[1]மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
ரு [2] தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி
னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.*

திணையும் துறையும் அவை.
மோசிசாத்தனார். (உஎஉ)

---

க. "மணியேர் நொச்சி", "மணிக்குரனொச்சி" நற். கஅச, உகூரு.

க - ரு. நொச்சியே, நீ காதல் நன்மரமென்க.

ச. கடியுடை வியனகர்: புறநா. கூரு: ரு.

க - ரு. புறநா. உஎக: க - ச.

கூ - அ. "எயிலகாத்தநொச்சி" ("வெட்சிநிரைகவர்தல்" என்னுஞ் செய்யுள்); "கருங்குரனொச்சி மிலைந்த, திருந்துவேல விடலை" தகடூர்யாத்திரை, "பல்சான்றீரே" என்னுஞ்செய்யுள்.

* ம. உழிஞைத்திணைத்துறைகளுள், 'அகத்தோன் வீழ்ந்தநொச்சி' என்பதற்கு இதனை மேற்கோள்காட்டி, "இது சூடியநொச்சியைப் புகழ்ந்தது" என்பர்; தொல். புறத்திணை. சூ. கரு - ந.

(பி-ம்.)—1 'மரனீமற்றிசினே' 2 'கொடியணிமகளிர்', 'தொடையுடை'

---

(உஎங.) மாவா ராதே மாவா ராதே
[1] யெல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
ரு [2] யிருபேர் யாற்ற வொருபெருங் கூடல்

---

க. நெடுஞ்சீர்வண்ணத்திற்குமேற்கோள்; தொல். செய். சூ. உஉ0 - பேர்; ந.

ங. புறநா. ஙக0 : எ - அ.

ங - ச. புதல்வற்றந்தசெல்வனென்றது, கணவனை.

ரு. கூடலென்றது, இரண்டாற்றுநீரும் கூடுமிடத்தை.

ரு - எ. புறநா. உகூ0 : உஉ - ச; "ஆற்றங் கரையின் மரமு மரசறிய, வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே" நல்வழி, கஉ.

(பி-ம்.)—1 'எல்லாமாவும்' 2 'இரும்பேராறறலொருபெருங்கடலை'

விலங்கிடு பெருமரம் போல
1 வுலந்தன்று கொல்லவன் மலைந்த மாவே.*

திணை - தும்பை ; துறை - குதிரைமறம்.

எருமைவெளியனார். (உஎ௩)

.* மூ. தும்பைத்திணைத்துறைகளுள், 'குதிரைநிலை' என்பதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ௧எ - ந.

(பி - ம்.)—1 'உலந்தின்று'

---

(உஎ௪.) நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேறுரந் தினியே
தன்னூர் 1துரக்குவன் போலு மொன்னல
௫ ரெஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி 2 மெய்க்கொண் டனனே.*

திணை - அது ; துறை - எருமைமறம்.

உலோச்சனார். (உஎ௪)

௧ - உ. "கொன்றைகமழ முடியோனும் வேணியினைப் பின்னல்படு குஞ்சியாக்கித், தன்றமயிற் பீலிநெடுங் கண்ணிதிரு நெற்றியுறச் சுற்றினனே" (வில்லி - பாரதம், அருச்சுனன்றவநிலை. அ௨) ; "கானிறை குஞ்சிச் சூட்டிற் களிமயிற் கலாபஞ் சூடி", "வேடுரு வாகி நின்றான்", "குஞ்சிக் கங்குலவாய்ச் சிலைபோல வெட்சிக் கண்ணிசூழ் கலாபச் சூட்டும்" திருவிளை. உஉ: உ௫; ௩எ: ௧௩, ௧௪.

௩. "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்" (குறள், எஎ௪); "மறவன் நெருப்பிமையாக் கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி" பு - வெ. எ : ௧௪.

உ - எ. "கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து, மல்லேறு தோள்வீமன் மாமனைப்—புல்லிக்கொண், டாறுத போர்மலைந்தா னங்கரசர் கண்டார்த்தா, ரேறுட லாய வெனை" பாரதம்.

* மூ. தும்பைத்திணைத்துறைகளுள், படையறுத்துப்பாழிகொள்ளுமேம மென்பதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ௧௪ - இளம் ; ௸ ௸ ௧எ - ந.

(பி - ம்.)—1 'துரக்குநன்' 2 'மொய்கொண்டனனே'

(௨எ௫.) கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு
மொத்தன்று மாதோ விவற்கே செற்றிய
[1] திணிநிலை யலறக் கூவை போழ்ந்துதன்
௫ வடிமா ணெஃகங் [2] கடிமுகத் தேந்தி
யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன் [3] சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே.

திணையும் துறையும் அவை.

ஒரூஉத்தனார். (௨எ௫)

---

க. 'கோட்டம்பூ' என்பதற்கு, கோடுதலைச் செய்யுமாலையென்று பொருள் கூறி, இவ்வடியை மேற்கோள் காட்டினர் பரிமேலழகர்; குறள். ௯௩௯.

௩. 'ஒத்தன்று' என்பதைக் கோட்டங்கண்ணி முதலிய மூன்றனோடும் கூட்டுக.

௪. திணிநிலை - நெருங்கியிருந்த சேனையின்நிலை.

௫. புறநா. ௨௮௨ : க.

எ. தொடர்-சங்கிலி. தட்ப-தடுக்க; 'புள்ளிடைதட்ப' புறநா. ௧௨௪.

அ. "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவாசகம், திருப்புலம்பல், ௩); "ஈற்று விருப்பிற் போற்றுபு நோக்கி" பொருந. ௧௫௧.

௯. எதிர்ந்த தோழற்கு - பகைவரை எதிர்த்த நண்பனைக் காத்தற்கு. இது பாரதப்போரில் அபிமன்னுவைப் பாதுகாத்தற்குச்சென்ற வீமன் செய்தியை நினைப்பிக்கின்றது.

அ - ௯. "கன்றுசேர்ந் தார்கட் கதவிற்றாய் சென்றாங்கு, வன்கண்ண ளாய்வர லோம்பு" (கலி. ௧௧௯); விரைவென்னுமெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. ௫. ௧௨ - இளம்.

* மு. தும்பைத்திணைத்துறைகளுள், 'ஒருவனொருவனை யுடைபடைபுக்குக் கூழைதாங்கியபெருமை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௪ - இளம்) ; இதனைத் தானைநிலைக்கு மேற்கோள் காட்டி, 'இஃது உதவியது' என்பர்; ஷை ஷை ஷை ௧எ - ந.

(பி - ம்.)—1 'திணிநிலைமலரக்கூழை' 2 'கழிமுகத்' 3 'சமத்தொழிந்தன்'

---

(௨௭௬.) நறுவிரை துறந்த நறைவெண் கூந்த
[1]லிரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் [2]சிறாஅன்
மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
௫ குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே.*

திணை - அது; துறை - தானைநிலை.
மதுரைப்பூதனிளநாகனார். (௨௭௬)

---

௧. புறநா. ௨௭௦ : ௫ ; ௨௭௭ : ௨.

௨. இரங்காழ் - இரமரத்தின் விதை; இரவென ஒருமரமுண்டென்பர் (புறநா. ௨௮௧ : ௧), "இரவு மிணடுங் குரவுங் கோங்கும்...வாகையும் பிறவும் வன்மர மொடுங்கி" பெருங். ௧. ௫௨ : ௪௦ - ௪௪; இப்பெயர், இரா, இரவு, இரவமெனவும் நூல்களில் வழங்கும்.

௩. செம்முதுபெண்டு : புறநா. ௨௮௦ : ௭.

௫-௬. புறநா. ௩௨௮ : ௭; "பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே" கம்ப. மிதிலை. ௪௧.

௨-௬. இ-வி. சூ. ௬௩௧ - உரை. மேற்.

* பு. தும்பைத்திணைத்துறைகளுள், தானைநிலையின்பாற்படுமென்பர்; தொல். புறத்திணை. சூ. ௧௪ - இளம்; ௬௪ ௬௫ ௬௭ கள - ந.

(பி - ம்.)—1 'ஈர்ங்காழன்ன திரங்குதலை' 2 'சிறான்முட்பாற்சில'

---

(௨௭௭.) மீனுண் கொக்கின் [1]றூவி யன்ன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னு முவகை
யீன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
௫ [2]நோன்கழை துயல்வரும் [3]வெதிரத்து

---

௧-௨. "குயிலொத்திருள்குஞ்சி கொக்கொத்த திருமல, பயிலப் புகா முன்னம் நெஞ்சே" ௧௧-ஆம் திருமுறை, க்ஷேத்திர. ௧௨.

௩. புறநா. ௨௭௯ : ௪.

௩-௪. புறநா. ௨௭௮ : ௯; ௨௯௫ : ௫-௭; "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோ னெனக்கேட்ட தாய்" (குறள். ௬௯); "மற்றவன் சொன்ன வாசகங் கேட்டலு மகனைப், பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில், லிற்ற வன்றினு மெறிமழு வாளவ னிழக்க, முற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான்" கம்ப. மந்திர. ௪௨.

௫. வெதிரம் - ஒருமலை.

(பி - ம்.)—1 'வெண்சிறகன்ன' 2 'கோன்கழையமலரும்' 3 'வெதிரத் துச்சிமைத்து', 'வெதிர்......வானலியற்றூங்கிய'

1 வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.*

திணை - அது ; துறை - உவகைக்கலுழ்ச்சி.

2 பூங்கணுத்திரையார். (உ௭௭)

௬. சிதர் - துளி.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'பேரிசை, மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம், மாய்ந்த பூசன் மயக்கம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்; ௵ ௵ ௵ உச - ந.

(பி - ம்.)—1 'வான்பெயற்றூங்கிய' 2 'பூங்கண்ணுத்திரை'

---

(உ௭௮.) நரம்பெழுந் 1 துலறிய நிரம்பா மென்றோண்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் 2 குடைந்தன னாயி னுண்டவென்
௫ 3 முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை 4 காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

2/3.

திணையும் துறையும் அவை.

காக்கைபாடினியார் 5 நச்செள்ளையார். (உ௭௮)

உ - ௫. "நரம்பெழுந்து...... சினைஇ: என்பது குடிகோள் பற்றிவந்த வெகுளி ; என்னை? தன்மகன் மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தானென்று சினங்கொண்டாளாகலின்" தொல். மெய்ப்பாடு. சூ. ௧௦ - பேர்; இ - வி. சூ. ௫௭௮ - உரை.

௬. பெயரா - பெயர்த்து.

௭. புறநா. உ௯௫ : ௫; செங்களம் - உதிரத்தாற் சிவப்பாகிய போர்க்களம் ; "செங்களம்படக்கொன்று" (குறுந். ௧) ; துழவுதல் - கையாற் றடவுதல்.

௬ - ௭. படுபிணம் நீங்காத போர்க்களத்தைச் சூழ்வவென்றுமாம்; துழவல் - சூழவருதல். 'மாதிரந் துழவுங் கவலை நெஞ்சத்து' புறநா. ௧௭௪ : உ௧ - உ.

௯. புறநா. உ௭௭ : ௩ - ௪ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௮-௯. "ஊ காரம் பின்வரும் தொழிற்கு இடையின்றி விரைவு உணர்த்தி முன்வருந்தொழின்மேல் இறந்தகாலம் பற்றிவரும்" (தொல். வினை. சூ. ௩உ - பேர்; ௵ ௵ ௵ ௩௧ - ந; இ - வி. சூ. உ௪௯ - உரை), செய்யூஉ என்னும் வினையெச்சம் வினைமுதல வினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள் ; நன் - மயிலை. சூ. ௩௪௩ ; நன் - வி. சூ. ௩௪௪.

(பி - ம்.)—1 'உரறிய' 2 'உலைந்தனனுபின்' 3 'முலையறுத்திடுவன்' 4 'காணுவீன்ற' 5 'நச்செளையார்', 'நச்சென்னையார்'

(௨௭௯.) கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
௫ [1] நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப்பட் டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று [2] மயங்கி
வேல்கைக் கொடுத்து [3] வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
௧0 யொருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.*

திணை - வாகை; துறை - † மூதின்முல்லை.

ஒக்கூர்மாசாத்தியார். (௨௭௯)

---

௧. இவளொன்றது, கோலுஞ்செய்து மகனைப போாககனுப்புநதாயை.

௨. மூதின் மகளிர - முதிய மறககுடியிற் பிறநத மகளிர் (புறநா. ௧௯: ௧௫); மறககுடியை மூதிலெனறது, 'கற்றோன்றி மணடோன்றாக் காலத்தே வாளோடு, முற்றோன்றி மூத்த குடி" (பு - வெ. ௨: ௧௪) என்பவாகலின.

௮. வெளிது - வெள்ளிய ஆடை; புறநா. ௨௮௬: ௫; ௨௯௧: ௨.

௯. பாறுமயிர் - விரிநதமயிர; புறநா. ௩௭௪: ௩.

* மு. "கன்னின்று..ஏறு" (பு - வெ. ௮: ௨௨); வெட்சித்திணைத் துறைகளுள், மறககுடிகூடடியகுடிநிலைமகளிர் இயலகூறியதறகும், (தொல். புறததிணை. சூ. ௪ - இளம்) 'வாளவாய்ததுககவிழதல்' எனபதற கும் (ஷை ஷை ஷை ௫ - ந) மேறகோள.

† "வநத படைநோனா வாயின் முலைபறிதது, வெநதிற லெஃக மிறைக கொளீஇ - முநதை, முதலவாகற் றுஎகாட்டி மூதின் மடவாள், புதலவ னைச் செலகென்றாள போாககு" பு - வெ. ௮ : ௨௧.

(பி - ம்.)—[1] 'நெருநலையுற்ற' [2] 'முயங்கி' [3] 'வெளிறு'

---

(௨௮0.) என்னை [1] மார்பிற புண்ணும் வெய்ய
நடுநாள் வநது தும்பியுந் துவைக்கு
நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா

---

௧. தலைவனைத் தலைவி 'எனனை' என்ப புறததிணைக்கட் கூறியதற்கு மேற்கோள; தொல். பொருளியல, சூ. ௫௨ - ந.

௨. தும்பி - ஒருவகைவண்டு.

(பி - ம்.)—[1] 'மார்பமாபபுண்ணும'

[1] துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கு
௫ மஞ்சவரு குராலுற் குராலுந் தூற்று
நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்குஞ்
செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
யென்னா குவிர்கொ லளியிர் நுமக்கு
௧௦ மிவணுறை [2] வாழ்க்கையோ வரிதே யானு
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்
சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல
௧௫ வழிநினைந் திருத்த லதனினு மரிதே.

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்.
மாறோக்கத்துநப்பசலையார். (உ௮௦)

---

௪. வேட்கும் - விரும்பும்.

௫. குரால - கூகைப்பெடை; கோட்டானுமாம்.

௬. விரிச்சி - நற்சொல.

௭. செம்முதுபெண்டு : புறநா. உ௭௬ : ௩.

௬ - ௭. "நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது, பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" முல்லை. ௮-௧௧.

௧௦. இவண் - இவ்விடத்து.

௧௧ - ௩. மழித்தலை - மழித்தலையுற்றதலை. புறநா. உ௫௦ : ௪ - ௫; உ௬௧ : ௧௭ - ௬.

௧௨ - ௩. புறநா. உ௪௮; ஆம்பலல்லி - ஆம்பலாகிய அல்லிக்காயரிசி; சீவக. ௩௫௫.

௧௪. கழிகலமகளிர் - விதவைகள்; புறநா. உ௩௮ : ௬.

௧௫. வழிநினைந்து - பிற்காலவினைவை எண்ணி. 'அதனினும்' என்றது, (௧௦) 'வாழ்க்கையோவரிது' என்றதைச் சுட்டியது.

(பி - ம்.)—1 'துஞ்சாகண்ண' 2 'வாட்கையோ......வறிதே'

(உஅக.)[1] தீங்கனி யிரவமொடு வேம்பு [2] மனைச்செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
[3] கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
௫ யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
[4] காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் [5] கழற்கா னெடுந்தகை புண்ணே.*

திணை - காஞ்சி; துறை - பேய்க்காஞ்சி.
அரிசில்கிழார். (உஅக)

---

க. இரவமொடு - இரவந்தழையோடு. செரீஇ - செருகி.
உ. மருப்பு - யாழினுறுப்புக்களுள் ஒன்றாகிய கோடு.
ங. மையிழுதிழுகி - மையிட்டு.
ச. ஐயவி - வெண்சிறுகடுகு. ஆம்பல் - ஆம்பலங்குழல.
௫. காஞ்சி - காஞ்சிப்பண்.
௬. நறைபுகைஇ - நறுநாற்றமுள்ள அகில முதலியவற்றைப் புகைத்து.
க - ௬. புறநா. உ௬௬ : க - உ.
௫ - ௬. "கொழுநர் மார்பி, னெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென, வறலவாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல" மலைபடு. ௩0௨ - ௪.
* ழ. காஞ்சித்திணைத்துறைகளுள், 'இன்னகை மனைவி பேஎய் புண்ணோற், றுன்னுதல கடிந்த தொடாஅக் காஞ்சி' என்பதற்கு மேற்கோள்' தொல். புறத்திணை. ௲. க௬ - இளம்; ௵ ௵ ௵ உ௪ - ந.
(பி - ம்.)—1 'தீங்கனியரவமொடு', '[illegible]ங்கணவிரமொடு' 2 'மனை செரீஇயாங்கு மருப்பியானை' 3 'வையப்பெயர்த்துமைவிழுதிழுகி' 4 'காக்க வம்மோ' 5 'உடையநெடுந'

---

(உஅஉ.) எஃகுளங் கழிய விருநில மருங்கி
னருங்கட னிறுத்த பெருஞ்செ யாளனை
யாண்டுளனோவென வினவுதி யாயிற்
.......... .. ...... .......... ..........
வருபடை தாங்கிய கிளர்தா ரகல

---

உ. பெருஞ்செயாளனை - பெரிய செய்கையை ஆளும் வீரனை; "பெருஞ் செயாடவர்" புறநா. க௬௬ : ௫.
ங. புறநா. அ௬ : உ.

ரு மருங்கட னிறுமார் [1] வயவ ரெறிய
வுடம்புந் தோன்றா வுயிர்கெட் டன்றே
மலையுநர் மடங்கி மாறெதிர் [2] கழியத்
......... ......... ......... .........
யலகை [3] போகிச் சிதைந்துவே றாகிய
பலகை யல்லது களத்தொழி யாதே
௧௦ சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே.

திணை - .................................
பாலைபாடியபெருங்கடுங்கோ. (௨௮௨)

ரு. இறுமார் - முடித்தற்கு.

ச - ரு. அகலம் - மார்பு. அகலத்தை எறிய.

௬. படைக்கலங்களுக்குட கிடக்கின்றமையின், உடம்பு தோன்றாதாயிற்று. கெட்டன்று - கெட்டது; நீங்கிற்று.

எ. மடங்கி - மீண்டு.

௯. பலகை - கேடகம்.

௧௦. சேண - நெடுந்தூரம்; "சேணவிளஙகும் புகழ்" (புறநா. ௧௦: ௧௧), "சேணவிளங்கு நலலிசை" அகநா. ௨௦௫.

௧௧. நவிலுதல - கூறிப்பழகுதல; "மறைநவிலநதணர்" (புறநா. ௧: ௬); "நவிறொறு நூலநயம் போலும்" குறள். எ௮௩.

௧௦ - ௧௧. திறககததில விளஙகுதற்கு காரணமாகிய நல்ல புகழென்றுமாம்; புறநா. ௨எ: எ - ௯ ஆம் அடிகளின் குறிபபைபபார்க்க.

(பி - ம்.)—1 'வாயவெறிய' 2 'கழிய' 3 'போறகச'

---

(௨௮௩.)ஒண்செங் [1] குரலித் தண்கயங் [2] கலங்கி
வாளை [3] நீர்நாய் நாளிரை பெறூஉப்
பெளவ வுறையள வா .....வி மயக்கி

௧. குரலி - ஒருவகைக்கொடி; "சிறுசெங்குரலி" குறிஞ்சி. எ௨; பெரும். ௨. ௧௨ : ௨௯.

௨. நாளிரை - காலையுணவு; வாளையை நீர்நாய் நாளிரையாகப்பெறும்; "வாளை மேய்நத வள்ளெயிற்று நீர்நாய்", "நாளிரை தரீஇய வெழுநத நீர்நாய், வாளையொ டுழப்ப", "பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து, வாளை நாளிரை தேரு மூர" அகநா. ௬, ௩௩௬, ௩௮௬.

(பி - ம்.)—1 'குரலித்' 2 'கலைநீர்காய', 'கலையுளானே'. 3 'மாநீர்நாய் நாளிரைபெறூஉமபெளவவுறையளவா'

'* மாறுகொண் முதலையொ டூழ்மாறு [1] பெயரு
ரு மழும்பிலனடாங்காறகையுமென்றும்(?)
வலம்புரி கோச ரவைக்களத் தானு
மன்று ளென்பது கெட......ரனே பாங்கற்
கார்சூழ் குறட்டின் வேனிறத் [2] திங்க
வுயிர்புறப் படாஅ வளவைத் தெறுவரத்
கய தெற்றிப் பாவை திணிமண லயரு
மென்றோண் மகளிர் நன்று புரப்ப
..........ண்ட பாசிலைக்
[3] கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே.

திணை - தும்பை; துறை - [4] பாண்பாட்டு.

[5] அடைநெடுங்கல்லியார். (உசஅ)

---

ச. மாறு - பகை; "கடுமுரண்முதலை" (புறநா. ௩எ : கய); ஊழ் - முறை.

ரு. அழும்பில் : இப்பெயருள்ள ஊர் சோழநாட்டிலொன்றும் சேர நாட்டிலொன்றும் உண்டென்று தெரிகிறது; "பிணையலங் கண்ணிப் பெரும் பூட் சென்னி, யழும்பில" (அகநா. சச); "மானா விறல்வே ளழும்பில்" (மதுரை. ௩சச - ரு); "அறைபறை யென்றே யழும்பிலவே ளுரைப்ப" சிலப். உரு : கஎஎ.

௬. வலம் புரி - வெற்றியை விரும்பும்; கோசர் - ஒருவகைவீரர்; புறநா. கசுக: ௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க. அவைக்களம் - பழைய னென்னும் சிற்றரசனுடைய மோகூரிலுள்ள அவைக்களம்; "பழையன் மோகூ ரவையகம் விளங்க, நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன" மதுரை. ருய அ - ௬.

எ. பாங்கற்கு - தோழன் பொருட்டு.

அ. ஆர் - ஆரக்கால்; குறடு - வண்டியுருளையின் குடம்; வேல்நிறத்து இங்க - வேற்புண்கள் மார்பில தங்க; வேற்படைகளால தைப்புண்ட வீர னுக்கு ஆரக்கால் சூழ்ந்த குறடு உவமை; "நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பின்" (மதுரை. எசஉ); "வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால், சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவா, ரோருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய, வாரமே யமைந்ததேர்க் குழிசி யாயினர்" (சீவக. எகய). "நெடுவேல் பாய்ந்த மார்பின், மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே" (புறநா. உகஎ) என்பதும் இங்கே கருதற்பாலது. இங்கல்-தங்கலென்பது, "செம்பொ னிங்குவார் கழலினும்", "இங்குசுவை யின்னமிர்தம்" (சீவக. கயஅ௩, உயஉரு) என்பவற்றாலுமறியலாகும்.

கய. தெற்றி - திண்ணை.

க௩. தும்பை - தும்பைமாலையை. அசைத்தல் - கட்டுதல்.

(பி - ம்.)—1 'கதிர்பெயருமழிம்பிலினண்டரங்காற்கையும்' 2 'திங்க ளுயிறுயிர்ப்படாஅ' 3 'கவிழ்' 4 'பாடாண்பாட்டு' 5 'அண்டநெடுங்க......யார்'

(உ அச.) வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை [1] சூடிக் காலிற்
றமியன் வந்த மூதி லாளன்
ரு னருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
வொருகை யிரும்பிணைத் தெயிறு [2] மிறையாகத்
[3] திரிந்த வாய்வா டிருத்தாத்
[4] தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.*

திணையும் துறையும் அவை.
ஓரம்போகியார். (உஅச)

க. விரைவில வருக விரைவில வருகவென்று; "வருகதில லம்ம வெஞ் சேரி சேர" அகநா. உஎசு; நன் - வி. சூ. சஉo - மேற்.
உ. தூது - தூதர்.
க - உ. சிறந்த வீரனைத் தமக்குத் துணையாகவரும்வண்ணம் அரசர் அழைத்தல இந்நூல் கஉஉ - ஆம் பாடலாலும் விளங்கும்.
ந. நூலரிமாலை - நூலைஅரிந்து கட்டியமாலை. காலின் - கால்களால்; காற்றைப் போலென்றுமாம்.
ந - ச. ஊர்தியின்றித்தனியேவந்த மறவன். மூதில - மறக்குடி.
க - ச. "வருகதில்வல்லே...வந்த: இது காலங்குறித்தது" தொல். இடை. சூ. ரு - ந.
ரு. தடுத்தற்கரிய போரைத்தடுத்து.
சு. "தானால் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால், யானை யெறிந்த லிளிவரவால் - யானை, யொருகை யுடைய தெறிவலோ யானு, மிருகை சுமந்துவாழ் வேன்" தொல். புறத்திணை. ரு - ந. மேற்.
சு - எ. ஒருகையிரும்பிணைத்தெயிறு - இறந்தயானையின் கொம்பு. மிறையாகத் திரிந்தவாள் - வளைவாகவேறுபட்ட கத்தியை; திருத்தா - திருத்தி; "புண்ணிடங் கொண்ட வெஃகம் பறித்தலிற் பொன்னனார்தங், கண்ணிடங் கொண்ட மார்பிற் றடாயின காது வெள்வேன், மண்ணிடங் கொண்ட யானை மணிமருப் பிடையிட் டம்ம, விண்ணிட மள்ளர் கொள்ள மிறைக்கொளீஇத் திருத்தி னாரே" (சீவக. உஅச); "வெந்திற லெஃக மிறைக் கொளீஇ" பு - வே. அ : உக.
அ. தனக்குத் தோற்றோடியவனது முதுகைநோக்கிச் சிரிப்பான்.
(ரு) தாங்கித் (எ) திருத்தா (அ) நகுமென்க.
* மு. வருசித்திணைத்துறைகளுள், 'அழிபடைதட்டோர் தழிஞ்சி' என்பதற்கும் (தொல். புறத்திணை. சூ. எ - உரை), 'வருவிசைப் புனலைக் கற் சிறைபோல வொருவன் றாங்கிய பெருமை' என்பதற்கும் (ஷை ஷை ஷை அ - ந), 'திறப்பட வொருதான் மண்டிய குறுமை' என்பதற்கும் (ஷை ஷை ஷை கஉ - ந) மேற்கோள்.

(பி - ம்.)—1 'சூட்டிநங்காலிற்றனியன்' 2 'பிறையாக' 3 'திருந்த' 4 'தனக்கிருந்தானை', 'தனக்கிரிதானைபெயர்'

(உ.அரு.) பாசறை யீரே பாசறை யீரே
துடியன் கையது வேலே யடிபுணர்
வாங்கிரு மருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே காண்வரக்
ரு கடுந்தெற்று மூடையின்.........
வாடிய மாலை மலைந்த சென்னியன்
வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு
1 நெடுநகர் வந்தென விடுகணை மொசித்த
2 மூரி வெண்டோள்...............
கo சேறுபடு குருதிச் 3 செம்மலுக் கோஒ
மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக
நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
யதுகண்டு, 4 பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்
திறைஞ்சி யோனே குருசில் பிணங்குகதி
கரு ரலமருங் கழனித் தண்ணடை யொழிய

உ. துடியன் - துடிப்பறை கொட்டுபவன்.

ங. வளைந்த கரிய கோட்டையும் இனியநரம்புத் தொடையையுமுடைய சிறியயாழ்.

ச. தோல - கேடகம்.

ங - ச. "தீஎங் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண" புறநா. எo : க.

ரு. கடுந்தெற்று மூடை - நெருங்கத் தெற்றின தானியக்கோட்டை; மூடை - குதிருமாம்; "கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ், சாலி" பொருந. உசரு - சு.

சு. மலைந்த - சூடிய.

எ. அரசகாரியத்தைச் செய்யும் அரியதலைமையையுடையசுற்றம்.

அ. மொசிதல் - மொய்த்தல்; பதிற். கக : கஉ ; சசு : அ.

கo. செம்மல் உக்கு ஓஒ.

கக. பகைவரைக் கோபிக்கின்ற நெடியவேல மார்பினுட் போதலால் "எஃகுளம் கழிய" (புறநா. உஅஉ : க)

கச. குருசிலென்பது, அவனென்னும் பொருளில்வந்தது.

கரு. தண்ணடை - மருதநிலத்தூர்; புறநா. உஅஎ : கo.

கச - ரு. பிணங்குகதி ரலமருங் கழனி - பின்னிய நெற்கதிர் சுழலும் வயல்; புறநா. ஙஙஅ : கo.

(பி - ம்.)—1 'நடுநகா' 2 'மூரிவெண்டோல்' 3 'செம்மறுக்கோஒ மாறு படுநெடு' 4 'பார்த்தோர்'

[1] விலம்பா டொக்கற் றலைவற்கோர்
கரம்பைச்[2] சீறூர் நல்கினன் னெனவே.
திணை - [illegible] ; துறை - .........முல்லை.
அரிசில்கிழார். (உ௮௫)

௧௱. வறுமையையுடைய சுற்றத்தாரைக்குத் தலைவனொருத்தன், ஓரிர வலனை.
(௧௭) நலகின்னெனப் (௧௩) பாநதோரெல்லாம் புகழக் (௧௪) குருசில் இறைஞ்சியோனெனக; "பிறர்தலைடை பேறுங்கா ஞணலும்" (திரிகடுகம், ௬); "தம்புகழ கேட்டார்போற் றலைசாயதது மரநதுஞச" கலி. ௧௧௯.
(பி - ம்.)—1 'வலப்பாடு' 2 'செறூர', 'களறூா'

---

(உ௮௬.) வெள்ளை வெளயாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது [1] நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற கிடப்பித
௫ தூவெள் ளறுவை [2] போர்ப்பித் திலதே.*
திணை - [illegible] ; துறை - வேத்தியல்.
ஔவையார். (உ௮௬)

௧. யாடடுசெசசை - ஆடடுககிடாய.
௨. தன்னோரனன - தனனையொத்த; ஓர், அசைநிலை.
௩. மணடை - ஒருவகை உணகலம்; எழுவாய்.
௪. காலகழிகடடில - பாடை; கிடப்பி - கிடத்தி; புறநா. ௬௩ : ௮.
௫. தூவெளளறுவை - மிகவெணமையான ஆடை; புறநா. ௨௭௯ : ௮; ௨௯௧ : ௨.
(௩) மணடை (௫) போர்ப்பித்திலதெனக.
* மு. தொல். புறததிணை. ௫. ௮ - ந. மேற்.
(பி - ம்.)—1 'நீடடிப்பலமணடையெண' 2 'போர்ப்பிததிலனே', 'போர்ப் பித்திலவே'

---

(உ௮௭.) துடியெறியும் புலைய
வெறிகோல் கொள்ளு [1] மிழிசின

௧. துடி - ஒருவகைப்பறை.
௨. எறிகோல - பறையை அடிக்குங் குறுநதடி. இழிசின - புலையா; புறநா. ௮௨ : ௩, ௨௮௯ : ௧௦.
(பி - ம்.)—1 'அறிசன, காலமளியினம்புகைப்பினும்'

காலமாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
௫ பொலம்புனை யோடை யண்ணல் [1] யானை
யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினு
மோடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் [2] புரளுந்
௧௦ தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் [3] மன்ற னன்று
முயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.*

திணை - கரந்தை; துறை - நீண்மொழி.

சாத்தந்தையார். (௨௮௭

௩. கார்காலத்துமழை எய்யப்படும் அம்புகளுக்கு உவமை; "ஒடுங்கா ருடன்றவன் றானை வில்விசை, விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறூஉ" (பரி. ௨௨: ௫-௬); "பெயலுறழக் கணைசிதறி" (மதுரை. ௧௮௩); "மால்வரை, தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரிதன்னைக், காலினாற் றெழுந்து பாறக் கலமெனப் புடைத்த தேரோன், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யம்பு மாரி, கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கினானே" சீவக. ௪௩௧.

௪. வேலுக்குக் கெண்டையுவமம்; புறநா. ௨௪௯: ௩.

௫. பொலம்புனையோடை - பொன்னாற்செய்யப்பட்டபட்டம்; புறநா ௩: ௭ - ௧௧.

௫ - ௬. வால்மருப்பு - வெண்மையான கொம்பு; 'யானை......ஊன்றினும்': "முளரிமுக நாகமுலையெயிறழுந்து கீற" சீவக. ௨௮௭௦.

௭. பீடு - பெருமை.

௮. பொய்கையிற் பிறழ்ந்த வாளைமீன்.

௯. கூட்டுமுதல் - நெற்கூட்டிடத்தே.

௧௦. தண்ணடைபெறுதல் இபலபெனறபடி; "தண்ணடை பெறுதலு முரித்தே" (புறநா. ௨௯௭ : ௮) படின் - இறந்தால்.

௧௧. தெய்வமகளிருடைய மணத்தை. நன்று - மிகுதியாக; உம் அசைநிலை.

௧௨. சுவர்க்கத்தில் அனுபவிப்பார்.

௧௩. பகையரசனுடைய சேனை.

௧௪. வரவுகாண்டிர் - வருதலைப்பார்ப்பீராக.

* மு. வஞ்சித்திணைத்துறைகளுள், 'மாராயம்பெற்ற நெடுமொழி' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௭ - இளம்; [illegible] அ-ந

(பி - ம்.)—1 'யானையிலங்குவான' 2 'பிறழும்' 3 'மண்ணநன்று'

(௨௮௮.) மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பி
னண்ண னல்லே றிரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க
௫ வாரமர் மயங்கிய ஞாட்பிற் றெறுவர
நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்
[1] தருகுகை ......... ......... மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை யீயாது மொய்த்தன பருந்தே.

திணை - தும்பை; துறை - மூதின்முல்லை.

கழாத்தலையார். (௨௮௮)

---

௧. மண்கொளவரிந்த - கோட்டுமண்கொள்ளுதலால் வரிபட்ட.

௨. இரண்டுகாளைகள்.

௩. வென்றதன் - வென்ற ஏற்றினது. பச்சை - தோல்.

௧ - ௪. பச்சைபோர்த்த முரசம்: "ஓடா நல்லேற் றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. ௩௩௪); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த, மாக்கண் முரச மோவில கறங்க" (மதுரை. ௭௩௨ - ௩); "ஏற்றுரி போர்த்த விடியுறு முழக்கின்,.....முரசு" (மணி. ௧: ௨௯ - ௩௧); "ஏற்றுரி போர்த்த வள்வா ரிடிமுரசு", "புனைமருப் பழுந்தக் குத்திப் புலி யொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசம்" (சீவக. ௨௧௫௨, ௨௮௬௬); "சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன்" (பெருங். ௧. ௩௮: ௧௦௦, ௫௪ ௫௪ ௪௩: ௧௬௫); "ஏற்றுரியி னிமிழ் முரசம்" (யா - வி. செய். சூ. ௪௦ 'தாழிரும்' என்னுஞ் செய்யுள்); "ஏற்றுரி முரச நாண" (சீவக. ௨௧௪௨) என்னும் பகுதிக்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க் கினியர்.

௫. அமர் - போர். ஞாட்பு - போர்க்களம்.

௯. மகளிர் வந்து தழுவுதற்கு இடங்கொடாமற் பருந்துகள் மொய்த் தன.

(பி - ம்.)—1 'தருகுறை'

(உஅகூ.) ஈரச் செவ்வி யுதவின வாயினும்
பல்லெருத் துள்ளு நல்லெருது நோக்கி
வீறுவீ றாயு முழவன் போலப்
பீடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய
ரு [1] மூதி லாள ருள்ளுங் காதலிற்
றனக்குமுகந் [2] தேந்திய பசும்பொன் மண்டை
[3] யிவற்கீ கென்னு மதுவுமன் றிசினே
கேட்டியோ வாழி பாண பாசறைப்
[4] பூக்கோ ளின்றென் றறையு
கo மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே.*

திணை - ......... ; துறை......மூல்லை.
கழாத்தலையார். (உஅகூ)

---

க. ஈரச்செவ்வி - ஈரமாகிய பருவம்.

உ. பல உழவெருதுகளுள்ளும்.

ந. வீறு வீறாயும் - அவ்வெருதின் குணங்களை வேறு வேறாக ஆராய்கின்ற.

ச. குடிப்பாடு - குலத்திற்குப்பொருந்திய பழைய வழக்கம்.

ரு. மூதிலாளர் - மறக்குடியிற் பிறந்தவர். காதலின் - அன்பினால்.

சா. பசும்பொன் மண்டை யென்றது, பசியபொன்னாற் செய்யப்பெற்ற கட்பெய்கலத்தை ; மண்டை, அதனிலுள்ள கள்ளுக்கு ஆகுபெயர்.

சா - எ. இவற்கு ஈகெனவும் - இவ்வீரனுக்குக் கொடுவென்பான் "இவற்கீத் துண்மதி கள்ளே" புறநா. உகூ0: க.

அ. பாசறை - படைவீட்டில்.

கூ. பூக்கோள் - பூவைக்கொள்ளுதல ; அஃதாவது, வெட்சி முதலிய புறத்திணைக்குரிய பூக்களைத் தம் தொழிலுக்கேற்பச் சூடுதற்கு நல்லநாளிற் கைக்கொள்ளல ; "பூக்கோ ளேஎ யகம்புக் கானே" புறநா. நசக: அ.

கo. மடிவாய்த்தண்ணுமை - தோலைமடித்துப்போர்த்தவாயையுடைய மத்தளம்: "மடிவாய்த் தண்ணுமை நடுவ ணார்ப்ப" (நற். கநo: உ); "மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்ப" (பெரும்பாண். கசச.) இழிசினன் புறநா. உஅஎ: உ.

கூ - கo. புறத்திணைக்குரியபூக்களைக் கொள்ளுதற்குத் தண்ணுமையறைதல்மரபென்பது, "பூக்கோ ளேய தண்ணுமை" என்பதனாலும் விளங்கும்.

* ம. வெட்சித்திணைத்துறைகளுள், மறங்கடைகூட்டியகுடிநிலைகூறியதற்கு (தொல். புறத்திணை. சூ. ச - இளம்) மேற்கோள்.

(பி-ம்.)—1 'முரண்டலை களித்தமியருங்', 'மூளைததலை, கழிதமீருங்' 2 'தெய்திய' 3 'இவற்கீதென்னுதறகுமனறிசினே' 4 'பூக்கோளினறிறையும்'

(உ௯0.) [1] இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போ
ரினக்களிற் றியானை [2] யியறேர்க் குருசி
னுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
யெடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்ச
௫ னடுத்தெறி [3] குறட்டி னின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனு
[4] முறைப்புழி யோலை போல
[5] மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.*

---

க. "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" என்னுஞ் சூத்திரவுரையில் இவ்வடியை மேற்கோளாகக் காட்டி, இவனென்பது முன்னிலையும் படர்க்கையு மென்றுணர்க என்பர் **நச்சினார்க்கினியர்; தொல்.** எச்ச. சூ. ௪௯.

உ. களிற்றியானை - ஆண்யானை. இயல்தேர் - செல்லுகின்றதேர். குருசில், விளி.

௩. நுந்தை தந்தைக்கு - நின் பாட்டனுக்கு.

௪. எடுத்தெறிஞாட்பு - படைக்கலங்களை எடுத்தெறியும் போரில். இமையான்-கண்ணிமையானாய்; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்கணவர்க்கு" (குறள், ௭௭௫) என்பது இங்கே அறியத்தக்கது.

௫. குறட்டின் - உருளையின்குடம்போல; **புறநா.** உ௮௩: ௮.

௬. மறப்புகழ்-வீரத்தால்வரும் கீர்த்தி; "மறம்வீங்குபல்புகழ்" **பதிற்.** ௧௨.

௭. உறைப்புழி ஓலைபோல - மழைபெய்யுமிடத்து அம்மழைத்துளிகள் மேலே வீழாதபடி காக்கும் குடையைப்போல; ஓலை - தாழை, தென்னை, பனை இவற்றின் மடல்; குடைக்கு ஆகுபெயர். 'உழி' என்பது இடப்பொருளுருபாய் வருதற்கு இவ்வடி மேற்கோள்; **நன்-மயிலை.** சூ. ௩0௧; **நன்-வி.** சூ. ௩0௨.

௬ - ௮. இவன் மறைக்குவன் - வேல் உன்மீது படாதபடி தடுத்தற்கு முயலுவான்; இதனை, "இலக்கு வற்குமுன் வீடணன் புகுமிரு வரையும், விலக்கி யங்கதன் மேற்செலு மவனையும் விலக்கிக்,கலக்கும் வானரக் காவல னது மன்முன் கடுக, வலக்க ணன்னதை யின்னதென் றுரைசெய லாமே" (**கம்ப.** வேலேற்று. ௩௧) என்பதனாலுமுணர்க.

௭ - ௮. குடும்பத்தைக் குற்றமறைப்பா னென்னுமிடத்துத் தன்குடியைத் துன்பமுறாமற் காக்கமுயல் வானென்று பொருள்கூறி "உறைப்புழி.....வேலே" என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று என்பர் **பரிமேலழகர்; குறள்,** ௧0௨௯.

* ஒ. "முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வ, ரெந்தைக்குத் தந்தை யிவனெனக்கு - வந்த, குடியொடு கோடா மரபினோற் கின்னும், வடியுறு தீந்தேறல்

(பி - ம்.)—1 'எற்கீத்து' 2 'இயற்றேர்' 3 'குடடினிதுனறுமாநதனனே' 4 'உறைப்பெயலோலை' 5 'மறைவல...,காந்தை'

திணை - காஞ்சி ; துறை - குடிநிலையுரைத்தல்.
ஔவையார். (உசுo)

வாக்கு" (பு - வெ. சு: சுசு) என்பதை இச்செய்யுள் நினைப்பிக்கின்றது. இது, தார்நிலையின்பாற் படுமென்பர்; தொல். புறத்திணை. சூ. கஎ - ந.

---

(உசுக.) சிறாஅஅர் [1] துடியர் பாடுவன் மகாஅஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
[2] யிரும்புட் பூச லோம்புமின் யானும்
[3] விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவெ
ரு [4] னென்போற் பெருவிதுப் புறுக வேந்தே
கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை

---

க. சிறாஅஅர் - சிறுவர்களே. துடியர் - துடிப்பறைகொட்டுபவர்களே. பாடுவல் மகாஅஅர் - பாடுதலில்வல்ல பாண்மக்களே ; இவ்வடி, ரகாரவீற்று அளபெடைப்பெயர் மாத்திரைமிக்கு இயல்பாய் விளியேற்றற்கு மேற்கோள் ; தொல். விளி. சூ. உச - ந.

உ. தூ வெள் அறுவை - மிகவும் வெள்ளிய ஆடை (புறநா. உஎசு: அ; உஅசு: ரு) ; மாயோற்குறுகி - கரியநிறத்தையுடையோனை நெருங்கி.

ந. இரும்புட்பூசல் - பறவைகளின் ஆரவாரத்தை ; பறவைகளைப்போலப் பெருமுழக்கஞ்செய்தல், அவனுற்ற பெரும் புண்ணைக்குறித்து அழுதலைச்செய்த லெனினுமாம். ஓம்புமின் - பரிகரியுமின்.

ச. விளரி - இரங்கற்பண். கொட்பு - சுழற்சி. கடிகுவென் - விலக்கு வேன். இரங்கற்பண்ணைப் பருந்தின் சுழற்சிபோல வட்டமிட்டுப் பாடுதலால், அங்கேவரும் நரிகளை ஓட்டுவேன்; இந்த இசையொலியைக் கேட்டு நரிகள் ஓடு மென்றபடி.

ரு. அரசன் என்னைப்போலப் பெரிய நடுக்கத்தையடைவானாக; புறநா. உருரு: ந; நற். உசுஅ: ரு - சு.

சு. கொன்னுஞ்சாதல் வெய்யோற்கு - ஒருபயனின்றியும் போரிற்சாத லில் விருப்பமுள்ளவனுக்கு ; "மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது" (முல்லை. சுஎ), "புட்பகைக், கேவானாகலிற் சாவேம் யாமென", "பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை, வண்பொரு தெண்கண் கேட்பி, னதுபோ

(பி - ம்.)—1 'துடியபாடு' 2 'இரும்புபூட்பூசல்', 'இரும்பூட்பூசல்' 3 'விளரிக் கோடின வெண்ணரிகடிவென்' 4 'எம்போல்'

மணிமருண் மாலை சூட்டி யவன்றலை
யொருகாழ் மாலை தான்மலைந் தனனே.*

திணை - அது ; துறை - வேத்தியல்.

நெடுங்கழத்துப்பரணர். (உ௯௧)

ரென்னு மென்னையு முளனே" (புறநா. ௯அ, அ௯) என்பவற்றால் வீரர்க்குப் போர்விருப்பமும் போரிற் சாதலில் விருப்பமுமுண்மை அறியலாகும்.

எ. மணிமருண்மாலை - பலவகை மணிகள்விரவிய பலவடமுள்ளமாலையை அவ்வீரனுக்குச் சூட்டி ; மருளுதல் - கலத்தல்.

அ. ஒருகாழ் - ஒற்றைவடம். மலைந்தனன் - சூடினான்.

* ம. 'கொடுத்தலெய்தியகொடைமை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௫. அ - ந.

---

(உ௯உ.) 1 வேந்தற் கேந்திய தீந்தண் ணறவம்
யாந்தனக் குறுமுறை வளாவ விலக்கி
வாய் 2 வாள் பற்றி நின்றனெ னென்று
சினவ லோம்புமின் சிறுபுல் லாள
௫ ரீண்டே போல வேண்டுவ னாயி
னென்முறை வருக வென்னான் கம்மென

க. தீந்தண் ணறவம் - இனிய குளிர்ந்த நறு நாற்றத்தையுடைய மதுவை; "தண்கமழ் தேறல்" புறநா. ௫௬: ௧அ.

உ. உறுமுறைவளாவ - உற்ற முறையாற் கலந்துகொடுக்க.

௩. வாய்வாள் - தப்பாதவாள்.

௧ - ௩. "ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி, வாளொடு வைகுவேன் யானாக-நாளும், கழிமகிழ் வென்றிக் கழல வெய்யோ யீயப், பிழிமகிழ் மூண்பார் பிறர்" (பு - வெ. உ: ௧௧) என்பது இவ்வடிகளின்பொருளை ஒருவாறு தழுவியது.

௪. சினவல ஓம்புமின - கோபித்தலை ஒழிமின். சிறுபுல்லாளர், விளி.

௫. இவ்விடத்திற்செய்ததுபோலப் போர்செய்யவேண்டுவனாயின்.

௬. என் முறைவருக என்னான் - யான் போர்செய்ய வேண்டிய முறை வருகவென்று நினையானாகி ; போரில் முறையுண்டென்பதை, "விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற், கரும்பூணற வெறிந்தாங்கவ னினைதாழினி யெனவே, யெரிந்தாரயி லிடைபோழ்ந்தமை யுணராதவ னின்றான், சொரிந்தார்மல ரமங்கையர் தொழுதார்விசும் படைந்தான்" (சீவக. உஉ௬௫), "உணராநெடி துயிராவுரை யுதவாவெரி யுமிழா, வினையாருமி லவனோர்வா ளெய்தாவலி செய்தா, யணையாயினி யெனதாழென வடரா

(பி - ம்.)—1 'வேந்தர்க்கு' 2 'வாளமற்றிநின்றனன்'

வெழுதரு பெரும்படை விலக்கி
யாண்டு நிற்கு மாண்டகை யன்னே.

**திணை - வஞ்சி ; துறை-பெருஞ்சோற்றுநிலை.**

**விரிச்சியூர் நன்னாகனார்.** (உகூஉ)

---

வெளி படராப், பணையார்புய முடையானிடை சிலவிம்மொழி பகர்ந்தான்'' (**கம்ப. முதற்போர். கஅ0**) என்பவற்றானுணர்க. கம்மென - விரைய; தேய வழக்கென்பர்; அகநா. கக - உரையாசிரியர்.

---

(உகூங.) 1 சிறப்படைக் கோல்கா யானை மேலோன்
2 குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயி
3 னெம்மினும் பேரெழி லிழந்து 4 வினையெனப்
ரு பிறர்மனை 5 புகுவள் கொல்லோ
6 வளிய டானே பூவிலைப் பெண்டே.

**திணை - காஞ்சி ; துறை - பூக்கோட்காஞ்சி.**

**7 நொச்சிநியமங்கிழார்.** (உகூங)

---

க. குத்துக்கோலைக்காய்தலையுடைய யானைமேலுள்ளான் ; வள்ளுவன்.

உ. குறும்பர்க்கு - புரமதிலைச்சூழ்ந்த சிற்றரசரோடு போர்செய்தற் பொருட்டு. ஏவற்றண்ணுமை - காஞ்சிப்பூக்கொள்ளுகைக்கு வீரரை ஏவுதலைச் செய்யுந்தண்ணுமைப்பறை; **புறநா.** உஅகூ: கூ - க0.

ங. போர்ப்பறைகேட்டவுடன் புறப்படாமற் பூக்கோட்பறைஅறையப் படுங்காறும் தாமதித்துநிற்பவர்கள், 'நாணுடைந்தமாக்கள்' என்றிகழ்ந்து கூறப்பட்டனர் ; "நாணுத்தக வுடைத்து", "நாண்முறைதபுத்தீர்" (**புறநா.** ருகூ, உகூச) என்பர்; "பல்லாக் கொண்டா ரொல்லா ரென்னும், பூசல் கேட்டுக் கையது மாற்றி" (**பன்னிருபடலம்**), "நிரைகோட் கேட்டுச் செய்தொழி லொழிய" (பு-வெ. உ: உ), "முரசெருக்கலு முண்டியையிடை நீத்துமொய் குழன் மாதரின், விரசியாட லிடைக்கணித்தும் விநோதநீத்து நடத்தொடு, பரசு பாடல்கணித்தும்வெய்துபல் வீரரும்படை நான்கொடு, மரசவீதியில் வந்துதொக்கன ராழிபோலொலி மிக்கதே" (**விநாயக. பிந்தியமயூரேசர். சயரு**) என்பவற்றாற் போர்ப்பறை முதலியவற்றைக் கேட்டவுடன் வீரர் போருக்குப்புறப்பட்டமை அறியலாகும்.

சு. அளியள் - இரங்கத்தக்காள்.

(பி-ம்.)—1 'சிறப்புடைகலனைமேலோனதுவமபறகெறியும்' 2 'குறும்பற் கெறியுமோவற்','குறும்பரவெறியும்' 3 'எம்மிநும்' 4 'விலையெனப்' 5 'புகுவர்' 6'ஒளியடானே' 7 'நொசசிநீயககிழார்'

(௨௬௪.) வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
[1] கண்கூ டிறுத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை [2] தழீஇய கூற்றுவினை யாடவர்
தமர்பிற [3] ரறியா வமர்மயங் கழுவத்
௫ திறையும் பெயரும் [4] தோற்றி நுமருள்
ணாண்முறை [5] தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் [6] தொருசிறை நிற்ப யாவரு
மரவுமிழ் மணியிற் குறுகார்
[7] நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே.*

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

[8] பெருந்தலைச்சாத்தனார். (௨௬௪)

---

க. குடையாகிய பூரணசந்திரன் மேலிடத்து ஒளிவீச.

௨. கண்கூடிறுத்த - சேர்ந்து தங்கின. கடன் மருள் பாசறை - கடலை யொத்தபடைவீடு; கண்டோர் கடலென்று மயங்கத்தக்க போர்க்களமுமாம்; "கடலென வானீர்க் கூக்குந் தானை", "கடல் கிளர்ந்தன்ன கட்டூர் நாப்பண்" (புறநா. ௬௭, ௨௯௫); "படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" (முல்லை. ௨௮.) மருள், உவமவுருபு.

௩. குமரிப்படை-அழியாப்படை; புதியபடையுமாம். கூற்றுவினையாடவர்-யமனைப்போலக் கொல்லுதற்றொழிலைச்செய்கின்ற வீரர்; கூற்று - உடலையும் உயிரையும் வேறுவேறாகப் பிரித்துக் கூறுபடுத்துங் கடவுள்.

௪. தம்மவரென்றும் அயலாரென்றும் அறியாத போர் மயங்கிய களப் பரப்பில் ; தமர்பிறரறியாமை படைமட மெனப்படும்.

௫. இறையும் பெயரும் தோற்றி - நம்முடைய தலைவன் பெயர் இன்ன தென்பதையும் நம்பெயர் இன்னதென்பதையும் தோன்றச்செய்து, பெயர் - புகழுமாம். நுமருள் - உங்களுள்.

௬. நாண் - நாணம் ; நாள் - வாழ்நாளுமாம்.

௫ - ௬. 'இறையும்...... ஈங்கு' என்றது ஒருவீரன் கூற்று.

௭. போர்த்தொழிலைமேற்கொண்டு ஒருபக்கத்தே நிற்ப.

௮. பாம்பு மணியை உமிழ்ந்து மேயச்சென்று அதனையே நினைத்திருக்கு மென்பதும் அதனை அணுகுபவர்களைத் துன்புறுத்துமென்பதும் ஈண்டுஅறியற் பாலன; "கொங்தொளி மாமணி யிட்டுப்போதுங் கோளரவிற்கருத் திட்டுப்போந் தார்" தணிகை. விடையருள். ௭.

* பு. தும்பைத் திணைத்துறைகளுள் 'தானைநிலை' என்பதற்கு இது மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௪ - இளம்; ஷை ஷை ஷை ௧௭ - ந.) இப்பாட்டு, மறக்குடிமகளொருத்தியை நோக்கி ஒருவர் கூறியது.

(பி - ம்.)—1 'கண்கூடியத்த' 2 'தழீஇக்கூற்று' 3 'அறியாதமர்' 4 'தோற்றிநுமருணன்' 5 'தவத்தீர்' 6 'ஒருதிறநிற்ப' 7 'நிரைகாழ்மாலை யெங்கேள்வனை' 8 'பெருத்தலைச்சாத்தனார்'

(உகூரு.) கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேறலைப் [1] பெயரித்
[2] தோலிகைத் தெழுதரூஉத் துரந்தெறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து [3] வாய்ப்பட விலங்கி
ரு யிடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
[4] வாடுமுலை யூறிச் சுரந்தன
வோடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - அது ; துறை - உவகைக்கலுழ்ச்சி.

ஔவையார். (உகூரு)

---

க. புறநா. உகூச: உ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

உ. வெந்து - மனம்புழுங்கி. வாய்மடித்து: புறநா. உகூஅ: ரு. பெயரி - பெயர்த்து; அசைத்து.

ங. தோடு - சேனையின் தொகுதியை. உகைத்து-செலுத்தி. எழுதரூஉ - எழுந்து. ஞாட்பின் - போரில்.

ச. முன்வருகின்ற படையைப்பிளந்து இடமுண்டாகவிலக்கி ; புறநா. உகூகூ: ங.

ரு. அழுவம் - பரப்பு. "சிதைந்து வேறாகிய" புறநா. உஎஅ : எ.

சு. சிறப்புடைமை - மறக்குடிக்கேயுரியவிசேடகுணம் ; " பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்" குறள், கூஎஉ.

எ. வாடுமுலை: புறநா. உஎசு: உ. ஊறுதல், பாலின்றெழில்.

சு - எ. புறநா. உஎஎ: ங - ச.

அ. பூட்கை - மேற்கோள் ; ஓடாப்பூட்கை: "ஓடாப்பூட்கை யுறந்தை" சிறுபாண். அங.

ரு - அ. "செங்களந் துழவுவோள் சிதைந்துவேறாகிய, படுமகன் கிடக்கை காணூஉ, வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" புறநா. உஎஅ: ௭ - கூ.

(பி - ம்.)—1 'பெயரதொழுகைத் தெழுதரு நடுதூரந்தேற்', 'பெயரித் தோறுவைத் தெழுதருந' 2 'தோறுடைத்து,' 'தோறணித்து' 3 'வாய்ப்படை' 4 'மாடு'

---

(உகூசு.) வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவு
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவு

---

க. சினை - தழையையுடைய கிளையை. காஞ்சி - காஞ்சிப்பண் ; புறநா உஅக: ரு.

உ. ஐயவி - வெண் சிறுகடுகு; "ஐயவி புகைப்பவுந் தாங்காது" புறநா. கூஅ: கரு.

க - உ. புண்பட்டோரைப் பேய்கள் அணுகாதிருத்தற் பொருட்டு வேப்

மெல்லா மனையுங் [1] கல்லென் றனவே
வெந்துடன் றெறிவான் [2] கொல்லோ
ரு நெடிதுவந் [3] தன்றா னின்ற தேரே.*

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை.
வெள்ளைமாளர். (உகூசு)

---

பந்தழையை வீட்டின் முன் இறப்பிற் செருகுதலும் காஞ்சிப் பண்ணைப்பாடுதலும் ஐயவியைப் புகைத்தலும் மரபு; புறநா. கூஅ: கரு; உஅக: க - சு.

ரு. நெடிது - நெடுநேரம்.

* போர்க்குச் சென்ற ஏனைவீரர் தம்மிடத்தை அடைந்தும் ஒருவீரன் வாராமலிருக்க அவன்தேர்மட்டும் தாமதித்து வந்ததைக்கண்ட அவன்தாய் கூறியது; கண்டோர் கூறியதுமாம்.

(பி - ம்.)—1 'கல்லென் றவ்வே' 2 'கொல்லென' 3 'அன்றுநெடுந்'

---

(உகூஎ.) பெருநீர் மேவற் றண்ணடை யெருமை
யிருமருப் புறழு [1] நெடுமா னெற்றின்
பைம்பய றுதிர்த்த கோதின் [2] கோலணைக்
கன்றுடை மரையாத் துஞ்சுஞ் சீறூர்க்
ரு கோளிவண் வேண்டேம் புரவே [3] நாரரி
நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்

---

க. மிக்க நீர் பொருந்துதலையுடைய மருதநிலத்தூரிலுள்ள எருமையின்.

உ. இருமை - கருமை. மருப்பு - கொம்பு. நெற்றின் - நெற்றினுடைய.

ங. கோது - சக்கை. கோலணை - வளைந்த படுக்கையில்.

க - ங. பயற்றின் நெற்றினுக்கு எருமைக்கொம்பு உவமை.

ச. மரையா - ஒருவகைவிலங்கு; "பெற்றமு மெருமையு மரையு மாவே" (தொல். மரபு. சூ. சுO) என்பதனால், 'மரையா' என்றார்; "மரையா மரல் கவர" (கலி. சு.) துஞ்சுதல் - கிடத்தல்.

ரு. கோள் - கொள்ளுதலை. புரவு - இறையிலிநிலம்; (புறநா. உசுO: கூ) நார் - பன்னாடை.

ச - ரு. சிறியவூரைப் புரவாகக்கொள்ளுதலை இப்பொழுது விரும்பேம்.

சு. நறவின் வாழ்த்தி - கள்ளை வாழ்த்தி; புறநா. ஙகசு: க.

ரு - சு. நாரால்வடிக்கப்பட்டதும் பூவாலாக்கியதும் விளைந்ததும் சாடியிலுள்ளதுமாகிய மது; "நார்பிழிக்கொண்ட வெங்கட்டேறல்" (புறநா. கஎO: க - உ) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும், "நாரரி சிறுகலத் துகுப்பவும்" (ஷை உஙஉ: ங-ச), "நனைக்கள்ளின் மனைக்கோசர், தீந்தேறனறவு மகிழ்ந்து"

(பி - ம்.)—1 'நெடுமாநெற்றின்' 2 'கோலணைகுன்றுடை....துஞ்சூர்க் கோளி' 3 'நாரிநிறைமுதிராடிநறவின'

1 துறைநனி கெழீஇக் கம்பு ளீனுந்
தண்ணடை பெறுதலு முரித்தே 2வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
கo மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.*

திணை - வெட்சி ; துறை - உண்டாட்டு.

........................................ (உகஎ)

---

(ஷை நகசு: எ - அ), "தாம்பகம் பழுநிய தீம்பிழி" (பதிற். அக), "நெடுங்க ணுடைமைப் பழுநியகடுந்திறம், பாப்புக்கடுப்பன்ன தோப்பி" (அகநா. நசஅ), "அம்பணைவிளைந்த தேக்கட்டேறல்" (ஷைநசுஅ), "நீடமைவிளைந்த தேக்கட்டே றல்"(புறநா. ககரு), "வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த, வெங்கீரரியல் விரலலை நறும்பிழி" (பெரும்பாண். உஅo - அக), "தேம்பிழி தேறன் மாந்தி" (குறிஞ்சி. கருரு), "வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்", "திருந்தமை விளைந்த தேக்கட்டேறல்" (மலைபடு. கஎக,ருஉஉ) என்பனவற்றையும் பார்க்க.

எ. கம்புள் - நீர்வாழ்பறவையுள் ஒருசாதி ; "கதிர்த்ததண் பூணிக கம் புடாழ் பீலிக் கனைகுரனுரைவண்டான, மெதிர்த்ததண்புனல்சூழின்னதிக்கரை" (சீவக. உகoஅ) 'என்பதனுரையில், 'கம்புளென்பது இறந்தகால வழக்கு' என்பர் நச்சினார்க்கினியர்.

அ. தண்ணடை - மருதநிலத்தூர் ; நாடுமாம் ; புறநா. உஅஎ: கo.

கo. தன்வடிவு முழுதும் கருக்குமட்டைகளையுடைய வலியபனை, தம்மார் பில் வேல்கள் ஊடுருவி நிற்பத்தோன்றும் வீரர்க்கு உவமை; நிற்குமோர் - நிற்போர்.

சு - கo. ஒரு வீரனுடம்பில் வேல்கள் மொய்த்து நின்றதற்கு மேற் கோள் ; தொல். புறத்திணை. சூ. கசு - ந.

* ம். "பெருநீர்......நிற்குமோர்க்கே: மடல்வன் போந்தைபோல் நிற்ப லெனை நெடுமொழி தன்னொடு புணர்த்தவாறுகாண்க ; சீறூர் புரவாகக்கொள் ளேன் ; தண்ணடை கொள்வேனெனத் தன்னுறு தொழில் கூறினன்" தொல். புறத்திணை. சூ. ரு - ந.

(பி - ம்.)—1 'துறைநனிக்கொந்தண்' 2 'வைந்நுனை'

---

(உகஅ.) எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்று
மின்னன் மன்ற வேந்தே யினியே

---

க - உ. கலங்கியகள்ளை எமக்கே கொடுப்பான்; தான் தெளிந்த கள்ளை யுண்பான் முன்பு ; என்றது, தலைவன் எம்மை மேலாகமதித்து முன்பு இனி யது செய்வானென்றபடி. 'எமக்கு' என்பது தன் போல்வாரையும் உளப்படுத்தி நின்றது. மன், கழிவுப்பொருளது.

ந. வேந்து இனி இன்னன் - வேந்தன் இப்பொழுது இன்னதவனுயினன்; அதனைப் பின் கூறுவார்.

நோரா ராரெயின் முற்றி
ரு வாய்மடித் [1] துரறிநீ முந்தென் ஞனே.

திணை - கரந்தை ; துறை - நெடுமொழி.

[2] ஆலியார். (உகஅ)

---

ரு. வாய்மடித்து: புறநா. உகரு: உ.

ச - ரு. பகைவருடைய மதிலைச்சூழ்ந்து இதழைக் கவ்வி முழங்கிக் கொண்டு நீ முற்படுக வென்னுனாகித் தான்முற்படுவான் ; ஆதலால், இன்னு னென்க.

(பி - ம்.)—1 'உரறியநீமுந்தெனவே' 2 'ஆனியார்', ''ஆவியார்'

---

(உகக.) பருத்தி வேலிச் சீறூர் மன்ன
[1] னுழுத்தத ருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி [2] யருந்திய கொய்சுவ லெருத்திற்
ரு [3] றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
யணங்குடை முருகன் கோட்டத்துக்

---

க. பருத்திவேலி: புறநா. ருஉச: எ ; "பன்னல் வேலிப் பணைநல் லூரே" ஷை ருசரு: உ0.

உ. உழுத்ததர் - உழுந்தின்சக்கை ; உழுத்தரென்ற பாடத்திற்கு உழுந் தென்று பொருள்கொள்க.

ரு. தோணியின் - தோணியைப்போல ; போழ - பிளந்துசெல்ல; "மான் மேல்......கரைபொரு முந்நீர்த் திமிலிற் போழ்ந்து," "வரு படை போழ்ந்து" புறநா. ரு0ரு : உ - எ; உகரு: ச.

(உ) புரவி (ரு) போழ.

ச. நெய்ம்மிதி - நெய்யைவார்த்து மிதித்த உணவை; "நெய்ம்மிதி கவ ளம்" (பெரும்பாண். ருகச); குதிரை நெய்ம் மிதியருந்தல் : " கொய்ம்மயி ரெருத்தம் பிணர்படப் பெருகி, நெய்ம்மிதி முனைஇய கொழுஞ்சோற் றார்கை... வாமான்" (அகநா. ச00); "கொய்சுவற்புரவி" (அகநா. கருச; சீவக. ரு0சக.) எருத்து - புறக்கழுத்து.

ரு. தார் - கிண்கிணிமாலை.

சு. அணங்குடைமுருகன் - வருத்துதலையுடையமுருகன்; "செவ்வேள்... ...மராத்தண்சாயை நின் றணங்கும் தையனீ நிற்க சாரலிலே" (தஞ்சை.கருஉ.) கோட்டம் - கோயில்; முருகன்கோட்டம் - குமரகோட்டம்.

(பி - ம்.)—1 'உழுத்தருண்ட', 'உழுத்ததழுண்ட வொயநடை' 2 'அரு த்தகொய்', 'அருந்தக்கொய்' 3 'தண்டைமன்னர்தாருடைக் கலிமான்'

1 கலங்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே.*

திணை - நொச்சி; துறை - குதிரைமறம்.

பொன்முடியார். (உகக)

---

எ. கலங்தொடாமகளிர் - பாண்டங்களைத்தொடுதற்குரிய தூய்மையில்லா தமகளிர்.

(ரு) புரவிகள் (எ) நின்ற.

* மு. 'குதிரைநிலை' என்பர்; தொல். புறத்திணை. சூ. கஎ - ந.

(பி - ம்.)—1 'கலங்கொடா...நின்றனவே'

---

(௩௦௦.) தோருு தோருு வென்றி தோலொடு
1 துறுகன் மறையினு முய்குவை போலாய்
நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி
2 யகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
ரு பேரூ ரட்ட கள்ளிற்
3 கோரிற் கோயிற் றேருமா னின்னே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

அரிசில்கிழார். (௩௦௦)

---

க. தோல் தா தோல் தா என்றி - கேடகத்தைக் கொடு, கேடகத்தைக் கொடு என்கின்றாய்.

உ. துறுகல் - குண்டுக்கல் (ஐங்குறு. உ௩௦, உ௩௩); துறுகல்லிலே உன்னை மறைத்துக் கொள்வாயாயினும் பிழைப்பாய் ; 'கு' என்பது சாரியை யாக வந்ததற்கு 'உய்குவை போலாய்' என்பது மேற்கோள் ; நன் - மயிலை. சூ. உச௩ ; நன் - வி. சூ. உசச.

௩. நெருநலெல்லை - நேற்றைப்பகலில் ; "நெருந லெல்லை யேனற் றோன்றி" அகநா. ௩உ.

௩ - ச. நேற்றுப்பகலில் நின்னாலே எறியப்பட்டவனுடைய தம்பி, அகலி னிடத்துப் பெய்த குன்றிமணியைப்போலக் கோபத்தாற்சுழலும் கண்களை யுடையவனாகி ; "வென்றிக்கணத்தை விடுத்தானகன் மீதுபெய்த, குன்றிக் கணம்போற் சுழல்கண் ணழல் கொப்புளிப்பச், சென்று" (திருவிளை. ரு: ௩௦.) குடிகோள்பற்றி வந்தவெகுளிக்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. க௦-பேர்.

சு. ஓரிற்கோயில்...னின்னே - ஒருவீட்டினுள்ளே கட்கோயைத்தேடுவது போல நின்னைத்தேடுகின்றான் ; கோய் - கள்முகக்கும் பாத்திரம்; "கோய்வா யிற் கீழுயிர்க்கீதுற்றுக் குரைத்தெழுந்த, நாய்வாயுணல்லதசை" சிறுபஞ்ச. கஎ.

ரு - சு. தொல். உவம. சூ. ௩எ - பேர். மேற்.

(பி - ம்.)—1 'துறுகண்மறை' 2 'கற்பெய்' 3 'போறரிற் கோரிற்றேரு' 'ஓரிற்கோரிற்'

(கூ0க) பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
வமரி னிட்ட வருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே
ரு முரசுமுழங்கு [1] தானைநு மரசு மோம்புமி
னொளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமி
னெனை [2] நாட் டங்குநும் போரே [3]யனைநா
ளெறியா ரெறிதல் யாவண தெறிந்தோ
ரெதிர்சென் றெறிதலுஞ் [4] செல்லா னதனா
க0 [5]லறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்த லோம்புமி னுதுக்கா
ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி

---

க. சான்றோர் - போர்வீரர்; "தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்" (புறநா. கூகூ) என்பதும், "சான்றோர் மெய்ம்மறை" (பதிற். கச: கஉ) என்னுமிடத்து 'ஈண்டுச் சான்றோரென்பது போரில் அமைதியையுடையவீரரை' என்னுமதன் உரையும் அறிதற்பாலன.

உ - ங. மணஞ்செய்யப்பெறாத கன்னியரின் கூந்தல் ஓராடவராலும் தீண்ட வொண்ணாமையால், பகைவரால் நீண்டமுடியாத முள்வேலிக்கு அஃது உவமை கூறப்பெற்றது.

ச. கல்லென்பாசறை - கல்லென்னும் ஓசைபட ஒலிக்கின்ற படைவீடு.

ரு. "முரசுமுழங்குதானை...மூவர்" புறநா. நரு: ங - ச ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

சு. "ஒளிறேந்து மருப்பிற் களிறு" புறநா. நகரு: க0; நற். உஅச: கூ.

எ. எனைநாள் - எத்தனைநாள்.

அ - கூ. தன்னை எறியாதாரை எறிவதென்பது எங்குள்ளது? எதிர்ந்தோரையும் எதிர்த்து எறிதல் செய்யானாகச்செய்தே எறியாரை இவனெறிதல் யாண்டுளது? இல்லை யென்றபடி.

க0. அவன் கருதிய காரியத்தை அறிந்தவர் யாவர்?

கக. பலம் - பலராகவுள்ளேம்; புறநா. எக: ரு - சு; 'வீரரல்லாதார் பலர்திரண்டுஆர்த்தால் அதற்கு வீரனஞ்சான்' (குறள், எசுங - பரிமேல்) என்பதும், "மறுமனத்தனல்லாதமாநலத்த வேந்த, னுறுமனத்தனாகி யொழுகிற் - செறுமனத்தார், பாயிரங் கூறிப் படைதொகா லென்செய்ப, வாயிரங் காக்கைக்கோர் கல்" (பழ. ககரு) என்பதும், "தடத்திடைக்காக்கையொன்றே யாயிரங் கோடிகூகை, யிடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த தன்றே" (சீவக. ககஉஎ) என்பதும் இவ்வடியின் கருத்தை வலியுறுத்தும்.

(பி - ம்.)—1 'தானையுமரசும்' 2 'நாடாகு' 3 'அனைநாள்' 4 'சொல்லா னதனால்' 5 'அறிந்தோராயவன்'

வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
1 யெல்லிடைப் படர்தந் தோனே கல்லென
கரு வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் 2 போலான்ற னிலங்கிலை வேலே.*

திணையும் துறையும் அவை.
ஆவூர்மூலங்கிழார். (ஙoக)

கங. பரி - நடை; "வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி" புறநா. ஙoச: ங.

கச. எல் - இரவு. கரு. ஏந்துவன் போலான் - ஏந்தான்.

கரு - சு. யானைப்போர்க்குவேல் உரித்தென்பர்; "மேல்வருங் களிற்றொடு வேறூந்து", "வேலினட்ட களிறு", "கறையடி யானைக் கல்ல,துறைகழிப்பறியா வேலோ னூரே" (புறநா. உஎச, ஙoஉ, ஙஉங); "ஒன்றாயினும் பலவாயினு மோரோச்சினு ளொறிய, வென்றாயின மதவேழமு முளவோவென வினவிப், பொன்றாழ்வரைப் புலிப்போத்தெனப் புனைதாரமிருதி ரார்ப்பச், சென்றானிகல் களிறாயிர மிரியச்சின வேலோன்" சீவக. உஉசுஉ.

கங - சு. "காரிமேலோன், றொட்டது கழலே கையது வேலே, சுட்டிய துவுங்களிறே......யானை காமினவன் பிறிதெறி யலனே." இச்செய்யுள் புறத்திரட்டிற் கண்டது.

* ம. பொருளின்றியுய்த்தபேராண்பக்கத்தின்பாற்படுமென்பர்; தொல். புறத்திணை. சூ. அ - ந.

(பி - ம்.)—1 'எல்லிடைப்ப டாதநதோனே' 2 'போலானினங்கிலை'

---

(ஙoஉ.) வெடிவேய் கொள்வது போல வோடித்
1 தாவு புகளு மாவே பூவே
விளங்கிழை மகளிர் கூந்தற கொண்ட
நரந்தப் பல்காழ்க் கோதை 2 சுற்றிய

க. வெடிகொள்ளல் - மேல் எழுதல்.

உ. தாவுபு - தாவி. உகளும் - துள்ளும். மா - குதிரை. பூ-பொற்பூக்கள்.

க - உ. வளைத்துவிட்டமூங்கில் மேலே விரைந்தெழுதல், குதிரை ஓடித் தாவிச்செல்லற்கு உவமம்; "விட்ட குதிரை விசைப்பி னன்ன, விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்" குறுந். எச.

ங. மகளிர் - இங்கே விறலியர்.

உ - ங. பூக்கள் கூந்தலிற் கொள்ளப்பட்டவை.

ச. நரந்தம் - நாரத்தை மலர்; குறிஞ்சி. சுச. காழ் - கோவை வடம்.

(பி - ம்)—1 'தாவவுகளும்' 2 'சுற்றியைதமை'

௫ வைதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
1 கைவார் நரம்பின் பாணர்க் கோக்கிய
நிரம்பா வியல்பிற் கரம்பைச் சீறூர்
நோக்கினர்ச் செகுக்குங் காளை 2 யூக்கி
3 வேலி னட்ட களிறுபெயர்த் தெண்ணின்
௧௦ விண்ணிவர் விசும்பின் மீனுந்
தண்பெய லுறையு முறையாற் றாவே.

**திணை - அது ; துறை - குதிரைமறம்.**
**4 வெறிபாடிய காமக்கண்ணியார்.** (௩௦௨)

---

௫. ஐது அமை-அழகிதாக அமைந்த. பாணி - தாளம். வணர் - வளைவு. கோடு - மருப்பென்னு முறுப்பு; **புறநா.** ௧௩௫: ௧.

௪-௫. நரந்தமலர்களாலாகிய மாலைசுற்றிய யாழ. யாழின் கோட்டில் மாலையைச்சுற்றுதல் மரபு; "அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய லுலகங், கன்னி மீட்டலும்" **கம்ப.** அகலிகை. ௬.

௬. வார்தல் - எட்டுவகை இசைக்கரணங்களுள் ஒன்று ; அது சுட்டுவிரலாற் செய்யப்படும் ஒருதொழிலென்பர் (**சிலப்.** ௭ : ௧; **அரும்பத**); நரம்புகளைக் கூட்டத்தழுவலென்பர் **நச்சினார்க்கினியர்;** (**பொருந.** ௨௩.) ஓக்கிய - அறுதியாகக் கொடுத்தவை.

(௬) ஓக்கிய (௭) சீறூர்.

௮. கோபித்துப்பார்த்த பகைவர்களைக் கொல்லுகின்ற வீரனை ; "எள்ளுநர்ச் செகுக்குங் காளை" (**புறநா.** ௩௦௩ : ௩.) ஊக்கி - மேற்கொண்டு.

௮ - ௯. **புறநா.** ௩௦௮: ௧௦ - ௧௧; "ஒளோய பெண்டி ரெரிமூழ்கக் கண்டு தன், றளையாற் கண்புதைத்தான் றார்வழுதி-யானையெலாம், புல்லார் பிடிபுலம்பத் தாங்கண் புதைத்தவே, பலவாயா பட்ட களத்து" (**முத்.** ௨௮) என்பது இங்கே அறியற்பாலது.

௧௦. விண் - மேகம். இவர்தல் - பரத்தல். மீன் - நட்சத்திரம்.

௧௧. உறை - மழைத்துளி.

௧௦-௧௧. மீன்களும் உறைகளும் உறையிடப்போதா; **புறநா.** ௩௪:௨௦-௨௩-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; "யானைத் தூமருப் பியன்ற வெண்செப்,பாந்தரத் தலர்ந்த பன்மீ னெனைத்துள வனைத்து'மாதோ" **சீவக.** ௩௦௪௪.

(பி - ம்.)—1 'கைகவர்நரம்பின்' 2 'ஊக்கு' 3 'வேலினிட்ட' 4 'வெறிபாபாடிய காமக்கணியார்'

(௩0௩.) நிலம்பிறக் கிடுவது 1 போற்குளம்பு கடையூஉ
வுள்ள மொழிக்கும் 2 கொட்பின் மான்மே
லெள்ளுநர்ச் செகுக்குங் காளை கூர்த்த
3 வெந்திற லெஃகந் நெஞ்சவடு விளைப்ப
௫ 4 வாட்டிக் காணிய வருமே நெருநை
யுரைசால் சிறப்பின் 5 வேந்தர் முன்னர்க்
6 கரைபொரு முந்நீர்த் 7 திமிலிற போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
௰ விலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.*

திணையும் துறையும் அவை.

எருமைவெளியனார். (௩0௩)

க. பிறக்கு - பின். கடையூஉ - செலுத்தி; "நிலம்பிறக் கிடுவ போலுங் கொய்சுவற் புரவி" சீவக. ௩௰சக.

உ. மனத்தின் விசையையும் ஒப்பன்றென்று நீக்குகின்ற கதிவிசேடத்தை யுடைய குதிரையின் மேல்; "உள்ளம்போல வுற்றுழி யுதவும் புள்ளியற் கலிமா வுடைமையான" (தொல். கற்பு.சூ.௫௩); "மானுரு வாகநின் மனம்பூட் டினை யோ" (அகநா. ௩௮௪); பகைவருடைய ஊக்கத்தை ஒழித்தற்குக் காரணமான சுழற்சியையுடைய குதிரையென்றலுமாம்.

௩ - ௪. கூர்த்த எஃகமெனக் கூட்டுக; எஃகம் - வேல.

௫. ஆட்டி - அசைத்து; திரிததென்றுமாம். காணியவரும் - காணும் பொருட்டு வருவான். நெருநை - நேற்று.

௬. உரைசால் - புகழமைந்த; "உரைசால் சிறப்பி னரசுவிழை திரு", "உரைசால் சிறப்பின், மன்னவன் மாறன்" சிலப். உ : க ; அ : ௫ - ௬.

எ. திமிலின் - தோணிபோல. போழ்ந்து - படையைப் பிளந்து; புறநா. உகக : ௩.

அ. கயந்தலை - மெல்லியதலை; "கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச், சேறுகொண்டாடிய வேறுபடுவயக்களிறு" (அகநா. கஉக); "கயந்தலை மடப்பிடி" (அகநா. க௬௫, உ0உ; மலைபடு. ௩0எ) 'கய' என்னும் உரிச்சொல் மென்மையை யுணர்த்துதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி.சூ. உ௬-சே.

௯. "இலங்குமருப்பிற்களிறு" மதுரை, கசஉ.

அ-௯. அவ்வரசருடைய பெண்யானைகள் துணையிழப்ப விளங்குகின்ற கொம்பினையுடைய களிற்றியானைகளைக் கொன்ற என்பொருட்டு.

* மு. 'குதிரைநிலை' என்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கச - இளம்; ஷை ஷை ஷை கஎ - ந.

(பி-ம்)—1 'போற்குளங்குடையூ' 2 'கொடைபின்மான' 3 'வெந்தெறல்' 4 'வாழிக்காணிய', 'வாட்டிடக்காணிய' 5 'வேந்தன்', 'வேந்தர்தாமுன்னர்க் கரைபொருமுன்னர்' 6 'கங்கரைபொருமுன்னீர்' 7 'திரையிற'

௫. நெடுமரப்பு

(௩0௪.) கொடுங்குழை மகளிர் கோதை [1] சூட்டி
[2] நடுங்கு [3] பனிக் களைஇயர் நாரரி பருகி
வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை
௫ யெம்முற் றப்பியோன் றம்பியொ டொராங்கு
[4] நாளைச் [5] செய்குவெ னமரெனக் கூறிப்
[6] புன்வயி றருத்தலுஞ் செல்லான் [7] பன்மான்
கடவு மென்ப பெரிதே யதுகேட்டு

---

௧. சூட்டி - சூட்ட.

௨. குளிர்நீங்க வீரபானமாகிய மதுவைக்குடித்து ; மதுவுக்கு வெம்மை செய்தல் இயல்பு ; இதனை, "வெப்புடைய மட்டுண்டு", "வெங்கட்டொலைச்சியும்", "இன்கடுங்கள்ளின்", "வெங்கட்டேறல்" (புறநா. ௨௪: ௫ ; ௨௬: ௧௫ ; ௮0: ௧ ; ௧௭0: ௧௨), "உண்ணமது", "உக்கிரவூறல்" (பெருங். ௧: ௩௮, ௬0 ; ௨: ௨, ௧௮0) என்பனவற்றாலும் அறிக.

௩. காற்றைத் தொழிலொழியச் செய்கின்ற வளவிய செலவையுடைய குதிரை ; என்றது, அதனினும் விரையநடக்கும் குதிரையென்றபடி ; "காலியற்புரவி", "வளிநடந்தன்ன வாச்செலலிவுளி", "வெவ்விசைப் புரவி வீசுவளியாக", "தேர்மா வளிதுளி தலைஇ" (புறநா. ௧௭௮: ௨; ௧௯௭: ௧; ௩௬௯: ௭; ௩௭௩: ௩), "காற்கடுப்பன்னகடுஞ்செலலிவுளி," "வானவழங்கியற்கை வளிபூட்டினையோ, மானுருவாக" (அகநா. ௨௨௪, ௩௮௪); "காலியக் கன்ன கதழ்பரி" மதுரை. ௪௪0.

௪. பண்ணற்கு - சமைத்தற்கு. விரைதி - விரைவாய்.

௫. எம்முன்தப்பியோன் தம்பியொடு - என்தமயனைக் கொன்றவனுடைய தம்பியுடன். ஒராங்கு - ஒருபடியாக; "நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த" பதிற். ௬௧: ௧௬.

௬. நாளை யான் அமர்செய்து அவனைக்கொல்வேன்.

௭. பன்மான் - ஆராய்ந்தகுதிரை.

௮. கடவும் - செலுத்தும். என்ப, அசை.

௭ - ௮. பகையை வென்றபின்பே உண்ணுங்கருத்தினனாதலால் இவ்வாறு கூறினர் ; "காலைமுரச மதிலியம்பக் கண்கனன்று வேலைவிறல் வெய்யோனேக்குதலும் - மாலை, யடுக மடிசிலென் றம்மதிலுள் ளிட்டார், தொடுகழலார் மூழை துடுப்பு" (பு-வெ. ௬: ௨௩) என்பதையும், அம்மதிலுள் இட்டார், இதனை அழித்துஇன்றுபோய் உண்பேமென்று' என்னுமதன்விசேடவுரையையும்பார்க்க.

(பி - ம்.)—1 'சூடி' 2 'நடுங்குமணிகளையார்நாரிபருகி', 'நடுங்குமணிகளையாரநாளரிபருகி' 3 'பனிக்கசாஅய்' 4 'நாடனைச்' 5 'செய்குவமமரெனக்', 'செய்குவனமரெனக்' 6 'புன்மயிருகுத்தலுஞ் செய்யான் வன்மான்', 'புன்மையிற்', 7 'பண்மாண்'

வலம்படு [1] முரசின் வெல்போர் [2] வேந்த
கo னிலங்கிரும் பாசறை நடுங்கின்
றிரண்டா காதவன் கூறிய தெனவே.

திணையும் துறையும் அவை.

அரிசில்கிழார். (௱oச)

கூ. வலம்படுமுரசு - வெற்றியுண்டாதற்குக் காரணமாகிய முரசு; "வலம் படுவியன்பணை" (பதிற். கஎ: ரு) என்பதும், 'போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலேபடநின்ற முரசம்' என்னுமதன் உரையும் ஈண்டு அறியற்பாலன.

கக. கூறியது - சபதம்; வஞ்சினம் கூறுதல் ஒன்றுமொழிதலென்று கூறப்படுதலும், "வைத்தவஞ்சினம் வாய்ப்பவென்று" (பதிற். கூ - பதி) என்பதும் 'இரண்டாகாதவன் கூறியது' என்பது சபதமென்று பொருள்படுதலை வலியுறுத்தும்.

கூ - கக. அவன் கூறியது இரண்டாகாதென்று அரசனது பெரியபாசறை நடுங்கியது.

(பி - ம்.)—1 'முரசிலவெல' 2 'வேநதரிலங்கிரும்'

---

(௱oரு.) வயலைக் கொடியின் வாடிய [1] மருங்கு
லுயவ லூர்திப் பயலைப் பார்ப்பா
னெல்லி வந்து நில்லாது புக்குச்
[2] சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே

க. வயலைக்கொடி - பசலைக்கொடி. மருங்குல் - இடை.

உ. வருந்துதலையுடைய ஊர்ந்து செலலுகின்ற நடையினையுடைய இளம்பருவத்தந்தணன்; "ஓலலெனீர ஞாலத் துணர்வோ விழுமிதே,நல்லிசை முச்செந்தீ நான் மறையோர் - செல்லவம், வெற்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை, யென்றன்றி 'மீண்டிலர்" (பு - வெ. அ: கஅ.) தன்மையென்னு மெய்ப்பாட்டிற்கு இவ்வழி மேற்கோள்; "தன்மையாவது - சாதியியல்பு; பார்ப்பார் அரசர் இடையர் குறவரென்றின்னோர்மாட்டு ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்குமியல்பு" தொல். மெய்ப்பாடு. சூ. கஉ - ளம்.

ங. எல்லி - இரவு. நிலலாதுபுக்கு - வாயில் காவலனாற் சொலலிவிடாதே அரசனிடம் போய்; "அருமறை நாவி னந்தணர்க் காயினும்......அடையா வாயிலவ னருங்கடை குறுகி" சிறுபாண். உoச - ரு.

ச. 'சொல்லிய சொல்லோசில': "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்லல் தேற்றா தவர்" குறள், கூசகூ.

(பி - ம்.)—1 'மருங்கின்', 'மருங்கினுயவமது வேளரசன்' 2 'சொல்லியது சொல்லோ'

ரு யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணி [1] களைந் தனவே.*

திணை - வாகை; துறை - பார்ப்பனவாகை.

மதுரைவேளாசான். (கூ0ரு)

ரு. சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்தேவீழ இடும் மரம் (சிலப். கரு: உகரு - அடியார்.) இஃது ஒருவகைத்தாழ.

சு. மாண்வினையானை - மாட்சிமைப்பட்ட தொழிலையுடையயானை; மாட்சிமையாவது - போரிலே எதிர்த்தாலன்றி மற்றஇடத்து ஒருயிரையும் துன்புறுத்தாமை; "வினைநவில் யானை", "தொழின்னவில் யானை" (பதிற். அஉ, அச.) மணி - யானையின் இருபக்கத்தும் அணியப்படும் மணி; "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்று" இன்னா. கச.

* ம. அந்தணன்தூது சென்றதற்கும் (தொல். அகத்திணை. சூ. உஅ - இளம்; டை டை டை உசு-ந; நம்பி. சூ. எரு; இ-வி. சசகூ-உ.கா), தூதருரைகேட்ட அகத்துழிஞையோன்திறம் கண்டோர் கூறியதற்கும் (தொல். புறத்திணை. சூ. கஉ - ந) மேற்கோள்.

(பி - ம்.)—1 'களைந்தனனே', 'களந்தனனே'

---

(கூ0சு) களிறுபொரக் [1] கலங்கு [2] கழன்முள் வேலி
யரிதுண் கூவ லங்குடிச் சீறூ
ரொலிமென் கூந்த லொண்ணுத லரிவை
நடுகற் கைதொழுது பரவு மொடியாது
ரு விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையு

க. கழல - கழற்கொடி: "கழன்முள்வேலி" பெரும்பாண்: கருச, கஅச - ரு; முல்லை. உஎ.

உ. கூவல் - கிணறு.

க-உ. யானை உழக்குதலாற் கலங்கிய கூவல்; முள்ளையுடைய கழற்கொடியாலாகிய வேலியையுடைய சீறூர்.

கூ. தழைத்த மெல்லியகூந்தலையும் ஒள்ளியநெற்றியையுமுடைய அரிவை; "ஒலிமென்கூந்தல்" புறநா. கசசு: கூ; குறுந். உஉரு.

ச. நடுகல்லைத் தொழுதல் மரபென்பதை, "அம்புகழ் பாடி யழுதழுது நோனு, திடும்பையுள் வைகிற் றிருந்த - கடும்பொடு, கைவண் குருசில்கற் கை தொழூஉச் செல்பாண, தெய்வமாய் நின்றான் றிசைக்கு" (பு - வெ. கா: கஅ) என்பதனாலுணர்க. பரவும் - துதிப்பாள். ஒடியாது - ஒழியாது; தவிராது.

ரு. யான் விருந்தைப் பெறுவேனாக; தில், விழைவின்கண்வந்தது. என்னையும் - என் கணவனும்.

(பி - ம்.)—1 'கலங்கி' 2 'கன்முன்'

மொ............................வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.*

**திணை - அது ; துறை - மூதின்முல்லை.**
**அள்ளூர்நன்முல்லையார்.** (௩0௬)

எ. பகை எய்துக வென்று வேண்டியது, தன்கணவன் நிச்சயமாக வெல்லுவானென்று துணிந்து.

(எ) எனப் (௪) பரவுமென்க.

* இது கண்டோர் கூற்று.

---

(௩0௭) ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்
[1] வம்பலன் போலத் தோன்று முதுக்காண்
வேனல் வரியணில் வாலத் தன்ன
௫ கான வூகின் கழன்றுகு முதுவீ
யரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புல்லு [2] மீயா துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த
வாழா வான்பக டேய்ப்பத் [3] தெறுவர்
௧0 [4] பேருயிர் கொள்ளு [5] மாதோ வதுகண்டு

௧. மு. **புறநா.** ௨௩௫: ௧௭; **குறுந்.** ௧௭௬; பற்றுக்கோடாகிய என் தலைவன் எங்கே உள்ளானோ ?

௨. பட்டோனென்பது சுட்டிப்பொருளது.

௩. வம்பலன் - அயலான். உதுக்காண் - அவ்விடத்தே பார் ; "எவன் விரைந்து சேறி யுதுக்காண்" **கலி.** ௧0௮.

௪. வேனல் - வேனிற்காலம். வரியணில் - முதுகில் மூன்று வரிகளையுடைய அணிற்பிள்ளை; "மூவரியணில்" (தொல். மரபு. சூ. ௬.) வாலம்-வால்.

௫. ஊகு - ஊகம்புல். வீ - பூ ; எழுவாய்.

௪ - ௫. அணில்வால் ஊகம்புல்லிற்குவமை.

எ. உமணர் - உப்புவாணிகர்.

அ. யாருமில் ஒருசிறை - ஒருவருமில்லாத ஒருபக்கத்தில்.

௯. பகடு - எருது. தெறுவர் - பகைவர்.

௧0. பெரிய உயிர்களைக் கவருகின்றான்.

(௨) பட்டோன் (௧0) பேருயிர் கொள்ளும்.

(பி - ம்.)—1 'வம்பலபோலத்' 2 'ஈயாதுமனர்' 3 'தெறுவவர்', 'தெறுவா' 4 'பேருயிர்க்கொ' 5 'மாதோவ......கெகள'

வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.*

**திணை - தும்பை ; துறை - களிற்றுடனிலை.**

(௩0எ)

..................

* 1ந. தும்பைத்திணைத் துறைகளுள், 'களிறெறிந் தெதிர்ந்தோர்பாடு' என்றதற்கு மேற்கோள்; **தொல்.** புறத்திணை. சூ. கச - **இளம்.**

---

(௩0அ) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
௫ வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த [1] வேலே யென்னை
சார்ந்தா ரகல முளங்கழிந் தன்றே
யுளங்கழி சுடர்ப்படை யேந்துநம் [2] பெருவிற

---

க - உ. "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி, னின்குரற் சீறியாழ்" (**சிறுபாண்.** ௩௪-௫); "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பிற், றொடைய மை கேள்வி" (**பெரும்பாண்.** க௫-௬); "பொன் வார்ந் தனையாழ் னரம்பு வார்ந்து" **பாகவதம்,** க0: கோவத்தன. ௩௫.

க - ௩. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினையும், மின்னலை ஒத்த தோலினையும் மிஞிறென்னும் வண்டுச்சாதியின் குரல்போன்ற ஓசையையுமுடைய சிறிய யாழக் கல்வியின் நன்மை நிறைந்த விருப்பம் வந்தபாண !

௪. சீறூர் மன்னன் - குறுநிலமன்னன். எஃகம் - வேல்; எழுவாய்.

௫. வேந்தன் ஊருகின்ற. ஏந்துமுகம் - எடுத்தமுகம்.

௪ - ௫. எஃகம் முகத்தது: "வேந்தூர் யானைக் கல்ல, தேந்துவன் போலான்ற னிலங்கிலை வேலே" **புறநா.** ௩0க : க௫ - ௬.

௬ - எ. அரசன் கோபித்தெறிந்த வேல என் தலைவனது சந்தனம் பூசிய மார்பின் உள்ளே சென்றது.

அ - ௯. நம்பெருவிறல், தன் மார்பின் உட்சென்ற அவ்வொளிபொருந் திய வேற்படையைப் பறித்து எடுத்துச் செலுத்தி ஓட்டிய காலத்து ; பெரு விறல் - மிக்க வலியை யுடையவன்.

(பி - ம்.)—1 'வேலேயன்னை' 2 'பெருவ...வாபுன்றலைமடப்பிடி'

லோச்சினன் றுரந்த காலை 1 மற்றவன்
௧௦ புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.*
**திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.**
**கோவூர்கிழார்.** (௩௦௮)

௯ - ௧௧. பிடி - பெண்யானை; அது வேந்தனூர்தி. அவ்விடத்துப் புல்லிய தலையையுடைய பிடி நாணக் களிறுகளெல்லாம் புறங்கொடுத்தோடின.

*மு. ஆரமரோட்டலென்னுந் துறைக்கு மேற்கோள் காட்டி, 'இது சீறூர் மன்னன் வேந்தனைப் புறங் கண்டது' என்பர்; தொல். புறத்திணை. சூ. ௫-ந.

(பி - ம்.)—1 'மற்றவர்'

---

(௩௦௯.) இரும்பு1முகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவு
௫ மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
2 யுளனென வெரூஉ மோரொளி

௧ - ௨. பகைவருடைய படைக்கலங்களின் முகஞ்சிதையும்படி தங்கள் படைக்கலங்களால் அவருடையபோரை வெல்லுதல் மற்றவர்க்கும் எளிதாகிய காரியம். இரும்பு, படைக்கலத்துக்கு ஆகுபெயர். ஏனோர், ஏனையோரென்பதன் விகாரம்.

௩. நல்லரா - நாகம் ; "நாமநல்லரா" (அகநா. ௭௨) எனச் செய்யுளிலும், 'நல்ல பாம்பு' என வழக்கிலும் உண்மை அறிக. இஃது உறையுமிடத்தைப் பிறர் அஞ்சி யணுகாரென்பது, "வரி மிடற், றரவுறை புற்றத் தற்றே நாளும், புரவலர் புன்கணோக்கா திரவலர்க், கருகாதீயும் வண்மை, யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே" (புறநா. ௩௨௯ : ௫ - ௯) என்பதனாலும் விளங்கும்.

௪. கொல்லுகின்ற இடபம் திரிகின்ற மன்றம் - பசுக்கள் தங்கும் பொதுவிடம் ; "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. ௧௦௩.

௫ - ௬. குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச்சொற்கள் பலவிகற்பப்பட்டு வருமென்று கூறி, "மாற்றருந்துப்பின் மாற்றோர் பாசறையுளன்" என்பதை ஒருவகைக்கு மேற்கோளாகக் காட்டினர்; நன் - வி. சூ. ௩௨௧.

௬. ஒளி - பிறர்க்கு அச்சமுண்டாதற்குக் காரணமான நன்மதிப்பு ; ஒளியென்பதற்குப் பரிமேலழகர் (குறள், ௬௯௮) எழுதிய விசேடக்குறிப்பும், "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்கு மால்" (சீவக. ௨௪௮) என்பதும் இங்கே அறியற்பாலன.

(பி-ம்.)—1 'முகனு...யொன்' 2 'உளனேவெரூஉம்', 'உளனெனவெரூஉம்'

வலனுயர் நெடுவே [1] லென்னைகண் ணதுவே.*

திணை - தும்பை ; துறை - நூழிலாட்டு.

மதுரையிளங்கண்ணிக்கௌசிகனார். (ஙoக)

எ. வென்றோர் வேலையுயர்த்தல் மரபு; "வென்று......உயாகநும் வேலே" (புறநா. ருஅ); "வெங்களத்துவேலுயர்த்த வேந்து" பு - வெ. கூ: கக.

ரு - எ. மாற்றுதற்கரிய வலியொடு பகைவர் பாசறைக்கண்ணே இவன் இருக்கிறானென்று வெருவுதற்குக் காரணமாகிய ஒப்பற்ற ஒளி வெற்றியால் உயர்த்தும் நெடிய வேற்படையையுடைய என்தலைவனிடத்தேயுள்ளது.

கூ - எ. ஒளி என்னைகண்ணது.

* ١ப. "பெரும்பகைதாங்கும் வேலினானும்' என்பதனுரையில, சான்றோர் பெரும்பாலும் வேற்படையையே சிறப்பித்துக் கூறுவரென்றுகூறி, இதனை மேற்கோள் காட்டினர் ; தொல். புறத்திணை. சூ. உக - ந.

(பி - ம்.)—1 'என்னைக்கண', 'என்னைக்கண்ணதுவே'

---

(ஙகo.) பால்கொண்டு மடுப்பவு முண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு வருந்து மன்னே யினியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
ரு முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே
யுன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்மிசைக் கிடந்த [1] புல்லண லோனே.

திணையும் துறையும் அவை.

பொன்முடியார். (ஙகo)

க. மடுப்ப - உண்பிக்க. உ. அஞ்சி - ஒருகுறுநிலமன்னன். ஒடு - ஆல்.

ந. உயவு - கவலை. இனி - இப்பொழுது.

ச. ஆனான் - அமையானாகி. ரு. முன்னாள் - முதல்நாள்.

கூ. புண்ணில் ஒன்றிய அம்பை யான் உன்னிலனென்பான்.

எ. புல்லுளைக்குடுமிப்புதல்வன் : புறநா. உஎங : ங. ஐங்குறு. உoஉ பார்க்க.

அ. தோல் - யானை ; கேடகமுமாம். அணல் - தாடி ; "மையணற் காளை" புறநா. அங.

(பி - ம்.)—1 'புல்லலணலோனே'

(௩௧௧.) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு [1] மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
௫ கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் [2] சால்புடை யோனே.*

**திணை - அது ; துறை - பாண்பாட்டு.**

**ஔவையார்.** (௩௧௧)

---

க. களர் - உவர்நிலம். கூவல - கிணறு ; "பூவற்படுவிற் கூவற்றோண் டிய" **புறநா.** ௩௧௯.

உ. புலைத்தி - வண்ணாத்தி ; "உடையோர் பான்மையிற் பெருங்கை தூவா, வறனில் புலைத்தி" (**நற்.** ௯௦), "நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடை போக்கித்தண்கயத்திட்டநீரிற் பிரியா" (**குறுந்.**௩௩௦), "ஆடைகொண்டொலிக்கு நின்புலைத்தி காட்டென்றாளோ" (**கலி.** ௭௨.)தூவெள் ளறுவை - மிக வெள்ளிய ஆடை ; "தூவெள் ளறுவை போர்ப்பித்திலதே" **புறநா.** உ௮௬: ௫.

௩. தாதெருமறுகு - எருப்பொடிகளையுடைய வீதி ; "தாதெருமறுகிற் பாசவைற" **புறநா.** ௩௩ : ௧௧.

உ - ௩. அறுவை அழுக்குண்ணும்படியிருந்து. ௪. குறை - காரியம்.

௫. உதவி செய்தற்கு ஒருவருமில்லை. ௭. தோல் - கேடகம்.

* தலைவனது ஆற்றல் கூறியதனாற் பாண்பாட்டாயிற்று.

(பி - ம்.)—[1] 'மறுகிறவை' [2] 'சாலபுடையோரே'

---

(௩௧௨.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே

---

க. பெற்றுப்பாதுகாத்தல் என்னிடத்திலுள்ள கடமையாம் ; "ஈன்று புறந்தந்தவெம்முமுள்ளாள்" (**அகநா.** ௩௫.) தலைக்கடன் - முதன்மையான கடனுமாம்.

உ. தன் குலத்துக்குரிய படைக்கலப்பயிற்சியாகிய கல்வி அதற்குரிய அறிவு அதற்குரிய செய்கைகள்ஆகிய இவற்றால் நிறைந்தவனைச் செய்தல் தகப் பனுக்குக் கடமையாம்; "உயர்மிக்க தந்தை" என்பதற்கு, 'பிள்ளை உயர்ச்சிமிகு தற்குக் காரணமான தந்தை' என்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள்காட் டினர்; **சீவக.** ௪௭௩ - **ந.**

1 வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
2 நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
௫ யொளிறு 3 வா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.*

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

பொன்முடியார். (௩௧௨)

௩. படைக்கலத்தைத் திருத்தமாகச் செய்துகொடுத்தல் கொல்லனுக்குக் கடமையாகும் ; வடித்தல் - கூரிதாக்கலுமாம். 'கொல்லன்' என்பதற்கு வேல் வடிக்கும் கொல்லனென இவ்வடியை உட்கொண்டு அடியார்க்குநல்லார் பொருளெழுதியிருத்தல் ஈண்டு அறியற்பாலது ; சிலப். ௧௨: "இளமாவெயிற்றி".

௫ - ௬. "செல்சமமுருக்கி" (புறநா. ௯௯), "பொருந்தா மன்ன ரருஞ் சமமுருக்கி, யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க, புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃக, மதன்முகத் தொழிய நீபோந் தனையே" (தகடூர்யாத்திரை, "வாது வ') என்பவை இங்கே அறியற்பாலன.

* மு. தொல். புறத்திணை. சூ. ௨௪ - ந. மேற்கோள்.

(பி - ம்.)—1 'வேலடித்து' 2 'தன்னடை', 'ந...னடை' 3 'வாள் வஞ்சமமுருக்கி'

---

(௩௧௩.) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
1 களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் 2 கடவ
௫ வுப்பொய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே

௧. அத்தம் - அரியவழி. பெருவிறல் - தலைவன். ௨. நச்சி - விரும்பி.
௩. காணிய - காண்பதற்கு. ௪. கடவ - ஈதற்குரியன.

௫. உப்பைக்கொண்டு செலுத்துகின்ற வண்டிகளையுடைய உப்பு வாணிகரா ; ஒய்தல் - செலுத்துதல்; "உமண, ருப்பொ யொழுகை யெண்ணுபமா தோ" புறநா. ௧௧௬: ௭ - அ.

௨ - ௬. "ஒன்று, நாரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கடனிறுக்கும் வள்ளியோய்" (புறநா. ௨0௩: ௯ - ௧௧), "இலைபொரு ளில்லான் கொடையே கொடைப்பயன்" (நாலடி. ௬௫) என்பவற்றை இவ்வடிகளின் பொருள் நினைப்பிக்கின்றது.

(பி - ம்.)—1 'களிறொடுநெடுந்தேர்', 'களிறொடுகடுந்தேர்' 2'கடல', 'கடவு'

யெள்ளமை யின்றவ னுள்ளிய பொருளே.*

திணை - அது ; துறை - வல்லாண்முல்லை.

மாங்குடிகிழார். (ரு

ஈ. அவன் கருதியபொருள் இகழ்ப்பாலதன்று; எள்ளுதல் - இகழுத

* ழ. 'வேந்தன் சீர்சால சிறப்பெடுத் துரைத்தல்' (தொல். புறத்திணை சூ. ரு - ந) எனபதற்கு, 'வேந்தற்குரிய புகழமைந்த தலைமகனை ஒருவற்கு வாக அவன் படையாளரும் பிறரும் கூறல்' என்று பொருள்கூறி, இத மேற்கோள்காட்டி, இது படையாளர் கூற்றென்றும், இதற்கு முடிவேந்த சிறப்பெடுத்துரைத்தலென்ற கூறின் அது பொதுவியலிற் கூறலாகாதெ றுணர்க வென்றும் கூறுவர்.

---

(ருகச.) மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வே னெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
ரு குடியு மன்னுந் தானே கொடியெடுத்து
[1] நிறையழிந் தெழுதரு தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

திணையும் துறையும் அவை.

ஐயூர்முடவனார். (ருகக

க. "மனைக்கு விளக்க மடவாள்" நான்மணி. கoச.

உ. முனை - போர். வென் - வெற்றி.

ரு. நடுகல் மிகுந்த பறந்தலை, உவலிடுபறந்தலையெனக் கூட்டுக. உவலிடு தழைகளைப்பெய்த. பறந்தலை - பாழ்பட்ட இடம்.

ச. புல்லியகொட்டையையுடையநெல்லி. வன்புலம்-குறிஞ்சியுமுல்லையு

ரு. குடிமக்களுளொருவனும் தானே; மன், உம், அசைநிலை.

சு. நிறை - நிறுத்தப்படுதல்; "நிறையருந்தானை" சிலப். உரு : கஎஅ.

எ. சிறை - காவல். இறைவிழுமமுறின் - அரசன் துன்பமுற்றால்; "வே துவிழுமுறவே" புறநா. ருககு:கஉ.

(பி - ம்.)—1 'நிறையறிந் தெழுந்தரும்', 'நிறையறிந்தெழுதரு'

(ருகரு.) உடைய ராயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயு
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
யில்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
ரு தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் றோன்றுங் காலே.

**திணையும் துறையும் அவை.**

**நெடுமானஞ்சியை 1 ஔவையார்.** (ருகரு)

---

ரு. மடவர்-அறிவில்லார் (புறநா.கரசு:ச.) நெடுமானஞ்சி-ஒரு தலைவன்.

உ - ரு. கடவர் - படைவீரர் முதலியோர். மீதும்-மேற்பட்டும். ஈயுமஞ்சி. 'மடவர் மகிழ்துணை' என்பது, "பாணரொக்கல" (திருச்சிற். சOO) என்பது போல்வது.

ச - ரு. அவன் வீட்டின் இறப்பிற் செருகப்பட்ட தீக்கடைகோலைப் போலத்தன்வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன்.

ரு - எ. ஞெலிகோலாலே கக்கப்பட்டுத் தோன்றுகின்ற காட்டுத்தீ யைப்போல வெளிப்படத்தோன்ற வேண்டிய காலத்துத்தோன்றவும் வல்லன்.

(பி - ம்.)—1 'ஔவையாரான்'

---

(ருகசு.) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் 1 வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
னாட்செருக் 2 கனந்தர்த் துஞ்சுவோனே
யவனெம் 3 மிறைவன் யாமவன் பாணர்
ரு நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்த
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்

க. கள்ளினைவாழ்த்தி: புறநா. உகஎ: சு.

உ. சீத்தல்- துாத்தல்; பெருக்கல; "மந்தி சீக்கு மணங்குடை. முன்றில்" (புறநா. உசஎ: ச); "மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றில" பெரும்பாண்.சகஎ.

ரு. நாட்செருக்குஅனந்தர்-விடியற்காலத்துக் கள்ளைக்குடித்த மயக்கத்தால்.

க - ச. காட்டு-செத்தை; "துடைப்பங்துகட்காட்டுப்புலலிதழ்", "காட்டுக் கனைந்து" (ஆசார. சரு, சசு.) ஒடு, அசை. துாவாதமுன்வாயிலினிடத்தே தானுண்டகள்ளைவாழ்த்தி நாட்கால அனந்தரால் துயிலவோன்; "முன்றிற்கிடந் தபெருங்களியாளர்"(புறநா. ருகஎ:உ.)துாங்குவோனாகிய அவனே எம்தலைவன்.

ரு - சு. நேற்றுவந்த விருந்தினரை உபசரித்தற்காகத் தன்பழைய வாட் படையை ஈடாகவைத்தான். இன்று - இன்றைத்தினம்.

(பி - ம்.)—1 'வாழ்த்திகள்ளின்...தசீயா' 2 'களந்தரத்துஞ்சு' 3 'இறை யவன்'

கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
1 டீவதி லாள னென்னாது நீயும்
2 வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
௧௦ கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
3 சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.*

**திணையும் துறையும் அவை.**
**மதுரைக்கள்ளிற் 4கடையத்தன்வெண்ணாகனார்.** (௩௧௬)

எ. பணையம் - ஈடு. அ. ஈயாதவனென்று கருதாமல் நீயும்.

௯. பூங்கொடிபோன்ற இடையையுடைய நின்விறலி விளங்கிய அணிகலத்தை அணியவும்; வள்ளி - பூங்கொடி.

* மூ "மறவன் ஆரமரோட்டல் கூறியது" என்பர்; தொல். புறத்திணை. சூ. ரு-ந.

(பி - ம்.)—1 'ஈதலிலாளன்' 2 'வள்ளியலகு விளங்கிழை' 3 'சென்றுநாசிவந்து மேவருசிறுகண்', 'செறுவர்சிவந்து' 'செறுநர்சிவந்து' 4 'கடையத்தனார் வெண்ணாகனார்'

---

(௩௧௭.) வென்வேல்..............நது
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்
கதளுண்டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே
ரு வேட்கை மீளப... ..................
........................கு மெமக்கும் பிறர்க்கும்
யார்க்கு மீய்ந்து 1 துயிலேற் பினனே.

**திணையும் துறையும் அவை.**
**2 வேம்பற்றூர்க்குமரனார்.** (௩௧௭)

உ. முன்வாயிலிற் படுத்துக்கிடந்த மிக்க களிப்பினையுடையானுக்கு.

௩. அதள் - தோல். இதிற் சிலசாதியார் படுத்தல இயல்பு; அது, "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். அ௯), "உழையதட்பள்ளி, யுவலைக்கண்ணி வன்சொ லிளைஞர்" (மதுரை. ௩௧௦ - ௧௧) என்பவற்றாலும் அறியலாகும்.

௪. வல்லே - விரைவாக.

எ. துயிலேற்பினன் - துயிலேற்றலையுடையான். ஆதலால் அக்களியாளனுக்கு யாதுண்டாயினும் வல்லே கொடுமினென்க.

(பி - ம்.)—1 'துயிலேற்பினனே' 2 'வேப்பத்தூர்க்குமரன்'

---

(௩௧௮.) கொய்யடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறை [1] யணற் சேவல்
௫ பாணர் [2] நரம்பின் சுகிரொடு வயமான்
[3] குரற்செய் பீலியி னிழைத்த குடம்பைப்
பெருஞ்[4] செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

**திணையும் துறையும் அவை.**

**பெருங்குன்றூர்கிழார்.** (௩௧௮)

---

௧. கொய்த இலைக்கறிகள் வாடவும் கொண்டுவந்த விறகு உணங்கவும்.

௨. மாஅயோள் - மாமை நிறத்தினை யுடையவள்; மனைவி. மாமை - அழகிய நிறம்; "மாமைக்கவினே" ஐங்குறு. ௩௫, ௧௦௩, ௧௩௪.

௩. பசித்தன்று - பசித்தது; ஊர்பசித்தது.

௪. கழுத்திற் கறுப்பினையுடைய ஆண்குருவி; "உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்" நற். ௧௮௧.

௫. வயமான் - சிங்கம். ௬. செய்குடம்பை - கூடு.

௭. நெல்லினரிசி - நெல்லொடு கூடிய அரிசி. ஆர்ந்து -: உண்டு.

௮. வாடிய ஆம்பற்பூப்போன்ற சிறகுடைமையாற் புன்புறப் பெடை யென்றார்; "புன்புறப் புறவின் கணநிரை" பதிற். ௩௯ : ௧௧.

௪ - ௮. "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன, கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ, முன்றி லுணங்கன் மாந்தி மன்றத், தெருவினுண்டாது குடைவன வாடி, யில்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்" குறுந். ௪௬.

௯. யாணர்த்து - புதுவருவாயினையுடையது. வேந்து - பகை வேந்தன். விழுமுறின் = விழுமமுறின் - துன்பமுற்றால்; "தன் னிறைவிழுமுறினே" புறநா. ௩௧௪ : ௭.

(பி - ம்.)—1 'யணற செலலப், பாண' 2 'நரம்பிசைநீரொடு' 3 'குரசை பிலியினிளமை மூத்தகுடம்பை', 'குரசெய்பீலியினிமைமூத்த', 'பூத்த' 4 'செய் செல்லின்'

---

(௩௧௯.) பூவற் படுவிற் கூவற் [1] றோண்டிய
செங்கட் சின்னீர் பெய்த சீறின்
முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி
[2] யாங்கஃ துண்டென வறிது மாசினறு
௫ படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
[3] புறவு மிதலு மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனான்
முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் [4] புகுதந்
[5] தீங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண
௧௦ கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி
புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டுஞ்
சீறூர் மன்ன னெருநை ஞாங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை யணிய
௧௫ வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

**திணையும் துறையும் அவை.**

**ஆலங்குடி வங்கனார்.** (௩௧௯)

௧. பூவல் - செம்மண். படு - மடு. தோண்டிய - தோண்டுதலாலுண்டாகிய; "களர்ப்படு கூவற் றோண்டி" (புறநா. ௩௧௧: ௧); "பூவல்-செம்மண்; பூவற் படுவிற் கூவற் றோண்டிய வென்றார் புறத்திலும்" சிலப். ௧௬: ௩ - ௬. அடியார்.

௨ - ௩. பெய்த சாடி. ௪. அந்நீர் மாசிலலாதது.

௫. படலை - தழை; படலுமாம். உணங்கல் தினை - உலர்ந்த தினை.

௬. இதல் - ஒருவகைப் பறவை; "இதல்கவர்ந்துண்டென" (புறநா. ௩௨௦: ௧௧); "இதன்முட்செந்நனை, நெருங்குகுலைப்பிடவம்" (அகநா. ௨௩: ௩.) அறவும் - மிகவும்.

௭. பொழுது எல்லின்று - சூரியன் ஒளிமழுங்கியது; "ஏகுதிமடந்தை யெல்லின்று பொழுதே" நற். ௨௬௪.

௯. இருந்தீமோ - இரு. முது - பேரறிவு; "முதுவாயிரவல" புறநா. ௪௮, ௧௫௦; பதிற். ௬௬.

௧௦. ஆமான்கன்றை. ௧௧. புன்றலை - சிவந்த தலை.

௧௨. மன்னன், எழுவாய். நெருநை ஞாங்கர் - நேற்று.

௧௩. பகைமேற்சென்றனன். ௧௪. பாடினி - பாணிச்சி.

௧௫. வாடாத்தாமரை - பொற்றாமரைப்பூ; "எரியகைந் தன்ன வேடித் தாமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" (பொருந. ௧௫௯ - ௬௦); "பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி" பதிற். ௪௮.

௧௪ - ௫. புறநா. ௧௧: ௧௧ - ௭ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

(பி-ம்.)—1 'றொடிய' 2 'யாகஃதுண்டென', 'யாறுஃதுண' 3 'மறவுமுணடெனப்', 'புறவுமீதலு' 4 'புகுசரீங்கிரு' 5 'ஈங்கிருந்தீமே', 'இருந்தீரேமுது'

(௩௨௦.) முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
௫ தீர்தொழிற் றனிக்கலை [1] திளைத்துவிளை யாட
வின்புறு [2] புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவது
மில்வழங் காமையிற் கல்லென வொலித்து
௧௦ மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென
வார நெருப்பி னார னாறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூர
மிரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
௧௫ தங்கினை சென்மோ பாண தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்

---

௧. முஞ்ஞை - முன்னை. முசுண்டை - முசுட்டைக்கொடி. பம்பி - பரவி.

௩. கைம்மான் வேட்டுவன் - யானைவேட்டையாடுபவன்; "யானைவேட்டுவ னானையும் பெறுமே" (புறநா. ௨௧௪: ௪.) கனை - மிகுதி. துயின் மடிந்தென - தூங்க.

௪. பார்வை - பார்வை மிருகம்; மிருகங்களைவேட்டையிலகப்படுத்துவதற்காக வளர்த்துப்பழக்கஞ்செய்யப்படுவது (பெரிய. கண்ணப்ப. ௩.) பிணையை.

௫. தொழில் தீர்ந்த ஆண்மான். ௬. மான்களின் சேர்க்கையை.

௬ - ௭. கணவனெழுதற்கும் கலை பிணையினின்றும் தீர்தற்குமஞ்சி மனையோள் புடைபெயர்ந்து நடவாமையால், ஒலித்தல், கானக்கோழிமுதலியவற்றின் றொழில்.

௧௦. மான்றோலிலுலர்த்திய தினையாகிய உணவை.

௧௧. இதல் - ஒருவகைப்பறவை; புறநா. ௩௧௯: ௬-ஆம்அடிக்குறிப்பைப் பார்க்க.

௧௨. ஆரம் . சந்தனம். ஆரல் - ஒருவகைமீன்.

௧௩. தடிவு - தடிதல்; அறுத்தல. தடி - துண்டமுமாம். வள்ளூரம் - இறைச்சி ; "முழூஉவள்ளூரம்" புறநா. ௨௧௯: ௨.

௧௪. கரியபெரிய சுற்றத்தாருடன் ஒருங்குண்டு.

௧௫. தங்கிச்செல.

௧௬. கூழ் - பொருள்; "படைகுடி கூழமைச்சு" குறள், ௩௮௧.

(பி - ம்.)—1 'திளைத்து விளையாட' 2 'புணரா நிலை'

மருகா தியும் வண்மை
1 யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.
திணையும் துறையும் அவை.
வீரைவெளியனார். (௩உ0

கஅ. உரை - புகழ். (கஅ) ஊர்க்குச் (கரு) செல்.
(பி - ம்.)—1 'உரை சொல்'

---

(௩உக.) பொரிப்புறப் பூழின் போர்வல் 1 சேவன்
மேற்றோல் களைந்த தீங்கொள் வெள்ளெட்
2 சுளகிடை யுணங்கற் செவ்வி 3 கொண்டுடன்
வேனிற் 4 கோங்கின் பூம்பொகுட் டன்ன
ரு குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசீஇ............னனே பாண
வாள்வடு விளங்கிய சென்னிச்
க0 செருவெங் குருசி லோம்பு மூரே.
திணையும் துறையும் அவை.
உறையூர் மருத்துவன் தாமோதரனார். (௩உக

க. பொரி - புள்ளி. பூழ் - குறும்பூழ்ப்பறவை.

உ. மேற்றோல - மேலேயுள்ளதோல். வெள்ளெள் - வெள்ளைநிறமுள்ள ஒருவகை எள்.

௩. உணங்கல் - உலருகின்றவெள்ளெள்ளை; செவ்வியுணங்கலை. கொண் உடன்.

ச. செய்யுளிடத்து, காலத்தை அடையாக அடுத்துவருமொழி இன, தைக்காட்டாததற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ச00: நன்-வி. சூ. ச0க இ - வி. சூ. ௩கஉ - உரை.

ரு. குடந்தை - வளைவு; "குடந்தையஞ் செவிய கோட்டவ ரொடுங்கி அகநா. உஅச. கோடு - கரை. ஆட்ட - அலைத்தற்கு. சேவல் எலியை அலைக்க

சா. பீள் - கரு. வரகின் பீளிற் சேவல் ஒளிக்கும்; பீளென்றது கதிர் போரை.

க0. செருவெங் குருசில் - போரை விரும்புதலையுடைய தலைவன்.

(பி - ம்.)—1 'செலவன' 2'களகிடை' 3'கொண்டென'4 'வேனிற்கொண் டென'

(௩௨௨.) [1] உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
௫ பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
[2] மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பி [3] னயல
திருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
டண்பணை யாளும் வேந்தர்க்குக்
௧௦ கண்படை யீயா வேலோ னூரே.

திணையும் துறையும் அவை.
ஆவூர்கிழார். (௩௨௨)

---

௧. காளையின் செவ்வியழிந்த கொம்பையொத்த.

௨. பொருந்தியவர் சிறுர்.

௧-௨. கள்ளியின் முள்ளுக்குக் கோடு உவமை; "குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளி" அகநா. ௧௮௪: ௮.

௩. வரகு அரிகால் - வரகம்பயிரின் அரிந்த தாள். கருப்பை - எலியை; "வேலிக்கருப்பை பார்க்கும்" புறநா. ௩௨௪: ௭.

௩ - ௪. எய்தசிறுர் முழங்குவாராயின்.

௫. முயல், எழுவாய். கருங்கலன் - மண்ணுற் செய்யப்பட்ட அடிசிற் பாண்டம்.

௪- ௬. "தாமயிர்க் குறுந்தா ணெடுஞ் செவிக் குறுமுயல், புன்றலைச் சிறுஅர்மன்றத் தார்ப்பிற், படப்பொடுங் கும்மே" புறநா. ௩௩௪ : ௨ - ௪.

௭. எந்திரம் - ஆலை, "கரும்பி னெந்திரம்" ஐங்குறு. ௫௫.

௮. சுவல் - பிடர். ௯. தண்பணை - மருதநிலத்தைச்சார்ந்த ஊர்கள்.

(௧௦) ஊர் (௬) வன்புலத்ததுவே.

(பி - ம்.)—1 'உழுதூர்க்காளை' 2 'முனறினறபாயும்' 3 'அயலினிருஞ்சுவலி...யானை பிறழுமாங்கட்'

---

(௩௨௩.) புலிப்பாற் [1] பட்ட வாமான் குழவிக்குச்
சினங்கழி மூதாக் கன்றுமடுத் தூட்டுங்
கா.......................................க்

---

௧. புலியினிடத்தே அகப்பட்ட ஆமானினது கன்றினுக்கு.

௨. மூதா - முதியபசு. மடுத்து - சேர்த்து.

(பி - ம்.)—1 'பட்ட விரமான்'

குள்ளியது சுரக்கு மோம்பா வீகை
ரு வெள்வே [1] லாவ மாயி ஞெள்வாள்
கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோ னூரே.

...................................................

.................................டார்கிழார். (௩௨...

ச. சுரக்கும் - இடைவிடாமலளிக்கும்.

ரு - எ. 'பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவும்' என்பதற்குத் தத்தம்பொ ருணர்த்தாது பெயர்ந்த நிலைமையையுடைய சொல்லான் வருஞ்செய்யு மெனப் பொருள்கூறி, "ஒள்வாட்......வேலோனூரே" என்புழி, வேலோனெ பது வேலையுடையோனென்னும் பொருள் பெயர்ந்து ஒருபெயர்த்தன்மையா நின்றது" என்பர்; தொல். எச்ச. சூ. ருரு - ந; இ - வி. சூ. ௩எ௦-உரை.

(பி - ம்.)— 1' ஆப

---

(௩௨ச.) வெருக்குவிடை யன்ன [1] வெருணோக்குக் கயந்தலைப்
புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் [2] வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை [3] யுடையின் சுரையுடை வான்மு
ரு ளூக நுண்கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் [4] குலாவரக் கோலிப்
பருத்தி [5] வேலிக் கருப்பை பார்க்கும்

க. வெருக்குவிடை - காட்டுப்பூனையின் ஆண். கயந்தலை - மெல்லியதலை வெருகினை விடையென்று கூறுவதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். மரபு. ( சுஅ. பேர்.

உ. கயவாய் - மெல்லியவாய். உ - ௩. கயவாய்மகார்.

ச. சிறிய இலைகளையுடைய உடைமரத்தின் உட்டுளைபையுடைய வெள்ளி முள்ளை; "உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித், தாமேயாண்ட" புறநா ௩சு௩: உ - ௩.

ரு. ஊகநுண்கோல - ஊகம்புலலின் ஈர்க்கில.

ச - ரு. உடைமுள்ளை ஊகங்கோலிற் கோத்த அம்பினைஉடையராய்.

சு. வலார் - வளார்; மலாரெனவழங்கும். குலாவர - வளைய.

எ. தொல். எச்ச. சூ. கஎ - ந. மேற்.

௩ - எ. "ஆர்நாரின் றிண்கயிற்று லமைச்சிறுகோல் வளைத்தவில்லுங், கூ வாய்முண் ணுனிபதித்த கோற்கோலுங் கைக்கொண்டு, கார்மேனி மைந்தரோ கான்புகுந்து கொடுவிலங்கி, னேர்வாய்மென் குருளைபல வெய்தல் செய்தால

(பி - ம்.)—1 'வெருணோக்குக்' 2 'வேட்டுவன்' 3 'உடையினை சுரையுடை வானஞ்சுநுண்கோற்' 4 'குலா புறக்' 5 'வேலி கரு பலிப்பார்க்கும்'

புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை [1] பகுவாய் பெயர்த்த
க0 [2] வெண்காழ் [3] தாய [4] வண்காற் பந்த
ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே.*

திணையும் துறையும் அவை.

ஆலத்தூர்கிழார். (௩உச)

---

விளையாட்டால்" (சீகாளத்திப். கண்ணப்ப. உகூ) என்பது இவ்வடிகளின் பொருளை ஒருவாறு தழுவிவந்திருத்தல் காண்க.

எ - அ. "பருத்திவேலிச் சீறூர்" புறநா. உகூகூ: க.

கூ. குமிழுண் வெள்ளை - குமிழம்பழத்தை உண்ணும் வெள்ளாடு.

க0. காழ் - கொட்டை. தாய - பரந்த. பந்தரின்கீழ்.

கக. இடையன்:(புறநா. ௩௩க: ச - ௫.) பொத்திய - மூட்டிய.

கஉ. நாண் - மானம். கச. உலக்கும் - இறக்கும்.

(கஉ) நெடுந்தகை (கச) துணை.

* ்ப. வேந்தற்குத் துணையாகச் செல்வோரைக் கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௫ - ந.

(பி - ம்.)—1 'மதுவாய்', 'மறுகுவாய்','மறுவாய்' 2 'வெண்காழ்ப்பத்த ரிடை' 3 'காய' 4 'வன்காழ்ப்பந்தர்'

---

(௩உ௫.) களிறுநீ றாடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்துசொரிந் திறந்தெனக்
குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ணூறன்
௫ முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை

---

க. நீறு - புழுதி ; "நீறடங்கு தெரு" (சிறுபாண். உ0க); "கரம்பைப் படுநீறாடி" பெரும்பாண். கூ௩.

உ. வம்பப்பெரும் பெயல்-புதியமழை; "வம்ப மாரியைக் காரென மதித்தே" (குறுந். கூகூ.) இறந்தென - போக.

௩. குரால் - ஒருவகைப்பசு; கோட்டானுமாம்.

ச. சேற்றைத் தோண்டுதலாலுண்டாகிய கலங்கியஊறல்நீரை ; "மணற் கிளைக்க நீரூறும்" திருவள்ளுவமாலை, ௩க.

௫. "ஊண்முறையூட்டும்" புறநா : ௩௩க : அ.

[1] முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவ
ருடும்பிழு தறுத்த [2] வொடுங்காழ்ப் படலைச்
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்ற
கo மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி [3] யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிறாஅர் கணைவிளை யாடு
[4] மருமிளை யிருக்கை யதுவே வெண்வேல்
வேந்துதலை வரினுந் தாங்குந்
கரு தாங்கா வீகை நெடுந்தகை யூரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் முதுகண்ணன்சாத்தனார். (நஉரு)

---

சு. முளவுமா - முள்ளம்பன்றியை; தொலைச்சிய - கொன்ற; "முளவுமா வல்சி" (ஐங்குறு: நசுச), "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை' மலைபடு. கஎசு.

ச - சு. "கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல, வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி" புறநா. நகக: க - உ.

எ. உடும்பிழுது - உடும்பினது நிணத்தை; "உடும்பின் விழுக்கு நிணம்" (புறநா. நஉசு: க - கo.) அறுத்த உடும்பிழுதையென்க ; ஒடுங்காழ்ப்படலை- ஒடுமரத்தின் கழிகளாலாகிய கட்டுக்கதவு ; படலுமாம். ஒடு - ஒருவகை மரம் ; "ஒடுமரக்கிளவி" தோல். உயிர். சூ. சுo.

அ. முன்றிலில். கூறுசெய்திடுமார்-பிறர்க்குப் பகுத்துக் கொடுப்பாராய்.

கo. மன்றத்து - பொதுவிடத்துள்ள.

கூ-கo. "நெய்க்னறைக் கொளீஇய, மங்குன் மாப்புகை,மறுகுடன் கமழும்" புறநா. நஉகூ: ந - ச.

கக. அலந்தலை: "அலந்தலைமராமும்" (சிலப். கக: எரு.) இரத்தி- இத்தி மரம் ; இலந்தையுமாம் ; அலங்குதல - அசைதல். நீழலில்.

கo - கக. "இரத்தி நீடியவகன்றலை மன்றம்" புறநா. நச: கஉ.

கஉ. வேட்டுவர்: புறநா. நஉச: க - எ.

கந. மிளை - காவற்காடு ; புறநா. நஉசு: எ.

கச. அரசன் தன்னிடத்தே வந்தாலும் தாங்குதற்குரிய.

கச - ரு. "வரகுகடனிரக்கு நெடுந்தகை, யரசுவரிற்றுங்கும் வல்லாளன் னே" புறநா. நஉஎ: எ - அ.

(கரு) ஊர் (கந) இருக்கையது.

(பி - ம்.)—1 முழவுமா தொலைச்சிய' 2 'கொடுங்காழ்', 'தொடுங்காழ்' 3 'இலங்குபடு' 4 'அருமுளை'

(௩௨௬.) ஊர்முது வேலிப் பார்நடை வெருகி
னிருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
யுயிர்நடுக் குற்றுப் [1] புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
௫ பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
[2] கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் [3] றணியு
[4] மருமிளை யிருக்கை யதுவே மனைவியும்
வேட்டச் சிறுஅர் சேட்புலம் படராது
[5] படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
௧௦ விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டோராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனு

---

க. வேலியைச் சார்ந்துள்ள காட்டுப்பூனையால; பார் நடை வெருகு-தான் கவர்ந்துகொள்ளுதற்குரிய கோழிமுதலியவற்றைப் பார்த்து மெல்ல நடத்தலை யுடையவெருகு; "வெவ்வாய் வெருகினைப்பூசை யென்றலும்" (தொல். மரபு. சூ. ௬௮) என்பதையும், 'படப்பை வேலியும் புதலும்பற்றி விடக்கிற்கு வேற் றுயிர்கொள்ளும் வெருகு' என்னும் அதன் பேராசிரியருரையையும் பார்க்க.

க - உ. வெருகாகிய பகைக்கு அஞ்சிய கோழிப்பேடை, எழுவாய்.

௩. புலா - புலாவை ; வாயிலுள்ள தசையை அகநா. ௭௬: ௧௪.

௪. சிறை - பக்கம். செற்றை - சிறுதூறு ; "செற்றைவாயில்" (பெரும் பாண். ௧௪௬.) புடையுநள் - அடித்துத் தூர்த்தலையுடையளாய்.

௫. பருத்திப்பெண்டின்-பருத்திநூற்கும் மங்கையின்; "பருத்திப் பெண் டின்பனுவலன்ன" (புறநா. ௧௨௫: ௧.) விளக்கத்தாற்காணப்பட்ட.

௬. கவிர்ப்பூ - முள்ளுமுருங்கைப்பூ. சேவலின் - ஆண்கோழியால; "கவி ரலர் பூத்தசென்னி வாரணம்" (கல். பாயிரம். ௨.) தணியும்-நீங்கும்.

(௨) கோழிப்பேடை (௬) அங்கடுக்கந்தணியும்.

௭. "அருமிளையிருக்கையதுவே" புறநா. ௩௨௫: ௧௩.

௮. சேட்புலம் - நெடுந் தூரமாகிய இடம்.

௧௦. விழுக்காகியநிணம்; விழுங்குதற்குரியநிணமுமாம்; "விழுக்கொடு வெண்ணஞ்சு" (சீவக. ௧௫௮௪.) விதவை - கூழ்.

௯ - ௧௦ : பெரும்பாண். ௧௩௨ - ௩.

௧௧. யாணர்-புதிது. நல்லவை - நல்ல உணவுகளை. ஓராங்கு-ஒருபடியாக.

௧௨. கிழவன் - தலைவன்.

௯-௧௧. "உடும் பிழுதறுத்தவொடுங்காழ்ப்படலைச், சீறின் முன்றிற் கூறு செய்திடுமார், கொள்ளிவைத்த கொழுநிணநாற்றம்" புறநா. ௩௨௫: ௭ - ௯.

(௭) மனைவியும் (௧௨) விருப்பினள்.

(பி - ம்.)—1 'புலா விட்டியாற்றச்' 2 'கதிர்ப்பூ' 3 'தணியும்' 4 'அரு மிளை' 5 'படபடைக்கொண்ட'

மருஞ்சமந் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்
தண்ணல் யானை யணிந்த
கரு பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

1 தண்காற் பூட்கொல்லனார். (௩௨௬)

---

௧௩. ததைய - சிதைய; "அருஞ்சமஞ்சிதையத்தாக்கி (புறநா. ௭௨: ௮) "ததைந்த காஞ்சியொடு" பதிற். ௨௩: ௧௧.

௧௫. ஓடை - நெற்றிப்பட்டம். ௧௪ - ௫. புறநா. ௩௩௪: ௮ - ௧0.

(பி - ம்.)—1 'தண் காற்......பொற கொலலனார், 'முடக்கொல்லனார்' 'தங்கான்முட கோலனை', 'தங்கால தாட கோவலனார்'

---

(௩௨௭.) எருது காலுறாஅ திளைஞர் கொன்ற
1 சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண 2 ருண்டுகடை தப்பலி
௫ னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
3 வரகுகட னிரக்கு நெடுந்தகை
யரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே.*

திணையும் துறையும் அவை.

........................................ (௩௨௭)

---

௧. கடாவிடுதலின்றி இளைஞரடித்த; "எருதுகாலுறாஅது" என்பது தொல். மொழி. சூ. ௮ - இளம். மேற்கோள்.

௨. சில்விளை - சிலவாகவிளைந்த. குப்பை - பொலி.

௩. தொடுத்தகடவர்க்கு-தன்னைவளைத்துக்கொண்ட கடன்காரர்களுக்கு; "தொடுத்துணக்கிடப்பினுங் கிடக்கும்" (புறநா. ௧௫௯:௪.) கொடுத்த மிச்சில- கொடுத்து மிஞ்சியவரகை.

௪. கடை - வாயில்.

௫. ஒக்கல் ஒற்கம் சொலிய - சுற்றத்தாருடைய வறுமையை ஒழித் தற்கு ; 'ஒற்கம்' என்னு முரிச்சொல வறுமையாகிய குறிப்புணர்த்துவதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௬௪ - சே ; ஷை ஷை ஷை ௬௨ - ந ; இ - வி. சூ. ௨௮௧ - உரை.

௭ - ௮. "வேந்துதலை வரினுந் தாங்குந், தாங்கா வீகை நெடுந்தகை" புறநா. ௩௨௫: ௧௪ - ௫.

* மு. வாகைத்திணைத்துறைகளுள், 'புல்லாவாழ்க்கை வல்லாண் பக்கம்' (தொல் புறத்திணை. சூ. ௧௭ - இளம்) என்பதற்கும், 'அரும்பகை தாங்கு மாற்றல' (ஷை ஷை ஷை ௨௧ - ந) என்பதற்கும் மேற்கோள்.

(பி - ம்.)—1 'சில்விளை' 2'உண்டுகன...தலொற்கஞ்' 3'வரகுகடனீர்க்கு'

(௩௨௮.) ......டைமுதற் புறவு [1] சேர்ந்திருந்த
புன்புலச் சீறூர் நெல்லினை யாதே
வரகுந் தினையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்களுக் [2] கீயத் தொலைந்தன
௫ ..........................டமைந் தனனே
யன்ன ளுயினும் [3] பாண நன்றும்
[4] வெள்ளத் திடும்பா லுள்ளுறை தொட......
களவுப் புளியன்ன விளை......................
................................வா னேன்கொழுங்குறை
௧௦ கொய்குர லரிசி யொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.........................
................................தருகுவன் மாதோ
[5] தாளிமுத னீடிய சிறுநறு முஞ்ஞை
௧௫ முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

[6] **திணையும் துறையும் அவை.**
பங்கு................................ (௩௨௮)

---

௧. புறவு - முல்லைநிலம். ௨. புன்புலம் - புன்செய்.
௩ - ௪. "வரகுந் தினையு முள்ளவை யெல்லா, மிரவன் மாக்க ளுணக் கொளத் தீர்ந்தென" புறநா. ௩௩௩: ௯ - ௧௦.
௭. "குடப்பாற் சிலவுறை" புறநா. ௨௭௬: ௫.
௮. களவுப்புளி - களாப்பழத்தின் புளிப்பு. ௧௦. குரல - கதிர்.
௧௪. தாளி - ஒருவகைக் கொடி. (௧௬) செலின் (௧௩) தருகுவன்.
(பி - ம்.)—1 'சோர்ந்திருந்த' 2 'ஈயாததா...டமைந்த' 3 'மன்ன' 4 'வெள்ளத்திடும்' 5 'தா [illegible] பு [illegible]' 'இதுவுமது'

---

(௩௨௯.) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட் [1] பலி யூட்டி
[2] நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய

---

௧. வீட்டிலட்ட கள்ளையுடைய; "இல்லடுகள்ளின்றேப்பி பருகி" பெரும் பாண். ௧௪௨.
௨. நடுகல்லிற்கு விடியற்காலப் பலியையூட்டி.
௩. நறை - தூபம்; "நறையும் விரையும்" (குறிஞ்சி. ௭). கொளீஇ - கொளுத்துதலால் ; சேர்த்தலால.
(பி - ம்.)—1 'பலியூட்டி நெய்ந்நறை' 2 'நன்னராட்டி'

மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு
௫ மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.*

**திணையும் துறையும் அவை.**

**மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.** (௩௨௯)

௪. மங்குல் - மேகம். உடன் - ஒருங்கு.

௫. முனை - முதன்மை. ஊர் இருக்கையை யுடையதாயினும்.

௬. அரவுறையும் புற்றைப்போலவது ஊர்; "நல்லராவுறையும் புற்றம் போல" (புறநா. ௩0௯: ௩.) ஊர் அணுகுதற்கரியதென்றபடி.

௭ - ௯. மு. புறநா. ௩௨0: ௧௬ - ௮; ௩௭௯: ௮.

* மு. கல்நட்டுக் காலகொண்டதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௫ - ந.

---

(௩௩0) வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
வேந்து[1] வாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
௫ பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை [2]சுட்டிய வண்மை யோனே.*

**திணையும் துறையும் அவை.**

**மதுரைக்கணக்காயனார்.** (௩௩0)

௧. முனை - சண்டை. நெரிதர - நெரிய.

௩. அப்பகைவர் சேனையானது தன்னைக் கடந்துவராதபடி தடுத்தலால்.

௪. ஆழி - கரை. ௩ - ௪. குறள், ௯௮௯, பரிமேல். மேற்.

௫. வாரி - வருவாய்.

௬. புரவு - இறையிலிநிலம்; புறநா. ௨௬: ௯; ௩௭௯: ௬.

* மு. வஞ்சித் திணைத்துறைகளுள், "வருவிசைப்புனலைக் கற்சிறைபோல ஒருவன்றாங்கிய பெருமை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ ௭ - இளம்; ௸ ௸ ௸ ௮ - ந.

(பி - ம்.)—1 'வாள் வல்லத்தன்', 'வல்லத்தன்' 2 'சூடியவன்மை'

(௩௩௧.) கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
௫ கல்லா விடையன் போலக் குறிப்பி
னில்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னா
1 ணீணெடும் பந்த ரூண்முறை யூட்டு
மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
௧0 வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்
காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
2 தூவவும் வல்லனவன் றூவுங் காலே.

திணையும் துறையும் அவை.

3 உறையூர் முதுகூத்தனூர். (௩௩௧)

---

௧. இயற்றியவல்லுவர்க்கூவல் - கிணறு; "வல்லூற் றுவரி தோண்டி" (**பெரும்பாண்.** ௯௭ - அ); "குடம்புகாக் கூவற் கொடுங்கானம்" **சிலப்.** ௨௯: காவற்பெண்டுசொல்.

௨. விற்போராகிய உழவுத் தொழிலால் வாழும் வாழ்க்கையையுடைய தலைவன்; "வில்லுழுதுண்மார்" (புறநா. ௧௭0.) மதவென்பது வலியை யுணர்த் துவதோ ருரிச்சொல; மதவலி - மிக்க வன்மையையுடைய தலைவன்; "மதவலி விடுப்பவேகி" சீவக. ௨0௪.

௩. மிகவறுமையையுற்றானாயினும். ௪. ஞெலியும் - கடையும்.

௪-௫. "இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்து". (புறநா. ௩௨௪: ௧௧.) "இடையன்......ஞெலிகோற்கொண்ட பெருவிறல் ஞெகிழிச் செந்தீ" **பெரும் பாண்.** ௧௭௫ - அ.

அ. பந்தரில். முறை - வரிசை; "முறையினுண்ணு நிறையாவாழ்க்கை" **புறநா.** ௩௨௫: ௬.

௯. மகடூஉ - மனைவி; **புறநா.** ௩௩௩: அ.

௬-௯. "குடநீ ரட்டுண்ணு மிடுக்கட் பொழுதும்,கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங், கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி, மாதர் மனைமாட்சி யாள்" **நாலடி.** ௩௮௨.

௯ - ௧௩. **புறநா.** ௩௩௪: எ - ௧௧.

(பி - ம்.)—1 'நீணெடுபந்தருண்' 2 'தூஉவும்' 3 'உறையூர்முதுகூத்தன்'

(கூகூஉ.) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
1 யிரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
2 குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு
ரு மங்கல மகளிரொடு மாலை 3 சூட்டி
யின்குர 4 லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் 5 செல்லினுஞ் 6 செல்லுமாங்
கிருங்கடற் றானை வேந்தர்
க0 பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே.*

**திணையும் துறையும் அவை.**

**7 விரியூர் நக்கனார்.** (கூகூஉ)

---

க. நீறு - புழுதி. ௨. குரம்பை - சிறுகுடிலின்.

௬. குரல் - மகளிர்இசை. இரும்பை - பெரியபை; யாழுறை. ததும்ப - ஒலிக்க.

எ. படு - மடு. க0. செலவு ஆனாது - செல்லுதல்தவிராது.

* 1p. பாடாண்டிணைத் துறைகளுள், 'மாணார்ச்சுட்டியவாண்மங்கலம்' என்பதற்கு இதனைமேற்கோள்காட்டினர் இளம்பூரணர் (தொல். புறத்திணை சூ-௩0); உழிஞைத்திணைத்துறைகளுள் 'வென்றவாளின்மண்ணல்' என்பதற்கு "ஒன்றெனமுடித்தலான் இருவர்வேற்குஞ் சிறுபான்மை மண்ணுதல கொள்க" என விசேடவுரைகூறி இதனை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; ஷை ஷை சூ. க௩.

(பி - ம்.)—1 'இரும்புக நீருமாடிக் கலத்திடை' 2 'குரம்பைக் கூனராக் கினுங் கிடக்கு' 3 'சூடி' 4 'இகும்பை யாழெடுத்தியம்ப', 'இரும்பெயர்' 5 'சொல்லினுஞ்' 6 'செல்லுங்கண்ணுறின்', செலலுமாங்குகடற்றானை' 7 'விரியூகாக்கனார்'

---

(கூகூகூ.) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுய
லுள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளுந்

---

க. உறை - துளி. ௨. மொக்குள் - சேற்றிலெழுந்த கொப்புளம்.

௩. "நெடுஞ்செவிக் குறுமுயல்" புறநா. ௩௩௪: ௨; ௩௩௯: ௪.

க - ௩. "சிறியிலை நெல்லிக் காழ்கண் டன்ன, குருவிழிக்கண்ண கூரலங் குறுமுயல்" அகநா. ௨௮௪: க-௨.

௪. புதல் - புதரில்.

௫ தொள்ளை மன்றத் தாங்கட் படரி
னுண்கென வுணரா வுயவிற் றாயினுந்
[1] தங்கினிர் சென்மோ புலவிர் நன்றுஞ்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லா
௧௦ மிரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து
சிறிது [2] புறப்பட்டன் றோவில டன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு...............
௧௫ ................................... [3] உடும்புசெய்
பாணி நெடுந்தேர் [4] வல்லரோ ரோ
வம்பணி யானை வேந்துதலை வரினு

௫. தொள்ளை - துவாரம்; மன்றம் - இரவலர் தங்குதற்குரியது.

௬. உயவு - வருத்தம்.

௭. சென்மோ - செல்லும்; செல்லுமென்னுமேவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரம்பெற்றுவந்தது; "வருங்குலங் கேண்மோ" (மணி. ௧௩: ௯௩) என்றாற் போல.

௮. மனையோள் - தலைவி (புறநா. ௩௩௧: ௮; ௩௩௪: ௫.) சென்றதற் கொண்டு - வந்ததனால்.

௧௦. தீர்ந்தென - தீர்ந்தனவாக. குறித்துமாறெதிர்ப்பை - குறியெதிர்ப்பை: "குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது" என்பர் (குறள், ௨௨௧ - பரிமேல்); "கூற்றுங், குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே......களிறு" முத்தொள்ளாயிரம்.

௯ - ௧௦. "வரகுந் தினையு முள்ளவை யெல்லா, மிரவன்மாக்களுக் கீயத் தொலைந்தன" புறநா. ௩௨௮: ௩ - ௪.

௮ - ௧௩. "இலைதது படைக்கவும் வல்ல னுள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னு, ணீணெடும் பந்த ரூண்முறை யூட்டு, மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில,வரிசையி னளிக்கவும் வல்லன்", "மனையோள், பாணரார்த்தவும் பரிசில ரோம்பவு, மூணொலி யரவமொடு கைதூவாளே" புறநா. ௩௩௧: ௬ - ௧௦; ௩௩௪: ௫ - ௭.

௧௪. வேட்டக்குடி - வேட்டுவர் வீடு.

௧௫ - ௬. உடும்புசெய்பாணி - உடும்புத்தோலாற் செய்த கைச்சரடு.

௧௭. வம்பு - கச்சு.

(பி - ம்.)—1 'தங்கி நீர்' 2 'புறப்படனறோவிலளே' 3 'உழு இமபு செய்' 4 'வலவரோரேர'

மூண்பது மன்னு மதுவே
பரிசில் மன்னுங் குரிசில்கொண் டதுவே.

**திணையும் துறையும் அவை.**

.................................... (௩௩௩)

கக. கொண்டது பரிசில் - பகைவரோடு போர்செய்ததற்காக அரசரிடம் பெற்றபொருளே பாணர்முதலியோர்க்கு அவன் கொடுக்கும் பரிசிலாகும்.

---

(௩௩௪.) காமரு பழனக் கண்பி னன்ன
தூமயிர்க் குறுந்தாட் னெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்
படப்பொடுங் கும்மே.........பின்பு.........
௫ ..........................னாரே [1]மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில [2]ரோம்பவு
மூணொலி யரவமொடு [3]கைதூ வாளே
யுயர்மருப் பியானைப் புகர்முகத் தணிந்த
பொலம்.................... ............ப்
க௦ [4] பரிசில் பரிசிலர்க் கீய
வுரவுவேற் காளையுங் கைதூ வானே.

**திணையும் துறையும் அவை.**

**மதுரைத் தமிழக்கூத்தனார்.** (௩௩௪)

---

க. கண்பு-ஒருவகைக் கோரை; "கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" (**பெரும்பாண்.** ௨௨௦-௨௧), "களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றார்தர" (**மதுரை.** ௧௭௨), "கண்பமல் பழனங் கமழ" (**மலைபடு.** ௪௫௪), "கண்பகத்தின் வாரணமே" **தே.** திருஞா. தோணிபுரம், "வண்டரங்க" ௩.

௨. **புறநா.** ௩௩௩ : ௩.

௪. படப்பு - படப்பை ; வைக்கோற்போர்.

௩ - ௪. "புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்......மன்றிற் பாயும் வன்புலத் ததுவே" **புறநா.** ௩௨௨ : ௪ - ௬.

௬. ஆர்த்த-நிறைய உண்பிக்க; "ஏதிலா ரார்த் தமர்பசிப்பர்" **குறள்,** ௮௩௭.

௭. ஊணொலியரவம்-ஊணாலுண்டாகிய ஆரவாரம்; "புள்ளிமிழ்ந் தன்ன வூணொலியரவம்" (**புறநா.** ௧௭௩ :௩-௪.) கைதூவாள் - கையொழியாள்; "கள்ளுண வாட்டியுங் கைதூவாளே" **புறத்திரட்டிற்கண்டது இது.**

(௫) மனையோள் (௭) கைதூவாள். கக. காளை - தலைவன்.

௮ - கக. "அண்ணல்யானை யணிந்த, பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே" **புறநா.** ௩௨௬: க௪- ௫.

(பி - ம்.)—1 'மனையோர்' 2 'ஓம்பும்' 3 'கைத்தூஉவாளே' 4 'பரிசிலர்'

(௩௩௫.) அடலருந் துப்பின்....................
....................குருந்தே முல்லையென்
றிந்நான் கல்லது பூவு மில்லை
கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
௫ சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ
டிந்நான் கல்ல துணவு மில்லை
1 துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை

---

க. துப்பு-வலி. ச. "வன்பாலாற் கருங்கால் வரகின்" புறநா. ௩௮௪: ௪.
எ - அ. "இனிப் பலவயினானும்......முடிபின செய்யுளுளவே, சில
வயினான் அஃறிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணை முடிபிற்றாகலு
முண்டு, செய்யுளகத்து ; உ - ம் : 'பாணன்......குடியுமில்லை' எனவரும்"
(தொல். கிளவி. சூ. ௫௧ - இளம்); "பலவயினானு மென்றதனாற் சிலவயினாற்
றிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணையான் முடிவனகொள்கவென்
பது; உ-ம்: 'பாணன்பறையன்......குடியுமில்லை' எனவரும்" (ஷ ஷ ஷ
௫௧ - கல்.) "பாணன்......குடியுமில்லை' என......உரையாசிரியர் கூறினரா
லெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கு
ஏற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை
யென்க ; குடியென்று சுட்டாதவழிப் பாணன்பறையன்றுடியன் கடம்ப
னென்று அந்நாலவருமல்லது குடியில்லையென்றேயாம்" (ஷ ஷ ஷ௫௧-
சே); "பாணன்பறையன்......குடியுமில்லையென்றது பாண்குடி பறைக்குடி
யெனக் குடியைச்சுட்டிநில்லாதுபாணன்பறையன் எனப்பால்காட்டி நிற்றலான்
உயர்திணைப்பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்" (ஷ ஷ
ஷ ௫௧ - ந); "பாணன் பறையன்......குடியுமில்லை: என்பது உயர்திணை
அஃறிணையான்முடிந்தது ; இவ்வழு யாண்டு அமைக்கப்படுமோவெனின், அது
வழுவாயினன்றே அமைக்கவேண்டுவது; குடியென்பதனை எல்லாவற்றோடுங்கூட்
டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (நன். மயிலை. சூ. ௩௭௭); "பாணன்
...குடியுமில்லை: என உயர்திணையெண்ணி அஃறிணை முடிபாயினவாய வழு
யாண்டமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதலானோடும் கூட்டி
யுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (நன் - வி. சூ. ௩௭௮); "பாணன்...
குடியுமில்லை: எனத் திணை விரவாது உயர்திணையானெண்ணி அஃறிணையான்
முடிந்த இவ்வழு யாண்டமைக்கப்படுமோ வெனின், பாணன் முதலாயினாரைக்
குடியென்று சுட்டியவழிக்குடிக்கேற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான்
அமைத்தல் யாண்டையதென்க" (இ - வி. சூ. ௨௬௮ - உரை); "மக்கட்சுட்
டென்புழி......அங்ஙனமுணர்த்திற்றேல், பாணன்......குடியுமில்லை : என்
புழிப்பாணன்முதலியனபோல மக்களென்பது ஆண்டு அஃறிணைச்சொல்லாதல
வேண்டும் ; வேண்டவே, 'அஃதலபிறவே' என அஃறிணைச்சுட்டுப்பெயராற்
கூறுது, 'அவரலபிற' என்றல திணைவழுவாய் முடியுமாதலின் அஃதாசிரியர்
கருத்தன்றென்றொழிக" தொல். சூத்திரவிருத்தி.

(பி - ம்.)—1 'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்று'

யொன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
க0 யொளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே.

**திணையும் துறையும் அவை.**

**1 மாங்குடிகிழார்.** (ருருரு)

---

**க0. புறநா.** ருOக: சு-ஆம்அடிக்குறிப்பைப்பார்க்க.

**கக - உ.** 'பரவுதல்' என்னுமுரிச்சொல் வழுத்துதலாகிய குறிப்புணர்த்தி யதற்குமேற்கோள்; **தொல். உரி. சூ.** அசு - **சே** ; ஷை ஷை ஷை அச - **ந**; **இ - வி. சூ.** உஅக - உரை.

**(பி - ம்.)**—1 'மாறு குடிகிழார்'

---

(ருருசு.) வேட்ட வேந்தனும் [1]வெஞ்சினத் தினனே
[2] கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யா
ளொளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறு கடிமரஞ் சேரா சேர்ந்த
ரு வொளிறுவேன் மறவரும் [3]வாய்மூழ்த் தனரே
யியவரு மறியாப் பல்லியங் கறங்க
வன்னோ, பெரும்பே துற்றன் [4]றிவ் வருங்கடி மூதா
ரறனிலண் மன்ற தானே விறன்மலே
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
க0 முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் [5]பண்பி லாயே.

**திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.**

**பரணர்.** (ருருசு)

---

**க.** வேட்ட - மணஞ்செய்ய விரும்பிய. **உ.** கழிப்பு - கழித்தலை.

**க - உ. புறநா.** ருசசு : க - ரு.

**ச.** கடிமரம் - காவன்மரம். **ரு.** மூழ்த்தனர் - மூடினர் ; முகிழ்த்தனர்.

**சு.** இயவர் - வாச்சியக்காரர்.

**எ.** பெரும் பேதுற்றன்று - பெரிய மயக்கத்தையடைந்தது.

**அ.** மன்ற - நிச்சயமாக. **க0.** முகை - அரும்பு.

**கக.** நகை - மகிழ்ச்சி. (கஉ) தாய் (அ) அறனிலள்.

**(பி - ம்.)**—1 'பெருஞ்சினத்தனனே' 2 'கெடவனகழிப்பிவள்' 3 'வாயுமூழ்த்தனரே' 4 'இலலங் கடிமூதூரறனிலமனற' 'பண்பிற்றாயே'

(௩௩௭.) [1] ஆர்கலி யினனே சோணாட் டண்ணல்
கவிகை மண்ணாள் செல்வ ராயினும்
வாள்வலத் தொழியப் [2]பாடிச் சென்றார்
வாறொ கமலர.................................
௫ வீத லாற்ற விலங்குதொடித் தடக்கைப்
பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
௧௦ வகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
கபில [3]நெடுநகர்க் கமழு நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
யற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறுங்
௧௫ கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானார் வேந்தர் [4]தன்னையர்
பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
குருதி பற்றிய வெருவரு [5]தலையர்
மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென
௨௦ யாரா குவர்கொ றாமே நேரிழை

௧. அண்ணல் - தலைவன். ௫. ஈதல் ஆற்ற - கொடுத்தல் தவிராத.

௬. "பாரி பறம்பிற் பனிசசுனைத் தெண்ணீர்" (௧௭௬) என முன்னும் இச்சுனை பாராட்டப்பட்டுள்ளது.

௨ - ௬. அரசராக இருந்தாலும் போர்செய்தலை யொழித்துப் புகழ்ந்து பாடிக்கொண்டுவருவாராயின், அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்குமியல் பினனென்று பாரியின்கொடைச்சிறப்புக்கூறினர்; புறநா. ௧௦௬ - ஆம்பாட்டா லும் விளங்கும்.

௬ - ௭ "பொன்னணி திகிரியஞ் செல்வன்பொற்புடைக், கன்னியமகளிரிற் காண்டற் கரியன, நன்மணி புரிதகன வாயில் நான்குள" சீவக. ௧௨௦௩.

௮. பெண்மை - அமைதித்தன்மை; சீவக. ௩௫௬ - ந.

௯ - ௧௦. விரிந்ததுகில புகைக்குவமை.

௧௧. பாடினோர்பெயர் இதிற்குறிப்பிக்கப்பெற்றுள்ளது.

௧௨. வாணுதல - கன்னி. ௧௪. தீற்றி - உணபித்து; சீவக. ௩௧௦௫.

௧௬. வேந்தர் - மணம் பேசவந்த அரசர். தன்னையர் - தமையன்மார்.

(பி - ம்.)— 1 'ஆர்கலிவினனே சேணாட்டண்ணல்' 2 'பாடிச்சேரார்' 3 'நெடுநககா' 4 'தன்னையலர்' 5 'தலைய'

யுரித்தல் பல்சுணங் கணிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையும் துறையும் அவை.
கபிலர். (௩௩௭)

---

உக. உரித்துஅல் - உரியதல்லாத.
உஉ. ஞெமுக்குவோர் - அழுத்துவோர்; சீவக. உ௫௫௨.

---

(௩௩அ.) ஏர்பரந்தவய னீர்பரந்தசெறுவி
னென்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்
படுவண் [1] டார்க்கும் பன்மலர்க் காவி
னெடுவே ளாதன் போந்தை யன்ன
௫ பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்று
மலைந்த [2] சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன்வண் டோட்டுப்
க0 பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
[3] றுணங்குகல னாழியிற் றோன்று
மோரெயின் மன்ன னொருமட மகளே.

---

ச. போந்தை - ஓரூர்.
௫. கொண்டிச்சீரள் - மிகுதியான சீரையுடையள்; "அன்பதாய்க், கொண்டி யாயின வாறென்றன் கோதையே" தே. திருநா. திருவாரூர், 'கொக்கரை' எ.
௬. ஆர் - ஆத்தி. போந்தை - பனை.
௫ - ௬. கருஞ்சினைவேம்பு: "கருஞ்சினை, யரவாய்வேம்பு" பொரு௩. க௪௩ - ௪.
அ. கொற்றம் - அரசுரிமை. தற்றக - தனக்குத்தக.
௬ - க விரும்புவோர் பாண்டியன்முதலிய முடிமன்னர் மூவராயிருப்பினும் தன்னைவணங்கார்க்குத் தன்மகளை ஈவானல்லன் இவன்.
க0. கதிர் - நெற்கதிர்.
கக. உணங்குதல் - உலர்தல. கலன் - கப்பல்; ஆழி - கடல்.
கஉ. எயில - மதில், ஓரெயின்மன்னன்: அகநா. ௩௭௩: க௮.
க0 - கஉ. சூழ்ந்தகழனிக்குக் கடலும் எயிலுக்குப் புறமுலர்ந்த கப்பலும் உவமம். "மருதநிலத்து மதிலாதல்,....அகநாடுபுக்கவருப்பம் வெளவி எனப்

(பி - ம்.)—1 'ஆர்க்குங்காவிற்பஃனி, நெடுவேலாதன்' 2 'சென்னியா ரணிந்த' 3 'உணங்குக னாழியிற', 'உணங்குகாழியிற்'

திணையும் துறையும் அவை.
குன்றூர்கிழார்மகனார். (௩௩௮)

பாட்டிற் கூறியவாற்றானும், பிணங்குகதிர்க் கழனி...மன்னனென்றமையானும் ...உணர்க'' தொல். புறத்திணை. சூ. ௬. ந.

---

(௩௩௯.) வியன்புலம் படர்ந்த பல்லா [1] நெடுவேறு
மடலை மாணிழ லசைவிடக் கோவலர்
வீததை முல்லைப் பூப்பறிக் குந்து
குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுய
௫ னெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து
தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்
கடலாடிக் கயம்பாய்ந்து
கழிநெய்தற் பூக்குறூஉந்து
பைந்தழை துயல்வருஞ் செறுவிறற......
௧௦ ..............................லத்தி
வளர வேண்டு மவளே யென்று
[2] மாரம ருழப்பது மமரிய ளாகி
முறஞ்செவி யானை வேந்தர்
மறங்கெழு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

திணையும் துறையும் அவை.
...................................... (௩௩௯)

---

௧. புலம் - மேய்தற்குரிய நிலம். ௨. அசைவிட - அசையிட.

௧ - ௨. ஏறு அசைவிட.

௩. பூப்பறிக்குநது - பூக்களைப்பறிக்கும்; "புதன்முல்லைப் பூப்பறிக் குந்து" புறநா. ௩௯௨: ௪.

௪. கோலாலெறிநத. ௫. உகளுநது - துள்ளும்.

௬. தொடலை - மணிக்கோவைகளால் தொடுககப்பட்ட மேகலை.

௮. பூக்குறூஉநது - பூக்களைபபறிக்கும்; குறுதல் - பறித்தல்.

௧௨. அமரியளாகி - விரும்பியவளாய்.

௧௩. முறம்போலும் காதுகளையுடையயானை; "முறஞ்செவி வாரணம்" (கலி: ௪௨, சிலப். ௧௦: ௨௪௮); "முறஞ்செவி யானையுந் தேரு மாவும்" மணி. ௧௯: ௧௨௧.

(பி - ம்.)—1 'வெறறி, மடலை' 2 'ஆரமரொழிப்பதுவுமமரிய'

(௩௪௦.) அணித் [1] தழை நுடங்க வோடி [2] மணிப்பொறிக்
[3] குரலங் குன்றி கொள்ளு மிளையோள்
மாமகள்..........................
....................லெண வினவுதி கேளிநீ
௫ [4] வெடுப்பவெ......................
......................மைந்தர் தந்தை
[5] யிரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே.

திணையும் துறையும் அவை.

அ........................ (௩௪௦)

---

க. தழை - தளிர்களாலும் பலவகைப்பூக்களாலும் அமைக்கப்பட்ட ஒருவகை ஆடை; "அம்பூந் தொடலை யணித்தழை" புறநா. ௩௪௧: ௨.

௨. குரலங்குன்றி - குன்றிமணிக் கொத்தினை.

௭. "பனைக்கை மும்மத வேழ முரித்தவன்" தே. திருநா. கோயில். 'பனைக்கை' க.

அ. கரந்தை - ஒருவகைப்பூடு. செறு - வயல்.

௭ - அ. "காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல், வந்திறை கொண்டன்று தானை" பதிற். ௪௦: ௫ - ௬.

(பி - ம்.)—1 'தழைத்துடங்க' 2 'பணிப்பொரி' 3 'கூறலங்குன்றி' 4 'யெடுப்ப' 5 'மிருபனை', 'இருபனை'

---

(௩௪௧.) வேந்து குறையுறவுங் கொடாஅ னேந்துகோட்
டம்பூந் தொடலை [1] யணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி [2] னிளையோ டந்தை
யெழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவி

---

க. வேந்து - அரசன். குறையுறவும் - கேட்பவும். கோடு - பக்கம்.

௨. தொடலை - மாலை; "தொடலைக்குறுந்தொடி" (குறள், ௧௧௩௫. பரிமேல்.) தழை: "அணிற்தழை நுடங்கவோடி" புறநா. ௩௪௦: க.

(௩) தந்தை (க) கொடான்.

௪. 'எழு' இன்னதென்பது "எழுவுஞ்சீப்பும்" (சிலப். ௧௫: ௨௧௫) என்பதனுரைகளால் அறியப்படும்; "சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக், காப்புள் ளுறுத்த கடிமதில் வாயில்" பெருங். க: ௪௩, ௧௬௩-௪.

(பி - ம்.)—1 'அணிந்ததழை' 2 'இளையோடாதை'

ரு னரைம ணிஞ்சி நாட்கொடி [1] நுடங்கும்
..................................
புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
[2] பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
கo [3] விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு [4] வைக லாகுத லொன்றோ
வாரம ருழக்கிய மறங்கிளர் முன்பி
[5] னீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
கரு [6] வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குருசி லாயிடைக்
[7] களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
[8] பெருங்கவி னிழப்பது கொல்லோ
[9] மென்புனல் வைப்பினித் தண்[10]பணை யூரே.*

திணையும் துறையும் அவை.

பாணர். (ருசுக)

ரு. அரைமண் இஞ்சி - அரைத்த மண்ணால அமைக்கப்பட்டமதில். நாட் கொடி - நல்லநாளிலே கட்டினகொடி ; நாடோறுஞ்செய்த வெற்றிக்குக்கட்டின கொடியுமாம் ; "நாட்கொடிநுடங்கும் வாயில" (சிலப். கரு: உகள - அ) ; "நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி" மதுரை. ருகூஅ.

எ. கடுங்கட்சுற்றம் - வீரச்சுற்றம் ; "வயப்புலி போலத், துஞ்சாக் கண்ணர்" (மதுரை. சுசஙு-சு) ; "கொடுவரி கூடிக் குழூக்கொண் டனைத்தால்... ...நிணநிரை வேலார் நிலை" (பு - வெ. க: கூ), "மைதோய்வரையி னிழியும் புலி போல மைந்தன், பெய்தாம மாலைப் பிடியினிழிந் தேகி" (சீவக. உகஙரு) என்பவற்றிலும் வீரர்க்குப் புலி உவமிக்கப் பட்டிருத்தலகாண்க. [கெழுந்த.

அ. மாற்றம் - மாறுபட்டுச் சொல்லுஞ்சொல. மறலிய - போர்செய்தற் கூ. போர்க்குரிய பூவை அணிந்துகொண்டு போருக்குப் புறப்படுக வென்று தன்வீரரை ஏவிவிட்டுத் தான்நீராடுதற்குப் பொய்கையின்கட்புகுந் தான்; போர்செய்தற்குப் புறப்படுமுன் அரசர் நீராடல் மரபு; புறநா. எகூ: க-ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

கo. வேளா - மணஞ்செய்யப்படாத.

கச. எஃகம் - வேல. கரு. வாராவுலகம் - வீரசுவர்க்கம்.

கஉ, ரு. ஒன்றோ, ஒன்று: எண்ணிடைச்சொல்; புறநா. ருசச: ச - சு.

(கக) ஊர் (கஅ) கவினிழப்பது கொலலோ.

* இச்செய்யுளின் பொருள், நொச்சித்திணைக்கண்ண தாகிய மகண்மறுத்து மொழிதல என்னுந்துறைக்கும் இடனாகின்றது.

(பி - ம்.)—1 'நுடங்கப்' 2 'பூககொளெனபகயமபுக' 3 'வயங்கிழைப் பொலிந்த வே...ா' 4 'வைகலாகுக வொன்றோ' 5 'நேரிலையெஃகம்' 6 'ஓரா வுலகம்' 7 'களிறுபொற கலங்கிய மதகயம்' 8 'பெருமகவனிழப்' 9 'மென்புல வைப்பின்' 10 'பனையூர்'

(௩௪௨.) கானக் காக்கைக் கலிச்சிற கேய்க்கு
மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமக
ளேனோர் மகள்கொ லிவளென விதுப்புற்
றென்னொடு வினவும் வென்வே னெடுந்தகை
௫ திருநயத் தக்க பண்பினிவ ணலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே
பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை
1 மென்சேற் றடைகரை 2 மேய்ந்துண் டதற்பி
னாரல் லீன்ற வையவி முட்டை
௧௦ 3 கூர்ந விறவின் பிள்ளையொடு பெறூஉந்
தண்பணைக் கிழவனிவ டந்தையும் வேந்தரும்
4 பெறாஅ மையிற் பேரமர் செய்தலிற்
கழிபிணம் பிறங்குபோர் பழிகளி றெருதா
5 வாடக வைகலு 6 மூழக்கு
௧௫ மாட்சி யவரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.
அரிசில்கிழார். (௩௪௨)

---

௧. கலிச்சிறகு - தழைத்தலையுடையசிறை.

௨. மயிலை - இருவாட்சி.

௩. ஏனோர் மகள்கொல் - யாவருடைய மகளோ? விதுப்புற்று - விரைந்து; "கண்விதுப்பழிதல்" (குறள், அதி. ௧௧௭) என்பதன் பொருளாலுணர்க.

௪. நெடுந்தகை, விளி.

௫. நயத்தக்க - விரும்பத்தக்க. நலன், எழுவாய்.

௬. பொருநர் - போர்வீரர். ௭-௮. கொக்கின்பிள்ளை மேய்ந்தபின்.

௯. ஆரல் - ஒருவகைமீன். ஐயவி - வெண்சிறுகடுகு. ஆரல்மீன் முட்டைக்கு ஐயவியுவமை.

௧௦. இறவு - இறாமீன்.

௧௧. தண்பணை - மருதநிலம். கிழவன் - உரியவன்.

௧௩. போர்பு-போர். களிறு எருதாக: "படுபிணப் பல்போர் பழிய வாங்கி, யெருதுகளிறாக வாண்மட லோச்சி" புறநா. ௩௭௦: ௧௫ - ௬.

௧௪. வாள்தக. ௧௫. தன்னைமார் - தமையன்மார்.

(பி-ம்.)—1 'மென்சொற்றடைகரை' 2 'மேயத்தூண்கற்பினால்', 'மேய்ந்துண்டகற்பினுஅலீன்ற' 3 'கூனலிறவு' 4 'பெருமையின்மையிறபேரமர்' 5 'வாடகை வைகலு' 6 'உழக்கி மாட்சியிலர்'

(௩௪௩.) மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
[1] மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்[2] சும்மைய கரைகலக்குறுந்து
௫ கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
௧0 [3] முழங்குகடன் முழவின் [4] முசுறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் [5] வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட விறுத்த வேணி யாயிடை
௧௫ வருந்தின்று [6] கொல்லோ தானே பருந்துயிர்த்

---

௧. நொடுத்து - விற்று; "நொடை - விலை; மீனொடுத்து நெற்குவைஇ யென்றார் புறப்பாட்டினும்" சிலப். ௫: ௨௪, அடியார்.

௨. அம்பி - தோணி. மறுக்குந்து - மறுகசெய்யும்.

௩. கறிமூடை-மிளகுபொதி; "பொதிமூடைப் போரேறி" பட்டின. ௩௩௭.

௪. கலிச்சும்மைய - மிக்கமுழக்கத்தையுடைய. கலக்குறுந்து - கலக்கும்.

௫. கலம் - கப்பல். பொன்பரிசத்தை.

௬. தோணி -ஓடம். சேர்க்குந்து - சேர்க்கும்.

௭. தாரம் - பலபண்டம். ௮. தலைப்பெய்து - கலந்து.

௯. புனலங்கள்ளென்றது, கள்ளின் மிகுதிபற்றி. குட்டுவன் - குட்டநாட்டையுடையவன்; "போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ" (பதிற். ௨௩: ௯.) 'பொன்' என்பது 'பொலம்' என்று செய்யுட்கண் வருமென்பதற்குப் பொலந்தார்க்குட்டுவனென்பது மேற்கோள்; தொல். புள்ளி. சூ. ௬௧ - ந.

௧0. முசுறி - சேரநாட்டிலுள்ளதோர் ஊர்.

௯ - ௧0. கள்ளினையுடையமுசுறி.

௧௨. புரையர் - ஒத்தவர். வரையலள் மணஞ்செய்யப்படாள்; "நிரலல் லோர்க்குத் தரலோ வில்" புறநா. ௩௪௫: ௧௪.

௧௪. வாய்ப்பட - வழிப்பட. ஏணி - மதிலிற் சார்த்தி ஏறுதற்குரியது; ...ல்லையுமாம்.

௧௫ - ௬. பருந்து உயிர்த்து இடைமதில் சேக்கும் - பருந்துகள் இடை

(பி-ம்.)—1 'மனைமறுக்குவைஇய' 2'சும்மையகுறுந்து', 'சும்மையக்கு...ந்து' 3'முழங்கடன்' 4'முசிறி' 5'வரையலனி வனலனே' 6'கொல்லெதானே'

திடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுநெ லூரே.

**திணையும் துறையும் அவை.**

**பரணர்.** (௩௪௩)

---

மதிலில் தங்கிஇளைப்பாறும்; "பருந்து பறக்கல்லாப பார்வற் பாசறை", "பருந் திருந் துகக்கும் பன்மா ணல்லில" **மதுரை.** உ௩க, ௫0உ.

---

(௩௪௪.) செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
1 செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து
2 துறைநணி மருதத் திறுக்கு மூரொடு
நிறைசால் விழுப்பொரு டருத லொன்றோ
௫ புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து
பண்பி லாண்மை தருத லொன்றோ
விரண்டினு ளொன்று காமையோ வரிதே
காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி......
கணிமே வந்தவ ளல்குலவ் வரியே.

**திணையும் துறையும் அவை.**

......................**அடைநெடுங்கல்வியார்.** (௩௪௪)

---

க. மஞ்ஞை - மயில். உ. ஓப்பலின் - ஓட்டுதலால்.

௩. துறைநணிமருதம்-நீர்த்துறைக்கு அண்ணிதான மருதமரம் (**புறநா.** க௫௪: க, உ௪௩: ௬ - எ); "மருதிமிழ்ந் தோங்கிய பெருந்துறைத், தண்தந காஞ்சி", "துறைநணி மருத மேறி" (**பதிற்.** உ௩: க௮, உஎ : ௬.) **இறுக்கும்** - தங்கும்.

௪, ௬. ஒன்றோ : எண்ணிடைச சொல்; **புறநா.** ௩௪க: கஉ - ௫.

எ. இரண்டனுள் ஒன்று ஆகும். ௮. காஞ்சிமுறி - காஞ்சித்தளிர்.

(**பி - ம்.**)—1 'செற்றிவளைமகளி ரோம்ப விற்பிறந தெழுத்து' 2 '**துறைநளி**'

---

(௩௪௫.) களிறணைப்பக் கலங்கின, காஅ
தேரோடத் துகள்கெழுமின, தெருவு

---

க. "வினைநவில் யானை பிணிப்ப, வேர்துளங் கிலநம் மூருண் மரனே", "செந்நுதல் யானை பிணிப்ப, வருந்தின மன்னெம் பெருநதுறை மரனே" **புறநா.** ௩௪எ : கஉ - ௩; ௩௪௮ : ௮ - ௬.

க - உ. இவை சீர்கூனுய்வந்ததற்கு மேற்கோள்; **யா-வி.** ஒழிபு. சூ. உ.

1 மாமறுகலின் மயக்குற்றன, வழி
கலங்கழாஅலிற், றுறை, 2 கலக்குற்றன
ரு 3 தெறன்மறவ ரிறைகூர்தலிற்
பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பி
னோவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
கo கருங்கண் கொண்ட 4 நெருங்கல் வெம்முலை
மையல் னோக்கிற் றையலை நயந்தோ
ரளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
5 நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
கரு கழிப்பிணிப் பலகையர் 6 கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவே
7 லின்ன மறவர்த் தாயினு மன்னோ

---

௩. இவ்வடி வஞ்சியடியினிறுதியில 'வழி' எனத் தனிச்சொல் வந்ததற்கு மேற்கோள்; யா - வி. ஒழிபு. சூ. க ; இ-வி. சூ. எ௰க - உரை.

௪. கழாலின் - கழுவுதலால்; வஞ்சியடியின் நடுவில 'துறை' என்பது தனிச்சொல்லாகியும் கூனாகியும் வந்ததற்கு இவ்வடி மேற்கோள் ; யா - வி ஒழிபு. சூ. க, உ ; இ - வி. சூ. எ௰க - உரை.

ரு. இறைகூர்தல் - தங்குதல்.

சு. பொறை - பாரம். எ. வம்பவேந்தர் - புதியஅரசர்.

சு - எ. சேனைப்பாரத்தால் நிலம்நெளிதல் : (புறநா. உ௩: கரு); "கார் விளைமேகமன்ன...நிலநெளி பரந்தவன்றே" சீவக. ௬௩௩.

அ. கைகவரிரும்பு - உலைத்துருத்தியின் வாயிரும்பு.

க௩. செருப்புகல் வேண்டி-போரை விரும்பி ; "போரெனிற்புகலும் புனைகழன் மறவர்" புறநா. ௩க: சு.

கச. நிரல் - வரிசை. தருதலில்லையென்று ; புறநா. ௩௪௩: கஉ.

கரு. கழிகளாற்கட்டப்பட்ட கேடகத்தையுடையர் ; "வள்ளித்தண்டை" (சீவக. உஉகஅ) என்பர். கதுவாய-வடு ; "எதிர்நிலை முறிந்த கதுவாய் வேலின்" புறநா. ௩௪எ: ச.

கஎ. கழாத்தலையர் - கழுவாத தலையினையுடையர்.

(பி - ம்.)—1 'மாவழங்கலின்' 2 'கலக்கானுதே' 3 'செறண்மறவர்' 4 'நெருங்கண்வெம்முலை', 'நெடுங்கண்மென்முலை' 5 'நீரலல்லோர்க்குந்தரல்' 6 'ததுவாய்' 7 'இன்னம்பிறவர்ததாயினும்'

வென்று வதுகொ ருனே
௨௦ [1] பன்னல் வேலியிப் பணைநல் லூரே.*

**திணையும் துறையும் அவை.**

அவனை அவர். (௩சரு)

---

கக. மு. **புறநா.** ௩சஎ : க.

கஅ - கூ. 'அன்னோ' என்பது இரக்கக்குறிப்புணர்த்தியதற்கு இவ்வடிகள் மேற்கோள் ; **தொல்.** இடை. சூ. ௩ச - ந.

௨௦. பன்னல் - பருத்தி ; "பருத்தி வேலிச் சீறூர்", "பருத்திவேலி... அங்குடிச் சீறூர்" **புறநா.** ௨கக: க; ௩௨ச : எ - அ.

* மு. காஞ்சித்திணைத் துறைகளுள், மகட்பாற காஞ்சிக்கு மேற்கோள் காட்டி, "நிரல்லலோர்க்குத்தரலோவ்ல்லென வென்றலின், அரசர்க்கு மகட்கொடைக் குரியரல்லாத அனைநிலைவகையோர்பாற்பட்டது" என்பர் ; **தொல்.** புறத்திணை. சூ. ௨ச - ந.

(பி - ம்.)—1 'பன்னெல் வேலி'

---

(௩சசு.) பிற...............ளபாலென மடுத்தலி
னீன்ற தாயோ வேண்டா ளல்லள்
[1] கல்வியெ னென்னும் வல்லாண் சிறாஅ
[2] னொல்வே னல்ல னதுவா யாகுத
ரு லழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கற
பேணுநர்ப் பெறாஅது விளியும்
புன்றலைப் பெரும்பாழ் செயுமிவ ணலனே.

**திணையும் துறையும் அவை.**

**அண்டர்மகன்குறுவழுதி.** (௩சசு)

---

௩ - ச. தன்மையின்கட் படர்க்கைவந்ததற்கு இவ்வடிகள் மேற்கோள் ; **நன். மயிலை.** சூ. ௩எகூ; **நன் - வி.** சூ. ௩அ௦; **இ - வி.** சூ. ௩௦௦-உரை.

(பி - ம்.)—1 'கலவியென்னும் வல்லான்' 2 'ஒல்வ...ாதுகுடியே'

---

(௩சஎ.) உண்போன் றுனறுங் கள்ளி னிடச்சில
நாவிடைப் [1] பஃறோர் கோலச் சிவந்த
வொளிறொள வாடக் குழைந்தபைந் தும்பை
யெறிந்திலை முறிந்த [2]கதுவாய் வேலின்

ச. கதுவாய்வேல் - வடுப்பட்டவேல்; "கதுவாய் போகியதுதிவாயெஃக மொடு" **புறநா.** ௩௫௩: கரு.

(பி - ம்.)—1 'பஃறொகொலச்' 2 'கதுவாய்நேமி', 'கதுவாய் வாளர்'

௫ மணநாறு மார்பின் மறப்போ [1]ரகுதை
குண்டுநீர் வரைப்பிற் கூட லன்ன
குவையிருங் கூந்தல் [2] வருமுலை சேப்ப
..............................
வென்ன வதுகொ றுனே......
௧௦ விளங்குறு பராரைய வாயினும் வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப
வேர்துளங் கினநம் [3]மூருண் மரனே.

**திணையும் துறையும் அவை.**

**கபிலர்.** (௩௪௭)

---

௫. அகுதை - ஓருபகாரி; **புறநா.** ௨௩௩: ௩ - அடிக்குறிப்பைப் பார்க்க.
௬. கூடல் - மதுரை. ௯. ூ. **புறநா.** ௩௪௫: ௧௧.
௧௨ - ௩. யானைகட்டினமரம்; **புறநா.** ௩௪௫: ௧; ௩௪௮ : ௮ - ௯.

**(பி-ம்.)**—1 'அஃதை' 2 'வருமுமம வேநதாவினை நவிலயானை பிறணிப்ப', 'மணநாறு மாரபின மறபபொரா‌லெசெபப' 3'ஊருனைமானே'

---

(௩௪௮.) வெண்ணெல் லரிஞர் தண்ணுமை [1] வெரீஇக்
[2] கண்மடற் கொண்ட தீந்தே னிரியக்
[3] கள்ளரிக்குங் குயஞ் [4] சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
௫ வாய்மொழித் [5] தழும்ப னூணூ ரன்ன
குவளை யுண்க ணிவளைத் தாயே
[6] யீனு ளாயின ளாயி னுனது

---

௧. "வெண்ணெலரிநர் தண்ணுமைவெரீஇப்,பழனப் பல்புள் ளிரிய" (**நற்.** ௩௫௦), "வெண்ணெலரிநர் பின்றைத் ததும்புந், தண்ணுமை வெரீஇய தடந் தாணாரை", "வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை, பன்மலர்ப் பொய்கைப் படுபு ளோப்பும்" (**அகநா.** ௪௦,௨௦௪), "வெண்ணெ லரிநர் தண்ணுமை வெ ரீஇச், செங்க ணெருமை யினம்பிரி யொருத்தல்" **மலைபடு.** ௪௭௧ - ௨.

௫. வாய்மொழி - மெய்ம்மொழி. தழும்பன் - ஓர்உபகாரி; வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பனென்றும் இவன்வழங்கப்படுவன்; "பெரும்பு, ணேஎர் தழும்ப னூணூ ராங்கண்" (**நற்.** ௩௦௦); "பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன், கடிமதில் வரைப்பி னூணூர்" **அகநா.** ௨௨௭.

**(பி-ம்.)**—1 'வெரீஇப்பக்' 2 'கண்ணகொண்ட' 3 'கள்ளிரிக்குஞ் சிறுகன வும்' 4 'சிறுமீன்' 5 'தழும்பனூரனன' 6 'ஈனள்'

நிழறொறு நெடுந்தேர் நிற்ப வயின்றொறுஞ்
செந்நுதல் யானை பிணிப்ப
௧௦ [1] வருந்தின மன்னெம் பெருந்துறை மரனே.

**திணையும் துறையும் அவை.**

**பரணர்.** (௩௪௮)

(பி - ம்)—1 'வருதல்மனனெவனெம்'

(௩௪௯.) [1] நுதிவேல் கொண்டு [2] நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையு
நெடிய வல்லது பணிந்து மொழியலனே
யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
௫ றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு [3] சிறுதீப் போல
வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.*

**திணையும் துறையும் அவை.**

**மதுரை மருதனிளநாகனார்.** (௩௪௯)

௪. படிவம் - விரதம்.

௪ - எ: **தக்கயாகப் பரணி,** ௩0௭ - மேற்.

* ு. காஞ்சித்திணைத்துறைகளுள், நிகர்த்துமேல்வந்தவேந்தனொடுமுதுகுடி, மகட்பாடஞ்சியமகட்பாற்காஞ்சியென்னுந்துறைக்கு மேற்கோள்காட்டி, "இது பெருஞ்சிக்கலகிழான் மகட்கொடைமறுத்தது" என்பர் ; **தொல். புறத்திணை.** ரு. ௧௧ - **இளம்** ; ஷெ ஷெ ஷெ உ௪ - **ந.**

(பி - ம்.)—1 'நுதிபல' 2 'நுதலவிளையாதுடை' 3 'செநதீப போலடி'

(௩௫0.) தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
சிதைந்த விஞ்சிக் கதுவாய் மூதூர்
யாங்கா வதுகொ றானே தாங்காது
படுமழை யுருமி னிரங்கு முரசிற்
௫ கடுமான் வேந்தர் காலை வந்தெந்
நெடுநிலை வாயிற் கொட்குவர் மாதோ
[1]பொருதா தமருவ ரல்லர் போருழந்
தடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய

உ. கதுவாய்: **புறநா.** ௩௪ரு: கரு; ௩௪எ: ௪. ௩. யாங்கு - எப்படி?

௪. "இடி முரசியம்ப" **பரி.** ௪: ௧௧.

(பி - ம்.)—1 'பொருந்தாது'

வடிவே லெஃகிற்[1] சிவந்த வுண்கட்
௧௦ டொடிபிறழ் முன்கை யிளையோ
ளணிநல் லாகத் தரும்பிய சுணங்கே.

**திணையும் துறையும் அவை.**

**மதுரையோலைக் கடைக்[2] கண்ணம்புகுந்தாராயத்தனூர். (௩௫௦)**

(பி - ம்.)—1 'சிவந்தபுணகடடொடிமருள முனகை' 2 'கண்ணம்புகு தாாயததனூர்'

---

(௩௫௧.) படுமணி மருங்கின பணைத்தாள் யானையுங்
கொடிநுடங்கு மிசைய தேரு மாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் றானை
௫ வென்றெறி முரசின் வேந்த ரென்றும்
வண்கை யெயினன் வாகை யன்ன
விவணலந் தாரா தமைகுவ ரல்ல
ரென்னு வதுகொ றானே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
௧௦ தேங்கொண் மருதின பூஞ்சினை முனையிற்
[1] காமரு காஞ்சி துஞ்சு
மேமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே.

**திணையும் துறையும் அவை.**

**மதுரைப்படைமங்கமன்னியார். (௩௫௧)**

---

௧. "படுமணி யிரட்டுமருங்கின்" முருகு. ௮௦.
௧ - ௩. புறநா. ௭௨: ௩ - ௫.
௪. "கடலென, வானீர்க் கூக்குந தானை" புறநா. ௧௭: ௩௬ - ௭.
௫. "வென்றெறி முரசின் வேநதர்" புறநா. ௧௧௨: ௪.
௬. எயினன் - ஒருபகாரி ; வாகை - அவனுடைய ஊர்.
௭. தருதல், தந்தையின் தொழில்.
(௫) வேந்தர் (௭) அமைகுவரல்லர்.
௮. என்னுவது கொறானே: புறநா. ௬௩ : ௧௧; ௩௪௫: ௧௬; ௩௪௭: ௬.
௧௦. தேம் - இனிமை. முனையின் - வெறுத்தால்.
௧௧. காஞ்சி - ஒருவகைமரம்.
(௧௨) ஊர் (௮) என்னுவதுகொல் ?
(பி - ம்.)—1 'காமர்காஞ்சில்'

(௩௫௨.) தேஎங்கொண்ட வெண்மண்டையான்
வீ.............................கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து
௫ ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயாற் புனல்வள.........
..................நொடைநறவின்
மாவண் டித்தன் வெண்ணெல் வேலி
௧௦ யுறந்தை யன்ன வுரைசா னன்கலங்
கொடுப்பவுங் கொளாஅ னெ..................
............ர்தந்த நாகிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழு நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலைய டன்னையுஞ்
௧௫ சிறுகோ லுளையும் புரவிெ............
.......................................யமரே.

திணையும் துறையும் அவை.
பரணர்.

(௩(

௧. தேம் - கள்.

௩. அவல் - பள்ளம். குடை-பனமட்டையாற் செய்யப்பட்ட ஒரு கருவி; பனம்பட்டையெனத் தென்னாட்டில் வழங்கும்.

௪. புதற்றளவின்பூ: புறநா. ௩௯௫.

௫. வள்ளி - வளை. ம். புறநா. ௬௩: ௧௨.

௬. குன்று - மணற்குன்று ; எக்கர்.

௮. நொடை - விலை.

௧௦. கலம் - ஆபரணம்.

௯ - ௧௦. தித்தன் - ஒருசோழன் ; உறந்தை-உறையூர்; புறநா. ௩௯௫: ௧௭ - ௮ ; "நொச்சி வேலித் தித்த னுறந்தை" அகநா. ௧௨௨.

௧௨ - ௩. சுணங்கிற்கு வேங்கைப்பூ உவமை.

௧௪. மா - கருமை. தன்னை - தமையன்.

---

(௩௫௩.) ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்கா சணிந்த வல்கு

௧. கம்மியன் - பொற்கொல்லன்.

ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇத்
தருமமொ டியல்வோள் சாய னோக்கித்
ரு தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை
வினவ லானு வெல்போ ரண்ணல்
யார்மக ளென்போய் கூறக் கேளினிக்
குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு
நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை
கo வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத்
தொல்குடி மன்னன் மகளே முன்னாட்
கூறி வந்த மாமுது வேந்தர்க்கு
.................................
.........யுழக்கிக் குருதி யோட்டிக்
கரு கதுவாய் போகிய [1]துதிவா யெஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ண
ரஞ்சுதக வுடையரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.
காவிரிப்பூம்பட்டினத்துக் கார்க்கண்ணனார். (நருந)

ந. ஈகைக்கண்ணி - பொன்னாலாகிய மாலையை ; "ஈகையங்கண்ணி போற் பிணிநெகி ழலர்வேங்கை விரிந்து" கலி. ந உ. தைஇ - அணிந்து.

ரு. நிறுத்திய தேரையுடையாய்; வெருத்த கண்ணையுடையையாய்.

சு. அண்ணல், விளி. அ. போர்பு - போர். குன்று - சிறுமலை.

அ - கூ. காலையிற் போரையழித்துக் கடாவிட்ட தானியக்குப்பைகளை.

கo. அல்குபதம் - இட்டுவைத்துண்ணுமுணவு; "சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்" பறநா. உகூ: உ. மாற்றா - இல்லை யென்னாத.

கஉ. கூறி-மணம்பேசி. கரு. கதுவாய்-வடு. துதி-நுதி. எஃகம் -வேல்.

கசு. பஞ்சி - துகில் ; "நெய்க்கிழி வைக்கப் பட்டார்", "புண்மேற் கிழி போற் றுறத்தல்" சீவக. அகஅ, உகூo.

கஎ. தன்னைமார் - தமையன்மார்.

(பி - ம்.)—1 'நுதிவாய்'

---

(நருச.) அரைசு தலைவரினு மடங்க லானா
நிரைகா ழெஃகம் நீரின் மூழ்கப்

க. அடங்கலானா - அடங்குதலமையாத. உ. காழ் - காம்பு.

உ - ந. மூழ்குதற்கு எஃகத்தையும் தறைபெயர்ப்பான்; மூழ்கல் இங்கே மண்ணுமங்கலமெனப்படும் ; இது பின் நிகழவது ; "நீரேந்தி நெய்ம்மிதந்து

புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
ரு கயலார் நாரை [1]யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யு
மூர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ
சுணங்கணிந் தெழிலிய [2]வணந்தேந் திளமுலை
வீங்கிறைப் பணைத்தோண் மடந்தை
க0 மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

**திணையும் துறையும் அவை.**

**பரணர்.** (நடுச)

---

திணம்வாய்ப்பில்கி யழல்விம்மிப், போரேந்திப் பூவணிந்து புலவுநாறும் புகழ் வேலோன்" (சீவக. உருசகக) என்பதனாலு மறியலாகும்.

உ. கழனிவாயிலிலும் பொய்கையிலும் வாயில் - வழி.

ரு. கயலார் - கயன்மீனை உண்ணுகின்ற. நாரையை உகைத்தவாளைமீன்.

சு. ஒய்யும் - கொண்டுசெலலும். அ. அணந்து - அண்ணாந்து.

கூ. இறை - சந்து.

(க0) மடநோக்கு (எ) ஊர்கவினிழப்பவும் வருவதுகொலலோ.

(பி - ம்.)—1 'உதைத்த' 2 'வணைநதேநது'

---

(நடுரு.) மதிலு ஞாயி லின்றே கிடங்கு
நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளு
மூரது நிலைமையு மிதுவே*
..................................
..................................................
.................................................. (நடுரு)

---

க. ஞாயில் - மதிலின்மேலுள்ள ஏப்புழைக்கு நடுவாய் எய்துமறையுஞ் சூட்டு; சீவக: க0ரு- ந.

* இதன்பின், நஎகூ - ஆம் பாட்டுமுழுவதும் ஆசிரியர் பெயருடன் சில பழைய ஏட்டுப் பிரதிகளில தவறி வரையப்பெற்றுள்ளது.

(௩௫௬.) களரிபரந்து [1] கள்ளி போகிப்
பகலுங் [2] கூவுங் கூகையொடு [3] பிறழ்பல்
ஈம விளக்கிற் பேஎய் மகளிரொ
டஞ்சுவந் [4] தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
௫ நெஞ்சமர் * காதல ரழுத கண்ணீ
ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
[5] வெல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.†

திணையும் துறையும் அவை.

தாயங்கண்ணனார். (௩௫௬)

---

க. களரி - காடு.

உ. புறநா. ௩௬௨ : கஎ-அ ; "நண்டகலுங் கூகை நகும்". பு - வெ. வஞ்சி. ௪.

௩. ஈமவிளக்கு - பிணஞ்சுடும் விறகின் அழல்.

௪. அஞ்சுவந்தன்று - அச்சம் வரப்பெற்றது. முதுகாடு - மயானம்.

௫. அமர்காதலர் - விரும்பியகாதலையுடையமகளிர். ௬. என்பு-எலும்பு.

எ. எல்லாருடைய பிற்காலத்தையும் தான்கண்டு.

அ. மன்பதை-மக்கட்டொகுதி. தானாய்-தானே இருப்பிடமாகி ; "மக்கட் பிணத்த சுடுகாடு" என்றார் ; நாலடி. ௪௨௧.

* இந்நூற் பழையபதிப்பில் இதன் முன்பிருந்தபகுதி சில பிரதிகளில் ௩௭௭ - ஆம் பாட்டின் முதலில் வரையப்பட்டிருந்தமையாலும், இச்செய்யுள் பழையவுரைகளில் இந்த அளவிலேயே மேற்கோளாகக் காட்டப்பட்டிருந்தமையாலும், பொருண் முடிபாலும் இங்ஙனம் பதிப்பிக்கலாயிற்று.

† மு. இச்செய்யுள் காடுவாழ்த்தென்னுந் துறைக்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம் ; ஷை ஷை ஷை ௨௪ - ந.

(பி - ம்.)—1 'கள்ளிபொங்கிப' 2 'கூஉங்' 3 'பிறழ்வால' 4 'அன்றிமஞ்சு' 5 'எல்லாப்'

---

(௩௫எ.) குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
பொதுமை சுட்டிய மூவ ருலகமும்

---

க. குன்று - சிறுமலை. பிணித்து யாத்த - மிக உறுதியாக யாக்கப்பெற்ற.

உ. சுட்டிய - நன்குமதிக்கப்பெற்ற. மூவருலகம் - சேர சோழபாண்டியருடைய நாடுகள் ; 'உலகம்' என்பது பூமியின் ஏகதேசத்திற்கும் வழங்கும் ; "மாயோன் மேய காடுறை யுலகமும்" தொல். அகத்திணை. சூ. ௫.

பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கு
மாண்ட வன்றே யாண்டுக ளணையே
(ரு) வைத்த தன்றே வெறுக்கை வி......
....................................ணை
புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
தொக்குயிர் வெளவுங் காலை
யிக்கரை நின்றிவர்ந் துக்கரை [1] கொளலே.

**திணை - அது ; துறை - ...........பெருங்காஞ்சியுமாம்.**
**பிரமனார்.** (ந(

ந. பொதுமையின்றி-சிறப்பாக. ஆண்டிசினோர்க்கும் - ஆண்டோர்க்கும்

ச-ரு. ஆண்டுகள் - வாழ்நாட்கள். வெறுக்கை துணை வைத்ததன்றே பொருள்வியல துணையாக வைக்கப் பெற்றதன்று; அழியுந்தன்மையதென்றபடி

எ. புணை - தெப்பம். துணை - மனைவி.

அ. கூற்றுவன்தமர் வந்து கூடி உயிரை வெளவுங்காலத்தில்.

கூ. உக்கரை - அக்கரை ; வீட்டுலகம்.

(கூ) கொளல் (எ) அரிது.

(பி - ம்.)—[1] 'கொளவே'

---

(நருஅ.) பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில
மொருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் [1] தூக்கிற் றவத்துக்
[2] கையவி யனைத்து மாற்ரு தாகலிற்
(ரு) கைவிட் டனரே காதல ரதனால்

க. பருதி - சூரியன். பயம் - பிரயோசனம்.

உ. பகல்-நாள் ; ஒரு முகூர்த்தமுமாம். எழுவரைத்தலைவராக எய்திய அத்தன்மையையுடையது.

ந. வையம் - பூமி. தூக்கின் - சீர்தூக்கினால்.

ச. ஐயவி - வெண்சிறுகடுகு. ஆற்ருது - சீர் நில்லாது.

ந - ச. தவத்திற்கு வையம் ஐயவியளவும் நிறையொவ்வாது ; " ஏமன் ருலகமோ ரிம்மிப் பாலெனா, நாமவே லரபதி நீக்கி நன்கலந், தூமமார் மாலையு துறக்கின் ருனரோ" சீவக. நOஉஎ.

ரு. காதலர் - வீட்டில் விருப்பமுடையோர்.

(பி - ம்.)—[1] 'தூக்கிற்றவத்திற்கைவ்வையவினைத்தும்' [2] 'ஐயவித் துணையும்'

விட்டோரை [1] விடாஅ டிருவே
[2] விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.*

திணை - அது ; துறை - மனையறம் துறவறம்.
[3] வான்மீகியார். (௩௫௮)

௬. பற்றுவிட்டோரை; "நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டா தான், தன்னையே தான் வேண்டுஞ் செல்வம்" திவ். பெருமாள். ௫. ௯.
௭. விடாதோர் - விருப்பமொழியாதவர்கள்.
*மு. தொல். புறத்திணை. சூ. ௨௧ - ந. மேற்.
(பி - ம்.)—1 'விடாதுதிருவே' 2 'விடாதோரிவண்' 3 'வான்மீகையார்'

---

(௩௫௯.) பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
[1] பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி
௫ விளருன் றின்ற வெம்புலான் [2] மெய்யர்
களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
யீம விளக்கின் வெருவரப் பேருங்
காடுமுன் னினரே நாடுகொண் டோரு
நினக்கும் வருதல் வைகல் லற்றே
௰ வசையு நிற்கு மிசையு நிற்கும்
அதனால், வசைநீக்கி யிசைவேண்டியு
நசைவேண்டாது நன்றுமொழிந்து
[3] நிலவுக் கோட்டுப் பலகளிற்றொடு
பொலம்படைய [4] மாமயங்கிட
௧௫ விழைகிளர் நெடுந்தே ரிரவலர்க் கருகாது

---

௧. பாறுபட - கெட. பறைந்த - தேய்ந்த. ௨. கூகை - கோட்டான்.
௩. பல்ல - பல்லையுடையனவாய். ௪. தழூஉப்பற்றி - தழுவி.
௫. விளர் - வெண்மை. ௮. காடு - மயானம்.
௯. வைகல் - கழிதல, நினக்கும் வைகல் வருதல அற்று.
௰. வசை - பழி. இசை - புகழ்.
௰ - ௧௨. "கெடுவ லெனப் பட்டக் கண்ணுந் தனக்கோர், வடுவல்ல செய்தலே வேண்டு-நெடுவரை, முற்றுநீராழி வரையகத் தீண்டிய, கற்றேயுந் தேயாது சொல்" பழ. ௩௬௪.
௧௪. பொலம்படை - பொற்கலனை. ௧௫. அருகாது - குறையாமல்.
(பி-ம்.)— 1'பேஎமகளிர்' 2'மெய்யகளரி' 3'நிலவுதோட்டு' 4'மாமயக்கி'

கொள்ளென [1] விடுவை யாயின் வெள்ளென
வாண்டுநீ பெயர்ந்த பின்னு
மீண்டுநீடு விளங்குநீ யெய்திய புகழே.

**திணை - அது ; துறை - பெருங்காஞ்சி.**

**[2] அந்துவன்கீரனைக்காவட்டனார்.** (ருடு)

கரு. விடுவையாயின்-கொடுப்பாயாயின் ; 'இடுவை' என்று பிரிப்பி பொருந்தும். வெள்ளென - யாவர்க்கும் தெரிய ; புறநா. உ0எ : கூ.

கஅ. புகழ் நீடுவிளங்கும்.

(பி - ம்)—1 'விடுகையாயினை' 2 'அந்துபன கீரனைததகா நட்டனூர்'

---

(ருசு0.) [1] பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்வினாற் [2] பெருங்கொடையர்
கலுழ்நனையாற நண்டேறலர்
ரு கனிகுய்யாற் கொழுந்துவையர்
[3] தாழுவந்து தழூஉமொழியர்
[4] பயனுறுப்பப் பலர்க்காற்றி
யேம மாக விந்நில மாண்டோர்
சிலரே பெரும கேளினி நாளும்
க0 பலரே தகையஃ தறியா தோரே
யன்னோர் செல்வமு மன்னி நில்லா
தின்னு மற்றதன் பண்பே யதனா
னிச்சமு [5] மொழுக்க முட்டிலை பரிசி
னச்சுவர் கையி [6] னிரப்ப லோம்புமதியச்சுவரப்

உ. ஆல், ஒடு. "பலசொல்லக் காமுறுவர் மன்றமாசற்ற, சிலசொல் தேற்று தவர்" குறள், சுசசு.

ச. கலுழ்நனை - கலங்கியகள்.

ரு. குய் - நறுமணப்புகை. துவை - துவையல்.

சு. தாழுவந்து - வணங்குதலைவிரும்பி. எ. ஆற்றி - கொடுத்து.

க0. தகையஃது - மேற்கூறியதன்மையை.

கஉ. முட்டிலை - குறைபாடில்லாயாய்.

கச. நிரப்பல ஓம்பு - நிரப்புதலைப் பாதுகாப்பாயாக.

(பி - ம்.)—1 'பெரிதாராற சிறு சினததா' 2 'பருங்கொடை' 3 'தாழுவ தழூ உம' 4 'பானுறுப்ப' 5 'ஒழுக்கமும்' 6 'இரபப வோமபுமதியஞ்சுவரப்

கரு [1] பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி [2] போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
[3] புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மே லமர்ந்துண்
உ0 டழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பருத்துண் டோரே.

[4] **திணையும் துறையும் அவை.**

[5] **தந்துமாறனைச் சங்கவருணரென்னும் நாகரியர்பாடியது.** (ருசுo)

---

கசு. **புறநா.** உஉரு : எ ; உசுரு : ரு; ருருசு : க.

கஎ. வெள்ளில் - பாடை. நிறுத்த - நிறுத்திய.

கஅ. புல் - தருப்பை. அவிழ் - பருக்கை ; வல்சி - உணவு.

கஅ. ''உப்பிலிப் புழுக்கல் காட்டுட் புலைமக னுகுப்ப வேகக், கைப்பலி யுண்டு'' (சீவக. உகஅச) என்பதற்கு இவ்வடி மேற்கோள்.

கசு - கூ. **புறநா.** ருசுரு : க0 - கச.

**(பி - ம்.)**—1 'பாறிரை' 2 'பொதியகளரி' 3 'புககலததிட்ட' 4 'இதுவு மது' 5 'தநதுமாரனை'

---

(ருசுக) காரெதி ருருமி னுரறிக் கல்லென
வாருயிர்க் கலமரு மாராக் கூற்ற
நின்வர வஞ்சலன் மாதோ நன்பல
கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்
ரு கருங்கல நீரொடு சிதறிப் பெருந்தகைத்
தாயினன்று பலர்க்கீத்துத்
தெருணடை மாகளிறொடு [1] தன்
னருள்பாடுநர்க்கு நன்கருளியு
முருணடை......................ான்றதன்

---

உ. உயிர்க்கு - உயிரைக் கைக்கொண்டு செல்லுதற்கு. ஆரா - தெவிட் டாத. கூற்றம், விளி.

ந. அஞ்சலன் - அஞ்சான். ரு. கலம் - ஆபரணம். நீர் - தாரைநீர்.

ச - ரு. ''ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப், பூவும் பொன்னும் புனல் படச் சொரிந்து'' **புறநா.** ருசுஎ : ச - ரு.

சு. நன்று - மிக. எ. மா - குதிரையை.

**(பி - ம்.)**—1 'தனருளபாடுநாககு'

௧௦ ருள்சேருநர்க் கினிதீத்தும்
புரிமாலையர் பாடினிக்குப்
பொலந்தாமரைப் பூம்பாணரொடு
[1]கலந்தளைஇய நீளிருக்கையாற்
பொறைமொ.................மாளுேக்கின்
௧௫ கரு வில்லென [2] விலங்கிய புருவத்து வல்லென
நல்கி னுவஞ்சு முள்ளெயிற்று மகளி
ரல்கு லுங்கா வசைஇ மெல்லென
.......................பொலங்கலத் தேந்தி
யமிழ்தென மடுப்ப மாந்தி யிகழ்வில
௨௦ னில்லா வுலகத்து.................மைநீ
சொல்ல வேண்டா.............மூந்தறிந்த
.................................
..............................ஞர்.

(௩௬௧)

௧௨. பொலந்தாமரை - பொற்றாமரை.

௧௪. இருக்கையால் - இருக்கையின்கண்.

௧௫. வல்லென - விரைய; உரிச்சொல்லடியாம். ௧௬. நல்கின் - வேண்டின்.

௧௬-௭. பல்லின் [illegible]: "அமிழ்து பொதி செந்நா அஞ்ச வந்த, வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவை" குறுந். ௧௪.

(பி - ம்.)—1 'கலைந்தவிழிய' 2 'விலங்கியபுருவத்து'

---

(௩௬௨.) ஞாயிற் றன்ன வாய்மணி மிடைந்த
[1] மதியுற ழார மார்பிற் புரளப்
பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்பப்
பொழிலகம் பரந்த பெ...............

௧. ஆய்மணி - ஆராய்ந்தெடுத்த மாணிக்கம்; அழகியமணியுமாம்.

௨. வட்டப்பூண் புரள; மதியுறழாரம் - பிறைவடமுமாம்.

௩. முரசு பலிபெறுதல், இந்நூல் ௫௦ - ஆம் பாட்டாலும் அதன் குறிப்பாலும், "கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை, யாடுநர் பெயர்க்குவந் தரும்பலி தூஉய்" (பதிற். ௧௭), "கோத்தொழில் வேந்தன் கொற்ற முரசம், பெரும்பணைக் கொட்டிலு ளரும்பலி யோச்சி" (பெருங். ௨:௨, ௨௯ - ௩௦) என்பவற்றாலும் அறியலாகும்.

(பி - ம்.)—1 மணியுற ழாரம்'

௫ .................குமம விசய [1]வெண்கொடி
யணங்குருத் தன்ன கணங்கொ டானைக்
கூற்றத் தன்ன மாற்றரு முன்பி
னுக்குரற் காண்பி [2] னந்த ணாளர்
நான்மறைக் குறி........................யி
௧0 னறங்குறித் தன்று பொருளா குதலின்
மருவூர்ந்து மயக்கொரீஇக்
கைபெய்தநீர் கடற்பரப்ப
வாமிருந்த வடைநல்கிச்
சோறு [3] கொடுத்து மிகப்பெரிதும்
௧௫ வீறுசான.................நன்றுஞ்
சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கட்
காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொ
௨0 டில்லென் றில்வயிற் பெயர மெல்ல
விடஞ்சிறி தொதுங்க லஞ்சி
யுடம்பொடுஞ் சென்மா ருயர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல். துறை - பெருங்காஞ்சி.

அவனைச் சிறுவெண்டேரையார். (௩௬௨)

௫. வெற்றியைப் புலப்படுத்தும் வெள்ளிய கொடி; "விசயம் வெல் கொடி யுயரி" (முல்லை. ௯௧); "புலவுப்படக் கொன்று மிகைதோலோட் கொடி" (மதுரை. ௩௮௮-௭௧); "மலை டிப், புகழ்செய் தெடுத்த விறல்சால் நன்கொடி" (மலைபடு. ௫அ௧ - ௨); "வான்றோய் நீர், வெண்டெழு கொடியிற் றோன்றும்" வெல்கொடி" பதிற். ௬௬ : ௧.

௬. அணங்கு உருத்தன்ன தானை - தெய்வங்கள் உருக்கொண்டுவந்தாற் போன்ற சேனை ; உருத்தன்ன - கோபித்தாற் போன்ற வென்றுமாம்.

௭. புறநா. ௫௬ : ௧௧; "கூற்றத் தன்ன மாற்றருமொய்ம்பின்" முருகு. ௮௧.

௧௨. தாணீர் கடலிற் சென்றுபரவ.

௧௩. ஆம் - நீர். அடை - தண்ணடை ; மருத நிலத்தூர்.

௧௭. வாய்வன்காக்கை - வலியவாயையுடைய காகம். கூகை - கோட்டான் ; மு. புறநா. ௨௩௮ : ௩.

௧௭ - ௮. புறநா. ௩௫௬ : ௨ ; "பேஎ ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்" பு-வெ: வஞ்சி. ௪.

௧௯. சுற்றத்தின் மிகுதிகூறியபடி. ௨0. இல்லென்று- இல்லையென்று.

(பி - ம்.)— 1 'வெனகொடி' 2 'அநதணுளிர்' 3 'கொடுக்குமிகப்'

(௩௬௩.) 1 இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் 2 மாநில
முடையிலை 3 நடுவண திடை 4 பிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவல
ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
௫ காடுபதி யாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் 5 சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி 6 யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
௧௦ 7 கள்ளி லேய்ந்த 8 முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க
ணுப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
9 திழிபிறப்பினோ னீயப்பெற்று
௧௫ நிலங்கல னாக விலங்குபலி மிசையு

---

௧. "இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் ஞாலம்" பெருங். ௨: ௧௭,௧௦௫.

௨. உடைமரத்தின் இலை மிகச்சிறியது; "சிறியிலையுடை" புறநா. ௩௨௪: ௪.

௩. "ஒருதா மாகிய பெருமையோர்" (புறநா. ௩௬௬: ௪); "ஒருநீயாகித் தோன்ற" முருகு. ௨௯௪.

௧ - ௩. "இருங்கட லுடுத்த, மண்ணாள் செல்வதது மன்னவ ரேறே" மணி. ௨௨: ௮௦ - ௮௧.

௫ - ௬. புறநா. ௩௬௯: ௧ - ௫.

௭ - ௮. "வீயாது... இல்லையெப் புழியும், வீயாமை நீங்காமைக்கண் வந்தது" குறள். ௨௦௭ - பரிமேல். வி.

௯. மடங்கல் - யமன். மு. புறநா. ௩௬௫: ௨௰. "வருமுகாலன் றின்னிதே" சிறுபஞ்ச. ௨௬.

௧௪. சீவக. ௨௯௮௪ - மேற்.

௧௦ - ௧௪. மு. புறநா. ௩௬௦: ௧௭ - ௯.

௧௪ - ௫. "இழிபிறப்பினோன்...மிசையுமென் புழிப் பெற்றென்னுஞ் செய்தெனெச்சத்திற்கு முடிபாகிய மிசையுமென்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன" தொல். எச்ச. சூ. ருக - ந.

(பி - ம்.)—1 'கருங்கடலுடுத்த', 'இருங்கடற்றானையொடு பெருநிலங் கவைஇ' 2 'மாநிலத்து' 3 'நடுவுபிற......வின்றி' 4 'பெறகொழியத்' 5'சென்று மாயந்தோரே', 'செனறு பாயந்தோரே' 6 'அக்கை' 7 'களளி வேயநத' 8'முள ளிய புறங்காட்டு', 'முளிசுடலை நளிசுடலை', 'முள்ளிக்கள்ளி நள்ளிருஞ் சுடலை' 9 'இப்பிறபபினென்'

மின்று வைகல் வாரா [1] முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.*

[2] திணையும் துறையும் அவை.

..................ஐயாதிச்சிறு [3] வெண்டேரையார். (௩௬௩)

௧௬ - அ. முடிந்தது போன்று முடியாதாகிய புறப்பாட்டு வண்ணத்திற்கு (தொல் செய். சூ. ௨௨௫ - பேர், ந) இவ்வடிகள் மேற்கோள்.

* இச்செய்யுள், 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை' (தொல். புறத்திணை. சூ. ௧௬-இளம்) என்னுந்துறைக்கும், 'வீடேதுவாக வன்றி வீடு பேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக்கூறியது' (தொல். புறத்திணை. சூ. ௨௪-ந.) என்பதற்கும், 'வாயுறைவாழ்த்து' (ஷ செய். சூ. ௧௦௭-இளம்; ஷ ௧௧௨-பேர், ந) என்னும் பகுதிக்கும் மேற்கோள்; "இருங்கடலுடுத்த...... துறந்தே: இதனுள், உப்பிலாஅவிப் புழுக்கலென்பது முதலாக மூன்றடி வஞ்சியடி" (தொல். செய். சூ. ௧௧௨) என்பது இளம்பூரணம்; "உப்பிலாஅ வவிப் புழுக்கல், கைக்கொண்டு பிறக்குநோக்காது" எனவும் காட்டுப ; இவை வஞ்சியடி யெனப்படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடிவருமோவெனின் வாரா, வஞ்சிச்சீர்விரவினல்லது. 'உப்பிலாஅ வவிப்புழுக்கல்' என்பதோவெனின், அது மற்றை இரு சீரடியொடு கூட்டத்துக்காட்டலானும் வஞ்சியடி போன்றது," "உப்பிலாவவிப் புழுக்கல முதலியன வஞ்சியடி" (தொல். செய். சூ. ௬௧. பேர், ந) "இருங்கடல்............................துறந்தே: இதனுள் 'உப்பிலாஅ வவிப்புழுக்கல்' எனவும், 'கைக்கொண்டு பிறக்குநோக்காது' எனவும், 'இழிபிறப்பினோ னீயப்பெற்று' எனவும் வஞ்சியடி விரவி வந்தவாறு" யா - வி. அடியோத்து, சூ. எ; யா-கா. ஒழிபு. சூ. ௪-உரை ; இ-வி. சூ. ௭௪௫ - உரை.

(பி - ம்.)—1 'இன்னசெய்தி நீ முன்னியவினையே' 2 'இதுவுமது' 3 'வெண்டரையார்'

---

(௩௬௪.) வாடா மாலை பாடினி யணியப்
பாணன் சென்னிக் [1] கேணி பூவா
வெரிமரு டாமரைப் பெருமலர் [2] தயங்க

௧. வாடாமாலை - பொன்னரிமாலை. பாடினி - விறலி.

௧ - ௩. புறநா. ௧௧௧: ௧௬ - எ அடிகளையும், அவற்றின் குறிப்பையும், "மங்குல்வானத்துத்திங்களேய்க்கு, மாடுவண்டிமிரா வழலவிர் தாமரை, நீடிரும் பித்தை பொலியசூட்டி, வரைக்கடன் முகந்த பருவவானத்துப், பகற்பெயற்றுளியின் மின்னுநிமிர்ந்தாங்குப், புனையிருங்கதுப்பகம் பொலியப் பொன்னின், றொடையமை மாலை விறலியர் மலைய"(பெரும்பாண். ௪௮௦ - ௮௬) என்பதையும் பார்க்க.

௨ - ௩. கேணி பூவாத்தாமரை - பொற்றாமரைப்பூ; "பனி நீர்ப் பூவா மணிமிடை குவளை" புறநா. ௧௫௩ : எ.

(பி - ம்.)—1 'தெணிபூவா' 2 'கயங்க'

மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
௫ காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
வுண்டுந் தின்று மிரப்போர்க் [1] கீய்ந்து
[2] மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே
யரிய வாகலு முரிய பெரும
௧௦ நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்புங்
[3] கூகைக் கோழி யானாத்
தாழிய பெருங்கா [4] டெய்திய ஞான்றே.

**திணையும் துறையும் அவை.**
**அவனைக் கூகைக்கோழியார்.** (௩௬௪

௪. மைவிடையிரும் போத்து - ஆட்டுக்கிடாய்; "விடைவீழ்த்துச் சூ… இழிப்ப" (புறநா. ௩௬௬ : ௨௦) என்பதையும், புறநா. ௨௬௨ - ஆம் பாட்டின் முதலடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

௮. மகிழ்கம் - மகிழ்வேமாக. ௧௦. அலங்கல் - அசைதல்.

௧௧. பொத்து - பொந்து. கதுமென இயம்பும் - கேட்போர் திடுக்கிட்டஞ்சும்படி சுட்டுக்குவியென்று ஒலிக்கும்; "சாவோர்ப் பயிருங் கூகையின் குர… லும்" மணி. ௬ : ௭௫.

௧௨. கூகை - பேராந்தை ; கோட்டானுமாம். கோழி - காட்டுக்கோழி ; "கூகைக் கோழி வாகைப் பறந்தலை" (குறுந். ௩௯௩.) இவ்வடியால் ஆசிரியருடைய பெயர்க் காரணம் புலப்படுகின்றது.

௧௩. தாழிய பெருங்காடு - பிணங்களைக் கவிக்கும் தாழிகளையுடைய மயானம்; புறநா. ௨௨௮ : ௧௧-ஆம் அடி முதலியவற்றின் குறிப்பைப் பார்க்க. பெருங்காடு : புறநா. ௨௫௦ : ௩.

௧௧ - ௩. "பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை, சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும், கள்ளியம் பறந்தலை" புறநா. ௨௪௦ : ௭-௯ ஆம் அடிகளையும் அவற்றின் குறிப்புக்களையும் பார்க்க.

(௧௩) எய்தியஞான்று (௯) அரியவாகலு முரியவெனக் கூட்டுக.

(பி - ம்.)— 1 'ஈந்தும்' 2 'மகிழகவமமோ' 3 'கூகை கோழியானுந்' 4 'எயதியதஞான்று'

(௩௬௫.) மயங்கிருங் [1] கருவிய விசும்பு முகனாக
வியங்கிய விருசுடர் கண்ணெனப் [2] பெயரிய

௧. கருவி - மின் முதலியவற்றின் தொகுதி.

௨. இருசுடர் - சூரிய சந்திரர்.

(பி - ம்.)—1 'கருவி விசுமபுமுகனைக' 2 'பெரிய'

1 வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் 2 குறட்டின் 3 வயங்குமணி யாரத்துப்
௫ பொன்னந் திகிரி முன்சமத் 4 துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் 5 செல்லா தின்னும்
6 விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
7 வுள்ளேன் 8 வாழியர் யானெனப் பன்மா
௧௦ ணிலமக ளழூத காஞ்சியு
முண்டென 9 வுரைப்பரா லுணர்ந்திசி னோரே.*

திணை - காஞ்சி. துறை - பெருங்காஞ்சி.
10 மார்க்கண்டேயனார். (௩௬௫)

---

௩. வளி - காற்று.
௫. பொன்னந்திகிரி - சக்கரம் ; " பொன்னணி திகிரியஞ் செல்வன்" சீவக. ௧௨௫௩; தொல். குற்றியலுகரப். சூ. ௭௮ - ந. மேற்.
௬. பொருநர் - போர்செய்யும் பகைவரை. முன்பு - வலி.
௭. முன்னோர் - முன்பு ஆண்ட அரசர்கள். செல்ல-வேறுலகத்தையடைய.
௮. விலைநலப்பெண்டிர் - விலைமாதர் ; பரத்தையர்.
௧௦. காஞ்சி - நிலையின்மை ; "நிலமக ளைஞ்சுகை யெறிந்து நையவும்" (சீவக. ௨௨௨௧) என்பதற்கு இவ்வடி மேற்கோள்.
* மு. தொல். புறத்திணை. சூ. ௨௩ - ந. மேற்.
(பி - ம்.)—1 'வழியிடை' 2 'குரட்டின' 3 'வயிரமணியாரததுப' 4 'உருட்டிய' 5 'சொல்லாது' 6 'விலைநற்' 7 'உளனேவாழிய' 8 'வாழியனெனனப' 9 'உரைபபருணாங' 10 'மாாககணடையனுர்'

---

(௩௬௬.) 1 விழுக்கடிப் பறைந்த முழுக்குரன் முரச
மொழுக்குடை மருங்கி னொருமொழித் தாக
வரவெறி யுருமி 2 னுரறுபு சிலைப்ப
வொருதா மாகிய பெருமை யோருந்
௫ தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே
அதனால், அறவோன் மகனே மறவோர் செம்மால்.

---

௧. கடிப்பு - குறுந்தடி. ௩. உரறுபு சிலைப்ப - மிகமுழங்க.
௪. " புறநா. ௧௮: ௩ - ௪; ௩௬௩: ௨ - ௩.
௫. " தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே " புறநா. ௧௬௫: ௧ - ௨.
௬. செம்மால் - செம்மலே, தலைவனே.
(பி - ம்.)—1 'விழுக்கடிபபடைநத' 2 'உரறுபரிலைபப'

..............உரைப்பக் கேண்மதி
நின்னூற்றம் பிறரறியாது
க௦ பிறர்கூறிய மொழிதெரியா
ஞாயிற் றெல்லை யாள்வினைக் குதவி
யிரவி னெல்லை வருவது நாடி
யுரை..............................
உழவொழி பெரும்பக டழிதின் றாங்குச்
கரு செங்கண் மகளிரொடு சிறுதுனி யளைஇ
யங்கட் டேற [1] லாய்கலத் துகுப்பக்
[2] கெடலருந் திருவ..................
மடை [3] வேண்டுநர்க் கிடையருகா
தவிழ்வேண்டுநர்க் கிடையருளி
உ௦ விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப
நீர்நிலை பெருத்த வார்மண லடைகரைக்
காவுதோறும்.........................
மடங்க லுண்மை மாயமோ வன்றே.

திணையும் துறையும் அவை.
தருமபுத்திரனைக் கோதமனார். (ஙசுசு)

---

கூ. ஊற்றம் - வலி. க௦. தெரியா - தெரிந்து.

கக. பகற்காலத்தை முயற்சிக்கு உதவி.

கஉ. வருவது - பின்வருங்காரியத்தை.

கச. உழுத பெரியபகடு வைக்கோலைத்தின்றாற்போல; "உழுத நோன்பக டழிதின் றாங்கு" (புறநா. கஉரு: எ) எ பதையும் அதன் கீழ்க்குறிப்பையும் பார்க்க.

கரு. அளைஇ - கலந்து. கசு. கட்டேறல் - கள்ளின் தெளிவை.

கஅ. இடை - சமயம். அருகாது - குறையாமல்.

ககூ. அவிழ் - சோற்றுப்பருக்கை.

உ௦. விடை - ஆட்டுக்கிடாய் ; (புறநா. ஙசுச: ச.) சூடு-சூட்டிறைச்சி.

உரு. மடங்கல் - யமன் ; ip. புறநா. ஙசுரு : கூ.

(பி - ம்.)—1 'ஆயகாதது' 2 'கெடிலருநதிவே' 3 'வேண்டுநாகடையரு தாதிவிழ்'

(௩௬௭) நாகத் தன்ன பாகார் மண்டிலந்
தமவே [1] யாயினுந் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினு நோற்றோர்க் கொழியு
மேற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
௫ பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி [2] தேறன் மாந்தி மகிழ் சிறந்
திரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
௧௦ வாழச் செய்த [3] நல்வினை யல்ல
தாழுங் [4] காலைப் புணைபிறி தில்லை
யொன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த

---

௧. நாகம் - தேவலோகம்; பவணலோகமுமாம்; தக்கயாகப்பரணியில் 'மாலைநாகமார்பர்' (௭௩௬) என்னுந்தாழிசைக்குஇவ்வடிமேற்கோள்; பாகு-பகுதி; மண்டிலம் - நாடு.

௨. தம - தம்முடையன.

௩. நோற்றோர்க்கு ஒழியும் - தவஞ்செய்தோர்க்கே உரியனவாகும்.

௪. ஏற்ற-யாசித்த. ஈர்ங்கை-குளிர்ந்தகை, புறநா. ௨௫௮: ௫, ௩௬௩: ௧௦.

௫. புனல் - தாரைநீர்.

௪ - ௫. "அந்தணர்க், கருங்கல நீரொடு சிதறி" புறநா. ௩௬௧: ௪ - ௫.

௭. நாரரிதேறல் - பன்னாடையால் வடிக்கப்பட்ட கள்ளின் தெளிவை; புறநா. ௧௭௦: ௧௨.

௬ - ௭. "ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய, தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்து" புறநா. ௨௪ : ௩௧ - ௨.

௮. "பரிசிலர்க் கென்று, மருகா தீயும் வண்மை"; "இரவலர்க், கருகா தீயும் வண்மை"; "இரவலர்க் கருகாது,கொள்ளென விடுவை" புறநா. ௩௨௦: ௧௬ - ௭; ௩௨௯: ௭ - ௮; ௩௫௯: ௧௫ - ௬.

௯. "வேண்டுமென்பது உம்மீற்றான்வந்ததோர் ஏவல கண்ணிய வியங்கோள்; வாழ்தல......வைகல்" சீவக. ௨௦௧-ந; தொல். வினை. சூ. ௨௯-ந; இ - வி. சூ. ௪௬, ௫௦, ௨௩௯ - உரை. மேற்.

௧௨ - ௩. "அந்தண ரருங்கட னிறுக்கு, முத்தீ" (புறநா. ௨: ௨௨-௩) என்பதையும் அதன் கீழ்க்குறிப்பையும், "ஒன்றுபுரி கொள்கை யிருபிறப்பாளர், முத்தீச் செல்வத்து" (சிலப். ௨௩ : ௬௭ - ௮) என்பதையும் பார்க்க.

௧௩. காண் தக - அழகுதக.

(பி - ம்.)—1 'ஆயினுநதமவேயனறி' 2 'தெறறவாது நன மகிழநது', 'தெறறநாணமகிழதுங்குநது' 3 'நாலவினை' 4 'காலத்துத் துணைபிறிது'

கொற்ற 1 வெண்குடைக் கொடித்தேர் 2 வேந்திர்
கடு யானறி யளவையோ 3 விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனினு 4 மிம்மென
வியங்கு மாமழை யுறையினு
முயர்ந்துமேந் 5 தோன்றிப் பொலிகநுந் நாளே.

**திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.**

**சேரமான்மாரி 6 வெண்கோவும், பாண்டியன் கானப்பேர் 7 தந் உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார்.** (ருசுஎ)

கச. கொற்றம் - அரசவுரிமை.

கரு - அ. "இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக், கொண்டன் மாமழை பொழிந்த, நுண்பஃ றுளியினும் வாழிய பலவே" புறநா. ருச: உக - ரு ருஎக: உச - ரு.

(பி - ம்.)—1 'நீள்குடை' 2 'வேந்தர்' 3 'இவவெ' 4 'இமமெனபபராந் யஙகுமாமழை' 5 'தொணடுமபொலிக' 6 'வெள்கோவும்' 7 'கடந்த'

---

(ருசுஅ) களிறு முகந்து பெயர்குவ மெனினே
யொளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்
கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன
1 கொடுஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
ரு கடும்பரி நன்மான் வாங்குவயி னொல்கி
நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே
கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே
2 மெய்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
வளிவழக் கறுத்த வங்கம் போலக்
க0 குருதியம் பெரும்புனல் கூர்ந்தனவே யாங்க
3 முகவை யின்மையி னுகவை யின்றி

க - உ. புறநா. கஅஎ: ச; ருசுகூ: உச - எ.

எ. சுவல் - பிடரி. அ. பெரும்பிறிது - மரணம்.

கூ. காற்றால் போக்குதலொழிக்கப்பெற்ற கப்பலைப்போல ; "வழக்கு மாறு கொண்டு" (கலி. க0க) என்பதற்கும், "வழக்குநெறிமாயம்" (சீவக. உஅஎரு) என்பதற்கும் இவ்வடி மேற்கோள்.

கக. முகவை - முகந்து செல்லும்பரிசில் (புறநா. ருசுகூ:உஎ); உகவை - உகத்தல்.

(பி - ம்.)—1 'கொடிஞ்சி' 2 'மெயசிறைகதடு வாடுபெரும பிறிதாகி வழககறுத்த' 3 'முகவையினமையினறி'

யிரப்போ ரிரங்கு மின்னு வியன்களத்
தாளழிப் படுத்த வாளே ருழவ
கடாஅ யானைக் [1] கால்வழி யன்னவென்
கரு றெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றிப்
பாடி வந்த தெல்லாங் [2] கோடியர்
முழவுமரு டிருமணி [3] மிடைந்தநின்
[4] னரவுற ழார முகக்குவ [5] மெனவே.

திணை - வாகை ; துறை - மறக்களவழி.

சேரமான் குடக்கோநெடுஞ்சேரலாதன் சோழன்[6] வேற்பஃறடக் கைப்பெருநற்கிள்ளியொடு போர்ப்புறத்துப்பொருதுவீழ்ந்தாரங்கழத்தன் னதாக உயிர்போகாது கிடந்தானைக் கழாத்தலையார். (௩௬௮)

௧௩. வீரர்களாகிய வைக்கோற்போரைக் கடாவிட்ட வாளாகிய ஏரை யுடைய வீரனே (புறநா. ௩௭௧ : ௧௫ - ௬); "ஆளழி வாங்கி யதரி திரித்த, வாளே ருழவன்" சிலப். உ௬: உ௩௩ - ௪.

௧௪ - ௫. கால்வழி - காலிடம்; காற்சுவடுமாம். தெடாரி - தடாரிப்பறை (புறநா. ௩௭௬ : ௪.) தெளிர்ப்ப - ஒலிப்ப ; "பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண், ணிரும்பறை", "பணைமரு ணெடுந்தாட் பலபிணர்த் தடக்கைப், புகர் முகம்" புறநா. உ௬௩: ௧ - உ ; ௩௭௧: ௧௧ - உ0.

௧௬. கோடியர் - கூத்தர்.

௧௮. ஆரத்திற்கு அரவு உவமை ; "விரவுமணி யொளிர்வரு மரவுற ழாரமொடு" புறநா. ௩௯௮ : உ௬.

(பி - ம்.)—[1] 'காலகழிவனனவென', 'காலகழியனனவென்' [2] 'கொடி யார்' [3] 'மிடைந்த நிரையுறுமாரம' [4] 'அரையுறும்' [5] 'எனினே' [6] 'வெல்பஃ றடக்கை'

---

(௩௬௯) [1] இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
[2] கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் [3] பமைந்த

க. மு. புறநா. ௩௭0 : உ0. இரும்பு - தந்தப்பூண் ; கோளகை; ஆகு பெயர்.

உ. கருங்கை - பெரியகை ; கருமை - பெருமை ; "பெருங்கையானை" (புறநா. ௩ : ௧௧.) கொண்மூ - மேகம்.

௩. நீண்மொழி - சபதம். மறவர் - வீரர்.

௪. வாளாயுதம் மின்னலாக. கடிப்பு - குறுந்தடி.

(பி - ம்.)—[1] 'இரும்பு' [2] 'பெருங்கையானை' [3] 'அடைகத'

ரு குருதிப் பலிய முரசு முழக்காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா [1] ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
கo [2] யீரச் செறுவயிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு [3] பைஞ்சாற்
பிடித்தெறி [4] வெள்வேல் கணையமொடு வித்தி
[5] விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
கரு [6] பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு [7] கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள

---

ரு. குருதிப்பலிய முரசு - இரத்தமாகிய பலியையுடைய வீர முரசு; "குருதி வேட்கை யுருகெழு முரசம்" **புறநா.** ரு0 : ரு.

உ - ரு. "உருமிசை முரச முழக்கென விசைப்பச் செருநவில் வேழங் கொண்மூவாக" **புறநா.** ௩௭௩ : க - உ.

௬. அரசு அரா - பகையரசர்களாகிய பாம்புகள்.

எ. குதிரை காற்றாக; "காலியற் புரவி" **புறநா.** கஎ௮ : உ.

௮. வல்வில : **புறநா.** கருஉ : ௬.

௯. கணைத்துளி - அம்பாகிய மழைத்துளி.

க0. ஈரச்செறுவயின் - ஈரத்தையுடைய போர்க்களமாகிய வயலின்கண்.

௯ - க0. கிடக்கையாகிய வயலில்.

கஉ. படை மிளிர்த்த - ஆயுதமாகிய படைவாளால் கீழ்மேலாக மறிக்கப்பட்ட; "படைமிளிர்ந் திட்ட" (**புறநா.** சஉ : கச); "உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி" (**பெரும்பாண்.** ௯உ); படை, சிலேடை. சால் - படைச் சாலில்.

க௩. கணையம் - கணையமரமென்னுமாயுதம். கணையமொடு வேலை வித்தி.

கச. கூழ் - பயிர். கரு. போர்பு, சிலேடை.

க௬. கழுது-பேயில் ஒருசாதி; "கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப" **மதுரை.** ௬௩௩.

க௮. பாடுநர்க்கு - பாடிவருபவர்களுக்கு ஈதற்பொருட்டு.

(பி - ம்.)—1 'உதைத்த' 2'ஈசசமெறுவயிற்', 'ஈசசசெறுவிற்' 3 'செஞ்சாற்' 4 'வைவேற்கணையொடு' 5 'இருநதலைசாய்த்த' 6 'பேஎயள்' 7 'கழுகு'

தேய்வை [1] வெண்காழ் புரையும் விசிபிணி
௨௦ வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப [2] வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
௨௫ வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே.*

---

௧௯. தேய்வை வெண்காழ்-சந்தனக்கட்டை. விசிபிணி-விசித்தவார்க்கட்டு.

௨௦. வேய்வை - குற்றம். "வேய்வை போகிய விரலுளர் நரம்பு" (பொருந. ௧௭.) விருந்து - புதுமை. [௩௯௯: ௨௪.

௧௯ - ௨௦. "விசிப்புறுத் தமைத்த புதுக்காழ்ப் போர்வை" புறநா.

௨௧. அரிக்குரற்றடாரி - அரித்தெழுகின்ற ஓசையையுடைய தடாரிப் பறை; ஒலிநரம்பால் ஓசையையுடைய கிணைப்பறை யென்றுமாம்; உருப்ப - சூடுபிறக்க; புறநா. ௨௪௯: ௪-ஆம் அடியையும் அதன்குறிப்பையும் "அகன் கட்டடாரி தெளிர்ப்ப வொற்றி", "அரிக்குரற் றடாரி யிரிய வொற்றி" (புறநா. ௩௭௦: ௧௮, ௩௯௦: ௭) என்பவற்றையும் பார்க்க.

௨௨. வந்திசின் - வந்தேன்; "காண்கு வந்திசிற் பெரும", "நிற்காண் குவந்திசினே", "மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும" (புறநா. ௧௭: ௩௩, ௧௨௫: ௪, ௩௭௩: ௩௪.) பாடான்று - ஓசைநிறைந்து.

௨௨ - ௩. "பாடான் றிரங்கு மருவி" புறநா. ௧௨௪ : ௪.

௨௪. "பொற்கோட்டிமயம்" புறநா: ௨: ௨௪; ௩௯: ௧௪ - ௫.

௨௬. துடியடிக் குழவியபிடி - உடுக்கையின் கண்போன்ற அடியை யுடைய கன்றை நீங்காத பெண்யானை.

௨௭. முகவை - ஏற்றுக் கொள்ளும் பரிசில.

௨௬ - ௭. "மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு, கறையடியானை யிரி யல் போக்கும்.........ஆஅய்", "வரைமருள் முகவைக்கு வந்தனென்", "புகர் முக முகவைக்கு வந்திசின்" (புறநா. ௱௩௫ : ௧௧ - ௩ ; ௩௭௦: ௨௧ ; ௩௭௧ : ௨௦.) "துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு,பிடிபுணர் வேழம் பெட்ட வை கொள்கென" (பொருந. ௧௨௫ - ௬) என்பதும், "இருபெயர்ப் பேராய மொ, டிலங்கு மருப்பிற களிறு கொடுத்தும்" (மதுரை. ௱௦௧ - ௨) என் பதும், 'கன்றும் பிடியுமென்னும் இரண்டு பெயரையுடைய பெரிய திரளுடனே விளங்குகின்ற கொம்பினையுடைய களிறுகளைக் கொடுத்தும்' என்னுமதன் உரையும் ஈண்டறியற்பாலன.

* மு. தொல். புறத்திணை. சூ. ௧௭ - இளம், ஷை ஷை. சூ. ௨௧ - ந; ஷை உவம. சூ. ௬ - இளம் மேற்.

(பி - ம்.)—1 'வெணகாள்' 2 'ஒறறப்'

திணையும் துறையும் அவை; துறை - ஏர்க்கள உருவகமுமாம்.
சேரமான்கடலோட்டிய 1 வெல்கெழுகுட்டுவனைப் பாணர். (௩௬௬

(பி - ம்.)—1 'வேலகெழு'

---

(௩௭௦) ................................................வி
நாரும் போழுஞ் செய்துண் டொராங்குப்
1 பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கற்
கார்பதங் கண்ணென மாதிரந் துழைஇ
௫ வேருழந் துலறி மருங்குசெத் தொழியவந்
தத்தக் குடிஞைத் துடிமரு டங்குர
லுழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலோ டிசைக்கு மாங்கட்
கழைகாய்ந் துலறிய வறங்கூர் நீளிடை

---

உ. நார் - மரங்களின் நார் ; போழ் - பனங்குருத்து. உண்டு - சுவைத்துண்டு ; புறநா. ௩௭௫: ௫.

௩. பசிதினத்திரங்கிய விரும்பேரொக்கற்கு - பசிதினலால் வருத்தமுற்ற கரிந்த பெரியசுற்றத்தார் பொருட்டு ; "பசிதினத் திரங்கிய வொக்கல்", "பசிதினத் திரங்கிய கசிவுடையாக்கை", "இலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்","இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற","பசித்தென வீங்கு வந்திறுத்த வென் னிரும்பே ரொக்கல்", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" (புறநா. ௧௫௯: உ௧, ௧௬௦: ௪, ௩௭அ: ௧௩, ௩௯௦: ௧அ, ௩௯௧: எ-அ, ௩௯௪: ௧௬), "பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு" பெரும்பாண். உ௫.

௪. ஆர்பதம்-உண்ணுமுணவு ; "தேரிற் றந்தவர்க் கார்பதநல்கும்... இசைசான்றோன்றல்", "நெல்லி,னம்பண வளவை விரிந்துறை போகிய, வார்பத நல்குமென்ப" (பதிற். ௫௫: ௧௧-உ, ௬௬: எ-௯),'ஆர்பதமிக்கு நீரும்நிழலும்பெறுதலிற் களிசிறந்து மாவும்புள்ளும் துணையோடின்புற்று விளையாடுவன" (தொல். அகத்திணை. ௬. ௬ - ந.) மாதிரம் - திசை. துழை இ - துழாவி ; தேடி.

௬. அத்தம் - அருஞ்சுரம். குடிஞை-கோட்டான். குடிஞைக்குரலுக்குத் துடியோசை உவமை ; மருள், உவமவுருபு. "வன்கட் கடுந்துடி......குடிஞையோ டிரட்டும்" (புறநா. ௧௭௦. ௬ - எ.) குரல், எழுவாய்.

எ. உழுஞ்சில் - ஒருவகைமரம் ; கவடு - கிளை "கோடலங் கவட்ட குறுங்காலு ழுஞ்சில்" (அகநா. ௧௫௧: அ); உழுஞ்சிலே வாகை யென்பர் ; சிலப். ௧௧: எ௬ - அடியார்.

அ. பயிர் - அழைத்தல். ௯. வறம் - வறுமை; நீரின்மை.

(பி - ம்.)—1 'பரிதினத்'

௧௦ வரிமரற் றிரங்கிய கானம் பிறபடப்
பழுமர முள்ளிய பறவை போல
வொண்படை மாரி வீழ்கனி பெய்தெனத
துவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
விளைந்த செழுங்குர லரிந்துகால் குவித்துப்
௧௫ படுபிணப் பல்போர் பழிய வாங்கி
யெருதுகளி றாக வாண்மட லோச்சி
யதரி திரித்த வாளுகு கடாவி
னகன்கட் டடாரி [1] தெளிர்ப்ப வொற்றி
வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
௨௦ யிருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பின்
வரைமருண் முகவைக்கு வந்தனென் பெரும

---

௧௦. வரிமரற்றிரங்கிய - வரியையுடைய மரல நீர்வற்றித்திரங்கிய ; "வரி மரற்றிரங்கிய கரிபுறக் கிடக்கை" (சிலப். ௧௧: ௭௭.) மரல், மருளென்று வழங்கும்.

௧௧. பழுத்தமரத்தை நினைத்துச்செல்கின்ற வௌவாலைப் போல; "பழு மர முள்ளிய பறவையின்" (பொருந. ௬௪) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும், புறநா. ௬௭: முதலடியின் குறிப்பையும் பார்க்க.

௧௩. துவைத்து - முழங்கி.

௧௪. குரல் - கழுத்து; தானியக்கதிர் ; சிலேடை.

௧௫. பிணப்பல் போர்பு - பலவகைப்பட்ட பிணங்களாலாகிய போர்கள் ; போர்பு - தானியக்கதிர்ப்போர் (புறநா. ௨௦௬: ௧); "பிணனெதிர்ப் போர் பழித்து", "அஞ்சா மறவ ராட்போர் பழித்து" (புறநா. ௩௭௧: ௧௪, ௩௭௩: ௨௫); "நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்பழித்து" அகநா. ௩௬௬: ௨.

௧௬. வாளாகிய மடலைச் செலுத்தி. மடல் - பனங்கருக்கு.

௧௫ - ௭ "பிணம்பிறங்குபோர் பழிகளி றெருதா", "யானையெருத்தின் வாண்மட லோச்சி, யதரி திரித்த வாளுகு கடாவின்", "குடபுலத் ததரி பொலிக" (புறநா. ௩௪௨: ௧௩ ; ௩௭௧: ௧௫ - ௬ ; ௩௭௩: ௨௬ - ௭) ; "கோட்டு மரப் பூட்டி வாட்கோலாக வாளழிவாங்கி யதரிதிரித்த" சிலப். ௨௬: ௨௩௨ - ௩.

௧௮. "தெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றி", "அரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றி", "அகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி" புறநா. ௩௬௮: ௧௫, ௩௬௯: ௨௧, ௩௮௫: ௪.

௨௦. புறநா. ௩௬௯: ௧.

௨௧. முகவை: புறநா. ௩௬௮: ௧௧ ; ௩௬௯: ௨௭ ; ௩௭௧: ௨௦.

(௧௧) போல (௨௧) வந்தனென்.

(பி - ம்.)—1 'தெளிர்ப்பவேயொற்றி'

வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவா
ரினத்தடி விராய வரிக்குட ரடைச்சி
உரு யழுகுரற் [1] பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரு
மஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

**திணையும் துறையும் அவை.**

**சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங் குடையார்.** (௩எ0)

உஉ. வடிநவில் - வடித்தல பயின்ற; **புறநா.** உ௩: அ.

உ௩. தொடியுடைத் தடக்கை - வளையையுடைய பெரியகையை.

உச. வரிக்குடர் - பலவரியையுடையகுடர்; "மெறிகொள் வரிக்குடர்" (**புறநா.** க௬0: ௬.) அடைச்சி - சேர்த்து.

உ௬. செஞ்செவியெருவை: **புறநா.** உ௩அ: உ; "செஞ்செவியெருவைச் சேவல்" **அகநா.** க௬க: ரு - ௬.

உஎ. போர்க்களம் வென்றோர்க்கு உரித்தாதலால், 'களங்கிழவோய்' என்றார்; **புறநா.** ௩எக: உஎ; ௩எ௩ : ௩௯.

(பி - ம்.)—1 'பேஎயமகள்'

---

(௩எக) அகன்றலை வையத்துப் [1] புரவலர்க் காணாது
[2] மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
போதவிழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
ரு பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவா
யாடுறு குழிசி பாடின்று தூக்கி

க. புரவலர் - பாதுகாப்போர். உ. மரந்தலை - மரத்தின் கீழிடம்.

௩. அலரிப் பூவை நாரால் தொடுத்து. ச. பித்தை - தலைமயிர்.

௩ - ச. "அலரி, சுரியிரும்பித்தை சுரும்புபடச் சூடி" (**அகநா.** உக௩: ச-ரு), "தாமரை, சுரியிரும்பித்தை பொலியச்சூட்டி" (**பொருந.** கரு௯ - ௬0), "தாமரை, நீடிரும் பித்தை பொலியச் சூட்டி" **பெரும்பாண்.** சஅக - உ.

ரு. தகைத்த - கட்டிய. கலப்பை - சமைத்தற்குரிய கருவிகளை யடக்கிய பை; "காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை" (**புறநா.** உ0௬: க0.) முரவு-சிதைவு; "முரவுவாய்க் குழிசி முரியடுப்பேற்றி" **பெரும்பாண்.** ௯௯.

௬. ஆடு - சமைத்தல்; குழிசி - பானை. பாடின்று - கெடாதபடி.

(பி - ம்.)—1 'புரவறகாணத்', 'பாவறகாணது' 2 'மறநதலைசோநது'

மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்
குறைசெயல் வேண்டா நசைய விருக்கையே
னரிசி யின்மையி னாரிடை நீந்திக்
௧0 கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப
1 வருகணைவாளி.........யன்பின்று தலைஇ
2 யிரைமுரை சார்க்கு முரைசால் பாசறை
வில்லே 3 ருழவினின் னல்லிசை யுள்ளிக்
குறைத்தலைப் படுபிண னெதிரப் போர்பழித்
௧௫ தியானை யெருத்தின் வாண்மட லோச்சி
யதரி திரித்த வாளுகு கடாவின்
மதியத் தன்னவென் விசியுறு தடாரி
யகன்க ணதிர வாகுளி 4 தொடாலிற்
பணைமரு ணெடுந்தாட் 5 பல்பிணர்த் தடக்கைப்

---

௭. மன்றம் - பொதுவிடம்; "மன்றவேம்பு" (புறநா. ௭௬ : ௪ ; ௭௯: ௨.) உறைப்ப - உதிர.

௮. குறை - காரியம். ௯. ஆரிடைநீந்தி - அரிய இடங்களைக்கடந்து.

௧0. படை - படைவாள்; பாரை. மிளிர்ப்ப-கீழ்மேலாகப் புரளச்செய்ய.

௧௨. உரைசால் - புகழ்மிக்க.

௧௩. வில்லேருழவின் - வில்லை ஏராகக்கொண்டு உழுதலையுடையாய்; உழவன் - வீரன் ; "வில்லேருழவர்" (குறள், ௮௭௨) ; "மாரி வளம்பெறு வில்லேருழவர்" சிலப். ௧௧ : ௨௧0.

௧௪. குறைத்தலைப் படுபிணன் - கவந்தம் ; போர்பு - போர் ; புறநா. ௩௭0: ௧௫.

௧௫. யானையாகிய உழும் எருது.

௧௪ - ௬. "படுபிணப் பல்போர் பழிய வாங்கி, யெருதுகளி றாக வாண் மட லோச்சி, யதரி திரித்த வாளுகு கடாவின்" புறநா. ௩௭0 : ௧௫ - ௭.

௧௭. "மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி", "மாக விசும்பின் வெண்டிங்கண்,......கடனடுவட் கண்டன்ன வென் னியம்" புறநா. ௩௯௩ : ௨0 ; ௪00 : ௧ - ௪.

௧௮. ஆகுளி-சிறுபறை; "நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி" (புறநா. ௬௪: ௧.) தொடாலின் - கொட்டுதலுடன்; "துடிக்கண் புலையன் தொடும்" பு - வெ. ௪ : ௨.

௧௭ - ௮. தடாரியின்கண் அதிர.

௧௯. பணை - ஒருவகைப் பறை; மருள்-உவமவுருபு; புறநா. ௩௬௮:௧௭.

(பி - ம்.)—1 'இருகணை' 2 'உரை சுரும்பார்க்கும்', 'இரைசுரும்பு' 3 'உழவரின்' 4 'தொழாலிற' 5 'பகலபிணர்'

உ0 புகர்முக [1] முகவைக்கு வந்திசிற் பெரும
களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை [2] மாலை சூடி யுணத்தின
மாணாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
உரு வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
வுருகெழு [3] பேய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார். (௩௭௧)

---

உ0. (புறநா. ௩௬௮: கக; ௩௬௯: உஎ; ௩௭0: உக.) "முகவைபாடுத பொலிபாடுதல்; "முகவை என்றார், கொலலும்முகந்து கொடுக்கபடுதலாலே 'புகர்முக முகவை' போல" (சிலப். க0:௧௩௭-அரும்பத.) வந்திசின்-வந்தேன்; (௯) நீந்தி (உ0) வந்திசிற் பெரும.

உஉ. விழுக்கு - ஊன்விசேடம்; "பருத்திப் பெண்டி ர பனுவ லன்ன நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழூஉக்குறை", "கொழுநிணந் தெரிப்பக், கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த, மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன வெண்ணிணமூரி" (புறநா. கஉரு: க-உ; ௩௯௩: கக - ௪) என்பவற்றையும் "விழுக்கொடு வெண்ணஞ்சு" (சீவக. கருஅச) என்பதையும், 'விழுக்கு வெண்ணஞ்சும் ஊன்விசேடம்; வெண்ணஞ்சு - நிணமுமாம்' என்னும் அதன் விசேடவுரையையும் பார்க்க.

உ௩. "குடர்த்தொடர் மாலை பூண்பா னல்லர்", "குடர்த் தொடர் மாலை சூழாது" மணி. கரு: க௩; உ0: எஉ.

உச - ௫. புறநா. ௩௬எ: கக - அ. உ௬. உரு - அச்சம்.

உஎ. "அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே" புறநா. ௩எ௩: ௩௯

உக - எ. பின்தேர்க்குரவைக்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். புறத் திணை. சூ. கஎ - இளம்; ஷெ உக - ந. மேற்.

(பி - ம்.)—1 'முகவை வந்திசிற்' 2 'மாலைதுயலவரசூடி' 3 'பேஎயமக ளயர'

---

(௩௭உ.) விசிபிணித் தடாரி விம்மென வொற்றி
யேத்தி வந்த [1] தெல்லா முழுத்த

---

க. தடாரிவிம்மென - கிணைப்பறை யொலிப்ப; "வார்வலந்த துடி விம்ம" பு - வெ. க: க௩.

(பி - ம்.)—1 'எல்லாமழுத்த'

விலங்குவார் ளவிரொளி வலம்பட மின்னிக்
கணைத்துளி பொழிந்த கண்கூடு பாசறைப்
௫ பொருந்தாத் தெவ்வ ரரிந்ததலை யடுப்பிற்
கூவிளை விறகி [1] னாக்குவரி நுடங்க
லாறு மண்டை வன்னியந் துடுப்பி
னீறு வேண்மா ளிடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் [2] வாலுவ னேந்த
௧௦ வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்
னிலவுத்திக ழார முகக்குவ மெனவே.

**திணை - வாகை; துறை - மறக்களவேள்வி.**

அவனை [3] மாங்குடிகிழார். (௩௭௨)

---

௪. கணையாகிய நீர்த்துளி; "கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை" புறநா. ௩௬௯ : ௯.

௫. தெவ்வர் தலையடுப்பில் - பகைவருடைய தலைகளாலாகிய அடுப்பில்; "ஆண்டலை யணங்கடுப்பு" மதுரை. ௨௯.

௯. வாலுவன் - மடையன்.

௫ - ௯. "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு, மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்ட" சிலப். ௨௬ : ௨௪௨ - ௪.

௧௨. களம்வேட்டோய் - களவேள்விசெய்தோய்; களவேள்வி இன்ன தென்பதை, "நெற்கதிரைக்கொன்று களத்திற் குவித்துப் போரழித்து அதரி திரித்துச் சுற்றத்தொடு நுகர்வதற்குமுன்னே கடவுட்பலிகொடுத்துப் பின்னர்ப், பரிசிலர் முகந்துகொள்ள வரிசையினளிக்குமாறுபோல, அரசனும் நாற்படையையுங்கொன்று களத்திற்குவித்து எருது களிறாக வாண்மடலோச்சி அதரி திரித்துப் பிணக்குவையை நிணசசேற்றொடு உதிரப்பேருலைக்கண் ஏற்றி, ஈனு வேண்மாள் இடந்துழந்தட்ட கூழ்ப்பலியைப் பலிகொடுத்து எஞ்சிநின்ற யானை குதிரைகளையும் ஆண்டுப்பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்துகொள்ளக் கொடுத்தலாம்" (தொல். புறத்திணை. சூ. ௨௧ - ௩) என்பதனானுணர்க.

(௨) வந்ததெல்லாம் (௧௩) முகக்குவமெனை.

(பி - ம்.)—1 'ஆககுவதிதுடங்கல' 2 'வலவனேநத' 3 'மாந...ககிழார்'

ங

(௩எ௩.) உருமிசை முரச [1] முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வழிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
௫ யிழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் [2] பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்தே
....................தண்ட மாப்பொறி
௧0 மடக்கண் மயிலியன் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவ...........................
............யணிப் புரவி வாழ்கெனச்
௧௫ சொன்னிழ லின்மையி னன்னிழற் சேர
நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅ

---

௧. உருமிசை - மேகமுழக்கு ; மேககர்ச்சனை முரச ஒலிக்குஉவமை ; "படுமழை யுருமி னிரங்கு முரசு" (புறநா. ௩௫0 : ௪); "தாழிரு டூமிய மின்னித் தண்ணென, வீழுறை யினியசிதறி யூழியிற், கடிப்பிடு முரசின் முழங்கி" (குறுந். ௨௭0 : ௧ - ௩); "முரசதிர் பவைபோன் முழங்கிடிபயிற்றி" (பரி. ௨௨ : ௪); "கொண்மூ, விருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப், போர்ப்புறு முரசினிரங்கி", "இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப" (அகநா. ௧௮௮ : ௧ - ௩, ௩௫௪ : ௨); "உருமிடி முரசமொடு" (முருகு. ௧௨௧); "மூரி வான முழங்கிவாய் விட்டதொப்ப, வதிர்குரன் முரசம்", "இடியுமிழ் முரசம்" (சீவக. ௫௪௩, ௨௧00); "உருமினிடி முரசார்ப்ப" (முத்); "இடியாஅ பணை துவைப்ப" பு - வெ. ௬ : ௨௭.

௨. "கருங்கையானை கொண்மூவாக" புறநா. ௩௬௯ : ௨.

௩ - ௪. "மால்வரைத் தொடுத்துவீழ்ந்த மணிநிற மாரிதன்னைக், காலிரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோல், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனையப்புமாரி, கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கினானே" (சீவக. ௪௫௧ - ௩) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்.

௭. ஆடிய - வென்ற. ௮. கொங்கு - கொங்கநாட்டு வீரர்களை.

௧௧. புலம்ப - தனித்து வருந்த.

௧௨. மன்றம் - பொதுவிடம். ௧௬. புன்றலை - சிவந்த தலை.

௧௬-௭. "புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி" புறநா. ௪௬ : ௬.

(பி - ம்.)—1 'முழகககெயிசைய' 2 'பிட்டயூறுவபப'

[1] ரம்பழி பொழுதிற் றமர்முகங் காணு
............................ற் றொக்கான
வேந்து புறங்கொடுத்த வீய்ந்துகு பறந்தலை
உ0 மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலையி னிருநிலஞ் சேரச்
சென்றோன் மன்ற சொ..................
............ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
உரு வஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணைதனற......ளம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
௩0 [2] கொண்டன ரென்ப பெரியோர் யானு
மங்கண் மாக்கிணை யதிர வொற்ற
..............லெனுயினுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் [3] பிறரிவ ணின்மையின்
[4] மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
௩ரு பகைவர் புகழ்ந்த வாண்மை [5] நகைவர்க்குத்

---

உ0. இறுபு - ஒடிந்து. [உரு : க.
உச. வஞ்சி - கருவூர்; "வஞ்சிமுற்ற நீங்கிச் செல்வோன்" சிலப்.
உரு. ஆள் போர்பு அழித்து - வீரர்களுடைய பிணங்களாலாகிய போரை அழித்து; "படுபிணனெதிரப் போர்பழித்து" புறநா. ௩எக : கச.
உ௬. குடபுலம் - குடநாடு. அதரிகொண்டனை - கடாவிட்டனை.
உஅ. திணை - குலம்.
உக. புகர்முக முகவை - யானைப்பரிசில்; "புகர்முக முகவைக்கு வந்திசிற்பெரும" புறநா. ௩எக : உ0.
௩க. கிணை - தடாரிப்பறை.
௩௩. நின்னோர் அன்னோர் - உன்னைப்போன்றோர்.
௩ச. சீவக. ௩உ௩ - ந. மேற்.
௩௩ - ச. தொல். உவம. சூ. உச - இளம். மேற்.
௩ரு. நகைவர்க்கு - நட்பினர்க்கு; "நகைவர்க்கரணமாகிப் பகைவர்க்குச் சூர்நிகழ்ந்தற்று நின்றனை" (பதிற். ௩க: ௩௩-ச); "நகைவராரநன்கலஞ் சிதறி" ஷை ௩எ: ச, ச௩: உ0.

(பி - ம்.)—1 'அமபாழிலொழிதிறறமா' 2 'தொண்டரெனப்' 3 'பிறரிவர்' 4 'மின்னெயில்' 5 'நகை வாக்கு'

தாவின் றுதவும் பண்பிற் றேபயொடு
கணநரி 1 திரிதரு மாங்க ணிணனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
யஞ்சுவரு கிடைக்கைய களங்கிழ வோயே.

திணை-அது. துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூ ரெறிந்தானைக் கோவூர்கிழார். (நஎந)

நஅ - கூ. "செஞ்செவி யெருவை திரிதரு, மஞ்சுவரு கிடக்கைய களங் கிழ வோயே" புறநா. நஎ0: உகூ - எ.

(பி - ம்.)— 1 'திரிதரூஉமாங்கண'

---

(நஎச) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி 1 ரவியத்
தண்பனி 2 யுறைக்கும் புலரா ஞாங்கர்
ரு மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
றெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யிருங்கலை யோர்ப்ப விசைஇக் காண்வரக்

க. கானல் - மலைப்பக்கம். அல்கும் - தங்கும்.

உ. புல்வாய் - ஒருவகைமான்; 'இரலை' என்னும் ஆண்பாற்பெயர் புல் வாய்ச்சாதிக்குரியதென்பதற்கு (தொல். மரபு. சூ. சச - பேர்) இவ்வடி மேற்கோள்.

ந. பொலம் - பொன்; பொற்றுமணைப்பூ; ஆகுபெயர். பாறுமயிர் அவிய - சிதறிய மயிர்அடங்கும்படி.

ச. உறைக்கும் - துளிக்கும். ழ. புறநா. நஎஎ: உ.

ந-ச. "பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி", "பனிபழுநிய பல்யாமத் துப் பாறுதலைமயிர் நனைய" புறநா. உஎக: கூ; நஎஎ: க - உ.

ரு. மன்றப்பலவு - பொதுவிடத்திலுள்ள பலா; பொருநர்முதலிய இர வலர் பொதுவிடத்திலவந்துதங்குதலும் அங்குள்ளமரத்தில தம் வாச்சியங் களைத்தொங்கக்கட்டுதலும் மரபு; புறநா. கஉஅ: க; ஐந்திணை யெழுபது, ச.

சு. ழ. புறநா. நகூஎ: க0; " தடாரி......தெண்கணெற்றி" புறநா. நஅக: கஉ - ந.

எ. ஓர்ப்ப - செவிசாய்த்துக் கேட்கும்படி. இசைஇ - முழக்கி; "இரும் புலிப் புகர்ப்போத்தோர்க்கும்" (புறநா. கஎரு: கஉ); "பாடலோர்த்து நாடக நயந்தும்" பட்டின. ககந.

(பி - ம்.)—1 'அவியடபத' 2 'இறைக்கும்'

கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
கo மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றுவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் [1] சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்று
மிருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
கரு விருந்திறை நல்கு நாட னெங்கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல

அ. கருங்கோல் - பெரியதண்டு; "கருங்கோற் குறிஞ்சி மதனில்வான்பூ", "பெருங்கோற் குறிஞ்சி" (நற்.உசுஅ:௩, ௩0க:க); "கருங்கோற்குறிஞ்சிப்பூ" (குறுந். ௩:ச); "கருங்கோற் குறிஞ்சி" (அகநா. ௩0அ: கரு.) அடுக்கம்-மலைப் பக்கம்; குறிஞ்சியையுடைய அடுக்கம் ; தலைவனையும் அவனுடைய மலைமுதலியவற்றையும் பாடுதல் மரபு ; "நின்னை நின்மலையும்பாட" (புறநா. கச௩: கஉ); "நெடுவரைவளனும் பாடி" சிறுபாண். கஉஅ.

௯. புலிப்பல் தாலி - புலியின் பல்லைக் கோத்துச்செய்த கழுத்தணி; "புலிப்பற்றாலிப்புதல்வர்" (குறுந். [illegible]:௩); "புலிப்பற் கோத்தபுலம்பு மணித் தாலி" (அகநா. எ: கஅ); "மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற, மாலை வெண்பற்றாலி" சிலப். கஉ: உஎ - அ.

கக. முளவுமான் கொழுங்குறை - முள்ளம் பன்றியின் கொழுவியதசை; "முளவுமாத் தொலைச்சிய" (புறநா.௩உரு: ௬); "முளவுமாவல்சி" (ஐங்குறு. ௩௬ச:க); "முளவுமாத் தொலைச்சுங்குன்றம்" (அகநா. கஅஉ:அ); "முளவுமாத்தொலைச்சிய பைந்நிணப்பிளவை" மலைபடு. கஎ௬.

கஉ. விடர்முகை - வெடிப்பையுடைய குகை; "விடர்முகை முழங்கும்" (ஐங்குறு. ௩௯ரு:உ); "விடர்முகையடுக்கம் பாய்தலின்", "விடர்முகை முழங்கும்", "அஞ்சுவரு விடர்முகை" அகநா. சஎ: ௬; கச௩: எ; உஎஉ: ச.

க௩. புகர்முகவேழம்: புறநா. ௩எ௩: உ௯. மூன்று - குறை, சாந்தம், மருப்பு என்பன.

கச. புலித்தோலில் மேற்கூறிய மூன்றையும் குவித்து.

கரு. இறைநல்கும் - இறுக்கும்; கொடுக்கும்.

க௬. ஆயாகிய அண்டிரன்; "கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்" (புறநா. கஉஅ: ரு; குறுந். அச:௩); "ஆஅயண்டிர னடுபோ ரண்ணல்", "வழைப்பூங்கண்ணி வாய்வா ளண்டிரன்", "தண்டாரண்டிரன்" புறநா. கஉ௯:ரு, க௩க:உ, உசக:க-உ.

(பி - ம்.)—1 'சாநதப்'

வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

**திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.**

**ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.** (ருளச)

களஎ. ஞாயிறு - விளி. கஅ. கொன் - பயனின்மை.

சசு - அ. புறநா. அ - ஆம் பாடலின் கருத்து இவ்வடிகளுடன் ஒப்பிடற்பாலது.

---

(ருஎரு) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறை பள்ளி யாக
முழாஅரைப் போந்தை யரவாய் மாமட
ரு லாரும் [1]போழுங் கிணையொடு சுருக்கி
யேரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
வூழிரந் துண்ணு முயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கு மறாஅ [2] யாணர்
கo வரையணி படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் [3] கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங் கியானு
மொருநின் னுள்ளி வந்தனெ னதனாற்

---

க. கதிர் - வெயில். சூழி - நீர் நிலை.

ரு. பொதியில் ஒருசிறை - மன்றத்தி னொருபக்கம்,

ச. மத்தளத்தைப் போன்ற அரையை யுடைய பனையின் அரம்போன்ற வாயினையுடைய மடல்; "முழாவரைப்போந்தைப் பொருந்தி", "மடலவன் போந்தை" புறநா. அரு: எ ; உகூஎ:கo.

ரு. "நாரும்போழுஞ் செய்துண்டு" புறநா. ருஎo: உ.

சு. புகாஅ - புகுந்து. எ. ஊழ் - முறையே. உயவல் - வருத்தம்.

அ. புரவுஎதிர்ந்துகொள்ளும் - பாதுகாத்தலை ஏற்றுக்கொள்ளும்.

கூ. பிரசம்-தேன்கூடு ; "பிரசந்தூங்கு சேட்சிமை" (அகநா.உசஉ:உக.) அறாஅயாணர் - இடையறாத செல்வ வருவாயையுடைய; பொருந. க. ந.

கo. படப்பை - தோட்டம். கக. ஆஅய் - விளி.

கந. மழை - மேகம். கச. நின்னுள்ளி - உன்னைநினைத்து.

(பி - ம்.) — 1 'போருங்' 2 'யாணரவரையணிப்' 3 'கினைபப'

கரு புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீஇய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
1 பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
உ௦ பீடின்று பெருகிய திருவிற்
2 பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.
அவனை அவர். (௩௭௫)

கரு. புக்கில் - எப்பொழுதும் இருத்தற்குரியவீடு; "புக்கி லமைந்தின்று கொல்லோ" குறள், ௩௪௦.

கசு. நிலீஇயர் - நிற்பாயாக; அத்தை, அசை.

கஅ - கூ. "துன்னி.........உணராவென்புழிப் பெரிய சிறியவென்பன பெருமை சிறுமைப்பண்படியாக வந்தமையின், இவ்வெச்சத்தின் குறிப்பென்றலு மொன்று; இவ்வெச்சப் பொருள்படு முரிச்சொலென்றலு மொன்று" (தொல். வினை. சூ. ௩௦-கல்); "துன்னி...உணராவென அகரம் வினைக்குறிப்புப் பற்றிவருவனவும்" (ஷை ஷை ஷை ௩க - ந); "பெரியவோதினு மென்பதற்குச் சிறிய வோதினுமெனக்குறிப்பும் மறைவிகற்பமும்அறிக" ஷை ஷை ஷை ௩அ - கல்.

உக. பாடன்மார் - பாடுதலைத் தவிர்வாராக; தொல். வினை. சூ. க௦-கல்; ந. மேற்.

உ௦ - உக. தொல். வினை. சூ. க௦ - சே; இ - வி. சூ. உ௩உ, உ௩கூ-உரை. மேற்.

ககூ - உக. தொல். இடை. சூ. அ - கல். நன் - மயிலை. சூ. ௩உசு; நன் - வி. சூ. ௩உஎ - மேற்.

(பி - ம்.)— 1 'பெரியவேத்தினுஞ்' 2 'பாடிமன்னரை'

---

(௩எசு) 1 விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் 2 மழுகிய சிவந்துவாங் 3 கந்தி
சிறுநனி பிறந்த பின்றைச் செறிபிணிச்

க. விசும்பு நீத்தம் - விசும்பாகியநீத்தத்தை; 'நீத்தம்' என்றார் கடத்தற்கருமையின். இறந்த - கடந்த.

உ. மழுகிய - ஒளி குறைந்த. அந்தி - மாலைக்காலம்.

க - உ. "சுடர்கெழு மண்டில மழுக ஞாயிறு, குடகடல் சேரும் படர்கூர்மாலை" அகநா. ௩எஅ: க௪ - ரு.

(பி - ம்.)—1 'விசுமபினீததமிறந்த', 'விசும்பிணியத்தமிறந்த' 2 'மழுங்கிய', 'பழுனிய', 'மழகிய' 3 'அந்திச் சிறுநனியிறந்த'

1 சிதாஅர் வள்பினென் சிறடாரி தழீஇப்
௫ பாண ராரு மளவை யான்றன்
2 யாணர் நன்மனைக் கூட்டுமுத லின்றனெ
னிமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் 3 கனையிரு ளகற்ற
பண்டறி வாரா வுருவோ டென்னரைத்
௧௦ தொன்றுபடு துளையொடு பருவிழை 4 போகி
நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
நின்ற 5 முரற்கை நீக்கி நன்று
மரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுதருபு
௧௫ நிரயத் தன்னவென் 6 வறன்களைந் தன்றே
யிரவி ருனே யீத்தோ னெந்தை

---

௪. "சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி" புறநா. ௩௮௧ : ௧௨.

௫. ஆரும் - உண்ணும்.

௬. யாணர் நன்மனை - புதுவருவாயை யுடைய நல்லவீடு ; கூட்டுமுத[ல்] தானியக் கூட்டினடியில் ; புறநர். ௩௬௯ : ௧௮.

௭. இமைத்தோர் - இமைகொட்டுவோர். மாத்திரை - அளவு. ஞெ[ரே]ரென - விரைவாக.

௮. குணக்கு - கிழக்கு; கனை - செறிவு.

௯. "மாலையன்னதோர் புன்மையுங் காலைக், கண்டோர் மருளும் வண்[...] சூழ் நிலையும்" பொருந. ௯௰ - ௭.

௧௦. பருஇழை - பரிய நூலிழை.

௧௧. பறைந்த - தேய்ந்த ; புறநா. ௩௫௯: ௧.

௯ - ௧௧. "அரையது, வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅ, ரோம்[...] யுடுத்த வுயவற் பாண", "கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன, பாறிய சித[...] ரேன்" (புறநா. ௬௯: ௨ - ௪, ௧௫௦: ௧ - ௨.), "ஈரும் பேனு மிருந்திறை[...] கூடி, வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர்", "பா[...] வேரின் மாசொடு குறைந்த துன்னற், சிதாஅர்" பொருந. ௭௯-௮௧, ௧௫௩ - ௪

௧௩. முரற்கை - தாளம்; எங்களைப் பாடாதபடி செய்தென்றபடி.

௧௪. "தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" (புறநா. ௩௯௨: ௧௬); "பா[...] புக் கடுப்பன்ன தோப்பி" (அகநா. ௩௪௮: ௭); "பாம்பு வெகுண்டன்ன தேறல்" (சிறுபாண். ௨௩௭.) சூடு - சூட்டிறைச்சி ; புறநா. ௩௪, ௩௬௬ ௩௬௫, ௩௯௭.

௧௫. நிரயத் தன்னவறன் - நரகவேதனைபோன்ற துன்பத்தைச் செய்வி[...] கும் வறுமை.

(பி - ம்.)—1 'சிதாஅவளபின்' 2 'பாணர்நன்......நினறெனெ' 3 'மறை[...] யிருள்' 4 'போக்கி' 5 'முரற்கை மிக்குநன்று' 6 'வறங்'

யன்றை [1] ஞான்றினொ டின்றி னூங்கு
மிரப்பச் சிந்தியே னிரப்படு புணையி
னுளத்தி னளக்கு மிளிர்ந்த தகையே
௨0 னிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - அது ; துறை - இயன்மொழி.
[2] ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணை நன்னாகனார். (௩௭௬)

---

௧௭ - அ. "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணேயுள" (குறள், ௨௨௩) என்பதையும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையையும், விநாயக புராணம், அரசியற்கைப்படலம், ௩௮ - ஆம் பாடல் முதலியவற்றையும் பார்க்க. இரப்படுபுணை - வறுமையைக் கடத்தற் குரியதெப்பம்.

௨0. நிறைக்குளப்புதவு - நீர்நிறைந்திருத்தலையுடைய குளத்தின் வாய்த் தலை ; "புனலம் புதவின் மிழலை" புறநா. ௨௪: ௧௬.

௨௧. இரவலர் வரையா - யாசகரை நீக்காத. வள்ளியோர் - வரையாது கொடுப்போர். கடைத்தலை - தலைவாயில.

௨௨. ஞாங்கர் - பக்கம். நெடுமொழி-தனது மேம்பாட்டைக் கூறுமொழி.

௧௮ - ௨௩. இவ்வடிகளின் பொருள், "செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம், பெருமான் முகம்பார்த்த பின்ன - ரொருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாங், காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி. உரை, மேற்) என்னும் வெண்பாவை நினைப்பிக்கின்றது.

(பி - ம்.)—1 'நான்றினொடு' 2 'ஆய்மானல்', 'ஓய்மான் வில்லியாதனைப்'

---

(௩௭௭.) பனிபழுனிய பல்யாமத்துப்
பாறுதலை மயிர்நனைய
வினிது துஞ்சுந் திருநகர் வரைப்பி
னினைய லகற்றவென் கிணை [1] தொடாக் குறுகி

---

௧. பழுனிய - முதிர்ந்த. ௨. பாறுமயிர் - பரந்து மேனோக்கியமயிர்.

௧ - ௨. "பாறுமயி ரவியத் தண்பனி யுறைக்கும், புலரா ஞாங்கர்" புறநா. ௩௭௪ : ௩ - ௪.

௪. இனையல் - வருந்தல். கிணைதொடா - தடாரிப்பறையை வாசித்து.

(பி - ம்)—1 'தாடகுறுகி'

௫ யவியுணவினோர் புறங்காப்ப
வற [1] நெஞ்சத்தோன் வாழநாளென்
றதற்கொண்டு வரலேத்திக்
கரவில்லாக் கவிவண்கையான்
வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
௧௦ பிறர்க்குவமந் தானல்லது
தனக்குவமம் பிறரில்லென
வதுநினைந்து மதி [2] மழுகி
யாங்குநின்ற வெற்காணூஉச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை
௧௫ நீபுரவலை யெமக்கென்ன
[3] மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னுங்
கடல்பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்ட வுடையுஞ் சேறுபட்ட தசும்புங்
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப
௨௦ நனவி [4] னல்கியோ னசைசா ரோன்றல்
நாடென மொழிவோரவ னாடென மொழிவோர்
வேந்தென மொழிவோரவன் [5] வேந்தென மொழிவோ

---

௫. அவியுணவினோர் - தேவர் ; "அவியுணவி னான்றூர்" (குறள், ௪௧௩ தேவர் புறங்காப்ப.

௫ - ௬. வாழும்படி நாடோறும் புறங்காப்பவென்று.

௮. கவிவண்கையான் - கொடையாற் கவிந்த கையோடு.

௯ - ௧௦. பெற்றோராகிய பிறர்க்கு.

௧௦ - ௧௧. "பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொ பெரு வேந்தே" (பதிற். ௭௩), "பொருநனென்றது தான் பிறர்க்கு உவமி கப் படுவானென்னும் பொருட்டு" (மதுரை. ௪௨ - ந) என்பவை இங்கே அ யற்பாலன.

௧௨. அது - உவமமின்மையை. ௧௩. எற்காணூஉ - என்னைக்கண்டு.

௧௪. கிணைஞனை - கிணைஞனாகிய நீ; ஐ, முன்னிலையை விளக்கி நின்றது

௧௫. புரவலை - எம்மாற் பாதுகாத்தற்குரியாய். என்ன-என்றுசொல்லி

௧௭. கடறு - காடு. ௧௮. சேறுபட்டதசும்பு - கட்குடம்.

௧௯. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப" பொருந. ௯௮.

௧௯ - ௨௦. "கனவென மருள வல்லே நனவி, னல்கி யோனே நசைச ரோன்றல்" புறநா. ௩௮௭ : ௨௫ - ௬.

(பி - ம்.)—1 'நெஞ்சத்தோனாளென்று' 2 'பழகி' 3 'மலைபெயர்ந்த பொ னும்...பயந்தமணியும்' 4 'நல்கியோனென்கை' 5 'வேந்தன'

..............பொற்கோட் டியானையர்
கவர்பரிக் கச்சைநன்மான்
உரு வடிமணி வாங்குருள
.........நற்றேர்க்குழுவினர்
கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்ந ரார்வமொ டீண்டிக்
கடலொலி கொண்ட தானை
௩௦ யடல்வெங் குருசின் மன்னிய நெடிதே.

திணை - அது; துறை - வாழ்த்தியல்.
சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியை உலோச்சனார். ()

உ௩. பொன் - இம்புரி ; ஆகுபெயர்.
உ௪. கவர்பரி - பகுத்து விரையும் செலவு; "கவர்பரிப் புரவியர்" சிலப்.
ரு : கரு௯. மான் - குதிரை.
உ௭. கதழிசை - விரைதல் பொருந்திய. உ௮. வாளின் வாழ்நர் - வாள்
௩௦. மன்னிய நெடிது - நெடுங்காலம் வாழ்வானாக. [வீரர்.

---

(௩௭௮) தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
1 தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா 2கடைஇய விடுபரி 3வடிம்பி

க. மிடல் - வலி.

உ. வடுகர் - வடுகவீரர் ; இவர் வடநாட்டினருள் ஒருவகையார் ; "கடுங் குரற் பம்பைக் கதநாய் வடுகர்" (நற். உகஉ : ரு), "குல்லைக் கண்ணி வடுகர்" (குறுந். ௧௧ : ரு), "கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்", "வானிணப் புக வின் வடுகர்", "முரண்மிகு வடுகர்", "தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்", "வம்ப வடுகர் பைந்தலை சவட்டி", "கதநாய் வடுகர்" (அகநா. ௧௦௭: ௧௧, உ௧௩: ௮, உ௮௧: ௮, உ௯ரு: ௧ரு, ௩௭ரு: ௧௪, ௩௮௧: ௭.) ஓட்டிய - ஓட்ட.

க - உ. "பரதவர் - தென்றிசைக்கட் குறுநில மன்னர்; அது,'தென்பரத வர்.........வாளோட்டிய' என்னும் புறப்பாட்டானு முணர்க" மதுரை. ௧௪௪ - ந்.

௩. தொடையமை கண்ணி - கட்டுதலமைந்த தலைமாலை, வேலுக்கு மாலை சூட்டல் மரபு ; புறநா. ௩௩உ: ௧ - ௮.

௪. கடைஇய - செலுத்திய. வடிம்பு - இங்கே காலின் விளிம்பு ; "மாவுடற்றிய வடிம்பு" பதிற். ௭௦: உ.

(பி - ம்.)—1 'தொடையமைக்கண்ணி' 2 'குடைஇய' 3 'வடிம்பின றரைகிளிசொழர்'

௫ னற்றூர்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
௧௦ வெமக்கென [1] வருத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி [2] னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவெ னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
௧௫ செவித்தொடர் மரபின [3]விரற்செறிக் குநரு
[4] மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்

---

௫. கோயில் - அரண்மனை.

௬. சுதை - சுண்ணச்சாந்து; "வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்து" (மணி. ௬: ௪௩); "மறுவிகந்தவெண் மதியென வயங்கிய பித்தி, செறியு மாடங்கள்" நைடத. நகர. ௪.

௭. பனிக்கயம்-குளிர்ந்த நீரையுடைய குளம் ; நகருக்குக் குளம்உவமை; "நிழற்கயத் தன்ன நீணகர்" அகநா. ௧௦௫: ௭.

௮. அரிக்கூடுமாக்கிணை - அரித்தெழும் ஓசையையுடைய பெரியதடாரிப் பறை; "அரிக் கூடின்னியம்" மதுரை. ௬௧௨.

௯. வஞ்சி - பகைமேற் செலவு; "பாடினி பாடும் வஞ்சிக்கு", "பாடுநர் வஞ்சி பாட" புறநா. ௧௫: ௨௪; ௩௩: ௧௦.

௧௧. அருங்கல வெறுக்கை - பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமும் ; புறநா. ௧௪௬; ௧.

௧௩. இலம்பாடு - இல்லாமை உண்டாதலால்; ஒக்கல் - சுற்றம்; "இலம் படு காலை யாயினும், புலம்பல் போயின்று பூத்தவென் கடும்பே", "இரும் பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" புறநா. ௩௮௦: ௧௫ - ௬, ௩௯௦: ௧௧, ௩௯௪: ௧௬.

௧௪ - ௫. விரலிற் செறித்தற்குரிய மோதிரமுதலியவற்றைக் காதிலும் காதிற் செறித்தற்குரிய குழை முதலியவற்றை விரலிலும் செறித்துக் கொண் டா ரென்றபடி.

௧௬. அரை - இடை. யாக்குநர் - கட்டுகின்றவர். மிடறு - கழுத்து.

(பி - ம்.)—1 'வருதகுவல்ல' 2 'அழுங்கலவெறுக்கை' 3 'விரறசெறிகு நருஞ' 4 'மனக்கமைமரபினமிடறு'

[1] கடுந்தே றிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய [2]ஞான்றை
உ0 நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை [3] யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ [4] வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங் [5] கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.

**திணை - அது ; துறை - இயன்மொழி.**

**சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை [6]ஊன்பொதி பசுங்குடையார்.** (ருஎஅ)

கஅ. வடசொற் சிதைந்துபொருத்த முடையனவாகச் சான்றோர் செய்யுளில் வந்ததற்கு இவ்வடிமேற்கோள் ; தொல். எச்ச. சூ. சு - ந ; இ - வி. சூ. களரு - உரை.

கக. அரக்கன் - இராவணன். ஞான்றை - சமயம் ; ஐ, சாரியை.

உ0. மதரணி - கதிர்த்த

உ0 - உக. குரங்கின் செம்முகப் பெருங்கிளை - செவ்விய முகத்தை யுடைய பெரிய குரங்கின்குழு ; சுக்கிரீவனைச்சேர்ந்த குரங்குகள் ; "செம்முக மந்தி" (நற். கருக: அ) ; "துய்த்தலைச் செம்முக மந்தியாடும்" (அகநா. உசக: கச - ரு.) இழை - ஆபரணம் ; இழைக்கப்படுதலான் வந்தபெயர்.

உஉ. அறாஅ - நீங்காத. பெற்றிகும் - பெற்றேம்.

உச. அரும்படரெவ்வம் - நினைவாலுண்டாகும் நோயின் வருத்தம் ; புறநா. கசரு: க0.

* மூ. பாடாண்டிணைத் துறைகளுள், 'பெற்றபின்னரும் பெருவளனேத்தி, நடைவயிற் றோன்றிய விருவகைவிடை' (தொல். புறத்திணை சூ. ரு0- இளம். ஷை ஷை ஷை ருசு - ந) என்பதற்கு இது மேற்கோள்.

(பி - ம்.)—1 'கடுந்தெறல்' 2 'ஞான்றுநிலஞ்' 3 'மிழைப்பொலிந்' 4 'அருநகை' 5 'கிணைத்தலைமை' 6 'மொழி...திபசுங்குடையார்'

---

(ருஎகூ) யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
யவனே பெறுகவென் னாவிசை நுவற
னெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்

க. "திருந்துகழ னேன்றாட் டண்ணிழ லேமே" (புறநா. ருகஎ: உஎ.) வாழ்க்கையை யான்பெறுக.

உ. இசை - கீர்த்தி. நுவறலை அவன்பெறுக.

ரு. தொழுவர் - தொழிலைச் செய்வோர்; "நெல்லரியு மிருந்தொழுவர்", "நெல்லரி தொழுவர்" (புறநா. உச: க, உ0கூ: உ); "நெல்லரி தொழுவர்" (நற். கககு: சு.) வாள்-அரிவாள்; இவ்வடி தொல். எச்ச. சூ. கக - ந. மேற்.

1 பின்னை மறத்தோ டரியக் கல்செத்
௫ தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்ச
2 நெல்லமல் புரவி யிலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணவ்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சோ றீயா
௧௦ வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
3 கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
விட்டோய் தலைய குன்றம் பின்பட
...............ரவந்தனென் யானே தாயி
௧௫ றூவாக் குழவி போல வாங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை

---

௪. அரிய - அரிதற்கு. கல் செத்து - தீட்டுங்கல்லாக அறிந்து.

௫. அள்ளல் - சேறு. புறம் - முதுகு. உரிஞ்சும் - தீட்டும்.

௬. அமலுதல - நெருங்குதல்; "கண்பமல் பழனம்" (மலைபடு. ௪௫௪.) புரவு - விளைநிலம்; "புரவுத் தொடுத்துண்குவையாயினும்" (புறநா. ௨௬௦: ௯.) இலங்கை - மாவிலங்கை யென்னுமூர் (புறநா. ௧௭௬: ௬); "தொன் மா விலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை மன்ன ருள்ளு, மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா, ளுறுபுலித்துப்பி னோவியர் பெருமகன்" சிறுபாண். ௧௧௯ - ௨௨.

௩ - ௬. "அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற், செங்கெ லரிவார் சினையாமை - வன்முதுகிற், கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்" நள. சுயம்வர. ௧௪௩.

௮. குறுந்தாளேற்றை - ஆண்பன்றி. விளர் - வெண்மை; "விளரூன்" புறநா. ௩௫௯: ௫.

௯. நாட்சோறீயா - காலையுணவைஅளித்து.

௯ - ௧௦. ஈயாப் பசிதீர்த்தல்வலலன்.

௧௧. கொன்வரல் வாழ்க்கை - விடியற்காலத்தில் வந்து வாசித்தலாலுண் டாகியசெல்வம்; கொன் - விடியற்காலம் (சீவக. ௧௭௩.) விடியற்காலத்துக் கிணைப்பறைகொட்டித் தலைவன்புகழைப்பாடுதல பொருநர்க்கியல்பு.

௧௨. தண்டாது - அமையாமல்.

௧௩. விட்டோய் - ஆகாயத்தை அளாவிய. ௧௫. தூவா - உண்ணாத.

௧௪ - ௫. "தாயி றூவாக்குழவி போல" (புறநா. ௪: ௧௮) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

௧௬. ஐது - மெல்லிது.

(பி - ம்.)—1 'பின்னைமறத்தோடு' 2 'கெலலமல்' 3 'கொனவல்'

வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்குங்
[1] குறும்படு குண்டகழ் நீண்மதி லூரே.

திணை - அது ; துறை - பரிசிற்றுறை.
ஓய்மான் வில்லியாதனைப் புறத்திணை [2]நன்னாகனார். (௩௭௯)

கஎ. மங்குலின் - மேகம்போல. உடன் - ஒருங்கு.
(கஅ) ஊர் (கச) வந்தனென்.
(பி - ம்.)—1 'குறுமபடுநதொடகழிநீண்' 2 'நன்னுதன்'

---

(௩௮௦.) தென்பவ் வத்து முத்துப்பூண்டு
வடகுன்றத்துச் சாந்த முரீஇ
.....................ங்கடற் ருனை
யின்னிசைய விறல்வென்றித்
௫ தென்னவர் [1] வயமறவன்
மிசைப்பெய்தநீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு [2] கூதளங் குழைய
வேறுபெ...........................த்துந்து
தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருநன்

---

க. பவ்வம்-கடல்; "தென்கடன்முத்தும்" (பட்டினப். ௧௮௬); "தென் கடன் முத்தும்" (சிலப். அ. ௧௬); "வெண்டிரைத் தென்கடன் முத்தும்" தஞ்சை. ௬௩.

உ. வடகுன்றம் - இமயம். சாந்தம்-சந்தனம். உரீஇ - உரிஞ்சி; "வடவர் தந்த வான் கேழ் சந்தம்" அகநா. ௩௪0: ௧௬.

ச. விறல் வென்றி - வென்றிவகை பலவற்றுட் போர்வீரத்தாலுண்டாகிய வெற்றி.

ரு. தென்னவர் வயமறவன்: "திருவீழ் மார்பிற்றென்னவன் மறவன்" அகநா. ௧௩.

௬. முத்தாகுந்து - முத்தாகும்; இஃது உம்மீற்றுப் பெயரெச்சம்; உம், உந்தாயிற்று.

எ. குளவி-மலைமல்லிகை. கூதளம்-கூதாளி ; இந்த இரண்டும் சேர்த்து வழங்கப்படும் ; "கூதளங் கவினிய குளவி முன்றில்" (புறநா. ௧௬அ: ௧உ) என்பதையும் அதன்குறிப்பையும் பார்க்க.

௯. தீஞ்சுளைப் பலவு: "தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே", "தீஞ் சுளைப் பலவின் மாமலைக் கிழவன்" (புறநா. ௧0௯: ரு; ௧உ௯: ச); "மன்றப் பலவின் தீஞ்சுளை" (ஐங். எ௫. ச.) நாஞ்சில் - ஒருமலை; "நாஞ்சிற் பொருநன்" புறநா. ௧௩எ, ௧௩௯, ௧௪0.

ரு - ௯. நாஞ்சில்வள்ளுவன் மறச்சாதியினனென்றும் பாண்டியர்களுக்குரிய படைவீரனென்றும் தெரிகிறது.

(பி - ம்.)—1 'வயன்மறவர்' 2 'கூதுளங்'

கo றுப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய
னட்பெதிர்ந் தோர்க்கே [1] யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
.....................த்தார்ப் பிள்ளையஞ் சிறாஅ
[2] ரன்ன ளுகன் மாறே யிந்நில
கரு [3] மிலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

**திணை - அது; துறை - இயன்மொழி.**
**நாஞ்சில்வள்ளுவனைக் கருவூர்க் கதப்பிள்ளை.** (ருஅo)

---

கo. துப்பெதிர்ந்தோர்க்கு - வலியோடு எதிர்த்த பகைவர்க்கு; "வெப் புடைய வரண்கடந்து, துப்புறுவர் புறம்பெற்றிசினே", "கடுமான்கோதை துப் பெதிர்ந் தெழுந்த, நெடுமொழி மன்னர்" (புறநா. கக: அ - சு; ருச: அ-சு.) உள்ளாச் சேய்மையன்-நினைத்தற்குமெட்டாத மிக்க தூரத்துள்ளான்.

கக. நட்பு எதிர்ந்தோர்க்கு - அன்பால் அடைந்தவர்க்கு.

கo - கக. "துப்புப் பகையுமாதல், 'துப்பெதிர்ந்தோர்க்கே......நண்மை யன்' என்பதனானும் அறிக" குறள், கககரு - பரிமேல்.

கஉ. கந்தனென்பது, நாஞ்சின்மலைத்தலைவர் பரம்பரையில் உள்ளானும் இப்பாட்டுடைத் தலைவனுமாகிய ஒருவன்பெயர்.

கச. ஆகன்மாறு - ஆதலால்; "அனையையாகன்மாறே" புறநா. ச: கஎ, உ௰: உo; பதிற். அo: கஉ.

கரு. வற்கடக் காலம் வரினும்.

கசு. போயின்று-நீங்கப்பெற்றது. பூத்த-பலவாற்றாலும் பொலிவுபெற்ற.

கரு - கசு. புறநா. ருஎஅ: கஉ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.)—1 'அங்கையநண்மையன்', 'அங்கையண்மையன்,' 'யாங்கனீ நன்மையை' 2 'அள்ளனுகன்' 3 'இளம்படுகாலையாயினும்'

---

(ருஅக.) ஊனுமூணு [1]முனையி னினிதெனப்
[2] பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
மளவுபு கலந்து மெல்லிது பருகி

---

க. ஊன் - இறைச்சி; ஊண் - அடிசில். முனையின் - வெறுத்தால்.

உ. பாகு - வெல்லப்பாகு; "காரகற் கூவியன் பாகொடு பிடித்த, விழை சூழ் வட்டம்" பெரும்பாண். ருஎஎ - அ.

ரு. அளவுபுகலந்து - நன்றாகக்கலந்து.

க-ரு. "சுவைய,வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ" பொருந. கoஎ-அ.

(பி - ம்.)—1 'முனைஇயவினிதென' 2 'பாஅறபெய்தவும்'

விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
ரு சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டெனை
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்
[1] துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
[2] பயம்பகர் வறியா மயங்கரின் [3]முதுபாழ்ப்
க0 பெயல்பெய் தன்ன செல்வத் [4]தாங்க
ணீயா மன்னர் [5]புறங்கடைத் தோன்றிச்
[6] சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
[7] யூன்சுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியி
கரு னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்க்குவே மதனா
லிருங்கிளிங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு

---

ச. விருந்து - புதுமை. ஆற்றி - பசியைத் தணித்துக்கொண்டு.

ரு. சென்மோ - வருவாயாக.

௪ - ரு. "ஊனு மூனு முனையினென்னும் புறப்பாட்டினுள், 'சென்மோ பெருமவெம் விழவுடைநாட்டெனை' என்பதனையும் தன்மைக்கண் 'மோ' வருமென இவ்வாறு அமைத்தலுமொன்று; அன்றிப் பெரும, எம் விழவுடை நாட்டே நீ செல்லென்று சுற்றத்தார் தலைவனைநோக்கிக்கூற அப்பொருளனும் பாட்டுடைத் தலைவனை நோக்கிப்பின்னும் கூறினைகப் பொருள்கூறுதலுமொன்று" தொல். இடை. சூ. உஎ - ந.

சு. அறியுநமாக - அறிவேமாக.

சு - எ. "நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி" மலைபடு. ருருக - சுo.

அ. துணரியது - குலைகொண்டது; "பைம்பாகற் பழந்துணரிய, செஞ் சுளைய கனி" (பொருந. ககக - உ.) ஊழ்த்து - செவ்வியழிந்து.

கூ. பகர்வு - கொடுத்தல். அரில் - சிறுதூறுகள். முதுபாழில்.

கஉ. சிதாஅர் வள்பு - துண்டித்தவார்; "சிதாஅர் வள்பினென் றடாரி" புறநா. ௩௭௬ : ௪.

கச. அரலை - குற்றம். பாணியின் - பாட்டால். கஎ. கூலம் - பலபண்டம்.

கக. இவணை - இவ்விடத்துள்ளாய்.

(பி - ம்.)— 1 'துணரியதுளவாகி' 2 'பயம்பகர்பறியா' 3 'முதுபாட்' 4 'ஆங்கினிதியா' 5 'புறங்கடைக்கொன்றி' 6 'சிதாஅரளமபிற......தடாரிடை' 7 'ஊனைகிர்வலந்ததென்கண்'

உo மிதற்கொண் [1] டறிகை வாழியோ இணைவ
சிறுகனி, ஒருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மான [2] மறப்பின்
உரு றிருங்கோ வீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே.*

திணையும் துறையும் அவை.
கரும்பனூர் கிழானை நன்னாகனார். (ங௱அக)

உங. உறுவர் - பெரியோர். உச. அறத்துறையம்பி - தருமவோடம்.
உசு. மகன் (உக) படர் கென்றோனே.
* மு. தொல். புறத்திணை. சூ. ஙo - இளம்; ஷை ஷை சூ. ஙசு-ந. மேற்.
(பி - ம்.)—1 'அறிகைவாழியோ' 2 'பிறபபினறிருககொளளாப'

---

(ஙஅஉ.) கடற்படை யடற்கொண்டி
[1] மண்டுற்ற மலிர்நோன்றாட்
டண்சோழ நாட்டுப் [2]பொருந
னலங்குளை யணியிவுளி
ரு நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் [3]வேண்டே
மவற்பாடுது மவன்றாள் வாழியவென
நெய்குய்ய வூனவின்ற
பலசோற்றா [4]னின்சுவைய
கo நல்குரவின் பசிததுனபினின்
முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும்

க. கொண்டி-பொருளின்மிகுதி ; "கொண்டி பெருகென்றோனே" புறநா. ஙகூo: உங.

உ. மலிர் - நீருற்று ; "மணலாடு மலிர்நிறை" ஐங்குறு. கரு.

ங. பொருநன்-உவமிக்கப்படுபவன் ; "போர்மிகுபொருந" (பதிற்.உஎசு); "வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந" (மதுரை. சஉ); அரசனுமாம்.

ரு. பொருநரேம் - பொருநராக உள்ளேம். சு. பிறரைப்பாடி.

எ. வாழியவென அவனைப்பாடுவேம். கூ. சோற்றான் - சோற்றோடு.

(பி - ம்.)—1 'மணடறற மறனெனறாட', 'மண்டறற மலிறநொன' 2'பொருநன வலஙகுளை' 3 வேணடேமய றபாடுதும்' 4'இனஞசுவையநல்குரவின பசித்துன்பவென்பகின்'

[1] யானும், ஏழ்மணியங் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவை [2]நாவி
னிறனுற்ற வராஅப்போலும்
கரு வறனொரீஇ [3]வழங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் றோன்ற
னினதே, முந்நீ ருடுத்த [4]வ்வ் வியனுல கறிய
வெனதே, [5]கிடைக்கா ழன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோ
உ0 லெறிதொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறு நடுங்க [6] வேத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே.

திணை - அது; துறை - கடைநிலை.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (ருஅஉ)

---

கஉ. ஏழ்மணி - எழுச்சியையுடையமணி. உத்தி - படப்பொறி.

கரு. கட்கேள்வி - கண்ணாற் கேட்டல். கவைநா - பிளவுபட்ட நாக்கு.

கரு. வறன் - வறுமை. வழங்குவாய்ப்ப - பிறர்க்கு யாம்கொடுத்தல் கைகூடும்படி.

கச - கரு. வறுமைக்கு அராவின் விடம் உவமம்.

கசு. மதியும் அத்தையும் அசைநிலைகள். தோன்றல், விளி.

கஎ. நினதாகிய உலகறிய.

கஅ. கிடைக்காழ் - நெட்டியின் காம்பு. எனதாகிய கிணையென்க.

கஅ - கூ. கிணையினிடத்து அதனையடிக்கும் சிறுகோல் கட்டப்பட்டிருக்கும் ; "நுண்கோற் சிறுகிணை" புறநா. ருஅரு - ரு.

உக. கேட்டொறும் - கேட்குந்தோறும்.

உஉ. வென்றதேர் - ஏனையோரை வென்ற தேரையுடைய. பிறர்- அயலரசர். வேத்தவையான் - இராசசபைக்கண்.

(கஎ) அறிய (உக) ஏத்துவென்.

(பி - ம்.)—1 'யானுமெமணி' 2 'நாவிறறாநிறத்தவராஅப்', 'நாவிறறாநிறத்தவராஅப்' 3 'வயங்குவாயபப', 'வமஙகுவாயபப' 4 'விலவயினுலகு' 5 'கிடைகாழனனவென்றெண்கண்' 6 'வெநது', 'ஓதுவென்'

(௩௯௩.) ஒண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
௫ [1] தன்புக ழேத்தினெ னாக வூன்புலந்
தருங்கடி வியனகர்க் [2] குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த வாம்பற்
றேம்பா யுள்ள தங்கமழ் மடருளைப்
[3] பாம்புரி யன்ன வடிவின காம்பின்
௧௦ கழைபடு சொலியி னிழையணி வாரா
வொண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்
கற்புடை மடந்தை தற்புறம் புல்ல
வெற்பெயர்ந்த நோக்கி.......................
௧௫ .................................கற்கொண்
[4] டழித்துப் பிறந்தனெ னாகி யவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் [5] படர்பறி யேனே

---

௧. சேவல்-ஆண்கோழி. எடுப்ப - எழுப்ப. ஏற்றெழுந்து - துயிலுணர்ந் தெழுந்து; "தாமலர்க்க ணேற்க துயில்" (பு - வெ. ௯ : ௯ - துயிலெடை நிலை); "துயிலிடைக் கண்ட துணைநலத் தேவியை, யியல்புடை யங்க ணேற்ற பிற் காணுது" பெருங்: ௪. ௭: ௯௪ - ௨.

௨. மு. புறநா. ௩௭௪ - ௪. உறைக்கும் - துளிக்கும்.

௩. நுண்கோற் சிறுகிணை : புறநா. ௩௮௨: ௧௮ - ௯. சிலம்பவொற்றி - முழங்க அடித்து.

௪. பகடு - உழும் எருது; எருமைக்கடாவுமாம்.

௧ - ௪. புறநா. ௩௮௫: ௧ - ௨. ௬. குறுகல் - அடைதல்.

(௬) குறுகல்வேண்டி (௫) ஏத்தினெனாக.

௧௧. கலிங்கம் - ஒருவகை நல்லாடை.

௯ - ௧௧. காம்பின் கழை படு சொலியின் - மூங்கிலாகிய கோலின் உட்புறத்தே பெயர்த்தெடுக்கப்படும் வெள்ளிய தோல்போல. இழையணி வாரா - நெய்யப்பட்டுள்ள இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாத. சொலி, கலிங்கத்திற்கு உவமை.

௧௨. வசிந்து - தலைவனை வயமாக்கி. உந்தி - கொப்பூழ்.

௧௬. அழித்து - மீட்டும்.

௧௭. படர்பு - செல்லுதல்.

(பி - ம்.)—1 'தான் புகழ்ந்து' 2 'குறங்கல்வேண்டி' 3 'பாம்பு பயனத தனனவடிவின சாமபின' 4 'அளித்துப்' 5 'படர்பறிவோனே'

குறுமுலைக் கலமரும் பாலார் வெண்மறி
நரைமுக வூகமொடு கதுசென...............
௨௦ ..................[1] கன்றுபல கெழீஇய
கான்கெழு நாடன் கடுந்தே ரவியனென
வொருவனை யுடையேன் மன்னே யானே
யறாஅனெவன் [2]பரிகோ வெள்ளியது நிலையே.

திணையும் துறையும் அவை.

...............மாறேக்கத்து [3] நப்பசலையார். (௩௮௩)

கஅ. மறி - ஆட்டுக்குட்டி. ௨௦. ஊகம் - ஒருவகைக் குரங்கு.

௨க. அவியன் - ஒருபகாரி; "களிமலி கள்ளி னற்றே ரவிய, ஞூடிய லிள மழை சூடித் தோன்றும், பழந்தூங்கு விடாகம்" அகநா. ௨௭க: க௨ - ௪.

௨௩. அறான் - மேற்கூறியதலைவன் தனதுநிலைமைகுன்றான். வெள்ளியது நிலை எவன்பரிகோ - சுக்கிரனுடைய நிலைமைக்குச் சிறிதும் வருந்தேன்; புறநா. ௩௮௪: ௨௦; ௩௮௬: ௨௪.

(பி - ம்.)— 1 'தன்று பலகெழீஇய காழகெழு' 2 'பரி சொவெள்ளி' 3 'நபபாலையார்'

---

(௩௮௪.) மென்பாலா னுடனணைஇ
வஞ்சிக்கோட் [1]டுறங்குநாரை
[2] யறைக்கரும்பின் பூவருந்தும்
[3] வன்பாலாற் கருங்கால்வரகி
௫ ..................................
ணங்கட் குறுமுயல் வெருவ வயல
கருங்கோட் டிருப்பைப் பூவுறைக் குந்து
விழவின் [4]றாயினு முழவர் மண்டை
யிருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து

க. மென்பால் - மருதம். ௨. வஞ்சிக்கோடு - வஞ்சிமரத்தின்கிளை.

௪. வன்பால் - முல்லை.

௭. இருப்பைப்பூ உறைக்குந்து - இருப்பைப்பூ உதிரும்; "முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ,...இருநிலத் துறைக்கும்" ஐங்குறு. ௩௨௦.

அ. மண்டை - ஒருவகை உண்கலம்.

௯. கெடிற்றுமிசை - கெடிற்றுமீனாகியஉணவு; "அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும்" (ஐங்குறு. அக); மிசை, மிசையெனவும் வழங்கும்; "குறவர்க் கல்குமிசை வாகும்" புறநா. ௨௩௬: ௨.

(பி - ம்.)—1 'உறவங்குநாரை' 2 'வாடைக்கரும்பின', 'அடைக்கரும்பின' 3 'வனபாலாற்குக் கருங்' 4 'ஆயுனுழவா'

௧௦ .....................துணையேம் பெரும
செல்லென்னும் பொன்னொன்னும்
[1] கனற்றக்கொண்ட நறவென்னு
.............மனைபுன்னு வலைபலவும்
[2] யான்றண்டவுந் தான்றண்டா
௧௫ விணம்பெருத்த கொழுஞ்சோற்றிடை
மண்ணுணப் புகழ்வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
[3] புரந்தோ னெந்தை யாமலந்தொலை......
யன்னோனை யுடையே மென்ப......வறட்
௨௦ டியாண்டு நிற்க வெள்ளி மாணட
வுண்ட நன்கலம் பெய்து நுடக்கவுந்
தின்ற [4]நண்ப லூன்றோண்டவும்
வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.

**திணையும் துறையும் அவை.**
**கரும்பனூர்கிழானைப் புறத்திணை நன்னாகனார்.** (௩௮௪)

---

௧௨. கனற்ற - வெதுப்ப.

௧௪. யான்தண்டவும் - யான் நீங்கவும்; "தண்டாக் களிப்பி னாடுங் கூத்து" **மணி.** ௬ : ௧௨௬.

௧௭. "நீர்நாண நெய்வழங்கியும்" **புறநா.** ௧௧௬ : ௨௧.

௧௯. என்ப, அசை. வறட்கு - வற்கடக்காலத்தைத் தரும்பொருட்டு.

௨௦. வெள்ளி யாண்டு நிற்க - மழைக்கோளாகியசுக்கிரன் எங்கேநின்று லென்? **புறநா.** ௩௮௩ : ௨௪ ; ௩௮௬ : ௨௦ - ௨௪.

௨௨. நண்பல் - பல்லின்நடு.

(பி - ம்.)— 1 'கன்னற்கொண்ட' 2 'யானறண்டவும தான்றண்டா' 3 'புரந்தெனெந்தை' 4 'நன்பலூண்டோண்டவும்'

---

(௩௮௫.) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினு மிலனே பிறன்கடை

---

௧. புள் - கோழிச்சேவல்; பறவைப்பொதுவுமாம்; "வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு, முயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே" **புறநா.** ௩௯௭ : ௧-௨.

யகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
ரு வறனியா னீங்கல் வேண்டி யென்னரை
[1] நீனிறச் சிதாஅர்களைந்து
[2] வெளிய துடீஇயென் பசிகளைந் தோனே
[3] காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி [4] யம்பர் கிழவோ
கo னல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
வோங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.

[5] அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனூர். (௩அரு)

ச. பாடு ஓசை. ரு. வறன் - வறுமை.

சு. நீலநிறமுள்ள கந்தையைநீக்கி. எ. வெளியது - வெள்ளாடையை.

அ. காவிரியென்றது இங்கே அரிசிலாற்றை. படப்பை - தோட்டம்.

கூ - கo. அம்பர் - சோழநாட்டிலுள்ளதோர் ஊர். அருவந்தை - ஓர் உபகாரி; "கற்ற நாவினன் கேட்ட செவியினன், முற்ற வுணர்ந்த மூதறி வாளன், நாகரிக நாட்டத் தாரிய னருவந்தை", "நாடே பிறர்நாட்டிற் குவமை யாறே, காலமறிந் துதவுங் காவிரி தானே, யாடவர் திலக னம்பர் மன்ன, னீடிசைத் தலைவ னருவந்தை", "வருநற் கங்கை வடதிசைப் பெருமையுந், தென்றிசைச் சிறுமையு நீக்கிய குறுமுனி, குண்டிகைப் பழம்புனற் காவிரிப் பெரும்பதி, யம்பர்க் கதிபதி" (திவாகரம்) என்பவற்றிற் காவிரியும் அம்பரும் அருவந் தையும் பாராட்டப்பெற்றிருத்தல் காண்க.

(பி - ம்.)—1 'நீலநிறக குறைந்தசிதாஅர்', 'நீலநிறசிதாஅர்' 2 'வெளி துடீஇக்களைந்தோனேபசி' 3 'காவிரியகளையுந்', 'காவிரிகளையுந' 4 'அம்பல்' 5 'அம் பல கிழான வெநதையை'

---

(௩அசு.) நெடுநீர [1] நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவுஞ்
சூடு கிழித்து வாடுேன் மிசையவு

க. கயம் - பள்ளமான நீர்நிலை.

௩. வறை - வறையல் ; ஒருவகை உணவு. முகக்க - முகந்துகொள்ள.

க - ௩. சுட்டநெய்யில்வேகும் வறையின்முழக்கத்திற்குக் கயத்தில்வீழும் மாரித்துளியின் முழக்கம் உவமம்.

ச. சூடு - சுடப்பட்ட இறைச்சி.

(பி - ம்.)—1 'நிறையககயத்துப'

௫ ஊன்கொண்ட வெண்மண்டை
யான்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
யீத்தோ னெந்தை யிசைதன தாக
௧௦ வயலே, [1]நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் [2]பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, காறந்த கலனெண்ணுவோர்
௧௫ கானற் புன்னைச் சினை [3]நிலைக் குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் [4]கொள்ளை சாற்றிப்
[5] பெருங்கனன்னாட் டுமெனொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே
பொராஅப் பொருநரேம்
௨௦ [6] குணதிசை நின்று குடமுதற் செலினுங்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினுந்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்

---

௫. **புறநா.** ௩௮௪ : ௮ - ௯. ௬. ஆன்பயம் - பசுப்பால்.

௭. உண்டமையாலுண்டான வேர்வையல்லாமல். ௮. அறியாதபடி.

௧௧. ததும்பின - நிறைந்தன.

௧௦ - ௧௧. கரும்பின்பாத்தி : "கரும்பு நடுபாத்தியிற் கலித்த வாம்பல்" **ஐங்குறு.** ௬௫.

௧௨. புறவு-முல்லைநிலம். ஆயத்தான் - ஆயத்தொடு கூடி. ௧௩. குறும்பு-சிற்றரண்கள்.

௧௪. கால் தந்த - காற்றாற்கொண்டுவரப்பட்ட.

௧௫. சினை - கிளை. நிலைக்குந்து - நிலைக்கும்.

௧௬. உமண் - உப்புவிற்குஞ்சாதி.

௧௬ - ௭. "சில்பதவுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" **பெரும்பாண்.** ௬௪ - ௫.

௧௯. பொரா - ஒப்பில்லாத. ௨௦. செலினும் - சுக்கிரன்சென்றாலும்.

(பி-ம்.)—1 'நெலலி வேயி னீடிய' 2 'பூத்ததுமபினாறவேபுலலருந்து' 3 'நிலககுந்து' 4 'கொளளைச்சாறறி' 5 'பெருங்கனாட்டு' 6 'குடதிசை... செலினும் வடதிசை'

யாண்டு [1] நிற்க வெள்ளியாம்
உரு வேண்டிய துணர்ந்தோன் றாள்வா ழியவே.

திணையும் துறையும் அவை.

சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார். ()

உச. வெள்ளி - சுக்கிரன். உரு. வேண்டியது - யாம் வேண்டியதை.
(பி - ம்.)— 1 'நிறகவெளறியாம்'

---

(௩அஎ.) வள்ளுகிர வயலாமை
[1] வெள்ளகடு கண்டன்ன
வீங்குவிசிப் புதுப்போர்வைத்
[2] தெண்கண் மாக்கிணை யியக்கி யென்று
ரு மாறுகொண்டோர் மதிலிடறி
நீருடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு [3]பரந்தியங்கி
[4] வேந்துடைமிளை யயல்பரக்கு
௧௦ மேந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்
திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
[5] னகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன் சேவடியத்தையென்
௧ரு றியானிசைப்பி னனிநன்றெனப்
பலபிற வாழ்த்த விருந்தோ [6]ரென்கோ......

---

௧. வள் - கூர்மை; "வள்ளணி வளைநாஞ்சிலவை" பரி. ௧ரு: ௫எ.

௨. அகடு - வயிறு.

௧ - ௪. கிணைப்பறை ஆமையின் அகடுபோல்வது; " ஆமை, கம்பு ளியவ ருக விசிபிணித், தெண்கட் கிணையிற் பிறழும்" அகநா. ௩௫௬.

எ. எருத்து - பிடரி. ௯. மிளை - காவற்காடு

௧௧. பகடு - யானை. ௧௩. நகைப்புலவாணர் - புலவர்.

௧௨ - ௩. பகைவர் அளித்ததிறையைத் தம்மைச்சார்ந்த இரவலர்க்குக் கொடுத்தல் அரசர்க்கியல்பு.

௧௪. தன் சேவடி மிகப்பொலிக. ௧௬. என்கோ - என்பேனோ.

(பி - ம்.)—1 'வெளகெொணடனன' 2 'தென்கண்' 3 'பாநதியயஙகி' 4 'வேநதுவடயிளை' 5 'நசைபடடல வாழ்நர்...மிபபொலியாத செவடிபொலியா ததை யென்றனியானிசப பினனினனனிநனறனிற டலபிறன்' 6 'எலகொ'

1 மருவவினக ரகன்........
திருந்துகழற் சேவடி குறுகல் வேண்டி
2 வென்றிரங்கும் விறன்முரசினோ
௨௦ 3 னென்சிறுமையி னிழித்துநோக்கான்
றன்பெருமையின் றகவுநோக்கிக்
4 குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
௨ரு 5 மனைக்களமரொடு களமென்கோ
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவி
6 னல்கி யோனே நசைசா றோன்ற
லூழி வாழி பூழியர் பெருமகன்
பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாட்
௩௦ செல்வக் கடுங்கோ வாழி யாத
7 னென்னுத் தெவ்வ ருயர்குடை 8 பணித்திவண்
விடுவர் மாதோ நெடிதே நி......

---

௧எ. மருவுதற்கு இனிய நகரம்.

௧௯. வென்று - போர்க்களத்தில் வஞ்சியாது பகைவர்க்கு முன்னேநின்று.

௨௦. என்னை இழித்து நோக்கானாகி.

௨௧. தன்னுடைய மேம்பாட்டையறிந்து. ௨௩. மா - குதிரை.

௨௨ - ௫. ஓகாரம் எண்ணுப்பொருளில் வந்ததற்கும் அதன்பின் வல்லினம் இயல்பாயதற்கும் இவ்வடிகள் மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. ரு. அஅ - இளம்; ந. ~

௨௪. நிரை - பசுக்கூட்டம்.

௨௬. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப; பொருந. ௯௮.

௨௦ - ௨எ. "சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச் சுரப்பாடி யான் கேட்கப் பொன்னூடொன் றீந்தான், இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவார் தங்கொடையின் சீர்" (ஔவைபாடல்) என்னும் வெண்பாவில் இவ்வடிகளின் பொருள் அமைந்திருத்தல் அறியற்பாலது.

௨௬ - எ. "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப, நனவி னல்கியோ னசைசா றோன்றல்" புறநா. ௩௭எ : ௧௯ - ௨௦.

௩௦. இப்பாட்டுடைத்தலைவன் பெயர் இவ்வடியில் அமைந்துள்ளது.

௩௧. என்னு - என்று கூறாத. பணித்து - தாழ்த்தி.

(பி - ம்.)—1 'மிருவ' 2 'வெனறிரகரு முரசினனெனச சிலமபினிழித்து' 3 'எனசிறுமை' 4 'குனறகழகளிறு' 5 'மகனைசகளமரொடுகலமென' 6 'நலகி யோனெனதை நசைசானறோனறல்' 7 'ஒனனுததெவவர்' 8 'பணிததிவணிவிடுவா'

புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்குங்
கல்லென் பொருநை [1] மணலினு மாங்கட்
ருடு பல்லூர் சுற்றிய கழனி
யெல்லாம் விளையு நெல்லினும் பலவே.

**திணையும் துறையும் அவை.**

**சேரமான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதனைக் நண்டுகட்பாலியாதன்.** (ருஅஎ)

ருரு. வஞ்சியென்னும் மரவிசேடத்திற்கு உரிய 'புல்லிலை' என்னும்அடை அதன் பெயரையுடையதாகிய நகருக்கும் ஆயிற்று.

ருரு - ச. "ஒளிதிக ழுத்தி யுருகெழு நாகம்" (பரி. கஉ: ச - பரிமேல்.) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள். பொருநை - ஓராறு. இஃது ஆன் பொருநை யென்றும் வழங்கும்.

ருச - சு. "மண்ணாள் வேந்தே நின்வா ழுட்க, டண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப்: உஅ: கஉடு - சு.

(பி - ம்.)—1 'மணலினுமாக்கட்'

---

(ருஅஅ.) வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
[1] யிரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்
.................................. பொருந்தித்
ரு தன்னிலை [2]யறியுந ளுக வங்கிலை

க. வெள்ளிக்கோள் தென்றிசையிலெழுதல தீயநிமித்தம். இங்நிகழ்ச்சி மழைபெய்யாமைக்கும் வற்கடம் உண்டாவதற்குங் காரணமென்பர் ; "மைம் மீன் புகையினுந் தூமந் தோன்றினுந், தென்றிசை மருங்கின் வெள்ளி யோடி னும்" (புறநா. ககஎ: க - உ), "வசையில்புகழ வயங்குவெண்மீன், றிசை திரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி,வான் பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. க - சு), "வறிது வடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி, பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப", "நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப், பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப" (பதிற்.உச, சுக), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர்வெள்ளி தென்புலம் படரினும்,......காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த் தலை" (சிலப். கo: கoஉ - அ) என்பனவற்றால் அறியலாகும்.

ரு. கிணைமகன் - கிணைப்பறை வாசிப்பவன்; கிணையன். பெரும்பெயர் - பெரும்புகழ்.

ரு. தன்னிலை - தன்னுடைய மேம்பட்டநிலை.

(பி- ம்.)—1 'இரும்பிறை கிணைமகன்' 2 'அறியினளுக'

யிடுக்க ணிரியல் [1]போக வுடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந் தோன்ற
..........................ருமருப்பாக
வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி......
கO [2]பெயர்க்கும் பண்ணற் கெடஉரோமகவிரென
[3]வினைப்பக டேற்ற மேழி திணைத்தொடா
நாடொறும் [4]பாடே னாயி னானா
[5]மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுர சிரங்கும் பீடுகெழு தானை
கரு யண்ணல் [6]யானை வழுதி
கண்மா றிலியரென் பெருங்கிளைப் புரவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

சிறுகுடிகிழான்பண்ணனை மதுரை அளக்கர்ஞாழார்மகனார் மள்ளனார். (ருஅஅ)

---

அ. இரியல்போக - கெட. உடைய - தன்பால் உள்ளனவற்றை.

கO. பண்ணன் - இப்பாட்டுடைத்தலைவன்.

கக. வினைப்பகடு - உழவுத்தொழிற்குரிய எருது ; கடா. ஏற்றம் - நீர் இறைத்தற்குரியது; இப்பெயர் ஏத்தமெனவும் வழங்கும்.

கரு. மணி - ஆராய்ச்சிமணி; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத், தான்ற னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்" (சிலப். உO : ருரு - ரு) மருகன் - வழித்தோன்றல்.

கச. பிணித்தல் - கட்டுதல்.

கரு. கண்மாறிலியர் - கண்ணோட்டம் ஒழிவாருக. புரவு - காத்தல்.

(பி - ம்.)—1 'போத' 2 'பெயாகசும டணணற்கெடஉரோ மகவிரென' 3 'வினைப்பகடெதது மேனிதினை தொடர்', 'வினைப்பகடெதது மெநதிணை நதொடா' 4 'பாடெனாயினெனைகாணெ' 5 'மணிகிளாமுகதிறறெனனவன' 6 'யானை வழுகண மாறிலியா'

---

(ருஅகூ.) நீர் நுங்கின் [1]கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினு

---

க. நீர் நுங்கு - நீரையுடைய பனநுங்கு. வலிப்ப - நீரின் றிவற்ற.

உ. திரங்க - உலர ;"திரங்குமரா னிற் பொலியச் சூடி" மலைபடு: சருக.

ரு. கயம் - ஆழமான நீர்நிலை. களியும் - நீர்வற்றிக்களிமயமாதற்குரிய.

(பி - ம்.)—1 'கவைவிறடக'

மேலா வெண்பொன் 1 போருறு காலை
௫ யெம்மு முள்ளுமோ பிள்ளையம் 2பொருந
னென்றீத் தனனே யிசைசா னெடுந்தகை
யின்றுசென் றெய்தும் வழியனு மல்லன்
செலினே காணா வழியனு மல்லன்
புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து
௧௦ குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குங்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய
3 ளாத னுங்கன் போல நீயும்
4 பசித்த வொக்கற் பழங்கண் வீட
௧௫ வீறுசா னன்கல நல்குமதி 5பெரும
வைதக லல்குன் மகளிர்
நெய்தல்கே ளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.

ஆதனுங்கனைக் கள்ளிலாத்திரையனார். (௩௮௯)

---

௪. வெண்பொன் - வெள்ளிக்கோள். போர் - மற்றைக் கோள்களோடு அதுசெய்யும்யுத்தம். இது கிரகயுத்தமென்று சொல்லப்படும்; "தோளோடு தோடேய்த் தலிற்றெருள்ளிலங் தாங்க லாற்றாத், தாளோடு தாடேய்த் தலிற் றந்த தழற்பிறங்கல, வாளோடு மின்னோடு வெபோனெடு வானின்றேடும், கோளோடு கோளுற் றனவொத்தடர்ந் தார்கொதித்தார்" (கம்ப. வாலிவதை. ௩௮) என்பது இங்கே அறியற்பாலது.

௫. எம்மும் உள்ளுமோ - எம்மையும் நினைப்பானோ.

௭. காட்சிக்கு எளியனுமல்லன்.

௮. காணுதற்கு அரியனுமல்லன்.

௯. புன்றலை - சிவந்ததலை; "புன்றலை மகாரோடு" (மலைபடு. ௨௫௩.) இனைய - வருத்த.

௧௩. ஆதனுங்கன் - இப்பாட்டுடைத்தலைவன்.

௧௪. ஒக்கல் - சுற்றம். பழங்கண் - துன்பம்.

௧௭. நெய்தல் - நெய்தற்பறை; சாப்பறை.

(பி - ம்.)—1 'போகுறு....பொருநவென்று' 2 'பொருநவென்று' 3 'ஆறு நுஙகன்', 'ஆகுநுங்கன' 4 'பசிதது வொஙககறபழங' 5 'பெருமவைததல'

(௩௯௦.) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் [1]தாயி வாள
ரரும்பலர் [2]செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
..............................மன்னமுற்றத்
௫ [3] தார்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
[4] மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
னரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற [5]பன்னா ளன்றியுஞ்
௧௦ சென்ற ஞான்றைச் சென்றுபடு ரிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன [6]வுடைகளைந்து
௧௫ திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியு
[7] மமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி

---

௧. அறவைநெஞ்சம் - அறத்தையுடைய நெஞ்சம்; "அறவை யாய ரகன்றெரு வடைந்தன" (சிலப். ௨௨: ௧௧௬); 'அறவை நெஞ்சத் தாயர்' என்பதை, 'ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங் கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை" (சிலப். ௧௫ : ௧௨௦ - ௨௧) என்பது விளக்குகின்றது.

௪ - ௨. புறநா. ௪௪: ௪௧ - ௩. ௩. செருந்தி - ஒருபூமரம்.

௫. ஆர்வலர் - பரிசிலர். காவலர் - அரசர். ௬. கடி - காவல்.

௫ - ௬. 'புலிதுஞ்சு வியன்புலத் தற்றே, வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே' புறநா. ௫௪ : ௧௩ - ௪.

௭. சிலம்ப - முழங்க; முழக்கம் இங்கே எதிரொலி.

௧௦. சென்றஞான்று - முதல்நாள். ௧௨. அளியன் - அளிக்கத்தக்கான்.

௧௪. "ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி, வேர்புரை சிதாஅர் நீக்கி" (புறநா. ௩௯௨: ௧௩ - ௪); "பாசிவேரின் மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" பொருந. ௧௫௩ - ௪.

௧௫. மலரென்றது, பகன்றைப்பூவை; புறநா. ௩௯௩: ௧௭-௮.

௧௭. துவை - துவையல்.

(பி - ம்.)—1 'ஆயிவிளா' 2 'சொநிநெடுகொரலாகமழு' 3 'ஆவலர்' 4 'மழைகளத' 5 'பனஞளரையும்' 6 'உடைகளைநதிருமவானன' 7 'அமிர தானமரபின'

முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
உ0 யிரும்பே ரொக்கல் [1] பெரும்புலம் பகற்ற
[2] வகடுநனை வேங்கை வீகண் டன்ன
[3] பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
உரு [4] கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி
............................
வானறி யலவென் பாடுபசி போக்க
லண்ணல் யானை வேந்த
ருண்மையோ வறியல் காண்பறி யலரே.

திணையும் துறையும் அவை.

அதியமானெடுமானஞ்சியை ஔவையார். (ருகூ0)

ககூ. முன்னூர் - ஊர்முன். பொதியில் - அம்பலம்.

உ0. "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" புறநா. ருகூச: கசு.

உக. அகடுநனை - உள்ளிடம் நனைந்த. வேங்கைவீ - வேங்கைமரத்துப்பூ.

உஉ. பகடுதரு செந்நெல் - எருது முதலியனவைகள் உழுதுண்டாக்கிய செவ்வியநெல்; "பகடுதரு பெருவளம் வாழ்த்தி" (புறநா. ருகூக: ச); "பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க" நாலடி. உ.

உரு. கொண்டி - பொருளின்மிகுதி; புறநா. ருஅஉ: க.

உஎ. வான் - மேகம். உகூ. அறியல் - அறியேன்.

(பி - ம்.)—1 'பொருமபுகறறததடுஙகண்வேஙகை' 2 'தகடுகனைவேஙகை' 3 'படுதருசெஙநெற்' 4 'கணடாாககொணடுமவனதிருநதடி'

---

(ருகூக.) தண்டுளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய [1] விண்டோய் பிறங்கன்
முகடுற வுயர்ந்த [2] நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
ரு திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
யரிய லார்கைய ருண்டினி துவக்கும்

உ. விண்டு - [illegible]; பிறங்கல் - [illegible]; இங்கே தானியப்போர்.

ரு. முகடு - உச்சி.

ச. புறநா. ருகூ0: உஉ - ஆம் அடியின் குறிப்பைப் பார்க்க.

ரு. கெண்டி - கிண்டி. சு. அரியல் - கள்.

(பி - ம்.)—1 'விணடெறபயபிறஙகன' 2 'நெலலினகீழவர்'

வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தெனை
வீங்குவர் திருத்தவென் னிரும்பே ரொக்க
நீர்கை விடுக்கும் [1]பண்பில முதுகுடி
௧௦ நனை.........................வினவலின்
முன்னும் வந்தோன் மருங்கில னின்னு
மளிய னாகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசிற் பெரும.........
௧௫ ...........பெருங்கழி [2]நுழைமீ னருந்துந்
துதைந்த தூவியம் புதாஅஞ் சேக்குந்
[3] ததைந்த புனனின் செழுநகர்வரைப்பி
னெஞ்சமர் [4]காத னின்வெய் யோளொ
டின்றுயி..............................ஞ்சா
௨௦ துளிபத னறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - அது ; துறை - கடைநிலை.
பொறையாற்றுகிழானைக் [5] கல்லாடனார். (௩௯௧)

---

௭. பசித்தென - பசித்ததாக.
௮. இரும்பேரொக்கல் - வறுமையாற்கரிந்த பெரியசுற்றங்கள்.
௯. பண்பில - பண்பில்லாதன.
௧௧. மருங்கு - சுற்றம். ௧௨. ஆகலின் இவன் அளியன்.
௧௨ - ௩. ௱௩௩. ௨௮௨ - ௫.
௧௫. நுழைமீன் - ஒருவகை மீன்; நுழைந்து செல்லுகின்ற மீனுமாம்.
௧௬. புதா - ஒருவகைநாரை ; இப்பெயர் போதாவெனவும் வழங்கும் ; "உள்ளு மூரலும் புள்ளும் புதாவும்" சிலப். ௧௦: ௧௧௭.
௧௮. நின்வெய் யோளொடு - நின்னால் விரும்பப்பட்ட மனைவி யொடு.
௨௦. பதனறிந்து - காலமறிந்து.
௨௧. ஆயிரம்விளைக - ஆயிரக்கலம் விளைக; "வேலி, யாயிரம் விளையுட் டாகக், காவிரி புரக்கு நாடு" பொருந. ௨௪௬ - ௮.
(பி - ம்.)—1 'பண்பின' 2 'துழைமீன' 3 'தநதைதநத புனயானின செழுநகாவஙபடின்' 4'காதனிவெயயொடு' 5'காலலனர்'

---

(௩௯௨.) மதியேர் வெண்குடை [1] யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்

---

௧. ஏர்-ஒப்பு; "இலவம் போதே ரெழிற்றகைய சீறடிகள்" சீவக.௧௫௮௮.
௨. கொடும்பூண் - வளைந்தஆபரணம் ; "விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக் கோவே" புறநா. ௨௦௦: ௮.
(பி - ம்.)—1 'உதியர்'

பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
ரு யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் [1] கடந்து
நிணம்படு [2] குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை [3] மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் [4] பூட்டி
கO வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ [5] வாழிய பெரிதெனச்
சென்றியா [6] னின்றனெ னாக வன்றே

---

ஙூ. பசலைநிலவு - இளநிலவு. ரு. கொடா - திறைகொடாத.

ச - ரு. "பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண், ணிரும்பறை யிரவல" புறநா. உசுஙூ: க - உ.

ஙூ -ரு. "இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை, யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி" புறநா. ஙகூச: சு - எ.

எ. குருதிப்பெரும்பாட்டீரத்து - இரத்தப் பெருக்காலுளதாகிய ஈரத்தையுடைய.

அ. களம் - தானியக்கதிரை அடிக்குங்களமும் யுத்தகளமும்.

கO. வெள்ளைவரகு - கவடி. கொள் - குடைவேல்.

கூ - கO. பகைவருடைய அரண்களையழித்துக் கழுதையேரால் உழுது அந் நிலத்தில் வெள்ளைவரகும் கொள்ளும்வித்துதல அரசர்க்கியல்பு.

கூ - கக. "வெள்வாய்க் கழுதைப் புல்லினம்பூட்டிப், பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்" (புறநா. கரு: உ - ஙூ), "வடதிசை மன்னர் மன் னெயின் முருக்கிக், கவடி வித்திய கழுதையே ருழவன்" (சிலப்.உஎ: உஉரு-சு), "எழுதெழின் மாடத் திடனெலா நூறிக், கழுதையேர் கையொளிர்வேல் கோலா-வுழுததற்பின், வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற, கள்விரவு தாரான் கதம்" (பு. வெ. சு: உசு), "இடித்துவெளி செய்துநக ரெங்கணு நுழைந்தாங், கடுத்தமட வார்வயி றலைத்தன ரிரங்கக், கொடுத்திடு வளங்கள் பல கொள்ளைகொடு மண்ணி,னெடுத்துவரு வெள்வரகு கொள்ளுட னிறைத்து" (காஞ்சிப். நாட்டு. உஅ) என்பவைகள் இவ்வடிகளோடு ஒப்பிடற்பாலன.

கO-கஉ. "இன்னும் துறையென்றதனானே புறத்தோன் கவடிவித்துதலும் தொகைநிலைப்பாற்பட்டுழி அகத்தோர்க்குச் செல்லாமைகொள்க. அது, 'மதி யேர் வெண்குடை' என்னும் புறட்பாட்டினுள், 'வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும், வைக லுழவ வாழிய பெரிதெனச், சென்றியா னின்றனெ'னாக என வரும்" தொல். புறத்திணை. சூ கஙூ - ந.

(பி - ம்.)—1 'கடந்த' 2 'குருதிபெரும்' 3 'மாரபின' 4 'பூட்டி...வெள்ளை' 5 'வாழியபலவென' 6 'நின்றனெனாதக'

யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
கரு நுண்ணூற் கலிங்க முடீஇ [1]யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன [2]பொலங்கலத் தளைஇ
[3]யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
உ0 தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.*

திணையும் துறையும் அவை.

அதியமான்மகன் பொதுட்டெழினியை ஔவையார். (நூகூஉ)

---

கரு. பகட்டிலை - பெரியஇலை. கச. சிதாஅர் - கந்தைத்துணி.

கரு - ச. புறநா. நூகூ0: கரு; "பாசி வேரின்மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" பொருந. கருரு - ச.

கசு. புறநா. நூஎசு: கச - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; இவ்வடி, பொருந. கருஎ - அ - ஆம் அடிகளின் உரையில மேற்கோளாக வந்துள்ளது.

கஎ. கோண்மீன் - கோட்களாகிய மீன்களை.

கஅ. கோள்முறை-கொள்ளும்முறை. உக. பிறங்கடை- வழித்தோன்றல்; "படிகாத்தவர், பிறங்கடைப்பெரியோய்" கம்ப. தாடகைவதை. சுரு.

உ0 - உக. "அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்" என்றார் முன்னும்; புறநா. கூகூ: உ.

* மு. இச்செய்யுள், கடைநிலையென்னுந்துறைக்கு மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளது; தொல். புறத்திணை. சூ. நூசு - ந.

(பி - ம்.)—1 'உண்ணென' 2 'பொலங்கலத்தருள...விடுத்தல்' 3 'ஊனமுறை', 'ஊழமுறை'

---

(நூகூரு.) பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
யடனசை மறந்தவெங் குழிசி மலர்க்குங்
ரு கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
[1]வள்ளன் மையினெம் வரைவோர் யாரென

---

க. பழங்கண் - துன்பம். உ. துணை - மனைவி.

ச. குழிசி-சமைத்தற்குரிய கலம்; மலர்க்கும் - நிமிரச்செய்யும்.

சு. எம்வரைவோர் - எம்மை ஏற்றுக்கொள்வோர்.

ச - ரு. குழிசி மலர்க்குங் கடனறியாளர் - அரிசி முதலியன இல்லாமை

(பி - ம்.)—1 'வள்ளனமென வரை'

வள்ளிய வுள்ளமொ [1] டுலோகசை துணையா
...கவக மெல்லா மொருபாற் பட்டென
மலர்தா ரண்ணணி னல்லிசை யுள்ளி
கO யீர்ங்கை [2] மறந்தவெ னிரும்பே ரொக்கல்
[3] கூர்ந்த வெவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி [4] வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
கரு [5] வீன்ற வரவி னுவுருக் கடுக்குமென்
[6] றொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
வகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமுங்
கேடின்று நல்குமதி பெரும மாசின்
உO மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி

---

யாற் கவிழ்த்துவைக்கப்பட்டுள்ள கலத்தைச் சமைத்தற்பொருட்டு அடுப்பில் நிமிர்த்துவைக்கச் செய்யும் வண்மையையுடையார்; "கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச், சுரன்முதலிருந்த சில்வளை விறலி", "ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென, வேலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை, மலர்ப்போர் யார்" (புறநா. கO௩: ௩ - ச, கஎ௯: க - ௩) என்பவை இங்கே அறியற்பாலன.

எ. உலோகசை - உலோதற்குக் காரணமான இச்சை. ௯. அண்ணல், விளி.

கO. ஈர்ங்கை - உண்டுபூசியகை; "ஈர்ங்கை விதிரார் கயவர்" குறள். கOஎஎ.

கக. கூர்ந்த எவ்வம் - மிக்கதுன்பம்.

கஉ. பருத்திவீடு - பருத்தியின் சுகிர்ந்த பஞ்சு.

க௩. மூடைப்பண்டம் - பொதியாகிய பொருள்கள்; "பொதிமூடைப் போரேறி" (பட்டின. க௩எ.) மூடை மூட்டையென வழங்கும்.

கச. நிணமூரி - நிணத்தின் துண்டம்.

கஉ - ச. நிணத்திற்குப் பருத்திப்பஞ்சு உவமை; "பருத்திப் பெண்டின் பனுவ லன்ன, நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை" புறநா. கஉரு: க - உ.

க௬. துவர - முற்ற; "துவரமுடித்த துகளறுமுச்சி" முருகு. உ௬.

கஎ - அ. கலிங்கத்திற்குப் பகன்றைமலர் உவமை; "திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ" புறநா. ௩௯O: கரு.

உO. கிணைப்பறைக்கு முழுமதி உவமை; "மதியத் தன்னவென் விசியுறு தடாரி"; "மாகவிசும்பின் வெண்டிங்கண், மூவைந்தான் முறைமுற்றக், கடனடுவட் கண்டன்னவென் னியம்" புறநா. ௩௯க: கஎ; சOO: க - ச.

(பி - ம்.)—1 'உறநசை' 2 'மறைந்த' 3 'கூர்ந்தவேவம்வீட' 4 'விடுநிறை' 5 'ஈன்றவரவினாருககடுககும்' 6 'றொனறுபடி'

யாமேக லல்கு லொப்ப வாடிக்
1 கோடை யாயினுங் கோடி.........
காவிரி புரக்கு நன்னாட்டுப் பொருந
வாய்வாள் 2 வளவன் வாழ்கெனப்
௨௫ பீடுகெழு நோன்றாள் பாடுகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை நல்லிறையனார். (௩௯௩)

௨௩. "காவிரிபுரக்கும் நாடுகிழவோனே" (பொருந. ௨௪௮); "காவிரி புரக்கும் நாடு கிழவோற்கு" சிலப். ௨௭ : ௧௭௧.

(பி - ம்.)—1 'கொடியாயினுங்' 2 'வளருவன'

---

(௩௯௪.) 1 சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பி
2 னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் 3குட்டுவன்
4 வள்ளிய னாதல் வையகம் புகழினு
௫ 5 முள்ள லோம்புமி னுயர்மொழிப் புலவீர்
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
௧௦ வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்

௧. வில் உலாவிநிமிர்ந்த மார்பு ; "சிலையுலாய் நிமிர்ந்த மார்பன்" சீவக. ௨௯௭௫.

௩. வலிதுஞ்சு தடக்கை - வன்மை நிலைபெற்ற பெரியகையையுடைய. வாய்வாள்-குறிதப்பாதவாள். தடவென்னுமுரிச்சொல பெருமையை யுணர்த்து மென்பதற்கு இவ்வடிமேற்கோள் ; தொல். உரி. சூ. ௨௪ - சே ; ஷை ஷை ஷை. ௨௨ - ந ; இ - வி. உரி. சூ. ௨௮௪ - உரை.

௪. வள்ளியனாதல் - பெருங் கொடையை யுடையானாதலை.

௫. உள்ள லோம்புமின் - நினைத்தலைத்தவிர்மின். ௬. வைகறையில்.

௭. "ஒருகண் மாக்கிணை யொர்றபு" புறநா. ௩௯௨ : ௫.

௮. பாடு - ஒலி. தந்தை - பாட்டுடைத் தலைவன் தந்தை.

௯. வஞ்சி - பகைமேற் செல்லுதலை.

(பி - ம்.)—1 'சிந்தியுலாகிவாநத'2 'ஒலிசதர்சசபூனி' 3 'குடவன்' 4'வளளயிழுதல', 'வளளினியெனுதல' 5 'உள்ளமோம்புமின்'

கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென [1]வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
கரு பெருங்களிறு நல்கி யோனே [2]யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்
துன்னருந் பரிசி றருமென
வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.*

திணையும் துறையும் அவை.

கடைநிலை யாயினவெல்லாம் பாடாண்டிணை.

சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக் †கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார். (ருகச)

கக - உ. "இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர், பெருங்களிறுநல் கியோனே யன்னதோர், தேற்றாவீகையுமுளது கொல்" புறநா. கசO : எ - அ.

கரு. பெயர்த்தனெனாக - பெயர்க்க. கரு. அதற்கொண்டு - அதனால்.

கசு. "இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற" புறநா. ருகO: உO.

* ℘. இப்பாட்டினைப் பொருநராற்றுப்படைக்கு மேற்கோளாகக்காட்டினர் ; தொல். புறத்திணை. சூ. ருO - இளம்; ஷை ஷை ஷை. ருசு - ந.

இப்பாட்டு, புகழாப்புகழ்ச்சியென்னும் அணியின்பாற்படும்.

† புதுக்கோட்டைக்குத் தெற்கே கோனாட்டில எறிச்சியென்று பழையதோரூருள்ளது ; அதிற் பஞ்சபாண்டவர்சுனைகளென்று ஐந்து சுனைகளும் ஒரு சிவஸ்தலமுமுள்ளன. இங்கே எறிச்சிலூரென்றது அவ்வூரென்று கருதப்படுகின்றது.

(பி - ம்.)— 1 'உணரமை' 2 'பகறகொண்டு', 'பதற்கொணடு'

---

(ருகரு.) மென்புலத்து வயலுழவர்
வன்புலத்துப் பகடு விட்டுக்
குறுமுயலின் [1]குழைச்சூட்டொடு
நெடுவாளைப் பல்லுவியற்

க. மென்புலம் - மருதநிலம்.

உ. வன்புலம் - முல்லைநிலம். விட்டு - மேய்தற்குவிட்டு.

ரு. குழைச்சூடு - குழைதலையுடைய சூட்டிறைச்சி.

ச. உவியல்-அவியல் ; "சாந்த விறகி னுவித்த புன்கம்" புறநா. கசுஅ: கக.

(பி - ம்.)—1 'காழைச்சூட்டொடு நெடுவாளைபல்லுவியற்'

ரு பழஞ்சோற்றுப் [1]புகவருந்திப்
புதற்றளவின் பூச்சூடி
..............................
...............அரியலாருந்து
மனைக் கோழிப் பைம்பயிரினனே
க0 கானக்கோழிக் கவர்குரலொடு
நீர்க்கோழிக் [2] கூய்ப்பெயர்க் குந்து
வேயன்ன மென்றோளான்
மயிலன்ன [3] மென்சாயலார்
கிளிகடியினனே
கரு யகலள்ளற் [4]புள்ளிரீஇயுந்து
யாங்கப், பலநல்ல புலனணியுஞ்
சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செல்லா நல்லிசை யுறந்தைக் குணாது

---

ரு. புகவு - உணவு; "அகனுட் டண்ணல் புகவே" (புறநா. உசக: எ); "வானிணப் புகவிற் கானவர்" (அகநா. கரூஉ); இச்சொல புகாவெனவும் வழங்கும்; "புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை" குறுந். உருங.

சு. "புதன்முல்லைப் பூப்பறிக்குந்து" புறநா. நருஉ : ச.

அ. அரியல் - கள். ஆருந்து - உண்ணும்.

கக. 'உம்' உந்தாதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். இடை. சூ. சச - இளம்; சே; ந; நன். சூ. நச0 - மயிலை; நன் - வி. சூ. நசக; இ-வி. சூ. உசச - உரை.

கஉ. தோளான் - தோளோடு.

கங. சாயல் - மென்மை; "களிமயிற் சாயலுங் கரந்தன ளாகி" சிலப். அ: அஎ.

கரு. இரீஇயுந்து - கெட்டு ஓடும். கசு. புலன் - இடங்கள்.

கஎ. சீர்சான்ற - தலைமையமைந்த; "சீர்சான்ற வுயர்நெல்லினூர்" மதுரை. அஎ - அ.

கஅ. தித்தன் - ஒரு சோழன்.

கக. செல்லாநல்லிசை - கெடாத நல்லபுகழ்; "செல்லா நல்லிசைப் பெய ரொடு நட்டகல்" (மலைபடு. நஅஅ-க.) உறந்தை - உறையூர். குணாது - கிழக்கின் கண்ணுள்ளது.

கஅ - க. "மாவண் டித்தன் வெண்ணெல் வேலி, யுறந்தை யன்ன வுரை சா,·னன்கலம்" புறநா. நருஉ: க - க0.

(பி - ம்.)—1 'புகவருத்திப்' 2 'கூப்பெயர்க்குந்து' 3 'மென்சாயலாற்' 4 'புள்ளுரீஇயுந்து'

உ0 [1] நெடுங்கை வேண்மா [2]னருங்கடிப் பிடவூ
ரறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும
முன்று [3]ணண்பகற் சுரனுழந்து வருந்திக்
கதிர்நனி செ........................மாலைத்
[4] தன்கடைத் தோன்றி யென்னுற விசைத்தலிற்
உரு தீங்குரல்...........கி னரிக்குரற் றடாரியொ
டாங்குநின்ற வெற்கண்டு
சிறிதுநில்லான் பெரிதுங்கூறு
[5] னருங்கலம் வரவே யருளினன் வேண்டி
......யென வுரைத்தன்றி நல்கித் தன்மனைப்
ங0 பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை
யென்போற் போற்றென் றோனே யதற்கண்
டவன்மறவ லேனே பிறருள்ள லேனே
யகன்ஞாலம் பெரிதுவெம்பினு

---

உ0. தொல். அகத்திணை. சூ. ங0 - ந. மேற்கோள். நெடுங்கைவேண்மானென்பது உழுவித்துண்போரில் ஒருபகாரியின் பெயர்.

உக. அறப்பெயர் - அறத்தாலுளதாகிய புகழ்.

உ0 - உக. பிடவூரென்பது சோழநாட்டிலுள்ளதொரு வைப்புத்தலம். அதில் மாசாத்தனார் கோயில் ஒன்று உண்டு. அவர் பெயரே இப்பாட்டுடைத் தலைவனுக்கு அமைந்துள்ளதுபோலும்; கழறிற்றறிவார் நாயனாரால் திருக்கயிலாயத்தில் பரமசிவன் திருமுன்பு விண்ணப்பஞ்செய்து அரங்கேற்றிய திருவுலாப்புறத்தைக் கேட்டறிந்துவந்த மாசாத்தனார் அந்நூலைவெளிப்படுத்திய இடம் இவ்வூரேயென்பர். இவ்வூரும் இத்தலைவன்பெயரும் பழைய நூல் உரைகளிற் காணப்படுகின்றன; "தெய்வப் புனற்கெடில வீரட்டமும் செழுந்தண் பிடவூரும்.........தம்முடைய காப்புக்களே", "பேரருளாளன் பிடவூரன்றம் மானே" (தேவாரம்); "சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தசெந் திருவுலாப் புறமன்று, சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப், பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கு, நார வேலைசூழுலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே" (பெரிய. வெள்ளானை. ருஉ); "அவருள், உழுவித்துண்போர், மண்டிலமாக்களும் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும்.........முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம்' தொல். அகத்திணை. சூ. ங0 - ந.

உஉ. நண்பகல் - நடுப்பகல். உரு. மாலை - மாலைக்காலத்தில்.

உஎ. சிறிதும் - சிறிதுநேரமும்.

(பி - ம்.)—1 'இருங்கோவெணமான்' 2 'அருங்கடலைபபிடவூர்' 3 'நன்பகற்' 4 'நன்கடை' 5 'அயருங்கலம்'

மிகவானு [1] ளெரிதோன்றினுங்
௩௫ குளமீனொடு [2] தாட்புகையினும்
[3] பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் [4] கருனைச் சூட்டொடு மாந்தி
விளைவொன்றோ வெள்ளங்கொள்கென
வுள்ளது மில்லது மறியா
௪௦ தாங்கமைந் தன்றால் வாழ்கவன் றாளே.

திணையும் துறையும் அவை.

சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனை மதுரைநக்கீரர். ()

௩௪ - ௫. எரி, குளமீன், தாள் என்பன வான்மீன் விசேடங்கள். இவை முறையே தோன்றுதலும் புகைதலும் உலகவறுமைக்கு ஏதுக்கள்.

௩௬. செய் - தொழில்; "பெருஞ்செய் நெல்லின் முகவைப் பாட்டும்" (சிலப். ௧௦: ௧௩௭; நன். சூ. ௨௬௯ - மயிலை. மேற்.) கொக்குகிர் நிமிரல் - கொக்கின் நகம்போன்ற நீட்சியையுடைய அவிழ்; "கொக்குகிர் நிமிர லொக்க லார" (புறநா. ௩௯௮: ௨௫); "கொக்குகிர் நிமிரல் வெண்சோ றட்டுறு கறி" சீவக. ௨௯௭௨.

(பி - ம்.)—1 'எரிததொனகரினுங்' 2 'காட்புரையினும்' 3 'பெருமபெய்' 4 'கருனைச்சூளைசசூடகமாடுமாந்தி'

---

(௩௯௯.) கீழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீரான் கண்ணன்ன [1] மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
யரிப்பறையாற் புள்ளோப்புந்து
௫ [2] நெடுநீர் கூஉ மணற்றண்கான்
மென்பறையாற் [3] புள்ளிரியுந்து
நனைக்கள்ளின் மனைக்கோசர்
தீந்தேற லறவுமகிழ்ந்து

௧. வழங்குந்து-செல்லாநிற்கும். ௨. மேனீரிலகருங்குவளைமலர் பூக்கும்.

௪. அரிப்பறை - ஒருவகைப்பறை; அரித்தெழும் ஓசையையுடையது; "அரிப்பறை வினைஞர்" (ஐங்குறு. ௮௧); "அரிக்கூட் டின்னியங் கறங்க வாடு மகள்" (குறிஞ்சி. ௧௯௩); "அரிப்பறை யனுங்க வார்க்கும் மேகலை", "அரிப் பறை மேகலை யாகி யார்த்தவே" சீவக. ௨௰௮௨, ௨௬௮௮.

௬. மென்பறை - மெல்லிதாகப் பறத்தலையுடைய குஞ்சு; "வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்" ஐங்குறு. ௮௬.

௭. கோசர் - ஒருவகை வீரர். ௮. கள்ளின் தெளிவை உண்டு.

(பி - ம்.)—1 'மலர்ப்பூஙகுநது' 2 'உண்டுநீர்கூறுமணற்' 3 'புள்ளிரிவுந்து'

தீங்குரலைக் கொளைத்தாங்குந்து
௧௦ உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
[1] கழுமிய வென்வேல் வேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம் பெரும
௧௫ கொழுந்தடிய சூடென்கோ
வளநனையின் மட்டென்கோ
குறுமுயலி [2]னிணம்பெய்தந்த
நறுநெய்ய சோறென்கோ
திறந்து [3]மறந்து கூட்டுமுதன்
௨௦ முகந்துகொள்ளு முணவென்கோ
வனனவை பலபல.....................
..................................ருநதய
விரும்பே [4]ரொக்க விருஞெசஞசிய
வழித்துவப்ப வீத்தோனெந்தை
௨௫ யெம்மோ [5]ராக்கக் கங்குண்டே
மாரிவானத்து [6]மீனுப்பண்
விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகவவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
௩௦ நிரைசா னன்கல னல்கி
யுரைசெலச் சிறக்கவவன் பாடல்சால் வளனே.

திணையும் துறையும் அவை.
வாட்டாற்றெழினியாதனை மாங்குடிகிழார். (௩௯௬)

---

௧௦. உள் - ஊக்கம். ௧௩. வாட்டாறு - ஓரூர்.

௧௫. கொழுந்தடிய சூடு - கொழுவிய துண்டமாகிய சூட்டிறைச்சி.

௧௯. கூடு - நெல் முதலியதானியங்கள் வைத்துள்ள சேர்.

௨௪. உவப்ப அழித்து ஈத்தோன் - மகிழும்படி மீட்டுங் கொடுத்தோன்; "அழித்துப் பிறந்தனெ னாகி" புறநா. ௩௮௬: ௧௬.

௨௫. கங்கு - எல்லை. ௨௭. திங்களின் - சந்திரன்போல.

௨௭ - அ. புகழுக்குத் திங்களுவமை. ௩௧. உரை செல - புகழ்பரக்க.

(பி - ம்.)—1 'கழுமியவௌவெலிவளநீகிர வாடடெரழுனியாகென கிணைவெமடெருயகழுமியவௌளாயி' 2'நிணமபெயதநதுறு' 3 'மரந்த' 4'ஒக கெல' 5 'ஆககககஙகணடெ', 'ஆகககயங குணடெ' 6 'மீனுலபபண'

(நகளஎ.) வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு
முயர்சினைக் குடம்பைக் [1] குரற்றோற் றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன [2]பைபயச்
சுடருஞ் சுருங்கின் றொளியே [3] பாடெழூந்
ரு [4] திரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
விரவுப் [5]புறங்கண்ட காலைத் தோன்றி
யெஃகிரு ளகற்று மேமப் பாசறை
வைகறை யரவங் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்
கo தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் [6]தோன்றி யேனே யதுநயந்
துள்ளி வந்த பரிசில னிவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
கரு பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன [7]வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க

---

க. ஏர்தரும் - எழும். உ. குடம்பை - கூடு.

க - உ. "வெள்ளி தோன்றப் புள்ளுக்குரலியம்ப", "மதிநிலாக்கரப்ப வெள்ளி யேர்தர" புறநா. நஅரு: க; நகூஅ: க.

ந. கண்விழித்தன - மலர்ந்தன.

ச. சுடர் ஒளிசுருங்கின்று - சந்திரன் ஒளிகுறைந்தது; புறநா. நகூஅ: க.

ரு. இரங்குரல் - இரங்குகுரல.

சு. "இரவுப் புறம் பெற்ற வேம வைகறை" புறநா. நகூஅ: சு.

எ. எஃகிருள் - குறைந்த இருட்டு. ஏமம் - இன்பம்.

அ. கேளியர் - கேட்க. பலகோள் - பலவகை.

கo. மு. புறநா. நஎச: சு. கக. நயந்து - விரும்பி.

கந. குய் - தாளிப்பு.

கரு. கலிங்கத்திற்குப் பாம்பின் தோல் உவமம்; "அரவுரி யன்ன வறுவை நல்கி" (பொருந. அந); "கூறெயிற் றரவி னுரிவை யன்ன வானுண்டுகில்" (பாகவத. கo: கோவியர்துகில். சு); "பாழிவா யரவி னுரிநிக ராடை" (இலிங்க. அம்பரீடனை. ருசு); "அரவினுரியன்னபட்டாடை" (வாயுசங். கிரி யா. கந); "பையரா வுரியி னன்ன நடைப்படாம்" திருவிளை. திருமண. கசஎ.

கரு - சு. பொருந. அஉ - எ.

(பி - ம்.)—1 'குரற்றோன் றினவே' 2'பைபய' 3'பாடெழுந்து' 4'திரங்கு குரன்' 5 'பிறங்கண்ட' 6 'தோன்றியோனே' 7 'வண்மையிற்'

வருங்கல நல்கி யோனே யென்றுஞ்
செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
௨௦ யறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம்பூண் வளவ
னெறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினுந்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினு
௨௫ மென்னென் றஞ்சலம் யாமே வென்வே
லருஞ்சமங் கடக்கு மாற்றலவன்
றிருந்துகழ லேனோன்றாட் டண்ணிழ லேமே.

திணை - அது ; துறை - பரிசில்விடை; கடைநிலைவிடையுமாம்.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை * எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார். (ருகூஎ)

கஅ. கலம் - ஆபரணம். ககூ. செறு - வயல். உக. தீ - வேள்வித்தீ.
உஉ. தீவொன்றிற் பொன் உண்டாகுமென்பர்; "பைம்பொன்விளை தீவினிதி தடிந்து", "நன்பொன் விளை தீவமடைந் தஃதே" சீவக. கoசு, ருoரு.
உரு. இறுதி - ஊழிக்காலம். உச. கனலி - சூரியன்.
உஎ. "யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை" புறநா. ருஎகூ : க
* திருவாரூர்க்குத் தென்மேற்கில் எருக்கங்காடென ஓரூருள்ளதென்பர்.

---

(ருகூஅ.) மதிநிலாக் கரப்ப வெள்ளி யோர்தர
வகைமா ணல்லிற்..................
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
ரு கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
விரவுப் புறம்பெற்ற வேம வைகறைப்
பரிசிலர் விசையெ..............
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்ச
னகைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்

க. புறநா. ருகூஎ : க.
உ. வகைமாணல்லில் - கட்டுக்களால் மாட்சிமைப்பட்ட நல்ல வீடு.
ரு. வாரணம் - கோழி. ச. பூமுகை - மலரும் பருவமுள்ள அரும்பு.
அ. வரிசை - முறை. வஞ்சன் - இப்பாட்டுடைத்தலைவன் பெயர்.
கூ. நகைவர் - நண்பர்; புறநா ருஎரு: ருரு-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

க0 புலியினை மடிந்த கல்லளை போலத்
[1] துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்னவென் னரிக்குரற் றடாரி
யிரவுரை நெடுவா ரிப்ப வட்டித்
துள்ளி வருநர் கொள்கல நிறைப்போய்
கரு தள்ளா [2]நிலையை யாகிய ரெமக்கென
வென்வர [3] வறீஇச்
சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்த னாகி யென்னரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்
௨0 புகைவிரிந் தன்ன பொங்கு துகிலுடீஇ
யழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேற னிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுண்
[4] மண்டைய கண்ட மான்வறைக் கருனை
௨௫ கொக்குகிர் நிமிர லொக்க லார
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு [5]மரவுற ழாரமொடு
புரையோன் மேனிப் பூத்தசல............
முரைசெல வருளி யோனே
௩0 ........................யருவிப் பாயற் கோவே.

திணை - அது ; துறை - கடைநிலை.
சேரமான்வஞ்சனைத் திருத்தாமனார். (௩௯௮)

கக. துன்னல்போகிய - அணுகுதற்கரிய.
௬ - கக. புறநா. க௭0 : க௪ - ௭.
க௩. புறநா. ௩௬௬: ௨௫.
க௫. ஆகியர் - ஆகுக. என - என்று யான்கூற.
க௬. அறீஇ - அறிந்து.
௨0. "புகைமுகந்தன்னமாசிறாவுடை" (புறநா.க௩௮.) உடீஇ - உடுத்தி.
௨௫. புறநா. ௩க௫ : ௩௬ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.
௨௭. "அரவுற ழார முகக்குவ மெனவே" புறநா. ௩௬௮ : க௮.
(பி - ம்.)—1 'துன்னலமபோகிய' 2 'நிலையை' 3 'அறிய' 4 'மண்டை' 5 'முழாவுரழாரமொடு', 'பிறையுரழாரமொடு'

(ருகூகூ.) அடுமகன் முகந்த வளவா வெண்ணெற்
¹றொடிமா ணுலக்கைப் பருஉக்குற் றரிசி
காடி வெள்ளுலைக் கொளீஇ நீழ
லோங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
ரு மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை
செறுவின் ²வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ.........
மூழ்ப்பப் பெய்த ³முழுவவிழ்ப் புழுக்க
க0 ⁴ லழிகளிற் படுநர் களியட வைகிற்
பழஞ்சோ ⁵றயிற்று முழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்துஞ்
செல்லேன் செல்லேன் பிறர்முக நோக்கே
கரு னெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட ⁶பாவற் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணு முண்டியே னழிவுகொண்
டொருசிறை யிருந்தே னென்னே யினியே
யறவ ரறவன் மறவர் மறவன்
உ0 மள்ளர் மள்ளன் றொல்லோர் மருக
னிசையிற் கொண்டா னசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோன் மண்ணி
வள்பரிந்து கிடந்த............மணக்க
விசிப்புறுத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை

---

உ. தொடி - பூண்.

ச. மாங்கனியின் புளி; "வண்டளிர் மாஅத்துக், கிளிபோற் காய கிளைத் துணர் வடித்துப், புளிப்பத னமைத்த புதுக்குடம்" அகநா. ருஎ.

ரு. கோட்டுமீன் - சுறுமீன்; "கோட்டுமீன் குழாத்தின் மள்ள ரீண்டினர்" (சீவக. உருஉரு.) குறை - குறைக்கப்பட்ட இறைச்சி.

கூ. மூழ்ப்ப - மூடும்படி; புறநா. ருருசு: ரு.

கரு. னொடுத்து - விற்று. கசு. பாவல் - பாவல.

கஎ. உண்ணவேண்டியகாலத்தில் உண்ணுதலைத்தவிர்ந்துண்ணும் உணவை யுடையேனாய் வருந்துதலை அடைந்து; தன்வறுமையைத்தெரிவித்தபடி.

(பி - ம்.)—1 'தொடுமாண்' 2 'வாளைச்சிறுகொடி' 3 'முழுவவிநாமபபுக தலரி' 4 'அரிகளற்படுநொகனி' 5 'அயருமுடங்கு' 6 'பாஅறபுளியங்கூழ்'

உரு யலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
[1] கடுந்தே ரள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
வொன்றியான் பெட்டா வளவை யன்றே
ங0 யான்று விட்டன [2]னத்தை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
யூர்தியொடு நல்கி யோனே சீர்கொள
விழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர் [3]சிமைத் தோன்றிக் கோவே.

திணை - அது; துறை - பரிசில்விடை.
[4] தாமான்தோன்றிக்கோனை ஐயூர்முடவனார். (ங௯௯)

உரு. புறநா. ங௯அ: கங.
உஎ. அசாவா - தளராத.
உ௯. ஒன்று யான் பெட்டாவளவை - ஒன்றை யான் விரும்பிக் கேட்பதற்கு முன்னே ; "ஒன்றியான் பெட்டா வளவையின்" பொருந. எங.
ஙக. நிரை-பசுக் கூட்டம்; பசுக்களுக்கு விண்மீன்கள் உவமை; "காயமீனெனக் கலந்து சானிரை மேய" சீவக. சஉக.
ஙங. "இழுமென விழிதரு மருவிப், பழமுதிர்சோலை" முருகு. ஙகசு-எ.
(பி - ம்.)—[1] 'கடுநதெர்பபளளறகசாவா' [2] 'அத்தைய' [3] 'சிமையத்' [4] 'தாமானதருனறிகோனை'

---

(ச00.) மாகவிசும்பின் வெண்டிங்கண்
மூவைந்தான் முறைமுற்றக்
கடனடுவெட் கண்டன்னவென்
னியமிசையா மரபேத்திக்
ரு கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர்துஞ்சவுந் தான்றுஞ்சா
[1] னுலகுகாக்கு முயர்செ............க்

க. மாகவிசும்பு - மாகமாகிய விசும்பு (புறநா. ஙரு: கஅ) ; மாகமாவது பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் நடு; பரி. க: சஎ - பரிமேல்.
உ. மூவைந்து - பதினைந்துதிதி.
ச. இயம் - வாச்சியம். இசையா - இசைத்து.
க - ச. புறநா. ஙகங: உ0. ரு. கங்குலின் கடையில்.
(பி - ம்.)—[1] 'உலகுக்காக்கும்'

கேட்டோ னெந்தையென் றெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
கO தொன்றுபடு [1]சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறு.........
..............................லவான
கலிங்க [2]மழித்ததோட் டென்னரை நோக்கி
[3] நாரரி நறவி னுண்மகிழ் தூங்குந்து
கரு போதறியேன் பதிப்பழகவுங்
[4] தன்பகை கடித லன்றியுஞ் சேர்ந்தோர்
[5] பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்தத..............................
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்
உO திருங்கழி யிழிதரு.........கலிவங்கந்
தேறுநீர்ப் பரப்பின் [6]யாறுசீத் துய்த்துத்
துறைதொறும் பிணிக்கு நல்லூ
ருறைவின் யாணா......கிழவோனே.

**திணை - அது; துறை - இயன்மொழி.**
**சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார்.** (சுப ·)

அ. குரலைக் கேட்டான்.

கச. தொல். இடை. கூ. சச - சே ; ந. மேற்.

கஎ. "பசிப்பிணி மருத்துவன்" (புறநா. கஎங: கக) என்பதன் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

ககூ. வேள்வித்தூணம் - யூபத்தம்பம் ; புறநா. கரு: உக.

(பி-ம்.)—1 'சிதாஅருங்கு' 2'அழித்ததொடடொன்னரை' 3'நாரரித்தநறவ மகிழ்ந்து' 4 'தன்பகைக்கடிதல்' 5 'பசிப்பகைககடிதல்' 6 'யாறறசீத்துத்'

**புறநானூறு மூலமும் உரைவகையும் முற்றுப்பெற்றன.**

——(o)——

உ

## புறநானூற்றுப்

# பாட்டு முதற்குறிப்பகராதி

[எண் - செய்யுளெண்.]


| | |
|---|---|
| அகன்றலைவையத்துப் | ௩௭௧ |
| அஞ்சுவருமரபின் | ௨௧௧ |
| அடலருந்துப்பின் | ௩௩௫ |
| அடிபுனைதொடுகழன் | ௮௩ |
| அடுநையாயினும் | ௩௬ |
| அடுமகண்முகந்த | ௩௯௯ |
| அணங்குடைநெடுங் | ௫௨ |
| அணங்குடையவுணர் | ௧௭௪ |
| அணித்தழைநுடங்க | ௩௪௦ |
| அத்தநண்ணிய | ௩௧௩ |
| அதளெறிந்தன்ன | ௧௯௩ |
| அந்தோவெந்தை | ௨௬௧ |
| அமரர்ப்பேணியு | ௯௯ |
| அரிமயிர்த்திரண் | ௧௧ |
| அருப்பம்பேணா | ௨௨௪ |
| அருவிதாழ்ந்த | ௧௯௮ |
| அருவியார்க்கும் | ௧௬௮ |
| அருளாயாகலோ | ௧௪௪ |
| அரைசுதலைவரினு | ௩௫௪ |
| அலங்குகதிர்சுமந்த | ௩௭௫ |
| அலர்பூந்தும்பை | ௯௬ |
| அழல்புரிந்தவடர் | ௨௯ |
| அழலவிர்வயங்கி | ௨௨௨ |
| அளிதோதானேபாரி | ௧௦௯ |
| அளிதோதானேபேரிருங் | ௧௧௧ |
| அளியதாமேசிறுவெள் | ௨௪௮ |
| அற்றைத்திங்கள் | ௧௧௨ |
| அறவைநெஞ்சத் | ௩௯௦ |
| அறுகுளத்துகுத்து | ௧௪௨ |
| அறையும்பொறையும் | ௧௧௮ |
| அன்னச்சேவலன்ன | ௬௭ |
| அன்னவாகநின்னருங்கல | ௧௪௬ |
| ஆசாகெந்தை | ௩௦௭ |
| ஆசில்கம்மியன் | ௩௫௩ |
| ஆடியலழற்குட்டத் | ௨௨௯ |
| ஆடுநடைப்புரவி | ௨௪௦ |
| ஆடுநனிமறந்த | ௧௬௪ |
| ஆர்கலியினனே | ௩௩௭ |
| ஆர்ப்பெழுகடலினும் | ௮௧ |
| ஆரந்தாழ்ந்த | ௫௯ |
| ஆவுமானியற்பார்ப்பன | ௯ |
| ஆன்முலையறுத்த | ௩௪ |
| ஆனாவீகையடுபோர் | ௪௨ |
| ஆனினங்கலித்த | ௧௩௮ |
| இம்மைச்செய்தது | ௧௩௪ |
| இமிழ்கடல்வளைஇய | ௧௯ |
| இரங்குமுரசின் | ௧௩௭ |
| இரவலர்புரவலை | ௧௬௨ |
| இருங்கடலுடுத்த | ௩௬௩ |
| இருப்புமுகஞ்செறித்த | ௩௬௯ |
| இரும்பனைவெண்டோடு | ௪௫ |
| இரும்பிடித்தொழுதி | ௪௪ |
| இரும்புமுகஞ்சிதைய | ௩௦௯ |
| இருமுந்நீர்க்குட்டமு | ௨௦ |
| இல்லடுகள்ளின் | ௩௨௯ |
| இல்லாகியரோ | ௨௩௨ |
| இவ்வே பீலியணிந்து | ௯௫ |
| இவரியாரென்குவை | ௨௦௧ |
| இவற்கீத்துண்மதி | ௨௯௦ |
| இவனியாரென்குவை | ௧௩ |

| | |
|---|---|
| இழையணிப்பொலிந்த | அகூ |
| இளையருமுதியரு | உருச |
| இளையோர்சூடார் | உசஉ |
| இன்கடுங்கள்ளின் | அ௰ |
| இன்றுசெலினுந் | கஎக |
| இனிநினைந்திரக்க | உச௩ |
| ஈண்டுநின்றோர்க்குந் | கக்ச |
| ஈயெனவிரத்தல் | உ௰ச |
| ஈரச்செவ்வி | உஅகூ |
| ஈன்றுபுறந்தரு | ௩கஉ |
| உடும்புரித்தன்ன | சாஅ |
| உடையனுயினுண்ண | ௩கரு |
| உடைவளைகடுப்ப | கூ௰ |
| உண்டாலம்மவிவ் | கஅஉ |
| உண்போன்றனு | ௩சஎ |
| உருகெழுஞாயிற்றொண் | கசா௰ |
| உருமிசைமுரச | ௩எ௩ |
| உவவுமதியுருவி | ௩ |
| உழுதூர்காளை | ௩உஉ |
| உள்ளாற்றுக்கவலை | உககூ |
| உற்றுழியுதவியும் | கஅ௩ |
| ஊர்க்குறுமாக்கள் | கூச |
| ஊர்நனியிறந்த | உசாரு |
| ஊர்முதுவேலி | ௩உசா |
| ஊனுமூனுமுனையின் | ௩அக |
| எருக்குளங்கழிய | உஅஉ |
| எங்கோனிருந்த | ருச |
| எந்தைவாழி | கஎரு |
| எமக்கேகலங்க | உகூஅ |
| எருதுகாலுறா | ௩உஎ |
| எருதேயிளைய | க௰உ |
| எருமையன்ன | ரு |
| எழுவினிநெஞ்ச | உ௰எ |
| எறிபுனக்குறவன் | உ௩க |
| என்றிறத்தவலங் | உரு௩ |
| என்னைக்கூரிருந்த | அரு |
| என்னை புற்கையுண்டும் | அச |
| என்னைமார்பிற் | உஅ௰ |
| எனைப்பல்யானையும் | சா௩ |
| ஏர்பரந்தவய | ௩௩அ |
| ஏற்றுகவுலையே | கஎஉ |
| ஏற்றுவலனுயரிய | ருசா |
| ஏறுடைப்பெருநிரை | உருகூ |
| ஐயோவெனின் | உருரு |
| ஒண்செங்குரலி | உஅ௩ |
| ஒண்பொறிச்சேவல் | ௩௩அ |
| ஒருசாருவியார்ப்ப | ககரு |
| ஒருதலைப்பதலை | க௰௩ |
| ஒருதிசையொருவனை | கஉக |
| ஒருநாட்செல்லல | க௰க |
| ஒருவனையொருவன் | எசா |
| ஒல்லுவதொல்லும் | ககூசா |
| ஒளிறுவாண்மன்னர் | கஎஎ |
| ஒன்றுநன்குடைய | கருசா |
| ஒன்னார்யானை | கஉசா |
| ஒங்குமலைப்பெருவிற் | ருரு |
| ஓரிநெய்தல் | ககூச |
| ஓரையாயத்து | கஎசா |
| ஓவத்தன்ன | உருக |
| கடந்தடுதானை | கக௰ |
| கடல்கிளர்ந்தன்ன | உகூரு |
| கடல்கொளப்படாஅது | கஉஉ |
| கடவுளாலத்து | ககூகூ |
| கடற்படையடற் | ௩அஉ |
| கடுங்கண்ணகொல் | கச |
| கடுந்தேர்குழித்த | கரு |
| கடும்பினடுகல | ௩உ |
| கண்ணிகார்நறுங் | க |
| கதிர்மூக்காரல் | உசகூ |
| கந்துமுனிந்துயிர்க்கும் | கஎஅ |
| கல்லறுத்தியற்றிய | ௩௩க |
| கலஞ்செய்......அச்சு | உருசா |
| கலஞ்செய்...இருடிணிந் | உஉஅ |
| கலையுணக்கிழிந்த | உ௩சா |
| கவிசெந்தாழிக் | உ௩அ |
| கவைக்கதிர்வரகி | உகரு |
| கழிந்ததுபொழிந்தென | உ௰௩ |
| கள்ளின்வாழ்த்தி | ௩கசா |
| களங்கனியன்ன | கஉஎ |
| களம்புகலோம்பு | அஎ |

| | | | |
|---|---|---|---|
| களர்ப்படுகூவற் | ௩௧௧ | சாறுதலைக்கொண்டென | ௮௨ |
| களரிபரந்து | ௩௫௬ | சிலையுலாய்நிமிர்ந்த | ௩௯௪ |
| களிறணைப்ப | ௩௪௫ | சிற்றினற்றூண் | ௮௬ |
| களிறுகடைஇய | ௭ | சிறப்பில்சிதடு | ௨௮ |
| களிறுநீறாடிய | ௩௨௫ | சிறப்புடைமரபிற் | ௩௧ |
| களிறுபொரக் | ௩௦௬ | சிறாஅர் துடியர் | ௨௯௧ |
| களிறுமுகந்து | ௩௬௮ | சிறியகட்பெறினே | ௨௩௫ |
| கறங்குமிசையருவிய | ௧௪௮ | சுவலழுந்தப்பலகாய | ௧௩௯ |
| கறங்குவெள்ளருவி | ௨௫௨ | செஞ்ஞாயிற்றுச் | ௩௦ |
| கன்முழையருவி | ௧௪௭ | செந்நெலுண்ட | ௩௪௪ |
| கன்றமராயங் | ௨௩௦ | செய்குவங்கொல்லோ | ௨௧௪ |
| காமருபழனக் | ௩௩௪ | செருப்பிடைச் | ௨௫௭ |
| காய்நெல்லறுத்து | ௧௮௪ | செற்றன்றாயினுஞ் | ௨௨௬ |
| கார்ப்பெயறலைஇய | ௧௧௯ | சேயிழைபெறுகுவை | ௧௦௫ |
| காரெதிருருமின் | ௩௬௧ | சேற்றுவளர்தாமரை | ௨௭ |
| கால்பார்கோத்து | ௧௮௫ | ஞாயிற்றன்ன | ௩௬௨ |
| காலனுங்காலம் | ௪௧ | ஞாலமீமிசை | ௧௭௯ |
| கானக்காக்கை | ௩௪௨ | தடவுநிலைப்பலவின் | ௧௪௦ |
| கானன்மேய்ந்து | ௩௭௪ | தண்டுளிபலபொழிந் | ௩௯௧ |
| கானுறைவாழ்க்கை | ௩௩ | தமர்தற்றப்பின | ௧௫௭ |
| கிண்கிணிகளைந்த | ௭௭ | தலையோர்நுங்கின் | ௨௨௫ |
| கீழ்நீரான் | ௩௯௬ | திண்டேரிரவலர் | ௨௪௧ |
| குய்குரன்மலிந்த | ௨௫௦ | திண்பிணிமுரசம் | ௯௩ |
| குயில்வாயன்ன | ௨௬௯ | திரைபொருமுந்நீர் | ௧௫௪ |
| குழவியிறப்பினு | ௭௪ | தீங்கனியிரவமொடு | ௨௮௧ |
| குறத்திமாட்டிய | ௧௦௮ | தீநீர்ப்பெருங்குண்டு | ௧௧௬ |
| குறியிறைக்குரம்பை | ௧௨௯ | துடியெறியும்புலைய | ௨௮௭ |
| குன்றுதலைமணந்த | ௩௫௭ | தூங்குகையான் | ௨௨ |
| குன்றுமலையும் | ௨௦௮ | தூர்ந்தகிடங்கிற் | ௩௫௦ |
| கூதிர்ப்பருந்தின் | ௧௫௦ | தென்கடல்வளாகம் | ௧௮௯ |
| கெடுகசிந்தை | ௨௭௯ | தென்குமரிவடபெரு | ௧௭ |
| கேட்டன்மாத்திரை | ௨௧௬ | தென்பரதவர் | ௩௭௮ |
| கையதுகடனிறை | ௬௯ | தென்பவ்வத்து | ௩௮௦ |
| கையதுவேலே | ௧௦௦ | தேஎங்கொண்ட | ௩௫௨ |
| கொடுங்குழைமகளிர் | ௩௦௪ | தேஎந்தீந்தொடை | ௭௦ |
| கொடுவரிவழங்கு | ௧௩௫ | தொடியுடையதோண் | ௨௩௯ |
| கொண்டைக்கூழை | ௬௧ | தோறாதோறா | ௩௦௦ |
| கொய்யடகுவாட | ௩௧௮ | நகுதக்கனரே | ௭௨ |
| கோட்டங்கண்ணி | ௨௭௫ | நஞ்சுடைவாலெயிற் | ௩௭ |
| கோதைமார்பிற் | ௪௮ | நரம்பெழுந்து | ௨௭௮ |

நல்யாழாகுளி ௬௪
நல்லவுந்தீயவு ௧௦௬
நள்ளிவாழியோ ௧௪௯
நளிகடலிருங் ௨௬
நளியிருமுந்நீர்நாவாய் ௬௬
நளியிருமுந்நீரேணி ௩௫
நறவுந்தொடுமி ௨௬௨
நறுவிரைதுறந்த ௨௭௬
நன்றாய்ந்தநீணிமிர் ௧௬௬
நனிபேதையே ௨௨௭
நாகத்தன்னபாகார் ௩௬௭
நாட்கள்ளுண்டு ௧௨௩
நாடனென்கோ ௪௯
நாடாகொன்றோ ௧௮௭
நாளன்றுபோகி ௧௨௪
நிரப்பாதுகொடுக்கும் ௧௮௦
நிலம்பிறக்கிடுவது ௩௦௩
நிலமிசைவாழ்நர் ௪௩
நிறப்படைக்கொல்காய் ௨௯௩
நின்னயந்துறைநர்க் ௧௬௩
நினைக்குங்காலை ௨௧௭
நீடுவாழ்கென்றி ௨௩௭
நீண்டொலியழுவம் ௧௬௧
நீயே, அமர்காணின் ௧௬௭
நீயே, தண்புனற்காவிரி ௫௮
நீயே, பிறரோம்புற்ற ௪௦
நீயே, புறவினல்ல ௪௬
நீர்நுங்கின்கண்வலிப்ப ௩௮௯
நீர்மிகிற்சிறையு ௫௧
நீரறவறியாநிலை ௨௭௧
நீருட்பட்டமாரி ௩௩௩
நீலக்கச்சைப்பூவார் ௨௭௪
நுங்கோயாரென ௨௧௨
நுதிவேல்கொண்டு ௩௪௯
நும்படைசெல்லுங் ௧௬௯
நெடுநீரநிறைகயத் ௩௮௬
நெல்லரியுமிருந் ௨௪
நெல்லுமுயிரன்றே ௧௮௬
நோகோயானே ௨௩௪
படுமணிமருங்கின ௩௫௧
படைப்புப்பலபடைத்து ௧௮௮
பண்டும்பண்டும் ௧௫௧
பதிமுதற்பழகா ௩௯௩
பயங்கெழுமாமழை ௨௬௬
பரலுடைமருங்கிற் ௨௬௪
பருத்திப்பெண்டின் ௧௨௫
பருத்திவேலிச் ௨௯௯
பருதிசூழ்ந்த ௩௫௮
பல்சான்றீ......கயன்முள் ௧௯௫
பல்சான்றீ......குமரி ௩௦௧
பல்சான்றீ......செல்கென ௨௪௬
பலர்க்குநிழலாகி ௨௨௩
பன்மீனிமைக்கு ௨௭௦
பனிபழுனியபல் ௩௭௭
பனிவரைநிவந்த ௨௦௦
பாசறையீரே ௨௮௫
பாடுநர்க்கீத்த ௨௨௧
பாணர்சென்னி ௨௪௪
பாணர்தாமரை ௧௨
பாணன்சூடிய ௧௪௧
பாரிபாரி ௧௦௭
பால்கொண்டு ௩௧௦
பாறுபடப்பறைந்த ௩௫௯
பிற...ளபாலென ௩௪௯
பிறர்வேல்போலா ௩௩௨
புலவரையிறந்த ௨௧
புலிப்பாறபட்ட ௩௨௩
புறவினல்லல் ௩௯
பூவற்படுவிற் ௩௧௯
பெரிதாராச் ௩௬௦
பெருங்களிற்றடி ௨௬௩
பெருஞ்சோறுபயந்து ௨௨௦
பெருநீர்மேவ ௨௯௭
பொய்கைநாரை ௨௦௯
பொய்யாகியரோ ௨௩௩
பொரிப்புறப்பூழின் ௩௨௧
பொன்வார்ந்தன்ன ௩௦௮
பொன்னுந்துகிரு ௨௧௮.
போர்க்குரைஇ ௯௭
போற்றுமின்மறவீர் ௧௦௪

| | | | |
|---|---|---|---|
| மட்டுவாய்திறப்பவு | ௧௧௩ | மென்பாலானுடனணை இ | ௩௮௪ |
| மடங்கலிற்சினை இ | ௭௧ | மென்புலத்துவயலுழவர் | ௩௯௫ |
| மடத்தகைமாமயில் | ௧௪௫ | மைம்மீன்புகையினும் | ௧௧௭ |
| மண்கொளவரிந்த | ௨௮௮ | யாங்குப்பெரிதாயினு | ௨௪௫ |
| மண்டமரட்ட | ௨௧௩ | யாண்டுபலவாக | ௧௯௧ |
| மண்டிணிந்தநிலனும் | ௨ | யாதுமூரே | ௧௯௨ |
| மண்முழாமறப்ப | ௬௫ | யாவிராயினுங் | ௮௮ |
| மணிதுணர்ந்தன்ன | ௨௭௨ | யாழ்ப்பத்தர் | ௧௩௬ |
| மதிநிலாக்கரப்ப | ௩௯௮ | யாமொடுங்கொள்ளா | ௯௨ |
| மதியேர்வெண்குடை | ௩௯௨ | யான்வாழுநாளும் | ௧௭௩ |
| மதிலுஞாயில் | ௩௫௫ | யானைபெறுக | ௩௭௯ |
| மயங்கிருங்கருவி | ௩௬௫ | யானைதந்தமுளிமர | ௨௪௭ |
| மரைபிரித்துண்ட | ௧௭௦ | வடாஅதுபனிபடு | ௬ |
| மலைவான்கொள்கென | ௧௪௩ | வணங்குதொடை | ௭௮ |
| மழைக்கணஞ் | ௧௩௧ | வண்ணர்கோட்டு | ௧௫௫ |
| மழையணிகுன்றத் | ௧௫௩ | வயலைக்கொடி | ௩௦௫ |
| மன்பதைகாக்கு | ௨௧௦ | வருகதில்வல்லே | ௨௮௪ |
| மன்றப்பலவின் | ௧௨௮ | வருதார்தாங்கி | ௬௨ |
| மன்றவிளவின் | ௧௮௧ | வரைபுரையு | ௩௮ |
| மன்னுலகத்து | ௧௬௫ | வல்லாராயினும் | ௫௭ |
| மனைக்குவிளக்காகிய | ௩௧௪ | வலம்படுவாய் | ௯௧ |
| மாகவிசும்பின் | ௪௦௦ | வழிபடுவோரை | ௧௦ |
| மாசறவிசித்த | ௫௦ | வள்ளியோர் | ௪௭ |
| மாவாராதே | ௨௭௩ | வள்ளுகிரவய | ௩௮௭ |
| மீன்றிகழ்விசும்பி | ௨௫ | வளரத்தொடி | ௨௬௦ |
| மீனுண்கொக்கின் | ௨௭௭ | வளிநடந்தன்ன | ௧௯௭ |
| மீனொடுத்துநெற் | ௩௪௩ | வாடாமாலை | ௩௬௪ |
| முட்காற்காரை | ௨௫௮ | வாயிலோயே | ௨௦௬ |
| முதிர்வாரிப்பி | ௫௩ | வாழுநாளோ | ௧௫௯ |
| முந்நீர்நாப்பட்டிமிற்சுடர் | ௬௦ | வாள் வலந்தர | ௪ |
| முரசுகடிப்பிகுப்ப | ௧௫௮ | விசிபிணித்தடாரி | ௩௭௨ |
| முழங்குமுந்நீர் | ௧௮ | விசும்புநீத்த | ௩௭௬ |
| முற்றியதிருவின் | ௨௦௫ | வியன்புலம் | ௩௩௯ |
| முன்றின்முஞ்ஞை | ௩௨௦ | விழுக்கடிப்பறை | ௩௬௬ |
| முன்னுள்ளுவோனை | ௧௩௨ | விளங்குமணி | ௧௩௦ |
| மூனைத்தெவ்வர் | ௯௮ | வினைபதச்சிறி | ௧௧௦ |
| மூத்தோர்மூத்தோர் | ௭௫ | வினைமாட்சிய | ௧௬ |
| மூதூர்வாயில் | ௭௯ | வெட்சிக்கானத் | ௨௦௨ |
| மெல்லவந்தெனல்லடி | ௭௩ | வெடிவேய்கொள்வது | ௩௦௨ |
| மெல்லியல்விறலி | ௧௩௩ | வெண்குடைமதி | ௨௯௪ |

| | | | |
|---|---|---|---|
| வெண்ணெல்லரிநர் | ௩௪௮ | வென்வேல் | ௩௭ |
| வெட்புள்விளைந்த | ௧௨௦ | வேட்டவேந்தனும் | ௩௩௬ |
| வெருக்குவிடை | ௩௨௪ | வேந்தற்கேந்தி | ௨௯௨ |
| வெள்ளிதென்புல | ௩௮௮ | வேந்துகுறையுற | ௩௪௧ |
| வெள்ளிதோன்ற | ௩௮௫ | வேந்துடைத்தானை | ௩௩௦ |
| வெள்ளியுமிருவிசும் | ௩௯௭ | வேம்புசினை | ௨௯௬ |
| வெள்ளைவெள்யாட்டு | ௨௮௬ | வேழம்வீழ்த்த | ௧௫௨ |
| வெளிறிஞ்ஞென்காழ் | ௨௩ | வையங்காவலர் | ௮ |


முதலில்லாதபாட்டுக்கள்:—

௩௨௮, ௩௭௦.

முற்றுமில்லாதபாட்டுக்கள்:—

௨௬௭, ௨௬௮.

---

முற்பகுதியில்லாத பாட்டுக்கள்:—

244, 355, 361

இடையில் வரிகளில்லாத பாடல்கள்:—

282, 283, 285, 288, 306
317, 328, 333-5, 339, 340
346, 347, 352, 353, 355,
357, 361, 362, 366, 373,
377, 379, 380, 383, 384,
387, 388, 390, 391, 393,
395, 396, 398, 399, 400

# இந்நூலில் வந்துள்ள திணைகளும் துறைகளும்.*



**திணைகள்:**—கரந்தை, காஞ்சி, கைக்கிளை, தும்பை, நொச்சி, பாடாண்டிணை, பெருந்திணை, பொதுவியல், வஞ்சி, வாகை, வெட்சி.

**திணையிறந்துபோன பாட்டுக்கள்:**—உசச - உ௫௦, உசுஎ - அ, உஅஉ, உஅசு, ௩உ௩ - ௫, ௩௫௫ - ௩சுக.

**துறைகள்:** — அரசவாகை, ஆனந்தப்பையுள், இயன்மொழி, உடனிலை, உண்டாட்டு, உவகைக்கலுழ்ச்சி, எருமைமறம், ஏர்க்களவுருவகம், ஏறாண்முல்லை, கடவுள்வாழ்த்து, கடைநிலை, கடைநிலைவிடை, களிற்றுடனிலை, குடிநிலையுரைத்தல், குடைமங்கலம், குதிரைமறம், குறுங்கலி, கையறுநிலை, கொற்றவள்ளை, செருமலைதல், செருவிடைவீழ்தல், செவியறிவுறூஉ, தலைத்தோற்றம், தாபதநிலை, தாபதவாகை, தானைநிலை, தானைமறம், துணைவஞ்சி, தொகைநிலை, நல்லிசைவஞ்சி, நீண்மொழி, நூழிலாட்டு, நெடுமொழி, பரிசில்கடாநிலை, பரிசில்விடை, பரிசிற்றுறை, பழிச்சுதல், பாண்பாட்டு, பாணாற்றுப்படை, பார்ப்பனவாகை, பிள்ளைப்பெயர்ச்சி, புலவராற்றுப்படை, பூக்கோட்காஞ்சி, பூவைநிலை, பெருங்காஞ்சி, பெருஞ்சோற்றுநிலை, பேய்க்காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, மகண்மறுத்தல், மழபுலவஞ்சி, மறக்களவழி, மறக்களவேள்வி, மனையறந்துறவறம், முதல்வஞ்சி, முதுபாலை, முதுமொழிக்காஞ்சி, மூதின்முல்லை, வஞ்சினக்காஞ்சி, வல்லாண்முல்லை, வாண்மங்கலம், வாழ்த்தியல், வாழ்த்து, விறலியாற்றுப்படை, வேத்தியல்.

**துறையிறந்துபோன பாட்டுக்கள்:**—உசச - ௫, உசுஎ - அ, உஅஉ, உஅ௫, உஅசு, ௩உ௩ - ௫, ௩௫௫ - எ, ௩சுக.

---

* இவற்றின் விளக்கத்தையும் இவற்றிற்குரிய புறநானூற்றுச்செய்யுளெண்ணையும் '**அரும்பதமுதலியவற்றினகராதி**' என்னும் பகுதியிற் கண்டுகொள்க.

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.

[எண் - பாட்டின் எண்.]


அகநாடு, 28.
அகம் - உள், 5.
அகல், 269, 300.
அகல - நீங்க, 25.
அகலம் - மார்பு, 78.
அகலும் - விரியும், 53. [350, 379.
அகழி - இடங்கு, 14, 18, 21, 37,
அகற்பெய்குன்றி, 300.
அகற்ற - அகலச்செய்ய, 26.
அகன்ற - விசாலித்த, 3.
அகிற்புகை, 337.
அகுதை - ஒருபகாரி, 233, 347.
அகைத்த - கிளைத்த, 159.
அங்குசம், 14.
அங்கைநண்மையன், 380.
அச்சுமரம், 90, 102, 256.
அசும்பு - சேறு, 114.
அசைஇ - இளைப்பாறி, 141; தங்கி, 67.
அசைஇய - வருந்திய, 97.
அசைநிலை, 2, 5, 6, 11 - 2, 18 - 9, 24 - 6, 29, 35, 37- 8, 40, 41, 53, 75, 86, 96, 98 - 9, 109, 113, 116, 118, 126, 136, 140, 142, 147, 153, 157, 160,173, 182, 193, 199, 213 - 5, 222, 229, 236, 247, 254, 261.
அசைநுகம்படா ஆண்டகை, 179.
அசைவிடல், 339.
அஞ்சனவுருவன் - திருமால், 174.
அஞ்சி - அதியமான்நெடுமா னஞ் சி, 91 - 2, 103, 206, 310, 315.
அஞ்சுவந்தன்று, 356. [41.
அஞ்சுவரத்தகுந - அஞ்சத்தகுவன,
அஞ்சுவல் - அஞ்சுவேன், 83.
அஞர் - துன்பம், 247.
அட்ட - கொன்ற, 23.
அட்டு - குத்தி, 227; வென்று, 10.
அடக்கமுடைமை, 30.
அடக்கி - ஒடுக்கி, 1.
அடகு - இலை, 140, 159.
அடங்காதோர் - பகைவர்,35.
அடங்கியகற்பு, 249.
அடர் - தகடு, 29.
அடர்தல் - நெருங்குதல், 6.
அடர்ந்த - கம்பியாகச்செய்த, 29.
அடார் - கல்லடார், 19.
அடி - பாதம், 10. [67.
அடிக்கீழ்: ஒருவகை வணக்கமொழி,
அடிசில் - உணவு, 10, 160.
அடியுறை - அடியில்வாழ்வேன், 198.
அடுக்கம் - அரைமலை, மலைச்சாரல், மலைப்பக்கம், 2, 168, 200, 374.
அடுக்கு: இரங்கற் குறிப்புத் தோன்ற வருதல், 51 ; விரைவின்கண்வருதல், 195, 228, 233, 256.
அடுதல் - கொல்லுதல், 8.
அடுநை - கொல்லுவாய், 36.
அடுப்பு - 164, 372.
அடுமகள், 399.
அடை - இலை, 266.
அடைகரை, 342.
அடைச்சி, 370. [283, 344-5.
அடைநெடுங்கல்லியார் - ஒருபுலவர்,
அண்டர் மகன்குறுவழுதி-ஒருபுலவர், 346.
அண்டிரன் - ஆயென்னும் வள்ளல், 129, 131, 241, 374.
அண்ணாத்தல், 54.
அண்ணாந்து - தலையெடுத்து, 47.
அண்ணாப்ப, 166.
அணங்காயினள், 349.
அணங்கு - அச்சம், 52 ; தெய்வம், 211; வருத்தம், 14, 78.
அணங்குருத்தன்னதானை, 362.

அனல் - தாடி, 83, 258, 310.
அணிகருதிக்கூறல், 19, 167.
அணிந்தன்று - அழகுசெய்தது, 1.
அணியல் - அழகுசெய்தல, 1.
அணில், 246, 307.
அணுமை, 209, 260.
அணைஇ - அணைத்து, 384.
அத்தம் - அருஞ்சுரம், 23.
அத்தை - அசைநிலை, 2, 375, 399.
அதட்படுக்கை, 310, 317.
அதர் - சக்கை, 299; வழி, 138, 150.
அதரிதிரித்தல் 370 - 71, 373.
அதள்-தோல், 193, 310, 317, 320.
அதற்கொண்டு, 394.
அதற்பட, 159, 216, 238. [378.
அதன்தலை - அதற்குமேலே, 191,
*அதியமான், 101.
அதியமான் தகடூர்பொருது (எறிந்து) வீழ்ந்த எழினி, 230.
அதியமான் (அதிகமான்) நெடுமானஞ்சி, 87-95, 97-101, 103 - 4, 158, 206, 208, 231-2, 235, 310, 315, 390.
அதியமான்நெடுமானஞ்சிமகன் பொகுட்டெழினி, 96, 102, 392.
அதியர்கோமான், 91, 392.
அதிரல் - புனலிக்கொடி, 267, 269.
அந்தணர், 1, 2, 6, 9, 26, 34, 93, 122, 126, 200, 224, 361 - 2, 367, 397.
அந்தி - அந்திக்காலம், காலையந்தி, மாலையந்தி, 2, 34, 376.
அந்தியக்கிரியை, 363.
அந்துவஞ்சாத்தன்-ஒல்லையூர்தந்த பூதபாண்டியனுடையநண்பருளொருவன், 71.
அந்துவன்கீரன் - ஒருதலைவன், 359.
அம்பர்-ஓரூர் (அம்பல்); பாடல்பெற்ற சிவஸ்தலங்களில்இப்பெயரையுடையது ஒன்றுண்டு; தஞ்சாவூர்க்கல்வெட்டுக்களில் அம்பரென்ற ஊர் அடிக்கடி சொல்லப்படுகின்றது; 385. [வன், 385.
அம்பர்கிழாஅன் அருவந்தை - ஒருதலை
அம்பலம், 52.
அம்பறாத்தூணி, 98.
அம்பி - ஓடம், 261, 343, 381.

* அதிகமான், அதிகன், அதினகமான், அதியமான், அதியன் : இவ்வைந்தும் சேரவம்சத்தைசசேர்ந்த ஓரரசனைக்குறிக்கும் ஒருபொருட் பலபெயரென்று தோற்றுகின்றன. அதிகன்என்று சொல்லப்பட்ட ஓர்அரசன் புகழ்ச்சோழ நாயனருடன் யுத்தம் செய்ததாகப் பெரியபுராணத்திலிருந்து அறியலாம். சித்தூரைச்சார்ந்த போளூருக்கடுத்த திருமலையென்ற சமணக்கிராமத்திலுள்ள ஒரு கலவெட்டால் அதிகைமான் அதிகன் என்று கூறப்பட்டுள்ள கேரளதேசத்தரசனொருவன் இருந்தானென்பதும் அவனுக்கு இராசஇராசனென்று மற்றொரு பெயருண்டென்பதும் அவன் வம்சத்தில் எழினி அல்லது யவநிகா என்ற ஓரரசனிருந்தானென்பதும் இராசராசனுடைய குமாரனை விடுகாதழகியபெருமாள், தகடா என்று சொல்லப்பட்டஊரை ஆண்டானென்பதும் தெரிகின்றன. வடமொழியில் தகடா என்று சொல்லப்பட்ட இந்த ஊர் தமிழில் தகடூர் என்று வழங்கிவநததாகத் தோற்றுகின்றது. மைஸூர் இராச்சியத்தில் தகடூர் என்று சொல்லப்பட்ட ஊர் ஒன்றிருக்கிறது ; நெடுஞ்சடையன் என்று பெயர்பெற்ற பாண்டியஅரசனால் கொடுக்கப்பட்டுள்ள ஒரு வட்டெழுத்துத் தாம்பிரபட்டயத்தில், அப்பாண்டியன் அதியன் என்ற சிற்றரசனைக் காவிரியின் வடகரையிலிருக்கும் ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்ற ஊர்களில் யுத்தஞ்செய்து ஜயித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

அம்பு- பாணம், 9, 18, 19, 23, 43, 152, 168, 287.
அம்புலிகாட்டல், 160.
அம்மவென்பது கேட்பித்தர்கண் வருதல், 44.
அம்மாவரிவை, 349.
அமரியள், 339.
அமரும் - விரும்பும், 42.
அமலை - சோற்றுத்திரளை, 33 - 4, 177.
அமிர்தம், 182, 392.
அமிழ்து - அமிர்தம், 10.
அயர்வு - மனக்கவற்சி, 182.
அயறு - புண்வழலை, 22.
அயாவுயிர்த்தல், 261.
அயிரை - ஒருமீன், 67.
அயினி - உணவு, 77.
அர்த்த நூல், 166.
அரக்கன், 378.
அரசர் (அரசன்), 18, 54, 111, 119, 127, 154, 156, 177, 186, 189, 265.
அரசர்அக்கினிகாரியஞ்செய்தல், 251.
அரசர்அடி, 7.
அரசர்அருள், 2.
அரசர் அறிவு அன்பு கண்ணோட்டமுடையராதல்வேண்டுமென்பது, 20.
அரசர் இம்மையிற் செய்யவேண்டியவை, 239.
அரசர் இராப்பொழுது போக்குதல், 366.
அரசர் இறைகொள்ளுமுறை, 184.
அரசர் இன்சொல்லும் எளியசெவ்வியும் உடையராதல்வேண்டுமென்றல், 35, 40.
அரசர் உலகத்தை வலமாகவந்துபகைவரைவெல்லுதல், 31, 225.
அரசர் ஒருபக்கம் சார்தலாகாதென்பது, 6.
அரசர்களில் யுத்தத்திலிறவாமல நோயாலிறந்தவர்கள் சுவர்க்கம்புகுதற்கு அவர்களுடம்பைத்தருப்பையிற்கிடத்தி வாளாற்பிளத்தல், 93.
அரசர்களினியல்பு, 35, 55, 74.
அரசர்களுடையகுடைகள் செல்லுமுறை, 31.
அரசர்குதிரை, 299.
அரசர்கை, 7.
அரசர்கைச்செயல், 14.
அரசர்கோயில், 177.
அரசர் சிவாலயத்தை வலம்வருகையில் அவர்குடை தாழவேண்டுமென்பது, 6.
அரசர்சினந்தணியவேண்டுங்காலம், 6.
அரசர்செல்வம், 197.
அரசர் தம்வலியை அடக்கிக்கொள்ளுதல், 30.
அரசர்தமக்குரியஅடையாளமாலையுடனே புறத்திணைமாலையையுஞ் சூடுதல், 22.
அரசர் துறந்துதவஞ்செய்தல, 217, 251, 252.
அரசர் நாடுகாத்தல், 5.
அரசர்நெறியறிந்து இறைகொள்ளவேண்டுமென்றல், 184.
அரசர் பகற்பொழுதுபோக்கல, 69, 365.
அரசர் பகைவரதுஊரைக்கொளுத்தலும்அவர்காவன்மரத்தைவெட்டுதலும், 7, 23.
அரசர் பகைவரதுபிழையைப் பொறுத்தலும் அவரையழித்தற்கு உசாவுதலும், 2.
அரசர் பாணர்க்குப்பொற்றாமரைகொடுத்தல், 66.
அரசர் பாவிகளோடு சேரலாகாதென்றல், 5.
அரசர் பொதுச்சொற்பொறுமை, 8.
அரசர் போரிற் சபதஞ்செய்தல, 25.
அரசர்மார்பு, 3, 7, 29.
அரசர் யாகஞ்செய்தல, 26.
அரசர்வலி, 2, 7.
அரசர்வில, 7.
அரசர்வீரத்தைப் பாடினிபாடுதல், 11.
அரசர்வீரம் ,31.
அரசருடைய காலைஓலக்கம், 29.
அரசவாகை - ஒருதுறை ; அரசனது இயல்பைக் கூறுதல் (பு - வே. வாகை, 3); அரசனதுவெற்றியைக் கூறுதல் (புறநா. 43-வி); 19-23, 25, - 6, 31, 33, 37, 42 - 44, 51 - 4, 61, 66, 76 - 9, 81 - 2, 93-4, 98-100, 104, 125, 167-8, 71 - 3, 174.
அரசாட்சி, 6, 73, 185.
அரசியலடைவு, 2.
அரசுரிமை, 75.

# ருசஅு அரும்பதமுதலியவற்றின் அகராதி.


அரண் - 9, 17, 20, 97.
அரண்மனைவாயிலிற் பள்ளியெழுச்சிக்காலத்திற் சங்கம் ஊதப்படுதல், [225.
அரம், 36.
அரலை - குற்றம், 381.
அரவம் - பாம்பு, 211.
அரவு, 89, 294, 329, 366, 368, 376, 393, 398.
அராப்புற்றம், 309.
அராப்போலும் வறன், 382. [36.
அரி - ஐம்மை, 11; பருக்கை, பறை,
அரிக்குரற்றடாரி, 249, 369, 390,
அரிக்குரற்றண்ணுமை, 270. [395.
அரிக்கூடுகிணை, 478.
அரிகால், 322.
அரிசி, 140, 371, 399.
அரிசில்: இது சோழநாட்டுள்ள நதிகளுள் ஒன்றன்பெயர்; இந்நதிக்கும் காவிரிக்கும் நடுவிலிருந்த நாட்டுக்கு உய்யக்கொண்டான் வளநாடென்ற பெயர்வழங்கி வந்தது, 146, 230, 281, 285, 300, 304, 342.
அரிசில்கிழார்-ஒருபுலவர், 146, 230, 281, 285, 300, 342.
அரித்த கள், 212,
அரிநர் - அறுப்பார், 42.
அரிப்பறை, 396.
அரியல், 395.
அரியல்வான்குழற்சுரியல், 307.
அரில், 381.
அரிவாள், 348.
அருங்கலநல்கல், 397.
அருங்கலவெறுக்கை, 146, 378.
அருங்குரைத்து - அருமைத்து, 5.
அருஞ்சுரம், 23.
அருந்ததி, 122. [224.
அருப்பம் - அரண், 17; அரியஅரண்,
அருப்புத்தொழில், 4.
அருமை - செய்தற்கருமை, 9.
அருவந்தை - அம்பர்கிழான் அருவந்தை யென்போன்; கொடையாளிகளுள் ஒருவன், 385.
அருவி, 105, 115, 124, 126, 137, 143, 147 - 8, 150, 152, 154, 158, 168, 198, 229, 251 - 2, 369, 381, 398 - 9.
அருள் - ஒன்றின்துயர்கண்டாற் காரணமின்றித் தோன்றுமிரக்கம், 5.
அருளன்மாறு - அருளுதலால், 92.
அரைமண் இஞ்சி, 341.
அரைமலை, 2.
அரையம்: இது சிற்றரையம் பேரரையமென்னும் இரண்டு கூற்றினையுடையதொரு பெரியநகரம், 202.
அல்கிய - தங்கிய, 220. [வு, 353.
அல்குபதம்- இட்டுவைத்துண்ணுமுணவு,
அல்குமிசைவு, 236.
அல்லாகியர், 232.
அல்லி, 248.
அல்லிப்பாவை, 33.
அல்லியக்கூத்து, 33.
அல்லியரிசியுணவு, 250, 280.
அல்வழிச்சாரியை, 69, 153.
அலகை, 282.
அலங்குதல் - அசைதல, 2, 22.
அலத்தல் - வறுமையுறுதல், 103.
அலந்தலை, 323.
அலரி, 371.
அலை, 2.
அலைத்து - உருட்டி, 115.
அவ் - அவை, 95.
அவ்வாய் - அழகியவாய், 36, 198.
அவணது - அவ்விடத்தது, 50.
அவரை, 120, 215, 335.
அவல் - பள்ளம், 102, 187; விளை
அவல்வகுத்தகுடை, 352. [நிலம், 6.
அவலைவாயிலடக்கிக் கொண்டு மடுவிற் பாய்தல், 63.
அவற்றோரன்ன - அவற்றையொத்த, [51.
அவிப்புழுக்கல், 363.
அவிய - அடங்க, 374.
அவியன் - ஒருபகாரி, 383.
அவியுணவினோர், 377.
அவிழ் - சோற்றுப்பருக்கை, 159, 160, 366, 399.
அளைப்பு - குற்றுதல், 215.
அழல் - நெருப்பு, 11.
அழல்கான்றன்ன மண்டை, 398.

அழற்குட்டம் - கார்த்திகைநாள், 229.
அழற்பள்ளிப் பாயல், 248.
அழால் - அழுகை, 46. [125, 366.
அழி - இரக்கம், 158; வைக்கோல்,
அழித்து - மீட்டும், 383, 396.
அழிதுளி, 373.
அழிந்த - இரங்கிய, 229.
அழிப்படுத்த, 368.
அழிவு, 399.
அழுகை, 144.
அழுங்க - அழிய, 98.
அழுங்கல் - இரக்கம், 220.
அழுந்த - இறுக, 77.
அழும்பில், - ஓரூர், 283.
அழுவம் - பரப்பு, 14, 161.
அள்ளிலை-செறிந்தஇலை, 252. [306.
அள்ளூர் நன்முல்லையார் - ஒருபுலவர்,
அளந்து-எண்ணி, 36; வரையறுத்து,
அளவர், 30. [20.
அளவுபுகலந்து, 381.
அளவை, 367.
அளி - அருள், 2. [கத்தக்கது, 109.
அளிது - அளிக்கத்தக்கது, 5; இரங்
அளிய - இரங்கத்தக்கன, 248.
அளியர் - அளிக்கத்தக்கார், இரங்கத்
தக்கார்; 51 - 2.
அளியை - இரங்கத்தகுவை, 228.
அளை - குகை, 52, 86, 398; மோர்,
அற்றம் - துன்பம், 158. [119.
அற்று - ஒக்கும், 22.
அற - தெளிய, 224.
அறச்சபை, 71. [145.
அறஞ்செய்தீமோ - அறத்தைச்செய்,
அறஞ்செய்ய வேண்டுமென்றல், 28.
அறத்துறையம்பி, 381.
அறப்போர், 9, 62.
அறம், 362.
அறம்பொருளின்பம், 28, 31.
அறல் - அரித்தொழுகுதல், 177.
அறவிலைவணிகன், 134.
அறவு - அறுதல், 1.
அறவை, 44, 390.
அறிதீ அறிதி - அறிவாய், 10.
அறிந்தியார் - அறியார், 136.
அறியலை - அறியாய், 133.
அறியுமோன் - அறியுமவன், 137.
அறிவாரா - அறியவாரா, 92.
அறிவில்லாதோன், 106, 184, 197.
அறிவுடையோன், 183 - 4, 197.
அறுதொழிலந்தணன், 397.
அறுபு - அற்று, 67.
அறுமார் - நீக்கவேண்டி, 93.
அறை - அற்றது, 175; பாறை, 118.
அறைக்கரும்பு, 384.
அறைநர் - அறுப்பவர், 42.
அன்பில்லாத பார்வை, 210.
அன்பு - தன்னாற்புரக்கப்படுவார்மேல்
உள்ளதாகிய காதல், 5.
அன்று - அன்றி, 124.
அன்ன - ஒத்த, 5.
அன்னச் சேவல், 67, 128.
அன்னம் மீனைஉண்ணுதல், 67.
அனந்தற்பறை, 62.
அனுடநாள், 229. [196.
அனைத்தாகியர் - அத்தன்மைத்தாகுக,
அனையை - அத்தன்மையையுடையை,
20; அதற்கேற்ற செய்கையையுடை
ஆ - பசு, 9. [யை, 15.
ஆக்குரல், 362.
ஆகம் - மார்பு, 25.
ஆகன்மாறு - ஆதலால், 380.
ஆகாயத்தின்மேற்பாகத்திற்காற்றுச்
செல்லாதென்பது, 35.
ஆகாயம், 2, 30, 228, 270.
ஆகியர் - ஆகவேண்டும், 122; ஆயி
னீர், 191; ஆகுக, 90, 232.
ஆகிலியர் - ஆகாதொழிக, 29.
ஆகின்று - ஆயிற்று, 1, 148, 243.
ஆகுதிசெய்தல், 99.
ஆகுப - ஆகுவன, 7. [221.
ஆகுபெயர், 5, 106, 147, 152,
ஆகுளி - சிறுபறை, 64, 69, 152, 371.
ஆங்கு - அசை, 2; அப்படி, 24;
அதுபோல, 35, 106. [158.
ஆசினி - ஒருமரம்; ஈரப்பலாவுமாம்,
ஆசு - பற்று, 235, 266.
ஆஞ்ஞாசக்கரம், 99, 270.
ஆட்டி - அலைத்து, 261.

ஆட்டிறைச்சி, 261.
ஆட்டினம், 54.
ஆட்டுக்கிடாய், 33, 113, 262, 364.
ஆட்டும் - அலைக்கும், 193.
ஆட்போர்பு, 373. [197.
ஆடு - அடுதல், 67; வென்றி, 21,54,
ஆடுதுறைமாசாத்தனார் - ஒருபுலவர்,
ஆடுறுகுழிசி, 371. [227.
ஆடை, 383.
ஆண்டிசிறோர், 357.
ஆண்புலி, 52.
ஆண்மை, 55, 154.
ஆண்மை தோன்றக்கடத்தல், 242.
ஆண்யானை, 40.
ஆத்திமரம், 45, 338.
ஆத்திமாலை, 43, 45, 81 - 2.
ஆதன் - நெடுவேளாதன் ; இவனது ஊர் போநதையென்பது, 338.
ஆதனழிசி-ஒல்லையூர்தந்த பூதபாண்டியன் நண்பருள ஒருவன், 71.
ஆதனுங்கன் - ஒருபகாவி, 175, 389.
ஆதனோரி-ஓரியென்னும்வள்ளல,153.
ஆதி - மல்லிகிழான்காரியாதி, 177.
ஆந்தை - ஒல்லையூர்தந்தபூதபாண்டியனுடைய நண்பருள் ஒருவன்; இவனுடைய ஊர் எயிலென்பது, 71.
ஆப்பி - பசுச்சாணம், 249.
ஆப - ஆவார், 218.
ஆபரணம், 67, 69, 88, 105, 130, 138, 160, 171, 200, 218,222.
ஆம்பல், 16, 61, 70, 209, 383.
ஆம்பல்மலரால் தழையென்னும் உடைசெய்தல், 248.
ஆம்பல்வள்ளித்தொடி, 352.
ஆம்பலல்லியரிசியையுண்ணல், 280.
ஆம்பலிலை, 206.
ஆம்பலிலையால்மதுவையுண்டல், 209.
ஆம்பலினிடத்துண்டாகும் புல்லரிசியைக்கைம்மைநோன்பினருண்டல்,
ஆம்பற்கிழங்கு, 176. [248.
ஆம்பற்குழல், 281.
ஆம்பற்றண்டாற்செய்தவளை,63,352.
ஆம்பி - காளான், 164.
ஆமான்குழவி, 319, 323.
ஆமானிரை, 117.
ஆமூர்மல்லன்: (ஆமூர் - முக்காவல் நாட்டிலுள்ளது; ஆமூர்க்கோட்டத்தைச்சேர்ந்த ஆமூர்நாட்டில மகாபலிபுரம் இருந்ததாகத் தெரிய வருகிறது) 80.
ஆமை, 42, 70, 249, 379, 387.
ஆமைமுட்டை, 176.
ஆமையிறைச்சி, 212.
ஆஅய் - ஆய், 127, 130, 375.
ஆய் - சிறுமை, 249; நுண்மை, 117; மென்மை, 22; வள்ளல்களுள் ஒருவனுகிய ஆய்அண்டிரன், 127-36, 240 - 41, 374 - 5. [129.
ஆய் இரவலர்க்கு யானைகொடுத்தல்,
ஆய்குடி-ஆயென்னும் வள்ளலின்னூர்; இது பொதியின்மலைக்கு அருகேயுள்ளது, 132. [வன், 131.
ஆய், சுரபுன்னைப் பூமாலையையுடைய
ஆயர், 390.
ஆயர்மகள், 215, 276.
ஆயுதக்கட்டில், 41.
ஆயுதக்காம்பு, 95.
ஆயுதக்கொட்டில், 95.
ஆயுதங்களுக்கு நெய்பூசிப் பீலியணிந்து மாலைசூட்டுதல், 95. [180.
ஆயுதப்புண்ணலை வடுவற்ற உடம்பு,
ஆயுதம், 41, 95.
ஆர் - ஆத்தி, ஆரக்கால், 283, 338.
ஆர்கலி நறவு, 91.
ஆர்கலியினன், 337.
ஆர்குழகுறடு, 283.
ஆர்த்த - நிறையஉண்பிக்க, 334.
ஆர்த்தும் - நிறைக்கும், 22.
ஆர்தல - உண்ணுதல, 24.
ஆர்ந்த - உண்ட, 34.
ஆர்நார் - ஆத்திநார், 81.
ஆர்பதம் - உணவு, 370.
ஆர்வலர் - பரிசிலா, 12.
ஆர்வுற்று - ஆசைப்பட்டு, 158.
ஆர - நிரம்பஉண்ண, 398.
ஆரக்கால், 256. [14.
ஆரணங்கு - ஆற்றுதற்கரியவருத்தம்,
ஆரநெருப்பு, 320.

ஆரம் - முத்தாரம், 19; வண்டியின் ஆரக்கால், 152, 256, 362, 365, 368, 372.
ஆரமுகக்குவம், 372.
ஆரல்-சிறியவடிவையுடைய ஒருவகை மீன், 18, 249, 320.
ஆரல்மீன் முட்டை, 342.
ஆரல்மீனின் சூட்டிறைச்சி, 212.
ஆல - ஆட, 116.
ஆலங்கானம் - தலையாலங்கான மென்னும் பெயரையுடையதோரூர்; இப்பொழுது தலையாலங்காடென்றுவழங்கப்படுகின்ற சிவஸ்தலம்; இதில நெடுஞ்செழியன் இருபெருவேந்தரையும் ஐம்பெருவேளிரையும் பொருது வென்றனன், 23.
ஆலங்குடி - ஒருசிவஸ்தலம் ; இப்பெயரையுடைய ஊரொன்று சோழநாட்டிலிருக்கிறது ; பழைய கல்வெட்டுக்களில இவ்வூரின்பெயர் இரும்பூளை என்று சொல்லப் பட்டிருக்கிறது, 319.
ஆலங்குடிவங்கனார்-ஒருபுலவர், 319.
ஆலத்தூர்கிழார்-ஒருபுலவர், 34, 36, [69, 225, 324.
ஆலம்பழம், 199.
ஆலம்தொடுத்து, 364.
ஆலம்வீழ், 58.
ஆலமரத்திலதெய்வமிருத்தல்,198-9.
ஆலமரம், 58, 254, 364, 370.
ஆலியார் - ஒருபுலவர், 298.
ஆலிலையின்கண்மேவியதிருமால்,198.
ஆலும் - ஒலிக்கும், 128.
ஆலை - யானைக்கூடம், 220. [323.
ஆவம் - அம்பறாத்தூணி,வேலுறை,14,
ஆவியர்கோ - பேகனென்னும்வள்ளல், 147.
ஆவியார் - ஒருபுலவர், 298. [99.
ஆவுதி - ஆகுதி, 2; யாகப்புகை, 15,
ஆவூர் : பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இப்பெயரையுடையது ஒன்றுண்டு; சித்தவிநோத வளநாட்டின் உட்பிரிவான ஆவூர்க்கூற்றம், தஞ்சாவூர்க்கல்வெட்டுக்களில்அடிக்கடிகூறப் பட்டுள்ளது; விளத்தூர், இரும்புதல் என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச்சேர்ந்தவை; 38, 40, 44, 66, 177, 178, 196, 261, 301, 322.
ஆவூர்கிழார் - ஒருபுலவர், 322.
ஆவூர்மூலங்கிழார்-ஒருபுலவர், 38,40, 166, 177 - 8, 196, 261, 301.
ஆவூரழகியார் - ஒருபுலவர், 322.
ஆவேறு, 339.
ஆழல் - ஆழ்தல், 152.
ஆழி, 338.
ஆள்வினை, 196.
ஆளழிப்படுத்த, 368.
ஆளி, 207.
ஆளுகுகடா, 370 - 1.
ஆற்றல் - வலி, 22.
ஆற்றலாற்சொல்வருவித்தல்,39,143.
ஆற்றலை - வலியையுடையை, 33, 38,
ஆற்றூர் - வலியில்லார், 26, 93. [42.
ஆற்றிடைக்குறை, 219.
ஆற்றின்கூடல், 273.
ஆற்றுதிர் - உதவுவீர், 58.
ஆற்றுநீரைமலைதடுத்தல், 169.
ஆற்றுமணலினும் ஆயுள் சிறக்கவெனல, 9, 43.
ஆறங்கம், 166.
ஆறு, 9, 42, 109, 192, 273.
ஆன் - பசு, 5.
ஆன்பயம், 386.
ஆன்பொருநை - ஆன்பொருந்தமென்னும்நதி; இது கருவூர்க்கருகில் ஓடுவது, 11, 36, 387.
ஆன்றிசினேன் - அமைந்தேன், 151.
ஆன்று - அமைந்தேன், 151.
ஆனந்தப்பையுள் - ஒருதுறை;ஒருகுலமகள் தன்கணவன் மரிக்கத் துன்பமுறுதல (பு - வெ. சிறப்பிற்பொது. 13); ஒருவன் இறந்ததைப்பற்றிச் சுற்றத்தார் இரங்கிக்கூறுதல் (புறநா.228-வி); 228-9, 246-7, [280.
ஆனா - அமையாத, 10, 42.
ஆனாது - அமையாது, 6.
ஆனிலை - கோலோகம், 6.
ஆனினம், 138.
ஆனியார் - ஒருபுலவர், 298.

ஆனெய்மதுவிற்கு உவமை, 152.
ஆனேறு, 1.
இக்கரை, 357. [205, 210, 234.
இகழ்ச்சிக்குறிப்பு, 85, 112, 195,
இகழ்பு - இகழ்ந்து, 40.
இகழுநர் - மதியாதபகைவர், 21.
இகுத்த - சொரியப்பட்ட, 143.
இகுப்ப - அறைய, 158.
இங்க - தங்க, 283.
இசின்: தன்மைக்கண் வருதல், 21 ; படர்க்கைக் கண்வருதல், 11.
இசைஇ, 374.
இசைக்குத் திங்கள் உவமை, 396.
இசைகேட்போர் தலையசைத்துக்கேட்
இசைமணி, 261. [டல், 145.
இசைமேந்தோன்றல், 158 - 9.
இசைநிறையும்மை, 159.
இஞ்சி - மதில், 341.
இட்டிய - சிறிய, 177.
இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்து மேலேறி நிற்றல்,2,7,22, 109, 115, 118, 137, 263.
இடந்துழந்தடுதல், 372.
இடபக்கொடி, 1, 56.
இடவழுவமைதி, 41.
இடவாய்வலவாய், 4.
இடாஅ - குத்தி, 3. [365.
இடி, 37, 58, 81, 126, 160, 211,
இடிமுரசு, 17.
இடி வெள்ளியதென்பது, 58.
இடுபு - இட்டு, 33.
இடும்பை - நோய், 174.
இடுமுட்படப்பை, 197.
இடை - இடம், 5; காலம், 54, 366; வழி, 3.
இடைக்காடனார் - ஒருபுலவர், 42.
இடைக்காடு - ஓரூர், 42. [76 - 9.
இடைக்குன்றூர்கிழார் - ஒருபுலவர்,
இடைகழி(ரேழி), 175.
இடைமதில், 343.
இடையர் வேங்கைமரத்தின் கொம்பைக் கழித்தல், 224. [339, 390.
இடையன், 54, 265, 324, 331,
இணர் - பூங்கொத்து, 24.
இதல் - ஒருவகைப்பறவை, 319-20.
இதழ் - கண்இமை, 164.
இந்திரர் - தேவர், 181.
இந்திரவில், 20.
இந்திரன்கோயில், 241.
இப்பி - சிப்பி, 53.
இப்பிறப்பு, 236.
இம்மென, 367.
இம்மைமறுமை, 214.
இம்மை யின்பம், 191.
இம்மைவினைப்பயன்மறுமையில் அனுபவிக்கப்படுதல், 174.
இமயம் - இமயமலை, 2, 6, 34, 39, 67, 132, 166, 214, 369.
இமிழும் - ஒலிக்கும், 15.
இயக்கன் - ஒல்லையூர்தந்தபூதபாண்டியனுடைய நண்பருள் ஒருவன், 71.
இயம்ப - ஒலிப்ப, 36.
இயர்: வியங்கோள்விகுதி, 2, 24.
இயல் - இயல்பு, 9; தன்மை, 25.
இயலி - நடந்து, 79, 133. [7, 14.
இயலுதல் - இயற்றுதல், செய்தல்,
இயவர் - வாத்தியகாரர், 336.
இயற்கை - தன்மை, 2, 36.
இயன்மொழி - ஒருதுறை; இயல்பைக் கூறுதல் (புறநா. 14 - 5, 49, 173 - வி) ; தலைவனெதிர் சென்றேறி அவன் செய்தியையும் அவன் குலத்தோர் செய்தியையும் அவன் மேலே ஏற்றிப்புகழ்தல் (தொல். புறத். 35 - ந.); இஃது இயன்மொழி வாழ்த்தெனவும் வழங்கும்; 8 - 10, 12, 14 - 5, 17, 22, 30, 32, 34, 38 - 9, 49, 50, 67, 92, 96 - 7, 102, 106 - 8, 122 - 4, 128 - 32, 134, 137, 142, 149 - 51, 153, 156 - 7, 168, 171 - 3, 175 - 7, 212, 215 - 6, 376, 378, 380 - 81, 388 - 90, 400.
இரங்க - வருந்த, 21.
இரங்கற்குறிப்புப்படுமொழி,266. [7.
இரங்கற்பண்ணைவாசித்தல்,144,146-
இரங்காழ்-இரவமரத்தின்விதை, 278.

